(கு -. பு.)—

இது, மூவருடக் காடலாக்கு 337 ஆவது நம்பர் பிரதிக்கு மாதுருகையான பிரதியாகும். மிகவும் சிதைந்திருக்கிறது. மிகவும் அருமையான நூலாகும். இதுககு வித்தாரமான நூல் ஒன்றுண்டு என்பது மாத்திரம் தெரிகிறது.

---

## No. 2191. திருவிளையாடற் புராணம் வசனம்.
## TIRUVIḶAIYĀḌAṞ PUṞĀṆAM VACANAM.

Substance, palm-leaf. Size, 17½ × 1¼ inches. Pages, 590. Lines, 5 to 7 on a page. Character, Tamil. Condition, injured. Appearance, old.

Complete.

A rendering, into Tamil prose, of the *Parañjōti Tiruviḷāiyaḍaṟ Puṟāṇam* noticed under No. 605 of the Descriptive Catalogue of Tamil Mss. Vol. II. In the beginning of this work are found some verses taken from another work.

**Beginning :**

மதுரைப்புராணம் :

மன்னிக்கிடக்கு நின் பொற்றாளல்லாற் கதி ம(ட்டி.)(ற்றி)ல்லையென்
றுன்னிக்கிடக்கு மென்னுள்ளங் கண்டா யா `வான் றேடொன்று
பின்னிக்கிடக்குஞ் சடைய்தஞ்சாமற் பிறைக்கொழுந்து
மின்னிக்கிடக்குந் தமிழ்க்கூடற் சித்திவிநாயகனே.

ஸ்ரீசொக்கசுந்தரேசுவரர் கடாட்சம் உண்டாக :

விநாயகர் துணையுண்டாக :

*　　*　　*　　*

மதுரைப்புராணத்தின் வாசகங்கேளீர்! கைலாசத்திலே செகங்கைக் கரையிலே பரமேசுவரராது உத்தரவுப்படிக்கு ' விசுவ கர்மா ' ஆதியிலே நவரத்தின கசிதத்தோடே கூடியிருக்கிற ஆயிரக்கால் மண்டபமொன்று வெகுவெகு விஞ்ஞைதங்களையுடைத்தாய் வெகு உன்னதமாய் மெத்த அலங்கிருதமாய்க் கோடிசூரிய பிரகாச மாகத்தானே உண்டுபண்ணியிருக்கும். அந்த மண்டபத்திலே மஹர்ஷியாயிருக்கிற ஸூத மஹர்ஷி எழுந்தருளியிருந்தார். அவரைப்பார்த்துச் சகலமான ருஷிகள் எல்லோரும் வந்து தண்டன்பண்ணி முப்பத்து முக்கோடி தேவர்கள், நாற்பத்தெண்ணாயிரங்கோடி இருஷிகள், கின்னரர், கிம்புருடர், கருட கந்தர்வர், சித்தர், வித்தியாதரர், தும்புருநாரதர் சகலமான பேர்களும் ஒன்றாகக்கூடிக் கொண்டு வெகு சந்தோஷமாயிருந்தார்கள். அப்போது முனிவரிற்றலைமையராயிருக்கிற சூதமகாமுனியைச் சகல ருஷிகளும் மெத்த வணக்கஞ் செய்து சுவாமி! ஒரு விண்ணப்பஞ் செய்கின்றோம்.

*　　*　　*　　*　　*

சுவாமி! பரமேசுவரனும் பாருவதியும் கணநாதர்கள் கூட்டத்துடனே ஆதிபத்தியஞ் செய்துகொண்டு நித்தியவாஸமாய் இந்தக் கைலாசத்திலே தானே இருக்கிறார்களே? இதுவே சர்வேசுவரனுக்கு அதிகமான ஸ்த்தானமோ? இதுவல்லாமல் பதிநாலு லோகமுண்டே அவைகளி

குமோ ? என்று கேட்டார்கள். அதற்குச் சூத மகாமுனிவர் சொல்லு வார் : பரமேசுவரன் மகிமையும் பார்வதியினுடைய மகிமையும், அவர்கள் அதிக சந்தோஷமாயிருக்கிற ஸ்த்தானம் இன்னதென்கிற வர்த்தமானம் நம்மாலே அறியப்பட்டதல்ல. நாமுங் காசியிலே கேட்டது *

* * * *

நாரதரும் நமக்கு தெரியாது. அகத்திய மகாமுனி சகலமும் அறிந்த ஞானி. வடசொல, தென் சொல், எண்டிசைச் சொல், ஈரெழு பதினாலு லோகத்திலேயுள்ள வர்த்தமானங்கள் சகலத்தையும் அளவிட்டவர். அவருக்குத் தெரியுமேயல்லாமல் மற்றொருவருக்கும் தெரியாது. ஆகையினாலே அகஸ்தியரைக் கேளுங்கோள் என்று நாரதர் சொல்ல, வியாசர் அகத்தியரை நமஸ்கரித்துத் தோத்திரம் பணணி சுவாமி ! இந்தவுலகத்திலே சிவஸ்த்தலங்களிலே அதிகமான ஸ்த்தலமும், அந்த ஸ்தலத்தின் மகிமையுஞ் சொலலவேணுமென்று கேட்க, அகத்தியர் அந்த மகிமை நம்மாலே அறியப்பட்டதல்ல. நமக்குச் சுப்பிரமண்ய மூர்த்தி குருவாகையாலே அவர் உபதேசம் பண்ண நான அறிந்ததாயிருக்கும் . அதுவே தென்றல் துவாபர யுகத்திலே ஸ்ரீ கைலாசததிலே பரமேசுவரனும் பார்வதியும் இரண்டு பேருமாகத் தனிதது இருக்கிறபோழ்து பரமேசுவரனைப் பார்த்துச் சுவாமி ! இந்தக் கைலாசத்துக் குச் சமானமான தலங்கள் இதிலும் அதிகமான தலங்களையும் பூலோகத்திலே எந்தவெந்தத் தலத்தைச் சொல்லலாமென்று கேட்க, அப்போது பரமேசுவரரும் மனமகிழ்ந்து ரகசிய வுபதேசம் போலே பார்வதிக்குச் சொன்னார். அப்போது சுப்பிரமணியர் தேவியின் மடியில் சிறு பிள்ளைபோலேயிருந்து சகலமுங் கேட்டார். சுப்பிரமணியர் சிறு பிள்ளையானாலும் புத்தியில் அதிகரானபடியினாலே அந்த ரகசிய வுபதேசத்தை உண்மையாய்க் கேட்டுக்கொண்டிருந்து நமக்கு உபதேசம் பண்ணினார். ஆகையால் நாம் அறிந்த மாத்திரம் உங்களுக்குச் சொல்லுகிறோம். நன்றாய்க் கேளுங்கள் என்று சொன்னார். என்னவென்றால் பூமியந்தர சொர்க்கத்திலே அநேக சிவஸ்தலங்கள் உண்டு. அங்கெல்லாம் சிவன் இருப்பார். அதிலே விசேஷமாய் அறுபத்துநாலு சிவஸ்தலங்கள் உண்டு. அதிலே யதிக மூர்த்தியாயிருப்பார். அதிலும் விசேஷமான ஸ்த்தலம் பதினாறு உண்டு. அதிலும் மகா மூர்த்தியாயிருப்பார். அதிலும் மகா விசேஷம் எட்டுத்தலம் உண்டு. அதிலும் ஆனந்தமூர்த்தியாயிருந்து கொண்டு விளையாடுவார். அதிலும் மகா விசேஷமுள்ள தலம் ஐந்து உண்டு. அதிலும் மகா மூர்த்தியாயிருப்பார். அதிலும் அதிகமாகிய தலம் ஒன்று உண்டு. அது எந்தத்தலம் என்றால் ' மதுரை ' என்று ஒரு மஹா ஸ்த்தலமிருக்கிறது. அந்த * * *

* * * *

பராபர வஸ்துவாயிருக்கிற சர்வேசுவரன் அந்தத்தலத்திலேதானே அறுபத்துநாலு திருவிளையாடலும் விளையாடினார். அந்தத் திருவிளையாடல்களையும், அத்தல மகிமையையும் நன்றாய் வகை விபரமாகச் சொல்லுகிறோம். வேறே பராக்கின்றிக் கேளுங்கள் என்று அகத்திய மகாமுனிவர் சொல்ல இருஷிகளும் திருவிளையாடல்களைக் கேட்கத் தொடங்கினார்கள்.

முதல் திருவிளையாடல் :

இருதயுகத்திலே தேவலோகத்திலே தேவேந்திரன் தேவசிங்காதனத்த்திலே இருந்துகொண்டு மேனகை, அரம்பை, ஊர்வசி, திலோத்தமை முதலான தேவஸ்திரீகள் எல்லோரையும்கூட்டி நாட்டியம் பார்த்துக் கொண்டு இருக்கிற சமயத்திலே முப்பத்து முக்கோடி தேவர்கள், நாற்பத்தெண்ணுயிரம்கோடி இருஷிகளும் * * *

தும்புரு நாரதர் மற்றுமுள்ளோர்களும் நிறைந்த சபையாகச் சகலருங் கண்குளிர்ச்சியாய்ப் பார்த்துககொண்டிருக்கிறபோழ்து தேவ குருவாயிருக்கிற பிருகஸ்பதி பகவான் அந்தச் சபைக்கு வந்தார். அப்பொழுது தேவேந்திரனும், தேவர்களும் நாட்டியம் பார்த்துக்கொண்டிருக்கிற பராக்கிலே அவரை அங்கீகாரம் பண்ணினாரில்லை. அதனாலே அவர் சபையிலே இராமல் தம்முடைய ஆச்ரமத்துக்கும் போகாமல் அரண்யத்திலேபோய் ஒளிந்துவிட்டார். தேவேந்திரனும் நாட்டியம் பார்த்து முடிந்து தேவர்கள் இருஷிகளையனுப்புகிற சமயத்திலே தேவகுருவாயிருக்கிற பிருகஸ்பதி பகவானைக் கண்டாரில்லை. அப்போது தேவேந்திரன் பயந்து இனி எப்படி யவரை நமஸ்காரம் பண்ணுவது ? * * *

* * * *

நீ தேவலோகத்திலே போயிருந்து வருஷத்துக்கு ஒருகால் சித்திரை மாஸத்திலே சித்திரை நட்சதிரத்திலே நம்மை வந்து பூசை பண்ணினால் நித்திய பூசைப்பலன், நித்திய சேவைப் பலன் கொடுக்கிறோம் என்று சொல்லி தேவேந்திரனையனுப்பினார். அப்படியே பிருகஸ்பதி பகவானை முன்னிட்டுக் கொண்டு தேவர்களையுங் கூட்டிக்கொண்டு மகா சந்தோஷத்துடனே தேவேந்திரனும் தேவலோகத்துக்குப்போனான்.

தேவேந்திரனுக்குப் பிரமஹத்தி நீங்கிய முதல் திருவிளையாடல் முற்றும்

**End :**

கோவிலிலே இருக்கப்பட்ட சிவலிங்கமும் வன்னிமரமும் கிணறும் சாட்சி என்று சம்பந்த மூர்த்தி திருவுளம் பற்றின பிரகாரம் அந்தச் சாட்சியை இவ்விடத்துக்கு இந்நேரம் அழைப்பித்தாலாயிற்று. இல்லாத பக்கத்துக்கு என்னுடைய சீவனை இப்பொது இங்கேதானே விட்டுவிடுவேன் என்று சொல்ல, சுவாமி சொக்கநாயகர் பழிக்கஞ்சியானபடியினாலே மகா பதிவ்ரதையென்று பயந்து திருமருகர் கோவிலிலேயிருந்து சிவலிங்கத்தையும், வன்னி மரத்தையும், கிணற்றையும் அந்தக் கணமே யழைப்பித்து, பாண்டியராஜர் முதலாய் மதுரைப்பட்டணத்திலே யுண்டாகிய பதினெண் ஜாதியும் அறியச் சாட்சி சொல்லுவித்தார். அப்போது பாண்டிய ராசர் முதலாகிய சகலமான பேர்களும் இந்தப் பதிவ்ரதையைப் பார்த்து வணக்கஞ்செய்து மகா தோத்திரங்கள் பண்ணினார்கள். அப்பால் மதுரைப்பட்டணத்திலே யிருக்கப்பட்ட செட்டிகள் அவர்களுடைய ஸ்திரீகள் பின்னுமுண்டாகிய சகலமான பேர்களும் சகல ஜாதியாரும் அந்தப் பதிவ்ரதையாகிய செட்டி ஸ்திரீயினுடைய பாதத்திலே வீழ்ந்து நமஸ்கரித்தார்கள். அப்போது பாண்டிய ராஜாவும் அச்செட்டியாரைப் பார்த்து மகா தோத்திரம் பண்ணி அவருக்கும் பதிவ்ரதை ஸ்திரீக்கும் அநேக ஆடையாபரணங்

பதிவ்ரதையை வீடேறவழைத்துக்கொண்டுபோய்ச் சுகத்திலேயிருங்கோள் என்று இருவரையும் அவர்கள் கிரகம் வரைக்கும் கொண்டுபோய் அனுப்புவித்துப்போட்டுப் பாண்டியராஜாவும், மந்திரிமார், காரியக்காரர் இவர்களை யழைத்துக்கொண்டு தம்முடைய அரண்மனையேறப் போனார். இப்பால் செட்டியாரும் தம்முடைய கிரகத்துக்குப் போய்த் தங்கள் இனத்தாரை எல்லாரையும் அழைப்பித்து வைத்துக்கொண்டு அவர்கள் முன்னிலைக்குச் சிறிது திரவியங்களும் ஆபரணாதிகளும், மாடு கன்றுகள் சகலமானவையும் மூத்தாளுக்குக் கொடுத்து அவளையும் அவள் பிள்ளைகளையும் அப்புறம் ஒரு வீட்டிலே ஒதுக்குவித்து இளையாளுடனே கூட அஷ்ட ஐசுவரியத்துடனே சம்ஸாரம்பண்ணிக்கொண்டு தன சம்பத்து, தானிய சம்பத்து மக்கள் சம்பத்துடனே தங்கண் மாமனாரைப் பார்க்க அதிகமாய்க் குபேர சம்பத்தாக மகா சுகமாயிருந்துகொண்டு தான தர்மங்களைச் செய்துகொண்டு மீனாட்சியம்மனையும் சொக்கநாயகரையும் தர்சநம் பண்ணிக்கொண்டு மகாசிவ பூஜா துரந்தரராக விருந்தார் என்ற வாறு.

அறுபத்துநாலாம் திருவிளையாடல் முற்றும்.

(கு. - பு.)—

இந்நூல் டிஸ்கிருப்டிவ் காடலாக்கு 605-வது நம்பரில் வந்துள்ள பரஞ்சோதி திருவிளையாடற் புராணம் என்ற நூலுக்கு வசனமாய் அமைந்துள்ளது. இதில் இந்நூல் முற்றும் உள்ளது. வசன நடையத்துணை நன்றாயில்லை. இயற்றியவர் இன்னாரென்று தெரியவில்லை. ஏடுகள் சிதைந்துள. எழுத்துப் பிழை சொற்பிழை முதலிய குற்றங்களிருக்கின்றன. முதலில், முதல் இரண்டு திருவிளையாடல்களை யுணர்த்தும் செய்யுட்கள் வேறு நூலிலிருந்து எழுதப்பட்டுள. நூலாரம்பத்து மதுரைச் சித்தி விநாயகரை வணங்கும் செய்யுள் ஒன்று காணப்படுகிறது.

---

## No. 2192. திருவிளையாடற் புராண வசனம்.

### TIRUVIḶAIYĀḌAṞ PURĀṆA VACANAM.

**Substance, palm-leaf. Size, 10 2/8 × 1 2/8 inches. Pages, 442. Lines, 6 and 7 on a page. Character, Tamil. Condition, much injured. Appearance, old.**

Complete.

A rendering, into Tamil prose, of the *Tiruviḷaiyāḍaṟ Purāṇam.* In this work are found all the "sixty-four sports" of God Sundarēśvara of Madura.

**Beginning :**

திருவிளையாடற்புராண வசனம் :
சித்திவிநாயகர் சித்தியுண்டாகக் கடவது :

ஆலாசியம் என்னப்பட்ட மதுரையிலே சகத்துக்கெல்லாம் தாயான மீனாட்சியம்மன் சன்னிதானத்திலே சான்னித்தியமாய் எழுந்தருளியிருக்கப்பட்ட சித்தி விநாயகரையும் முக்குறுணி அரிசி . . . . . . . .

. . . . . . . . . .செய்யப்பட்ட முக்குறுணி அரிசிப்பிள்ளையாரை யும் வணங்கி நமஸ்கரித்துச் சகத்துக்கெல்லாம் நாயகரான சுந்தரேசு வரர் மீனுட்சியுடனே கூடிப் பாண்டிய வமிசம் எல்லாம் கடைத் தேறவும் பூலோகம் எல்லாம் விளங்கவும் எண்பத்து நான்கு நூருயிரம் யோனி பேத சீவாத்துமாக்களும் இந்த மகத்துவத்தைக் கேட்டுக் கடைததேற வுமாகப் பாண்டியர்கள் சந்திர வமிசத்தார் என்றும் அவர்கள் பேரிலே லோகநாயகராகிய சுந்தரேசுவாருக்கும் மீனுட்சியாகிய தாயாருக்குந் தய வாய் அறுபத்துநாலு திருவிளையாடல்கள் விளையாடியிருக்கிருர்களே அந்தத் திருவிளையாடற் புராணத்திலுள்ள சாரத்தைக் கதையாக என்னுல் அறிந்த மாத்திரம் சொல்லுகிறேன். இதைப் பத்தியாய் விசுவாசத்துடனே நியம மாய்ப் பெரியவர்களை வைத்துக் கொண்டு அவாகள படிக்கவும் தாம் கேட்கவும் * * * *

**End :**

த்திலே இருக்கிற லிங்கத்தையும், கிணற்றையும், வன்னிமரத்தையும் அழைப்பித்துப் பாண்டியராசர் முதலாய்ச் சருவமான பேரும் அறியச் சாட்சி சொல்லுவித்தார். ஆனபடியினலே பதிவிரதையை ராசா முதலான பேர் தோத்திரம் பண்ண, செட்டியார் தம்முடை வீட்டேறக் கூட்டிக்கொண் டுபோய் மூத்த ஸ்திரீயை ஒதுக்கிவைத்து இளைய ஸ்திரியுடனேகூட அஷ்ட ஐசுவரியத்துடனே சம்சாரம் பண்ணிக்கொண்டு இருந்தார். (கூச)

அறுபத்துநாலு திருவிளையாடல்கள் முற்றும்.

(கு. - பு.)—

இந்நூல், திருவிளையாடற் புராணத்துக்கு வசன நடையில் அமைந்த தொரு நூலாகும். இயற்றியவர் இன்னுரென்று தெரியவில்லை. இப் பிரதியில் ஆதி தொடங்கி அறுபத்துநாலு திருவிளையாடல்களும் உள. வசன நடையில் அங்கங்கே சில பிழைகள் காணப்படுகின்றன. எழுத் து நன்ருகவுளது. ஏடுகள் நிரம்பவும் பூச்சியரிக்கப்பெற்று முறிந்துள. படித்தற்கியலாவண்ணமாய் அத்துணை சிதைந்திருக்கின்றன.

---

## No. 2193. பிரமோத்தர காண்டம் வசனம்.

## PIRAMŌTTARA KĀṆḌAM PROSE.

**Substance, palm-leaf. Size, 15¾ × 1¼ inches. Pages, 516. Lines, 5 on a page. Character, Tamil. Condition, injured. Appearance, old.**

The *Birammōttara Kāṇḍam* of Varatuṅgarāma Pāṇḍiya in prose.

Complete.

**Beginning :**

சிவமயம்.

ஸ்ரீமுக ஹூ சித்திரைமீ நாள் ஆரம்பம் :

பிரம்மோத்தரகாண்டம் வசனகாவியம் :

* * * *

அறிவில்லாத நான் சொல்லுந்தமிழிலே பரமேசுவரனுரது கதை இருக்கிற படியாலே கல்வியுடைய பேர்கள் குற்றஞ் சொல்லாமல் மணங்கொள்வார் கள். இதல்லாமல் சத்தமும் அலையுங்கூடிய கடல்

யாண்டு சததுருக்களைச் சயித்து ராச்சிய * * *தீர்த்துச் சௌரியமும் பிரகாசமு உடையவனுய்த் தகடாகச் செய்த வேலாயுத முள்ள கையனுன 'வரதுங்கராம பாண்டியன்' என்கிற ராஜாவாலே செய்யப்பட்ட சரித்திரம் இநதக் கதை [யை] சங்கததார் முனைக சு ஆறு காற் பீடத்திலே அரங்கேற்றப்பட்டது என்று சொல்லப்படும் என்பது.

பாயிரம் முற்றும்,

பஞ்சாக்கரமான்மிய வத்தியாயம் :

இப்பால் பஞ்சாட்சர மான்மியம் வசனமாகச் சொல்லத் தொடங்கிஞேம். நைமிசாரண்ணியமென்கிற புண்ணிய க்ஷேத்திரமான ஒரு வனம் உண்டு. அந்த வனத்திலே மகா புனிதராகிய பிராமணர் இருஷிகள் அநேகம் பேர் கூடிப் பிரம்மதேவர் சொற்படிககு அவர் சொன்ன சொல்லை சிரஸா வஹிததுக்கொண்டு யாகாதி கிரதுக்கள் பண்ண நினைத்து ஒரு குளிர்ந்த மரததின் நிழலிலே குண்டம் முதலான சாமக்கிரிகள் சமிதைகள் சேர்த்துக் கடை கோலினுலே அக்கினியுண்டுபண்ணி ஆரம்பித்து நடத்தி வரச்செய்தே பதினெண் புராணூர்த்தமும் அசாதாரணமாய்க் கேள்விபபட்ட 'சூத மாமுனி' எழுநதருளி வரக்கண்டு முனீசுவரார் எதிர்கொண்டுவந்து அழைத்துப்போய் அர்க்கியபாத்யாசமனீயம் முதலான உபசாரம் பண்ணி இருக்கவைத்தபிறகு அவரைப்பார்த்து இருஷிகள் சொல்லுகிருர்கள். ஓய் சூத முனீந்த்ர ! யாம் சிவ கதைகளைக் கேட்டக மனதிலே ஆசைப்பட்டோம். சிவ பரமாயிருக்கிற கதைகளைச் சொல்லவேண்டும் என்று சொன்ஞர்கள். அந்தப்படிக்குச் சூதர் மஹா சந்தோஷத்துடனே. . . . .

**End :**

இந்தப்படிக்கு ஏழு நாள் பரமசிவன் பாதத்தைப் புகழ்ந்து தோத்திரம் பண்ணிப் பேய் ரூபம் விட்டுத் தேவரூபம் கொண்டு மனது சந்தோஷத்துடனே விமானத்தில் எறி யழகிய தனமுள்ள வஞ்சுலை பாதம் பிடிக்கச் சிவ பதத்திலே வந்து சேர்ந்தான். வந்து திரும்பாத திவ்விய பதத்தைச் சேர்ந்து சிவனும், இடப்பாகம் பொருந்திய ஈசுவரியும் மகிழததக்கதாகச் சிவகணங்கள் பணிவிடை செய்ய ஒளி பொருந்திய வச்சிரமிழைத்த பொன் விமானத்திலே விளங்க வீற்றிருந்து சிவ போகத்தை யனுபவித்துப் பிரியாமல் ஸ்திரீயும் புருஷனும் இருந்தார்கள். ஆனபடியினுலே பரமேசுவரன் கதையைக் கேட்ட பேருக்கு அழிவில்லாத பெரும் பதம் கிடைக்கிறபடியினுலே வேறே பெரும்பதஞ் சொல்லுவதற்கிடமுண்டோ ? என்று சூத மகா முனிவன் அதிசயித்துடனே சொல்ல நைமி சாரண்ணிய இருஷிகள் கேட்டன்புடனே மனமுருகி ஹரஹரா வென்று தங்கள் இரண்டு கைகளும் தலைமேற்கூப்பினுர்கள். தேவ தேவனுன ஸ்ரீ பரமேசுவரன் பஞ்சாக்ஷர மஹிமை முதற்கொண்டு பாவங்களைப் போக்கும் புராண நூலளவு கேட்பவர்கள் பலன் பெறுதல் சொல்லுங் கதையளவுஞ் சொல்லப்பட்ட சிவ கதை முழுதும் ஆசையுடனே கேட்டபேர் ஆராகிலும் ஆகட்டும் விட்டுனு பிரம்மா முதலான பேரும் கிட்டுதற்கரிதாகிய சிவபதம் அடைவார்கள். புராண மஹிமையுரைத்த வத்தியாயம் முற்றும்.

ஆக அத்தியாயம் உ௰உக்கு விருத்தம் பாயிரம் உட்படச் செய்யுள்

**Colophon :**

இந்தப் புராண விருத்தாந்தம் : தென் காஞ்சிப் பட்டணவாசியாய் [த்தரா] வடதேசத்தையாளப்பட்ட சந்திரவங்கிச ராஜாவான 'வரதுங்கபாமன' பாடின விருததத்தை.

(கு. - பு.)—

இந்நூல், வரதுங்கராம பாண்டியன் இயற்றிய 'பிரம்மோத்தர காண்டம்' என்னும் நூலுக்கு உரையே போன்று வசனத்தில் அமைந்துள்ளது. இதில பஞ்சாககரமான்மிய வத்தியாயம் முதல் புராணமகிமை யுரைத்த வத்தியாயம் வரையிலாய் இருபத்திரண்டு அத்தியாயங்களான் சிவகதையின் மஹிமை உணர்த்தப்பட்டுள்ளது. இப்பிரதியில் இந்நூல் முற்றும் உளது. ஏடுகள சிதைநதிருக்கின்றன. இப்பிரதி வசன நடையில் மிகப் பிழைபாட்டுடன் காணப்படுகிறது. இதை யியற்றியவர் இன்னுரென்று தெரியவில்லை.

---

## No. 2194. கீதாசாரத் தாலாட்டு.
## GĪTĀSĀRATTĀLĀṬṬU.

**Substance, palm-leaf. Size, 6 × 1¼ inches. Pages, 26. Lines 8 on a page. Character, Tamil. Condition, much injured. Appearance, old.**

Complete.

Same work as that described under No. D. 1058.

(கு. - பு.)—

இது, டிஸ்கிருப்டிவ் காடலாக்கில் 1058 ஆம் நம்பரில் வந்துள்ள நூலேயாகும். இப் பிரதியில் முற்றும் உளது. ஏடுகள் படித்தற்கியலா வண்ணமாய் மிகவும் சிதைவுற்றிருக்கின்றன.

---

## No. 2195. திருப்புகழ்.
## TIRUPPUKAḺ.

**Substance, palm-leaf. Size, 16¼ × 1 inches. Pages, 70. Lines, 4 and 5 on a page. Character, Tamil. Condition, injured. Appearance, old.**

Contains in 50 stanzas ; incomplete.

Same work as that described under No. D. 1649.

(கு. - பு.)—

இந்நூல், டிஸ்கிருப்டிவ் காடலாக்கு 1649 ஆம் நம்பரிலே வந்துள்ள நூலேயாகும். இதில் 50 செய்யுட்கள் வரையும் உள்ள பகுதி மாத்திரம் உளது. எழுத்துப் பிழையுளது.

---

## No. 2196. தமிழறியும் பெருமாள் கதை.
## TAMIḺAṞIYUM PERUMĀḶ KATHAI.

**Substance, palm-leaf. Size, 13¼ × 1 inches. Pages, 192. Lines, 5 on a page. Character, Tamil. Condition, injured. Appearance, old.**

Complete.

Same work as that described under No. D. 377 of T.D.C. Vol. I

(கு. - பு.)—
இந்நூல் டிஸ்கிருப்டிவ் காடலாக்கு 377-ஆவது நம்பரிலே வந்துள்ள தேயாகும். இப்பிரதியில் முற்றும் இருக்கிறது. மிகவும் பிழையுடன் உளது. ஏடுகள பல சிதறுண்டு முறிந்து கிடக்கின்றன.

---

## No. 2197. சாதி பேதக நூல்.
## JĀTIBHĒDAKANŪL.

Substance, palm-leaf. Size, 12 × 1 inches. Pages, 58. Lines, 4 on apage. Character, Tamil. Condition, much injured. Appearance, old.

Complete. Printed.

"On caste distinctions." This copy is different from that noticed under No. 641 of the Descriptive Catalogue of Tamil MSS. in this Library. This copy differs in some places from its printed edition.

**Beginning :**

சாதிபேதக நூல் :

ஆதிபேதகத்தா லயனிடத்திலுண்டான,
சாதிபேதங்களெல்லாஞ் சாற்றவே—நீதித்
திடவாரணங்க டினம் பரவுமுக்கட்
கடவாரண முகனே காப்பு.

கடவுள் வணக்கம்.

நலம்பயில் உமைகண்டேத்த நாகமும்புலியும்போற்ற
நிலம்பயிலந்தகார நீங்கி நீங்காக் கங்கை
யலம்பு செஞ்சடைகடாழ் வம்பலத்தாடுமையா
சிலம்பணி கமலம் போற்றிச் செப்புவன் சாதிபேதம் (க)

நெற்சாதி பேதம்போல நிலந்தனிற் கலந்துதோன்று
முற்சாதி பேதமெல்லா முறையுற மொழிகையாலே
சொற்சாதி பேதமுற்றுந்துணிந்திடி லெமது சொல்லு
நற்சாதி பேதத்துள்ளோர் நவின்றிடார் நவியிதென்றே. (உ)

புவியினிற் கலியினீட்டம் பொருந்தலிற் சாதிபேதத்
தவரவரொழுக்கங் குன்ரு தாகமப் பொருளையெல்லாந்
தவநெறி யுலகநாதன் றமிழினுற்றருக வென்னச்
சிவனருள் கருதி யானுஞ்செப்புவன் செய்யுளாக. (ங)

தேசவா[ர்](ரா)தி சைவதீக்ஷையைப் பெறுகைமிக்க . . .
வோசைசொள் சிவாகமாதி யுரைப்பதோடொழுக்கமெல்லா
மாசறு நூலுரைத்த மரபினர்க்கன்றி யான்
நேசமோ டிவை விளங்க நெறிபல விளங்குமன்றே. (ச)

சாதித்தொகை.

சாதி நால் வகையதா மச்சாதியி னனு லோமத்தின்
பேதமோரறுவகைத்தாம் பிரிதிலோமமு மோராரு
மீதிலா [ம](வ)ந்தராள மீராறும் விராத்திய[ன்ரு] (ந்தா)ன்
மூதுரை தெரிந்தபேர்க்கு மொழியுறமொழி யொணுதே. (ரு)

**End :**

கடிகைப்புலவர்.

படிவிப்பிரர் வேளாளர் குலப்பாவையாங் கன்னிகைசோரத்
துடனற்றேனைப்புல்கி யிட வெண்டா மவனற்றயிறாலே
யடையைத்தொடையைய பாவதனை யடைவாய்சொல்லி யாவரவர்பால்
கடிகைப்புலவரென விசையாற் கவிகள் பாடித்திரிவாரே. (௩௨)

* * * *

அலகிலா சாதிபேதத் தவரவரோங்கி வாழி
பலகலை சிவாகமங்கள் பார்மிசை தழைத்து வாழி
திலகமாய்ப் புவியனைத்துஞ் சிவமயமாக வெந்த
வுலகநாயகன்றன் கீர்த்தி யுலகினில் வாழிவாழி. (௩௪)

சாதி நூல் முற்றும்.

நாலு வர்ணத்திலே கூம்ச சாதி பேதகமுண்டானதுக்கு வயணம் (௧)
ஒவ்வொரு சாதியில் ஆறுவித பேத உண்டாயிற்று
கலியாணப்பெண் பெற்ற பிள்ளை சாதிக்குச் சமானம். (௨)
அந்தச் சாதிப்பெண் கலியாணமில்லாதவள் பெறும் பிள்ளை
குறைச்சல் (௩)
அந்தச் சாதியில் புருஷன் செத்த பிறகு அவளைச் சேர்ந்து பெற்றபிள்ளை
அதிலுங் குறைச்சல். (௪)
புருஷனிருக்கச் சோரமாகப் பெற்றபிள்ளை அதிலுங் குறைச்சல். (௫)

* * * *

(கு. - பு.)—

இந்நூல் டிஸ்கிருப்டிவ் காடலாக்கு 641-ஆவது நம்பர் பிரிதியில் வந்துள்ள "சாதி நூல்" என்னும் நூலினின்று வேறுபட்டுள்ளது. இந் நூல் அச்சிடப் பெற்றுள்ளது. அதற்கும் இதற்கும் சில வேறுபாடு காணப்படுகிறது. உலகநாத பண்டிதர் என்பவர் இயற்றுவித்ததாகவுளது. முடிவுற்ற பின்னர் ஷெ சாதிகளின் விவரணமாகச் சில தொடர் மொழி கள் எழுதப்பெற்றுள்ளன. எல்லாச் சாதிக்கும் ஒரு அட்டவணை யெழுதப் பட்டுளது. எழுத்துப் பிழையுடன் உளது. ஏடுகள் பல முறிந்து சிதைந்து கிடக்கின்றன.

---

## No. 2198. ஏரெழுபது.

## ĒRELUPADU.

Substance, palm-leaf. Size, 16¾ × 1 inches. Pages, 24. Lines, 5 on a page. Character, Tamil. Condition, much injured. Appearance, old.

Complete.

Begins on fol. 21-a. Śivapūjaikkalitturai 1-a Kapilarakaval. 33-a.

Printed.

A poem on the greatness of the plough and the ploughman, said to have been composed by the great Kambar. This copy is in many ways different from the printed edition.

**Beginning :**

ஏரெழுபது.

மந்தர மனைய திண்டோள் மணிமுடிவளவன் சோழன்
சுந்தர பாண்டியன்றன் ஜெருகு மணி மகுடஞ்சூட்ட
அந்தணர் குலங்களெல்லா மறங்களும் விளங்கவந்த
விந்திர ஞெலக்கம் போலிருந்தது பெரிய நாடே. (க)

ஈழமண்டல முதலெனை வுலகிற்றென்று மண்டலத்தெறிபட வேந்தன்
தாழு மண்டலஞ்செம்பியன் வளவன்றன் செய்தான பிறந்துடைய
[தொரதரணியில் ?
வாழு மண்டலங் கனகமுமணியும் வரம்பு காவிரிக்குரம்பி
[லேகொழிக்குஞ்
சோழ மண்டலமிதற்கெதிராச் சொலு மண்டலஞ் சொல்ல
[வொண்ணுதே. (உ)

பார்வாழி நான்மறை நூற்பணிதராகுதி வாழி
கார் வாழி வளவர்பிரான் காவேரி நதி வாழி
சீர்வாழி பெருக்கள்ளர் பெருஞ்செல்வக்கிளை வாழி
யேர்வாழி யிசைவாழி யெழுபத்தொன்பது வள நாடே. (ங)

தொழுங்குலத்திற் பிறந்தாலுஞ் சுடர் முடி மன்னவராலு
மெழுங்குலத்திற் பிறந்தாலு மிவர்க்குப்பின் வணிகரெனுஞ்
செழுங்குலத்திற் பிறந்தாலுஞ் சிறப்புடையாராலு
முழுங்குலத்திற் பிறந்தாரே யுலகுய்யப் பிறந்தாரே. (ச)

வேதநூன்முதலாக விளங்குகின்ற கலையனைத்து
மோதுவாரெல்லாரு முழுவான்றன் றலைக்கடைக்கே
கோதை வேன்மன்னவற்குங் கொழுவளமே வளமென்பா
ராதலாலிவர் செயலை யாருரைக்க வல்லாரே. (ரு)

**End :**

பார் வேந்தர் பெருஞ் செல்வம் பழுதுபடா தொருநாளு
மேர் வேந்தர் பெருஞ்செல்வமிழிவுபடாதிருக்கையினற்
றேர் வேந்தர் போர்க்களத்திற் சிலர் வெல்வர் சிலர் தோற்பர்
ஏர் வேந்தர் போர்க்களத்திலி ரப்பவருந்தோலாரே. (சுயக)

மன்னவர் கடந்தொழிலும் மறையவர்கடந்தொழிலும்
பின்னெண்ணப் பிறந்துடைய போராளர் பெருந்தொழிலும்
மன்னுமயன் வகையாக வழியருந்தத் தொல்குலத்தோர்
கன்னி மலர்த்திருப்புயத்தார் கண்ணாளர் தம்மாலே. (எய)

ஏரெழுபது எழுதி நிறைந்தது முற்றும்.
அகிலாண்டகோடி பிரம்மாண்டநாயகர் துணை—சிவமயம்.
குமரகுருபரன்.

**(கு. - பு.)**—
இந்நூல் கவிசக்கிரவர்த்தி கம்பரால் இயற்றப்பெற்ற தென்பர். இது உழவுச்சிறப்பினையுணர்த்தும். எழுபது பாடல்களால் ஆனது. அச்சிடப் பெற்றுளது. அச்சுப்பிரதிக்கும் இதற்கும் பல்வேறு பேதங்கள் காணப் படுகின்றன. எல்லாப்பாடல்களும் முன்பின்னுகவுள. பிழையுடனிருத்த லோடு ஏடுகள் மிகவும் சிதலுற்றுக்கிடக்கின்றன. இப்பிரதியில் எழுபது பாடல்களிருக்கின்றன.

## KAṆAKKADHIKARAM.

**Substance, palm-leaf. Size, 16½ × 1¼ inches. Pages, 150. Lines, 4 and 5 on a page. Character, Tamil. Condition, much injured. Appearance, old.**

Seems complete.

Similar to the work described under No. R, 199 (c.)

## Beginning :

கணக்கதிகாரம் சிற்றுரையுடன்.

இக்கணக்கி லொன்று மிடையூறு வாராமற்
பொக்கணவன் பெற்ற பொருளன்றே—இக்கணக்கு
நேரோ விளங்கி நிகரின்றி நிற்கும்வண்ணம்
பார்மேல் விளங்கவே பார். (க)

குருவே துணை.

சீர்படைத்த வுந்திச் செழுங்கமலத் தயனைப்
பார்படைக்கவென்று படைத்த . . . கார்படைத்த
வோதமாமேனி யுரவோனுலகளந்த
பாதமே யெம்முடைய பற்று. (க)
என்பது, குருவேசுவாமியிருந்துள்ள ஸ்ரீவாசு

தேவனை நமஸ்கரித்தோம் என்றவாறு. (க)
மண்டலங்கள் முன்படைத்து வாரிமலர் தொகுத்துப்
புண்டரீகன் பாதம் புகழ்ந்திறைஞ்சித்—தண்டமிழால்
நூற்படுத்திச் சிற்றெண்ணி . . . க்கணிதமெல்லாம்
பாற்படுத்திக் கூறுவன் யான் பாத்து. (உ)
என்பது கடவுள் வாழ்த்து. (உ)

வீழுமணிதரிருளகற்றி மெய்ப்பொருள்கள்
சூழுங்கதிரோன் சுடரொளிபோல்—எழுலகும்
வா[ள்] (ழ்)வித்த காரணத்தாலாகியதோ ரெக்கணக்குந்
தா[ள்] (ழ்)வில்லாவண்ணஞ் சமைத்து, (ங)

விருத்தம்.

ஆரியந்தன்னி னுலுமருந்தமிழ் தன்னினுலுஞ்
சீரியலாகச்சொன்ன திண்ணிய கணக்கு நூலைப்
பாரினில் மனிதற்கேற்கப்பகவினூலுரைக்கும்வண்ணஞ்
சூரியற்கெதிரே தோன்றுஞ்சுடர் விளக்கதனையொக்கும். (ச)
எப்பொழுதுஞ் சிந்திந்திருப்ப னெழுத்தெண்ணதனைப்
தப்பாம லென்றுந்தலை நிற்க—வெப்பொழுதும்
பூவகத்தான் மார்பகத்தே புல்குவாளென்னுடைய
நாவகத்தே வீற்றிருக்க நல்கு. (ரு)

என்பது, வாகீசுவரியாயிருந்துள்ள சரசுவதி தேவியை நமஸ்கரித்தோம் என்றவாறு. (ரு)

புன் கவிதையென்று புகலாரே—மின்கொடியே
பாற்கடலிற்பாய்ந்தநீர் பாலாமாமென்கவிதை
யேற்குமென வுரைத்தேனி யான். (சா)

என்பது, மகர்திசைப்பட்ட அறிவினையுடையார் சந்நிதியிலே அஞ்ஞான புத்தியால் அகலிடத்து வழங்கிவரும் கணககினை யறிவித்தற்குக் காரணம் என்னோவெனின் ஆதிமூர்த்தியாயிருந்துள்ள ச்ரீ வாசுதேவன் பள்ளி கொண்டருளிய திருப்பாற்கடலிற் பாய்ந்த நீர் தன் நிறமொழிந்து பால் நிறமானுப்போல் வித்துவான்களுக்கு யான் சொன்ன கவியும் நன் கவி யாம் என்றவாறு.

## End :

காலேகாணி நிலமுழுதானுங் கலந்தங் கொரு மாநிலமுழுதானும்
ஏலஞ்சேர்ந்த விருவற்கும் இறை வந்துற்ற தொருகாசு
ஞாலமுடைய கணக்கற்கு நாலு மாத்தைக் கவதியிட்டேன்
சீலமுடைய பெரியோரே தெரிந்து விதனைச் செப்பீரே.

என்பது, இறைக்கணக்கு இது.

(கு. - பு.)—

இது மூவருடக்காடலாக்கு 199 (c)-ஆவது நம்பரில் வந்துள்ள கணக்கதி காரம் போன்றுளது. உரைப்பகுதி மாத்திரம் அதில் மிக விரிவாகவுள்ளது ; இதில் உள்ள உரைப்பகுதி குறிப்புரையாய் மிகச் சிறிதாயுள்ளது. மிகப் பிழையுடன் காணப்படுகிறது. ஏடுகள் மிகவும் சிதைந்து முறிந்து கிடக கின்றன.

---

## No. 2200. கபிலரகவல்,

### KAPILARAHAVAL.

**Pages, 6. Lines, 5 on a page.**

Complete.

Begins on fol. 33-a of the MS. described under No. D. 2198.

Same work as that described under No. D. 1826.

## Beginning :

கபிலரகவல்.

சாற்றக் கேண்மின் சாற்றக் கேண்மின்
நான் முகத்தோன் கூரிய நாலாவகைவழியும்
சிறப்பின்னரும் பொருளைக் கூறுங்கால்
ஆண் முதிதோ பெண் முதிதோ ஆண்டவினை முதிதோ
செல்வஞ்சிறப்போ கல்விச்சிறப்போ
எல்லாப்பிறப்பு மியற்கையோ செயற்கையோ
நஞ்சுறுதீவினை துஞ்சுமோதுஞ்சாதோ.

துஞ்சும் போதந்தப் பஞ்சேந்திரியங்களை
என் செயாநிற்குமோ வெவ்விடத்தேகுமோ
ஆற்றலுடையீர் அருந்தவம் செய்தால்
வேற்றுடம்பாமோ தன்னுடம்பாமோ.

**End :**

அது நிற்க,

மூவகை யுலகில் முழுதுணர்ந்தோர்க்குப்
பேரொளி மாமுனி பிறக்கக்க நலூர்
பெரும்பறச்சி யெற்றிற பிறந்த கபிலைநானோ
என்னுடனே பிறந்தாரெவரெனில்
ஆண்பால் மூவர் பெண்பால் நால்வர்
எங்களை வளர்த்தார் ஆராரென்னில்
ஊற்றுக்காட்டில் வண்ணாரகத்தில் உப்பை வளர்ந்தனள்

*　　　　*　　　　*　　　　*

பாரினூட்டில் ஆநிரைனில், அந்தணர் வளர்க்க யாளும் வளர்ந்தனன்
அது நிற்க,

மாரிதான் சிலரை வரைந்து பெய்யுமோ
மாநிலம் சிலரைத் தாங்கேனென்னுமோ
காற்றுஞ் சிலரை நீக்கி வீசுமோ
கதிரவன் சிலரைக் காயேனென்னுமோ
ஆதலால் குலமுமொன்றே குடியுமொன்றே
வழிபடு தெய்வமுமொன்றே யாதலால்
எந்நாளாகிலும் எப்போதாகிலும்
பொய்யுங் கள்ளமும் பழியுங் கொலையும்

*　　　　*　　　　*　　　　*

ஆணும் பெண்ணுமல்லாது குலமுமில்லை
பேணி வகுத்தவர் பெரியவாராமே.

சிவமயம்.

**(கு. - பு.)—**

இந்நூல் டிஸ்கிரிப்டிவ் காடலாக் 1826-ஆவது நம்பர் பிரதியில் வந்துள்ளதேயாம். அங்கங்கே பல பாடபேதங்கள் காணப்படுகின்றன. ஏடுகள் மிகவும் சிதலுற்றுக்கிடக்கின்றன. அச்சுப்பிரதிக்கும் இதற்கும் பல பேதம் உள. எழுத்துப்பிழையுடனிருக்கிறது.

---

## No. 2201. கபிலரகவல்.
## KAPILARAHAVAL.

Pages, 8. Lines, 10 on a page.

Complete.

Begins on fol. 1-a of the Ms. described under No. D. 1577

Same work as the above.

(கு. - பு.)—

இந்நூல் முன் பிரதியில் வந்துள்ளதே. அதற்கும் இதற்கும் மிகவும் பாடபேதங்கள் காணப்படுகின்றன. அச்சுப பிரதியிலும் வேறுபாடு காணப் படுகிறது. மிகவும் பிழையுடன உளது. இதன் பின்னர் ஔவை பாடல களில் சிலவும் தொண்டைநாடடெல்லை குறிக்கும சில செய்யுட்களும் இருக்கின்றன.

---

## No. 2202. நாலாயிர திவ்ய பிரபந்தம்.
## NALĀYIRA DIVYA PIRABANDHAM.

Substance, palm-leaf. Size, $11\frac{1}{2} \times 1\frac{1}{2}$ inches. Pages, 28. Lines, 10 on a page. Character, Tamil. Condition, injured. Appearance, old.

Incomplet.

Same work as that described under No. 646.

(கு. - பு.)—

இது டிஸ்கிருப்டிவ் காடலாக்கு 646-ஆவது நம்பரில் வந்துள்ளதே யாகும். இப்பிரதியில் குலசேகரர் இயற்றிய "தருதுயரந்தடாயேல்" என்று தொடங்கும் வித்துவக்கோட்டுச்சுவாமி விஷயமான பாடல்கள் பத் தும், பெரியாழ்வார் இயறறிய திருமொழியில் "நெய்க்குடத்தைப் பற்றி யேறும்" என்று தொடங்கும் பத்து பாடல்களும், திருமழிசையார் இயற்றிய திருச்சந்த விருத்தமும் இருக்கின்றன. நிரம்பவும் எழுததுப் பிழையுடன் உளது. ஏடுகள் சிதலுற்றிருக்கின்றன.

---

## No. 2203. திருக்கோளூர் பெண் பிள்ளை ரகசியம்.
## TIRUKKŌḶŪR PEṆPIḶḶAI RAHASYAM.

Substance, palm-leaf. Size, $7\frac{3}{4} \times 1\frac{1}{8}$ inches. Pages, 15. Lines, 5, 6 on a page. Character, Tamil and Grantha. Condition, good. Appearance, old.

Complete.

Same work as that described under No. 116 (p)

(கு. - பு.)—

இது மூவருடக் காடலாக்கு 116 (p)-ஆவது நம்பர் பிரதியில் வந்துள்ள தேயாகும்; இப்பிரதியில் இது முற்றும் இருக்கிறது. வசன நடையில் அங்கங்கே சில சொற்கள் மாறுபட்டிருத்தலோடு இறுதியில் "பெரிய வாச்சான்பிள்ளையருளிச்செய்வர்" எனறும் காணப்படுகிறது.

---

## No. 2204. ரஹஸ்யத்ரயஸாரம்.
## RAHASYATRAYASĀRAM.

Substance, palm-leaf. Size, $19\frac{1}{2} \times 1\frac{1}{2}$ inches. Pages, 378. Lines, 7–9 on a page. Character, Tamil and Grantha. Condition, much injured. Appearance, old.

Complete.

Same work as that described under No. D. 971.

இது டிஸ்கிருப்டிவ் காடலாக்கு 971-ஆவது நம்பர் பிரதியில வந்துள்ள நூலேயாகும். இப்பிரதியில் இந்நூல் முற்றும் உளது. 10, 11 என்ற ஏடுகள் இரண்டும் காணப்பெறவில்லை இப்பிரதி மிகவும் சிதைந்துளது. எழுத்து நன்ரு விருக்கிறது. எழுத்துப பிழைகள் உள. கடையில் ஹேவிளம்பிஸ்ரீ வையாசி௵ ௰உ௨ ஸமஸ்தம் எழுதியாயிற்று. பிள்ளைப்பாக்கம் வேலாமூர் பத்தங்கி ஸ்ரீநிவாஸராகவ ஸூஹஸ்தலிகிதம் என்ற தொடர் மொழியொன்று காணப்படுகிறது.

---

## No. 2205. திருவாசகம்.
## TIRUVĀCAKAM.

**Substance, palm-leaf. Size, $14\frac{1}{2} \times 1\frac{1}{4}$ inches. Pages, 213. Lines 8 on a page. Character, Tamil. Condition, injured. Appearance, old.**

Complete.

Same work as that described under No. D. 1152.

**End :**

படியதனிற் கிடந்திந்தப் பதிபாசந்தவிரவிடுங்
குடிமையிலே திரிந்தடியேன் கும்பியிலே விழாவண்ணம்
நெடியவனும் நான்முகனும் நீய் ? காணுங் காணவொண்ணு
வடிகளெனக்கருளிய வாரூர்பெறுவாரச்சோவே.
செத்திடமும் பிறந்திடமுஞ் சாகாதிங்கிருந்திடமு
மத்தனையு மறியாதார் அறியுமதங்கொள்ளளவோ
ஒத்தநிலக்தொற்ற விடத்துறுதியெனு மோரருளை
யத்தனெனக் கருளிய வாரூர் பெறுவாரச் சோவே. (௰௧)

அச்சோபதிகம் முற்றும்.

**(கு. - பு.)—**

இந்நூல் டிஸ்கிருப்டிவ் காடலாக்கு 1152-ஆவது நம்பரில் வந்துள்ளதேயாகும். இப்பிரதியி ் அச்சோப்பதிகத்தினிறுதியில் (௰) (௰௧) (10, 11)-ஆவது பாடல்களாக இரண்டு பாடல்கள் பல கையெழுத்துப் பிரதிகளிலும், இதுவரையில் அச்சிட்டு வழங்கப்பெறும் அச்சுப்புத்தகப் பிரதிகளிலுங் காணப்பெறாதவைகளாய் எழுதப்பட்டுள்ளன. அச்செய்யுளிரண்டும் மேலே காட்டப்பட்டிருக்கின்றன. ஏடுகள் மிகவுஞ் சிதைந்திருக்கின்றன. 107-ஆவது ஏடு அதிகமாக இரண்டு எழுதிக்கோக்கப்பட்டுள்ள. எழுத்துப்பிழை உள.

---

## No. 2206. வைத்ய முறைகள்.
## VAIDYA MUṞAIKAḶ.

**Substance, plam-leaf. Size, $7\frac{1}{2} \times 1\frac{3}{8}$ inches. Pages, 126. Lines 3–6 on a page. Character, Telugu. Condition, good. Appearance, old.**

Contains recipes given in works on Indian Medicine and used by Indian doctors.

நக்ஷத்திர மூலிகைகள்.

மகா நக்ஷத்திரத்து வாதா மேறபுல்லுருவி பாலிற் குடிக்கக் கர்ப்பம் தரிக்கும். அந்த நாளிலே நெல்லி செதிக்யோ குறையாது. அது வேரோடு நெல் விளையும். அத்திசெட்டு மீதபதநிகொதகட்டின்னுசெல்ல வேண்டிய பெறலாம். இந்தப் புல்லுருவி மூலத்தில கையிலிருக்கப் பெண் வசமாம். இந்தப் புல்லுருவி அனுஷத்திலே யெடுத்து நெய்யிலே சாட்டால் லாபம். விசாகத்தில் வேப்புமேல் புல்லுருவி கையிலிருக்க எதிரி வருவன். விசாகத்தில வெடத்தெரிமேல் புல்லுருவி.* * * * * * * * * * * *

விசாகத்தில் குருந்துமேல் புல்லுருவி கையிலிருக்க் கண்டவர்கள் மோகிப்பார்கள். எருக்குமேல புல்லுருவி ரேவதியில் எடுத்துக் காடியிலாவது பாலிலாவது போட்டுக் குடிக்க யாவருக்கும் தெரியாது.

* * * * * * *

பகு மூத்ராணிக்கு :—தங்கடி பீய்யம், மூடேண்ட்ள நாடி ராகிபிண்டி சேரு, பாதபெல்லம் சேரு * * *

கிரந்த :

ஸ்லோகம்—ஏவம் ஸவிவிஷ்ண கராணா
மொஷதானாம் கமகம் வநநாநி |
கஸ—ஏரியக்தம் கிரஷம் வஷதெ
ஜநஷோஹ வஸ்ரம் ஷமயொவஷதி ||

**End :**

சூதக வியாதிக்கு மருந்து :—

பரங்கிப்பட்டை வராகனெடை (க) கண்டு போங்கி வராகனெடை (க) சைந்தவலவணம் வராகனெடை (க) மிளகு வராகனெடை (க) மஞ்சிள் வராகனெடை (க) பளிங்கம் வராகனெடை (க) பொன் முசுட்டை வராகனெடை (க) கொத்தமல்லிகை வராகனெடை, வேப்பநெத்து அரை வராகனெடை, கோணி மூன்று வராகனெடை, ஓமம் வராகனெடை, சங்கந்தழை மூன்று வராகனெடை, திப்பிலி வராகனெடை (க), கோணிப்பட்டை, வேப்பம்நெத்து, பொன் முசுட்டை இந்த மூன்றையும் சட்டியில்வைத்து கரிக்கி ஒரே வகையெல்லாம் கூடப்போட்டு நாலுபடி தண்ணீர்விட்டுக் காய்ச்சிக் காற்படி கஷாயம் நிற்க, நேரம் ஒன்றுக்குக் கால்படி கால்படி கஷாயம் குடிக்க ஆர்த்தவம் வாங்கிப்போகும். மூன்று நாள் கொடுக்கவும். பத்தியம்—உப்பு, புளிப்பு தவிர்க்கவும். கர்ப்பம் நில்ப்புநு. பஸுபு ஜில்லெடு பாலுலோநூறி குளிகலுவேசி ஒக குளிக திநி வேந்நீள்ளுத்ராகநு. உப்ப ஸமு திருநு. எனிமிதி ரோஜுலு திநேதி.

(கு. - பு.)—

இது, பெரும்பான்மையாய் அந்தந்த வியாதிகளுக்கு உரிய ஔஷதப் பிரயோக முறைகளையும், வசியம், மோஹநம், ராஜவசியம் முதலான காரியங்களுக்கு உரிய பலவகைப் புல்லுருவி முதலாய ஓஷதிகளை இன்னின்ன நட்சத்திரங்களில் எடுத்துக்கொண்டு இன்னின்ன விதமாகக் பிரயோகித்தால் இன்னின்ன காரியங்கள் கைகூடும் என்னுமதாய பிரயோக வகையையும் சிறுபான்மையாக எடுத்துக் கூறுகிறது. இது, இன்னூரால்

வில்லை. உள்ள வரையிலும் ஏடுகள் பல இடங்களிலும் இடையிலும் இல்லா மல் தொடர்பில்லாமல் கோக்கப்பட்டுத் தமிழ், தெலுங்கு, மலையாளம் முத லாய பல பாஷைகளிலும் விரவி எழுதப்பட்டிருக்கிறது. இடையிடையே வடமொழி ஸ்லோகங்கள் சில காணப்படுகின்றன. மிகவும் எழுத்துப்பிழை யுடன் காணப்படுகிறது. ஆயினும், இது மிகவும் உபயோக முள்ளதாகும்.

---

## No. 2207. அரும்பொருள் விளக்க நிகண்டு.

## ARUMPORUḶ VIḶAKKA NIKAṆṬU.

Substance, palm-leaf. Size, 13½ × 1⅜ inches. Pages, 250. Lines 6 on a page. Character, Tamil. Condition, injured. Appearance, very old.

Complete.

Same work as that described under No. D. 10.

**Colophon :—**

ஆநந்தவ௵ பங்குனிமீ ௨௰ புதன்கிழமை உரோகணி நட்சத்திரம் புதுவைமா நகரத்தில் இருக்கும் குழந்தைவேல் உபாத்தியாயர் அரும் பொருள்விளக்கநிகண்டு எழுதி நிறைவேறினது. புதுவை வித்வான பொய்கைபாக்கம் சின்னைய உபாத்தியாயர் முதல்தாபத்து இரண்டாவது குமாரன் குழந்தைவேலு உபாத்தியாயர் எழுதினது.

**(கு. - பு.)—**

இது டிஸ்கிரிப்டிவ் காடலாக்கு 10-வது நம்பரின் வருதுபோலேயாகும். இப்பிரதியில் இந்நூல் முற்றும் உளது. ஏடுகள் பல சிதலுற்று இருக்கின் றன. இந்நூல் அச்சிடப்பெற்றுளது.

---

## No. 2208, சூடாமணி நிகண்டு உரையுடன்.

## CŪḌĀMAṆI NIKAṆḌU WITH COMMENTARY.

Substance, palm-leaf. Size, 14 × 1¼ inches. Pages, 744. Lines, 4 on a page. Character, Tamil. Condition, injured. Appearance, old.

Complete in 10th Tokudi. (Oliparṟiyapeyarttokudi).

Same work as that described under No. D. 13.

**(கு. - பு.)—**

இந்நூல் டிஸ்கிருப்டிவ் காடலாக்கு 13-வது நம்பர் பிரதியில் வந்துள்ள நூலேயாம். இப்பிரதியில் இந்நூல் 10-வது தொகுதியாகிய ஒலிபற்றிய பெயர்த்தொகுதி வரை யுமேயுளது. ஏடுகள் சிறிது சிதைந் திருக்கின்றன. திருத்தமாகவுளது.

## ŚĒNDAN DIVĀKARA NIKAṆṬU.

Substance, palm-leaf. Size, 13⅞ × 1⅜ inches. Pages, 263. Lines, 6 on a page. Character, Tamil. Condition, injured. Appearance, old.

Contains Tokudis 2 to 9 only.

Same work as that described under No. D. 25.

(கு. - பு.)—

இந்நூல் டிஸ்கிருப்டிவ் காடலாக்கு 25-வது நம்பரில் வந்துள்ளதே யாகும். இப்பிரதியில் முதற்றொகுதியும், இறுதி தொகுதியும் நீங்கலாக மிகுதியான தொகுதிகள் மாத்திரம் உள. ஏடுகள் பூச்சியால் அரிக்கப்பட்டுள.

---

## No. 2210, இலக்கண விளக்கம் உரையுடன்.

## ILAKKAṆA VIḶAKKAM WITH COMMENTARY.

Substance, palm-leaf. Size, 16¼ × 1¼ inches. Pages, 388. Lines, 12 on a page. Character, Tamil. Condition, injured. Appearance, old.

Complete in Akattiṇaiyiyal.

Same work as that described under No. D. 36.

(கு. - பு.)—

இந்நூல் டிஸ்கிருப்டிவ் காடலாக்கு 36-ம் நம்பர் பிரதியில் வந்துள்ள நூலேயாகும். இப்பிரதியில் இந்நூல் ஆதிதொடங்கி அகத்திணையியன் முற்றும் உரையுடன் உளது. முதலில் இரண்டு ஏடுகள் நுனியில் மிகவும் முறிந்துகிடக்கின்றன. 32-வது ஏடு முதல் 53-வது ஏடு வரையில் உள்ள ஏடுகளில்லை.

---

## No. 2211. நன்னூல் விருத்தியுரையுடன்.

## NANNŪL WITH VIRUTTIYURAI

Substance, palm-leaf. Size, 14⅜ × 1¼ inches. Pages, 284. Lines, 9 and 10 on a page. Character, Tamil. Condition, injured. Appearance, old.

Complete in 58th Sūttiram of Peyariyal of Śolladikāram.

Same work as that described under No. 60.

(கு. - பு.)—

இந்நூல் டிஸ்கிருப்டிவ் காடலாக்கு 60 வது நம்பரில் வந்துள்ள நூலே யாகும். இப்பிரதியில் சொல்லதிகாரம் பெயரியல் " முதலைவையுறிற் சினை யைக் கண்ணுறும், அது முதற்காகில் சினைக்கையாகும் " என்ற (ருஅ)-வது சூத்திரவுரையோடு முடிவுறுகிறது. ஏடுகள் பல சிதலுற்றுச் சிதைந்துள. உள்ளவரையில் எழுத்துப்பிழையில்லாமலிருக்கிறது.

Pages, 8. Lines, 10 on a page.

**Begins on fol. 41-a of the Ms. described under No. 2. T. D. C. Vol. I.**

Contains **1 to 5 stanzas.** Oḷukkamuḍamai Adhikāram only.

Same work as that described under No. D. 151 of T.D.C. Vol. I.

**(கு. - பு.)—**

இது டிஸ்கிருப்டிவ் காடலாக்கு 151-வது நம்பர் பிரதியில் வந்துள்ளதேயாகும். இப்பிரதியில் அடக்கமுடைமையதிகாரத்தின் இறுதிக்குறளும், ஒழுக்கமுடைமையதிகாரத்தின் 1–5 குறளும் பரிமேலழகர் உரையுடன் இருக்கின்றன.

---

## No. 2213, திருக்குறள் பரிமேலழகர் உரையுடன்.

### TIRUKKUṞAḶ WITH PARIMĒLAḶAKAR URAI.

Substance, palm-leaf. Size, 15½ × 1½ inches. Pages, 510. Lines, 9 on a page. Character, Tamil. Condition, good. Appearance, old.

Complete.

Same work as that described under No. D. 151 of the Descriptive Catalogue of Tamil MSS. Vol. I.

**Colophon :**

விக்ருதி ௵ வையாசிமீ உ௱ ௨ சோமவாரம் எழுதி நிறைவேறியது முற்றும்.

**(கு. - பு.)—**

இந்நூல் டிஸ்கிருப்டிவ் காடலாக்கு 151-வது நம்பரில் வந்துள்ளதேயாகும். இப்பிரதியில் இந்நூல் உரையுடன் முற்றும் உளது. எழுதின முறையும் நன்றாகவும், சுத்தமாகவும், தெளிவாகவும் உளது.

---

## No. 2214, திருக்குறள் மூலம்.

### TIRUKKUṞAḶ TEXT.

Substance, palm-leaf. Size, 10½ × 1⅝ inches. Pages, 266. Lines, 5 on a page. Character, Tamil. Condition, good. Appearance, old.

**Begins on fol. 1-a The other work herein is** Nālaḍiyār 134-a.

Complete.

Same work as that described under No. D. 151.

**(கு. - பு.)—**

இந்நூல் டிஸ்கிருப்டிவ் காடலாக்கு 151-வது நம்பரில் வந்துள்ள நூலேயாகும். இப்பிரதியில் மூலமாத்திரம் முற்றும் உளது, திருத்தமாயுளது.

---

## No. 2215, நாலடியார் மூலம்.

### NĀLAḌIYĀR TEXT.

Pages, 160. Lines, 5 on a page.

**Begins on fol. 134 of the Ms. described under No. D. 2214.**

Complete.

Same work as that described under No. 170. Text only.

(கு. - பு.)—
இது டிஸ்கிருப்டிவ் காடலாக்கு 170-வது நம்பர் பிரதியில் வந்துள்ள தேயாகும். இப்பிரதியில் இந்நூல் மூலமாத்திரம் முற்றுமுளது, திருதத மாகவிருக்கிறது.

---

## No. 2216. நாலடியார் பதுமனுர் உரையுடன்.

### NĀLAḌIYĀR WITH PADUMANĀR URAI.

Substance, palm-leaf. Size, $15\frac{1}{2} \times 1\frac{3}{8}$ inches. Pages, 290. Lines, 5–7 on a page. Character, Tamil. Condition, slightly injured. Appearance, old.

Complete.

Same work as that described under No. D. 175.

(கு. - பு.)—
இந்நூல் டிஸ்கிருப்டிவ் காடலாக்கு 175-வது நம்பர் பிரதியில் வந்துள்ள நூலேயாகும். இப்பிரதியில் இந்நூல் முற்றும் உளது. ஏடுகள் ஒரு சிறிது சிதலுற்றிருக்கின்றன.

---

## No. 2217. சீவகசிந்தாமணி.

### JĪVAKACINTĀMAṆI.

Substance, Sritalam. Size, $20 \times 2\frac{1}{4}$ inches. Pages, 126. Lines, 16 on a page, Character, Tamil. Condition, much injured. Appearance, old.

Contains 1 to 11, Ilambakas and 45 Stanzas in 12th Ilambakam.

Same work as that described under No. D. 102. Text only.

(கு. - பு.)—
இந்நூல் டிஸ்கிருப்டிவ் காடலாக்கு 102-ம் நம்பர் பிரதியில் வந்துளதே யாகும். இப்பிரதியில் முதல் தொடங்கி 12-ம் இலம்பகமாய இலக்கணை யாரிலம்பகம் 45-வது செய்யுள் வரைக்கும் மூலமாத்திரம் உளது. ஏடு கள் மிகவும் சிதறுற்றிருக்கின்றன. 48-வது ஏடு முதல் எட்டிணெண்கள் குறிக்கப்படவில்லை.

---

## No. 2218. உத்தண்டன் கோவை.

### UDDAṆḌAN KŌVAI.

Substance, palm-leaf. Size, $16 \times 1\frac{3}{8}$ inches. Pages, 180. Lines, 4 on a page. Character, Tamil. Condition, injured. Appearance, old.

Wants 40 Stanzas from 310 to 349 in the middle. Otherwise complete.

Same work as that described under No. R. 332.

(கு. - பு.)—

இந்நூல் மூவருடக்காடலாக்கு 332-ம் நம்பர் பிரதியில் வந்துள்ள நூலேயாகும். இப்பிரதியில் 310 முதல் 349 வரையிலான செய்யுட்களை கொண்டுள்ள 78 முதல் 87 வரை ஏடுகள் இல்லை. மிகுதியான பகுதி முற்றும் உளது. ஏடுகள் மிகச்சிதலுற்றிருக்கின்றன. இது ஷ்டி பிரதிக்கு மாத்ருகையான பிரதியாகும்.

---

## No. 2219. திருவேங்கட சதகம்.

### TIRUVEṄKAṬA ŚATAKAM.

Substance, palm-leaf. Size, 17 × $1\frac{3}{8}$ inches. Pages, 100. Lines, 4 on a page. Character, Tamil. Condition, much injured. Appearance, old.

Complete.

100 verses, in praise of God Śrī Vēṅkaṭēśa, by Nārāyaṇan.

**Beginning :**

வடவேங்கிட சதகம்.

செந்திருமருவு மார்பன் சீரடிக்கமலந்தன்னைச்
சிந்தையில் மகிழ்ந்தெந்நாளுஞ் சீர்தமிழ்நாதர் பாட
அந்திவளனவன்றன் பாகத்தம்பிகையருளா நின்ற
தந்திமாமுகனைப் போற்றத் தழைத்திடுஞ் சதகந்தானே.

கங்கை காவேரி நதி புஷ்கரணி வாசனே (க)
க. . . . . . . . .ணி பாதனே
கருநீலவண்ணனே காயாம்பூமேனியாங்
கருணாநிதி கடவுளே
செங்கையதனுல் அமிர்தமுண்ட திருவாயனே
அண்டருக்கமிர்தமாலே
அனந்தமான முனிவோர்கள் துதி செய்கின்ற
ஆதி வேதாந்த முதலே
செங் . . கட ல் வண்ணனே திகழ் வரதராசனே
திரிமூர்த்தி ரூபனே நீ
செயமவைகளாகவே யிச்சிறையகற்றியருள் செய்திடக்
கிருபை புரிகுவாய்
மங்கை நப்பின்னை கொங்கையதின்மீதிலே ..
மாதவ சுவ ரூபனே நீ
வடமலையில் வளர்கின்ற திருமருவும் வாசனே
வடவேங்கடா தீசனே (க)

**End :**

கார்மேக முகிலளககமலையனுகூலனே . . . . . . . . .
. . . . . . . . . . . . . . . . . .
. . . . . . . . . நின்று தினமும்.
சார்மாயப்பஞ்செழுத்தையு மொருமனதாய்ச் சதாகாலமுந் துதி
செய்ய . . . . . . . . . . உந்தியிலனுதினம் சகல
கலை பாலித்தருள்.
பார்மேவுலோக முழுதளந்த பரிபாலனே பைந்தமிழ்க்குதவியேநீ

பாமாலை துதி செய்த நாராயணன் மீதில் பட்சமாய்க்கிருபை வைத்து
வார்மேவுகளப முலையலமேலு மங்கையுடன் வந்து காத்தருள் செய்குவாய்.
வடமலையில் வளர்கின்ற திருமருவும் வாசனே வடவேங்கடா தீசனே.

வாழிச்செய்யுள். (௧௧)

*   *   *   *
*   *   *   *

வடமலையில் வளர்கின்ற திருமருவும் வாசனே வடவேங்கடா தீசனே — (ா)

தாரணஸ்ரீ மார்கழிமீ ௰௫௨ வடவேங்கிடசதகம் எழுதினது முற்றிற்று.
குருவே துணை.

(கு. - பு.)—

இந்நூல் 'நாராயணன்' என்னும் புலவரால் திருவேங்கடமுடையான் மீது துதிரூபமாக இயற்றப்பெற்றதொரு 'சதகம்' என்ற பிரபந்த விசேஷமாகும். ஒவ்வொரு செய்யுளின் முடியிலேயும் 'வடமலையில் வளர்கின்ற திருமருவும் வாசனே, வடவேங்கடாதீசனே' என்ற வொரு மகுடம் புனையப்பெற்றுளது. இப்பிரதியில் இந்நூலின் நூறு செய்யுளும் உள. ஆயினும் ஏடுகள் மிகவும் சிதலுற்றுச் சிதைந்தும் முறிந்துங் கிடக்கின்றன வாதலின் படித்தற்கேயரிதாயுள்ளது.

---

## No. 2220. பாப்பையா பிள்ளை உலாமடல்.
## PĀPPAIYĀ PIḶḶAI ULĀMAḌAL.

Substance, palm-leaf. Size, 17¾ × 1⅜ inches. Pages, 54. Lines, 5 on a page. Character, Tamil. Condition, injured. Appearance, old.

Incomplete.

Same work as that described under No R. 368.

(கு. - பு.)—

இந்நூல் மூவருடக்காடலாக்கு 368-ஆவது நம்பர் பிரதிக்கு மாத்ருகையான பிரதியென்று தெரிகிறது. ஏடுகள் சிதலுற்று இருக்கின்றன.

---

## No. 2221. நஞ்சமகாராசன் கதை.
## NAÑJAMAHĀRĀJAN KATHAI.

Substance, paper. Size, 13¼ × 8⅜ inches. Pages, 19. Lines, 28 on a page. Character, Tamil. Condition, good. Appearance, old.

Incomplete.

Same work as that described under No. D. 418.

(கு. - பு.)—

இந்நூல் டிஸ்கிருப்டிவ் காட்லாக் 418-ஆவது நம்பர் பிரதியில் வந்துள்ளதேயாகும். D 419. ஆவது நம்பர் பிரதி இப்பிரதிக்கு மாதுருகையான பிரதியென்று தெரிகிறது. முற்றுப்பெறவில்லை.

## No. 2222. அருணாசலபுராணம் உரையுடன்.

ARUṆĀCALAPURĀṆAM WITH COMMENTARY.

Substance, palm-leaf. Size, $14\frac{1}{1}\frac{0}{6} + 1\frac{1}{4}$ inches. Pages, 600. Lines, 6 on a page. Character, Tamil. Condition, Much injured. Appearance, old.

Incomplete.

Begins on fol. 1 a. The other work herein is Villiputtūrār Bhāratam with commentary, 304a.

Same work as that described under No. D 550.

(கு. - பு.)—

இந்நூல் டிஸ்கிருப்டிவ் காட்லாக்கு 550-ஆவது நம்பர் பிரதியிலே வந்துள்ள நூலேயாகும். உரை மாத்திரம் சிறிது வசன நடையில் வேறுபட்டிருக்கிறது. இறுதியில் இரண்டொரு ஏடுகளும், இடையில் 49, 198, 300, ஆகிய இவ்வேடுகளும் காணப்பெறவில்லையாதலின் அவையிற்றில் அடங்கிய பகுதி நீங்கலாக முற்றுமுளது. ஏடுகள் சிதலுற்றுக்கிடக்கின்றன.

---

## No. 2223. அருணாசலபுராணம் உரையுடன்.

ARUṆĀCALAPURĀṆAM WITH COMMENTARY.

Substance, palm-leaf. Size, $15\frac{1}{4} \times 1\frac{3}{8}$ inches. Pages, 600. Lines, 6 on a page. Character, Tamil. Condition, very much injured. Appearance, old.

Incomplete.

Same work as the above.

(கு. - பு.)—

இந்நூல், முன் பிரதியில் வந்துள்ள நூலேயாகும். இப்பிரதியில் பாவந்தீர்த்தச்சருக்கம் வரையில் உரையுடன் உளது. இதில் உள்ள ஏடுகள் முற்றும் நிரம்பவும் சிதலுற்று முறிந்துகிடக்கின்றன. பல ஏடுகள் முறிந்து போய் ஏட்டின் ஒரு சிறிது பாகமே கோக்கப்பட்டிருக்கின்றன.

---

## No. 2224. கந்தபுராணம்.

KANDAPURĀṆAM.

Substance, palm-leaf. Size, $17 \times 1\frac{2}{8}$ inches. Pages, 882. Lines, 7 on a page. Character, Tamil. Condition, slightly injured. Appearance, old.

Contains Sambhavakāṇḍa, Asurakāṇḍa, Mahēndrakāṇḍa, and 1 to 121 Stanzas in Gajamukanutpattippaṭalam of Dakṣakāṇḍa only.

Same work as that described under No. 540.

(கு. - பு.)—

இந்நூல் டிஸ்கிருப்டிவ் காட்லாக்கு 540-ஆவது நம்பரில் வந்துள்ள நூலேயாகும். இப்பிரதியில் 1 to 359 ஆன ஏடுகளில், முதல் மூன்று காண்டங்கள் தொடர்ந்திருக்கின்றன. 360-ஆவது ஏட்டிலிருந்து ஆறுவதாகிய தக்ஷகாண்டம் தொடங்கி, கயமுகன் உத்பத்திப்படலம் 121-ஆவது செய்யுட் வரையிலுமான பகுதியுளது. ஏடுகள் அங்கங்கே ஒரு சிறிது முறிந்துகிடக்கின்றன. இரண்டொரு ஏடுகள் இரண்டு பகுதியாக ஒடிந்துமிருக்கின்றன.

KANDAPURĀṆAM.

Substance, palm-leaf. Size, 18¾ × 1½ inches. Pages, 974. Lines, 9 and 10 on a page. Character, Tamil. Condition, much injured. Appearance, old.

Complete in Dakṣakāṇḍa.

Same work as the above.

(கு. - பு.)—

குறிப்பு.—இந்நூல் டிஸ்கிருப்டிவ் காட்லாக்கு 540-ஆவது நம்பரில் வந்துள்ள நூலேயாகும். இப்பிரதியில் இந்நூல் ஆதி தொடங்கி தக்ஷ காண்டம் வரையிலும் உளது. ஏடுகள் பல மிகவும் முறிந்தும் சில சிதலுற்றும் இருக்கின்றன. 30-ஆவது ஏடு காணப்பெறவில்லை.

---

## No. 2226. செவ்வந்திப்புராணம் உரையுடன்.
## ŚEVVANḌIPPURĀṆAM WITH COMMENTARY

Substance, palm-leaf. Size, 13¼ × 1 2/8 inches. Pages, 374. Lines, 8 on a page. Character, Tamil. Condition, much injured. Appearance, old.

Incomplete.

Begins on fol. 1 (*a*). The other work herein is Tiruviḷaiyaḍaṟ purāṇam Bhayaṅkaramālai with commentary 188 (*a*)

Same work as that described under No. D. 583.

(கு. - பு.)—

இந்நூல் டிஸ்கிருப்டிவ் காடலாக்கு 583-ஆவது நம்பர் பிரதியில் வந்துள்ள நூலேயாகும். இப்பிரதியில் கரிகாற் சோழனுக்குப் பட்டங் கட்டுங்கதைவரையில் உள்ளது. உறையூர் அழித்த சருக்கம் 89-ஆவது செய்யுள் வரையிலும் உள்ளது. மிகுதியான பாகமும், இறுதிச் சருக்கமான தாயானைச் சருக்கமும் இல்லை. ஏடுகள் மிகவுஞ் சிதலுற்றுள்ளன. அதற்கும் இதற்கும் பல விடங்களிலேயும் பாட பேதங்கள் காணப்படுகின்றன.

---

## No. 2227. மதுரைச்சொக்கேசர் திருவிளையாடற் பயங்கரமாலை.

## MADURAICCOKKĒŚAR TIRUVIḶAIYĀḌAṞ BHAYAṄKARA-MĀLAI.

Pages, 160. Lines, 6 on a page.

Begins on fol. 188 (a) of the MS. described under No. 2226.

Complete.

A poem, each stanza of which embodies the story of one of the Divine Sports of God Śokkēśar (Śiva) of Madura, and ends with the refrain *Sokkē Paradēśi Bayaṅkaranē*. Hence the title *Bayaṅkara Mālai.* The name of the author is not known.

**Beginning :**

பரிவுடன் செல்வ மதுராபுரிச் சொக்கர் பாங்கிற் செய்த
திருவிளையாடற் பயங்கரமாலையைச் செப்பிடவே
சொரிதரு மும்மதநால்வாய் தழை செவி[தூங்கட] (பயங்கர)செங்கட்
கரிமுகக் கற்பகக்களிறே கழல் தந்து காத்தருளே (க)

இதன் பொருள் :—என்றது, அறுபத்துநாலு திருவிளையாடலைப் பயங்கர மாலையாகப்பாடி இந்தப் பயங்கரமாலையைப் படிக்கின்றவர்களுடைய பாவத்தை யறுக்கையாலே பயங்கரமாலையென்று பேர் உண்டானது. இந்தப் பயங்கரமாலையாகிய அறுபத்துநாலு திருவிளையாடல் இந்திரன பூசை முதல் வேதம் ஓதின மட்டும் அடியார்களுக்காகச் சொக்கநாதசுவாமி வருந்தி திருவிளையாடின பாட்டுக்கு விக்கினம் வராமல் ஆனை முகமும் மும் மதமும் தழை செவியும் நான்றவாயும் அஞ்சு கரமும் பெருவயிறும் சிற்றடியுமுடைய சித்திவிநாயக! சித்தியைக் கொடுக்கிற விக்கினேசுவரனே! அடியேன பாடுகிற கவி பயங்கர மாலைக்குக் குற்றம் இல்லாமற் காத் தருள் கற்பகமே! அடியார்களுக்காக மதுராபுரியிலே சொக்கநாதசுவாமி கிருபைவைத்து இரட்சிக்கிறேமென்றிரங்கி அன்பர்களுக்கு விக்கினம் வறுமை யென்கிற தீராத பாதங்கள பகை பரதேசி மிடியர் துணை ? யில்லாதவர்களுக்கு இரங்கி விளையாடின அறுபத்துநாலு திருவிளையாட லுக்குங் குற்றம் வாராமல் காத்தருளவேணும் என்றவாறு. சிவமயம்.

(1) இந்திரன் பழி தீர்த்த திருவிளையாடல்.

பூவிற்ற கௌட விருத்திராசுரனைப் பொருது கொன்று
மேவுற்ற பாவத்தை மண் பெண் புனல் மரமேல் நிறுத்தி
சேவிற்றடப் பொன் விமானமுஞ் சாற்றிய தேவர்கள் கோன்
பாவத்தைத் தீர்த்த சொக்கே பரதேசி பயங்கரனே (க)

என்றது, முன்னொரு காலத்திலே விருத்திராசுரன் என்று ஓர் அசுரன் உண்டு. அவன் சகல தேவர்கள் இருஷிகள் மற்றும் உள்ள சகலரையும் இடுக்கண்படுத்துவான். அப்போது சகலரும் துக்கமுற்று இந்த அசுரனைச் சயிக்கிற வகை எப்படியென்று விசாரமிட்டுச் சப தபங்கள் ஒன்றும் முடிக்க இடமில்லாமற்றிரிந்து உழலுகிற காலத்திலே விருத்திராசுரனை ஆயுதங் களினாலே சாகா வரமும் பெற்று இருக்கிறானே; இதுக்கு உபாயம் எப்படி யென்று எண்ணியிருக்கிறபொழுது முப்பத்திரண்டு பழு வெலும்பு உண் டானால் அதை வச்சிராயுதமாய்க் கடைந்து அந்த ஆயுதத்தினாலே அவனைக் கொல்லலாமென்று சொல்ல முப்பத்திரண்டு பழு வெலும்பு ஆருக்குண்டென்று விசாரிக்குமிடத்திலே ததீசி மகர்ஷிக்கு உண்டென்று கேட்டுத் தேவேந்திரனும் இருஷிகளும் கூடித் ததீசி மகர்ஷியினண்டைக் குப் போனார்கள். அப்போது ததீசி மகர்ஷி நீங்கள் வந்த காரியம் என்ன வென்று கேட்டார். அப்போது இவர்கள் விருத்திராசுரனுடைய பாதை பொறுக்கக்கூடாததாயிருக்கிறது. அது தேவரீராலேயே தீரவேண்டுமென் றார்கள். அதுக்கு வேண்டியதென்னென்று ரிஷி கேட்டார். அதுக்கு இவர்கள் முப்பத்திரண்டு பழு வெலும்புண்டானால் அதை வச்சிராயுத மாய்க் கடைந்துகொண்டு அவனைச் சயிக்கலாமென்றது கண்டு தேவரீருக்கு முப்பத்திரண்டு பழு வெலும்பாமே ? அது கேட்க வந்தோம் என்று

சொன்னார்கள். அப்போது ததீசி மகர்ஷி யிருந்து இத்தனைபேர் பிழைக்கிறது நல்லதோ ? நாம் ஒருவன் பிழைக்கிறது நல்லதோ ? என்று தம்முடைய சீவனைவிட்டு எலும்பை யெடுத்துக்கொண்டு போங்கள் என்று போனார். அந்த முப்பத்திரண்டு பழுவெலும்பையும் எடுத்து வச்சிராயுதமாய்க் கடைந்துத் தேவேந்திரன் கையிலே பிடித்துக்கொண்டு விருத்திராசுரனைக் கொன்றான். அவனைக் கொன்ற தோஷம் இந்திரனைப் பிரம்ம ஹத்தியாகத் தொடர்ந்து அலைத்தது. அது கண்டு சகல ருஷிகளும் தேவர்களும் கூடி அந்தப் பாவத்தை நாலு பங்கு பண்ணி மண்ணிடத்தில் ஒரு பங்கும் பெண்ணிடத்தில் ஒரு பங்கும் மரத்தில் ஒரு பங்கும் நீரில் ஒரு பங்கும் ஆகப் பங்கீடு பண்ணினார்கள். [அது] இவை களிலே ஒவ்வொன்றும் இரண்டானது. மண்ணுக்கு குழியெடுத்தால் தூரவும் உவர் மண்ணும், மரத்துக்கு வெட்டித் தழையவும் பிசினும், நீருக்கு நுரையும் சுசியும், பெண்களுக்கு மாதவிடாயும் புருஷனுடனே சதாகாலமும் கூடவும் என்றும், அந்தப்பாவத்தை யகற்றித் தேவேந்திரன் பிரம்மஹத்தியை அகற்றினார்கள். அதன் பிறகு சகல ருஷிகளுடனேயும் இந்திரன் முன்புபோலே இராசாங்கமாயிருக்கிறகாலத்திலே வேட்டையாடவேண்டுமென்று பூமியிலே போய் வேட்டைக்காரரைப் பார்த்து வரச்சொல்லிச் சொன்னான். அவர்கள் வந்து பார்த்து வேட்டைக்காரன் தலம் இருக்கிறதென்று சொன்னவுடனே இந்திரன் பூமியின்கண்ணே வந்து அவர்கள் சொன்ன காட்டிற்போய்ப் புலி கரடி மான் மறை முயல் மற்றுமுள்ள பல மிருகங்களையுங்கொன்று தென் காட்டிற்றிரும்பி வேட்டையாடவேண்டுமென்று வந்தான். அப்போது சற்றிருந்த பிரம்மஹத்தியும் அவ்விடத்திலே நின்றுவிட்டது. அப்போது இந்திரனுக்குச் சற்றிருந்த மயக்கமும் போய் ஞானக்கருத்துண்டாயிற்று. அப்போது தெற்கே திரும்பினவுடனே மிருகங்களைக் கொல்லவும் மனது வரவில்லை. இவ்விடங்களிலே அதிசயமுண்டு போய்ப்பாருங்கோள் என்று அனுப்பி நின்றான். கடம்ப வனத்தை நோக்கினவுடனே பிரம்மஹத்தி வேறானபடியினாலே "வேறுநிலை" என்று பேரானது. காடு பார்த்தவர்கள் வந்து ஒரு இடத்திலே கடம்பு மெத்த நிற்கிறது. அவ்விடத்திலே ஒரு ஓடையும் இலிங்கமும் இருக்கின்றனவென்று சொன்னவுடனே இந்திரன் பார்த்து அதிசயமுற்றுப் பூசிக்கவேண்டுமென்று பூவெடுத்து வரச் சொன்னான். ஒரு இடத்திலேயும் பூ கிடைக்கவில்லையென்று அவர் அவர் சொல்லக்கேட்டு இந்திரன் மனம் மடிந்து துக்கித்திருந்தான். அதையறிந்து சுவாமி வேட்டையாடின இளைப்பொன்றும் பாராமல் நம்மைப் பூசிக்க வென்றானல்லோவென்று அந்த ஓடையிலே பொன்னினாலே தாமரைப்பூ உண்டுபண்ணினார். அப்போது இந்திரன் சந்தோஷப்பட்டுப் பூசித்து நம்முடைய சுவாமி வெய்யிலிலே இருக்கலாமோவென்று முன் பழி தீர்க்கப் பண்ணின இந்திர விமானத்தைத் தெய்வத்தச்சனையழைப்பித்து எடுத்து வரச்சொல்ல அதை அஷ்டகஜம் தாங்கியெடுத்துவந்தன. அப்படி அட்ட கஜத்துடனே சாத்தினான். அழகு மிகுந்தபடியினாலே சொக்கநாதரென்று பேரும் பொற்றாமரையென்று பேருமிட்டுப் பழியுந்தீர்ந்து தன் பதியிற் போனான் என்றவாறு. (க)

இந்திரன் பழி தீர்த்த விளையாடல் முற்றும்.

**End :**

(64) வேதங்கண்ட திருவிளையாடல :—

மரியாதமாமறை மாவீர பாண்டியன் வாழுமந்நாள்
தெரியாமல் அந்தணர் எல்லாந் திகைப்பத் தெளிந்திடவே
விரிவான வேதத்தை யெல்லாருங்காண விளம்பிமிகப்
பரிவாயுரைத்தசொக்கே பரதேசி பயங்கரனே. (சுச)

என்றது. முன் பிரளய காலத்திலே எல்லாம்போய் * * * * * * கிருத யுகத்திலே கண்ணுவ ரிஷி முதலாகிய ருஷிகள் கூடிக் கலியுகத்திலே பிராம்மணர் வேதமோதாதபடியினாலே வேதமிறந்துபோயிற்று. ஆனபடியாலே இப்போது நாலு வேதமும் ஆறு அங்கமும் தெரியவில்லையென்று சகலரும் விசாரமிட்டு இருக்கிற சமயத்திலே ஆகாசவாக்காக மதுரையிலே போங்கோளென்றது. அவர்கள் சந்தோஷப்பட்டு மதுரையிலே வந்து சுவாமியைச் சேவித்திருக்கிற வேளையிலே சுவாமி குரு வடிவுகொண்டு உடையுத்தரீயங்களும் போட்டுக்கொண்டுவந்து அவர்கள் கிட்டவிருந்து கொண்டு, இருக்கு யஜுஸ் ஸாமா அதர்வணம் ஆக நாலு வேதமும் ஆறங்க(ம்) மந்திரம், வியாகர்ணம் நிகண்டு சந்தோவிசிதி நிருக்தம் சோதிடம் ஆக ஆறும் நன்றாக அவர்களுக்கு அறிவித்து அஷ்டகசம் தாங்கியிருக்கிற ஆலயத்திலே யொளித்தார். அப்போது சகல இருஷிகளும் சந்தோஷப் பட்டுச் சொக்கநாத சுவாமியை வாழ்த்தியிருந்து நாலு வேதத்தையும் அதிகரித்து பூலோகம் எங்கும் வேதம் உண்டாக்கினார் என்றவாறு. (சுச)

இந்த அறுபத்துநாலு திருவிளையாடல்களைக் கற்பவர் கேட்பவர் மனம் வைத்தபேர்கள் இவர்களுக்கு இம்மையிலே புத்திர பௌத்திரபாரம் பரியமும் * * * * * * * சத்துருசயம் உண்டாம். சுதத வீரியம் உண்டாம். நினைத்தது கைகூடும் * * * * * * மறுமையிலே இந்திர லோகத்திலும் சத்திய லோகத்திலும் வைகுண்ட லோகத்திலும் கைலாயத்திலும் இருப்பார்கள் * * * * * * * * நீடூழி காலம் வாழ்ந்திருப்பார்கள் என்றவாறு. (சுச)

சொக்கநாதசுவாமி துணையாகவும்.

விஷு௵ பங்குனிமீ யஅ௳ மந்தவாரமும் பூச நக்ஷத்திரமும் திருதியையுங் கூடின தினத்திலே தேவனும் பட்டணத்துச் சீமை மருநாடு சிவக்கொழுந்து பிள்ளை குமாரன் தில்லைச் சிவக் கொழுந்தன் அறுபத்து நாலு திருவிளையாடல்களைக்கொண்ட **பயங்காமாலை** முற்றும்.

தாண்டவராயன் ஸ்வஹஸ்தலிகிதம்.

(கு. - பு.)—

இந்நூல், மதுரையில் சொக்கநாதசுவாமி கருணைகொண்டு விளையாடிய திருவிளையாடல்களை உள்ளுறைப்பொருளாகக்கொண்டு ஒவ்வொரு திருவிளையாடலுக்கும் ஒவ்வொரு பாடலாக வமைந்துளது. ஒவ்வொரு பாடலின் இறுதியிலும் “சொக்கே பரதேசி பயங்கரனே” என்றதொரு சொற்றொடர் மற்மமாக வமையப்பெற்றது. ஆதலின் இதன் பெயர்

காரணப்பெயராகும் எனக. ஆசிரியர் தெரியவில்லை. ஒரு உரையும் உடன் உள்ளது. நடுவில் 14 to 32, 33, 71 to 99 என்ற இவ்வேடுகள் காணப்பெறவில்லை.

---

## No. 2228. வில்லிபுத்தூரார் பாரதம் உரையுடன்.
## VILLIPUTTŪRĀR BHĀRATAM WITH COMMENTARY,

Pages, 28. Lines, 6 and 7 on a page.

Begins on fol. 304 (a) of the Ms. described under No. D. 2222 Contains Pāyirac carukkam only.

Same work as that described under D. No. 529.

(கு. - பு.)—

இது டிஸ்கிருப்டிவ் காடலாக்கு 529-ஆம் நம்பரில் வந்துள்ள நூலே யாகும். இப்பிரதியில் பாயிரச்சருக்கமாத்திரம் உரையுடன் உளது. ஏடுகள் மிகவும் சிதலுற்றும் சில அடியோடு முறிந்தும் சில நுனியில் ஒடிந்தும் கிடக்கின்றன. முதலில் (2) ஏடுகள் இல்லை. அவை முறிந்து விழுந்துவிட்டனபோலும்.

---

## No. 2229. நந்தீசுவரர் நடுவினை.
## NANDĪŚUVARAR NAḌUVINAI.

Pages, 9. Lines, 6 on a page.

Complete.

Begins on fol. 14 (a) of the Ms. described under No. D. 80, 1.

Explains the religious importance and greatness of the sacred "Five-lettered" Formula in praise of God Śiva. The name of the author is not known.

**Beginning :**

நந்திசுவரர் நடுவினை.

நகார மகார நற்சுடர் அருள்கொண்டு மகார
நகார மலமாய் மறைந்திடு சத்தியைச்
சிகார மருளாய் யகார முயிராய்
அறிவதுவாமே. (க)

நகாரமகாரஞ் சிகாரம் நடுவாய்
வகார யகார வாவென்று வாங்கி
நகார மகார மிரண்டு மறுத்து
சிகார நடுவாய்ச் சிறந்திருந்தானே. (உ)

நடுவிசைந்தானெங்கள் நற்சுடர் நந்தி
நடுவிருந்தான் சிவன் சிவவாசி வாசியாம்
நடுவிருவாசியை நாட்டவல்லார்க்கு
நடுவிருவாசி நடுவினையாமே (ங)

நெஞ்சில் நடுவே நிறுததினுனெந்நந்தி
பஞ்சாட்சரத்தைப்பகுநது காட்டி
அஞ்சிலிரண்டையறுத்தானெந் நந்தியே. (சஎ)

**End :**

சீயெழுத்தாலே சிந்தை தெளிந்தது
சீயெழுத்தாலே திருவடி பெற்றது
சீயெழுத்தாலே சிற்பரமானது
சீயெழுத்தாலே தெளிந்துகொண்டோமே.

நந்திசுவரர் நடுவினை எழுதி முடிந்தது.

(கு. - பு.)—

இந்நூல் சிவ பஞசாட்சர மகிமையைக் கூறுவது. யோகமந்திர விஷயமானது. நந்தியைத் தெய்வமாகக் கொண்டுளது. முப்பது பாடல்கள் கொண்டுளது. முற்றுமுளது. இதில் எழுத்துப்பிழை மிகவும் காணப்படுகிறது. ஆசிரியர் இன்னுரென்று தெரியவில்லை.

---

## No. 2230. நந்தீசுவரர் பாயிரம்.
## NANDĪŚUVARAR PĀYIRAM.

Pages, 3. Lines, 6 on a page.

Begins on fol. 87 (*a*) of the Ms. described under No. D 1490.

Contains 5 stanzas only.

Verses, in which, the author devoutly prays that God Śiva may bless him with devotion to Himself, the ability to loyally serve His devotees, and such other good qualities and deeds of a truly pious *Śaiva*.

**Beginning :**

நந்தீசுவரர் பாயிரம்.
திருச்சிற்றம்பலம்.

மறைகள் நிந்தனை தெய்வ நிந்தனை பெரு மனமும்
தறைக்க [ ] (ணைம்) புலனே தனக்கேவல் செய் சதிரும்
பிறவி தீரொணுப் பேதையர் தம்மொடு பிணக்கும்
உறுதி நல்லறஞ் செய்பவர் தங்களொடுறவும். (க)

மனமும் வாக்கு நின்னன்பர்பால் உறுப்பொடு மகிழ்வும்
கனவிலுஞ் சிவனன் பருக்கடிமையாங்கருத்தும்
நினைவில் வேறொரு கடவுளை வழிபடா நிலையும்
புனிதனைச் சிவகீர்த்தியை யுரைத்திடும் பொலிவும். (உ)

* * *

யாது கேட்கினு மன்பருக்கீவதேயியல்பும்
மாதவித்தினோர் விருப்பொடு வணங்கிடும் மகிழ்வும்
ஓது நல்லுபதேசமு முறுதியு மன்பர்
தீது செய்யினும் சிவலீலை யென்றெனக் கொளுந்தெளிவும். (ச)

இறக்கினும் பிறக்கினு மின்பந்துய்க்கினும்
பிறைக்கொழுந்தணி சடைப்பெருமானுன்னடி
மறக்கொணு நல்வரம் வழங்கவேண்டுமால். (ரு)

திருச்சிற்றம்பலம்.

(கு. - பு.)—

இச்சிறு நூல், ஐந்து பாடல்களால் அமைந்து சிவபிரானிடத்துப்பக்தியையும் சிவனடியார்களிடத்து மனோவாக்காயங்களால் இடையருது செய்யும் அடிமையையும், இன்னுமின்னோரன்ன பலவற்றையும், தமக்கு வழங்க வேண்டும் என்று ஓர் பக்தர் சிவபிரானை நோக்கி வேண்டுவதாகவுளது. இது ஒரு தனித்த நூலன்று. எழுத்துப்பிழையுடனுளது. ஏடு சிதலுற்றுளது.

---

## No. 2231. சல்லியநூல் உரையுடன்.
## ŚALLIYANŪL WITH COMMENTARY.

Substance, palm-leaf. Size, 15 × 1¼ inches. Pages, 108. Lines 4 to 8 on a page. Character, Tamil. Condition, injured. Appearance, old.

Complete.

Begins on fol. 1 (*a*). The other works herein are Dhanvantiri Vālaiśāstram 55 (*a*). Pañcapakṣiśāstram 91 (*a*). Tēraiyar Padārthaguṇacintāmaṇi 111 (*a*).

Same work as that described under No. R. 353 (*b*).

(கு. - பு.)—

இந்நூல் மூவருடக் காடலாக்கு. 353 (*b*)-ஆவது நம்பர் பிரதியில் வந்துள்ளதேயாகும்; இப்பிரதியில் இது முற்றுமுளது. உரைமாத்திரம் சிறிது வசன நடையில் மாறுபட்டுளது. ஏடுகள் சிதைந்துள்ளன. சில மந்திரயந்திரங்கள் பொறிக்கப்பட்டுள. இது முடிவுற்றபின்னர் (2) ஏடுகளில் " கருவகை " என்ற பெயருடன் சில கருவும் அதற்குரிய தேவதையான 'சக்க தேவியின்' மந்திரங்களும் சக்கிரங்களுடன் எழுதப்பட்டுள.

---

## No. 2232. எழுவகைத் தோற்றம்.
## ELUVAKAIT TŌṞṞAM.

Pages, 7. Lines, 6 on a page.

Begins on fol. 120 (*a*) of the Ms. described under No. D. 1490 Contains 7 stanzas only.

Same work as that described under No. D 1240.

(கு. - பு.)—

இந்நூல் டிஸ்கிருப்டிவ் காடலாக்கு 1240-ஆவது நம்பரில் வந்துள்ளதேயாகும். இப்பிரதியில் 1 to 7 செய்யுட்களே இருக்கின்றன. எழுத்துப்பிழையுடன் காணப்படுகிறது. ஏடுகள் சிறிது சிதைந்திருக்கின்றன.

Pages, 8. Lines, 5 on a page.

Begins on fol. 1 a of the MS. described under No. D. 1847.

A collection of the verses composed by the well-known Auvaiyār.

(கு. - பு.)—

இது ஔவையாரால் பாடப்பட்ட பாடல்களைத் தொகுத்து எழுதப்பட்டது. இதில் சுப்பிரமணியருக்கு ஔவையார் சொன்னது என்ற தலைப் பெயருடன் ஐந்து பாடல்களும், அறம்பாடின கவியென்ற பேருடன் நான்கு பாடல்களும், "கர்ப்ப முதல் இன்றளவும்" எனத்தொடங்கும் பாடல் முதலாக, "கருப்பைக்குள் முட்டைக்கும்" என்றதான பாடல்வரை ஏழு பாடல்களும் இருக்கின்றன. ஏடுகள் மிகவும் சிதைவுற்றிருக்கின்றன.

---

## No. 2234. அகத்தியர் வைத்தியரத்தினச் சுருக்கம் முன்னூற்றறுபது.

## AKATTIYAR VAIDDIYARATTINAC CURUKKAM MUNNŪṚ ṚARUPADU.

Substance, palm-leaf. Size, 8 × 1¼ inches. Pages, 70. Lines, 7 on a page. Character, Tamil. Condition, much injured. Appearance, old.

Incomplete.

Same work as that described under No. R. 941 (*a*)

(கு. - பு.)—

இந்த நூல் மூவருடக் காட்லாக்கு 941 (a) நம்பர் பிரதியில் வதுள்ளதேயாம். இப்பிரதியில் முற்றும் இல்லை. ஏடுகள் மிகவுஞ் சிதலுற்று முறிந்துள. இறுதியில் இரண்டு ஏடுகளில் முறையே கண மாத்திரை முறையும், ஆண் பெண் வசியத்துக்கும் ஒரு வகை மருந்து முறையும் வசன நடையில் எழுதியுள. 29-வது ஏடு முதல் 95-வது ஏடுவரையும் உள்ள ஏடுகள் நடுவில் இல்லாததோடு, 36, 37-வது ஏடுகண் மாத்திரம் இடையிற் சேர்க்கப்பட்டுள.

---

## No. 2235. சட்டைமுனி ஞானம் நூறு.

## ŚAṬṬAIMUNI ÑĀNAM NŪṚU.

Substance, palm-leaf. Size, 7 × 1 2/8 inches. Pages, 94. Lines, 7 on a page. Character, Tamil. Condition, injured. Appearance, old.

Complete.

Same work as that described under No. D. 1842.

(கு. - பு.)—

இந்நூல் டிஸ்கிருப்டிவ் காடலாக்கு 1842-வது நம்பர் பிரதியில வந்துள்ளதேயாகும். இப்பிரதியில் இந்நூல் முற்றும் உளது. ஏடுகள் மிகச்சிதைந்துள.

## No. 2236. சிதம்பர தீட்சிதருக்கும் இராம யோகிக்கும் நடந்த சம்பாஷணை.

## CIDAMBARA DĪKṢITARUKKUM IRĀMA YŌGIKKUM NAḌANDA SAMBHĀṢAṆAI.

Pages, 11. Lines, 9 on a page.

Complete.

Begins on fol. 20 a of the MS. described under No. D. 2237.

Purports to be a publication of Cidambara Dīkṣitar and Rāmayōgi, who claim the knowledge of all the events of the past, the present and the future, and "who out of love for the world give out in this work the results of their secret meditations." In this work it is prophesied that there would be a famine in the Tamil years, *Raktākṣi, Krōdana and Akṣaya*, after which an emperor by name Vīravasanta Rāya would appear, that his reign would be prosperous, and that the *Śālivāhana Erā* would be superseded by an *Era named after him.*

**Beginning :**

திரிகாலஞ்ஞாநியாகவிருக்கும் சிதம்பர தீட்சிதரும் ஸ்ரீ ராமயோகியும் இருவரும் அந்தரங்கத்தில் ஆலோசித்து வெளியங்கமாகிற காரியம் என்ன வென்றால் முன்னாலே நாலுபத்திரிகை யெழுதிப் பூலோகத்தில் இருக்கப் பட்ட ஜனங்கள் எல்லாரும் அறியும்படியாக அனுப்புவித்து இருந்த[து] (அவ) களுடனே சீமையில் இருக்கப்பட்ட மனுஷ்யர்களில் படுகாளியாகவிருக்கப் பட்டவன் அவன் புத்தியினாலே சங்கதியாகத் தோன்றும்படியாகவிருக் கிற காரியங்களை நம்முடைய பேராலே பததிரிகை யெழுதியனுப்புவித் திருந்த நிமித்தம் நிசமாக விருக்கிற பத்திரிகைகளையும் ஸர்வத்ராளும் பார்த்துக்கொண்டதில் புத்திசாலியாகவும் விவேகியாகவும் இருக்கிற பேர் அபத்தமாக விருக்கிறதைத் தள்ளி நிசமாகவிருக்கிறதை ஒப்புக்கொண்டு பத்திரிகைப்படிக்கு நடக்குமென்று நிச்சயித்து நிரம்பவும் பக்தியாகவிருக் கிறார்கள். மூடவிசுவாசமில்லாமல் இருக்கிற பேர்கள் வரப்பட்ட பத்திரி கையெல்லாம் அபத்தமென்று நினைத்திருககிறார்கள். ஆகவே சிறிது காரியங்களைச் சமீபத்தில் தரிசனம் பண்ணுவித்து அனுபூதியினாலே நம் முடைய ஸ்வரூபம் எல்லாருக்கும் தெரியவேண்டுமென்று இப்போது வெளி யங்கமாகிற காரியம் என்னவென்றால், ஹிமோத் பர்வதத்தின் சாரலிலே மகாருஷிகள் ஆசிரமத்துக்குச் சமீபத்தில் தபசுபண்ணிக்கொண்டிருக்கிற முன்னுக்கு ருத்ரோத்காரி வருஷம் சித்திரை மாதம் ௩உ பரத்துவாச மகாருஷியும் கண்வ மகாருஷியும் பிரசன்னமாகி உத்தரவான காரியம் என்னவென்றால் **சக்கிரவர்த்தி சார்வபௌம வீரவசந்தராயருக்குப் பூத** பவிஷ்யத் வர்த்தமானங்களும் தேவலோக முதலாகிய லோகங்களில் நடக்கிற காரியங்களும் எதிரே நின்று நிசத்ருஷ்டியால் பார்க்கிறதுபோல வும் உள்ளங்கையில் இருக்கிற நெல்லிக்கனிபோலவும் தெரியும் எனறும் குரோதன வருஷம் ஆனவுடனே அட்சய வருஷம் சித்திரை மாதம் ௩உ நாலுசமுத்திரத்துக்குட்பட்ட பூமிக்கு மகாராசாவாகத்தக்கதாகவும் அவர்

சகாப்தம் என்று சொல்லப்படுமென்றும் அதுமுதல் கிருதயுகம் போலே இருக்குமென்றும் அனுக்கிரகம் பண்ணினார்கள். இந்தக் காரியமெல்லாம் நமக்கு ஞானதிருஷ்டியினாலே தெரிந்திருப்பதினாலேயும்.

**End :**

அதன் பிறகு அட்சய வருஷம் சித்திரை மாதம் ௳ **சக்கிரவர்த்தி ஸார்வபௌமவீரவசந்தராயர்** நாலு சமுத்திரத்துக்கும் உட்பட்ட பூமிக்கு மகாராசாவானவுடனே அவர் இராச்சிய பரிபாலனம் பண்ணுகிறது முந்நூறு வருஷம். அம் முந்நூறு வருஷமும் மாசம் மூன்று மழை வீதம் வருஷித்துக் கிருதயுகம் போலே பூமியெல்லாம் சுபிட்சைமாய் ஒரு ரூபாய் அரிசி நூறு பேருக்குக் காணத்தக்கதாகவும் மற்றப் பதார்த்தங்களும்

. . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . .

சக்கிரவர்த்தி சார்வ பௌம வீரவசந்தராயரும் நாமும் ஸ்ரீராமயோகியும் இராமேசுவரஸ்தானத்துக்கு வருகிறதினாலே எந்தெந்தத் தேசத்துக்கு யார் யார் பூர்வீகமாக ராசாவாக விருந்தாரோ அவரை ராசாவாக வைத்துப் பிரம்ம க்ஷத்திரிய வைசிய சூத்திர இந்த நாலு சாதி மனுஷ்யர்களும் அவர் அவர் ஆசாரத்தில் நடப்பார்கள். இந்தப் பத்திரிகை நகல் எழுதி வைத்துக்கொண்டு பூசை பண்ணினாலும் பாராயணம் பண்ணினாலும் அவனுக்குக் குரோதன வருஷம் வரப்பட்ட விபத்தும் எல்லாம் பிழைத்து அட்சய வருஷம் பிறந்தவுடனே சுகங்களையும் அடைந்து நம்முடைய தரிசனமும் கிடைத்துத் தீர்க்காயுஸ்ஸும் சௌரிய சம்பத்துடனேயும் இருந்து மோட்ச சாம்பிராச்சயத்தையும் அடைகுவார்கள். இதற்கு நகலெழுதி கிராமாந்தரங்களுக்கும் அனுப்புவித்தால் அவனுக்கும் இந்தப் பலன் கிடைக்கும். இதை யாராகிலும் தூஷணையாக நினைத்தாலும் அவிசுவாஸமாகவிருந்தாலும் அவனுக்குப் பஞ்ச மகாபாதகங்கள் வருகிறதுமல்லாமல் அவன் அனுபவிக்கிற காரியங்களைப் பத்திரிகையில் எழுதிகிறதுக்கு அடங்கமாட்டாது. இந்தப் பத்திரிகை நாம் மகாராஷ்டிரத்தில் எழுதியனுப்புவித்ததினாலே எந்தெந்தத் தேசத்தில் எந்தெந்த லிபியோ ? எந்தெந்த வார்த்தையோ ? அந்த அந்தவெழுத்தில் நகல் எழுதிவைத்துக்கொண்டு பூசைபண்ணலாம் ; பாராயணம் பண்ணலாம். ருத்ரோத்காரி வருஷம் தை மாதம் ௯ ஸ்ரீ சிதம்பர தீட்சிதர் சகாயம்.

ஸ்ரீராமயோகி ஸகாயம்.

(கு. - பு.)—

இச்சிறு நூல், சிதம்பர தீட்சிதர், இராமயோகியார் என்ற இம்மகா புண்ணிய புருஷர் இருவர்தம்முள்ளே ஆலோசித்துப் பின்னர், அவர் காலத்து ரக்தாக்ஷி, க்ரோதன, அக்ஷய வருஷங்களில் உலகத்துக்கே ஒரு பஞ்சம் எற்பட்டுப் பின்னர் "வீரவசந்த ராயர்" என்னும் ஒருவர் தோன்றிச் சக்கிரவர்த்தி சார்வ பௌமராக விளங்குவாரென்றும், அவர் ஆளுகிற காலம் முந்நூறு வருஷங்களிலும் திங்கள் மும்மாரி பெய்து சகல நாடுகளும் செழித்தோங்கும் என்றும், அது முதற்கொண்டு சாலிவாகன சகாப்தம் எனும் வழங்கும் வழக்கம் வீழ்ந்துபோய் "வீரவசந்த

கருணையால் உலகத்தவர்க்கு எல்லாம் வெளியிட்டார்கள் என்ற செய்தியை விளக்குகின்றது. இறுதியில் நித்தியம் இந்நூலைப் பூசை, பாராயணம் செய்துவந்தால் குரோதன வருஷத்திய தீங்குகள் ஒன்றும் அணுகா வெனவுங்கூறியுளது.

---

## No. 2237. ஆதித்திய ஹ்ருதய ஸ்தோத்திரம்.

### ĀDITTIYA HṚDAYA STŌTTIRAM.

Substance, palm-leaf. Size, 7 × $1\frac{1}{2}$ inches. Pages, 16. Lines, 10 on a page. Character, Tamil. Condition, much injured. Appearance, old.

Begins on fol. 1-a. 9–19 foll. left blank. The other work herein is Cidambaradikṣitarkkum Rāmayōgikkum nadanda Sambhāṣaṇai 20-a.

Complete.

This is a transliteration, in the Tamil script, of the *Ādityahṛdaya* taken from the *Vālmīkirāmāyaṇa.*

**Beginning :**

ஆதித்தியஹ்ருதயம்.

அஸ்ய ஸ்ரீ ஆதித்யஹ்ருதயஸ்தோத்ர மஹாமந்த்ரஸ்ய அகஸ்திய பகவான்ருஷி ஃ அநுஷ்டுப் சந்த ஃ சூரியநாராயணோ தேவதா. அம் பீஜம், உம் சக்தி ஃ மம் கீலகம் சூரியநாராயணப்ரஸாத ஸித்தியர்த்த ஜபே விநியோக :

. * * *
* * * *

ததோயுத்த பரிச்ராந்தம் ஸமரேசிந்தயா ஸ்த்திதம் |
ராவணஞ்சாக்ரதோ த்ருஷ்ட்வா யுத்தாய ஸமுபஸ்த்திதம் ||
தேவதைச்ச ஸமாகம்ய த்ரஷ்டு மப்பயாகதோரணம் |
உபகம்யாப்ரவீத் ராமம் அகஸ்த்யோ பகவாந் ருஷி : ||

அகஸ்த்யோவாச :

ராம ராம மஹாபாஹோ ச்ருணு குஹ்யாஸ்ஸநாதநம் |
யேந ஸர்வாநரீந் வத்ஸ ஸமரே விஜயிஷ்யஸி ||
ஆதித்யஹ்ருதயம் புண்யம் ஸர்வசத்ரு விநாசநம் |
ஜயாவஹம் ஜபேந்நித்யம் அட்சயம்பரமம் சுபம் ||
ஸர்வமங்கள மாங்கள்யம் ஸர்வபாபப்ரணசநம் |
சிந்தாசோகப்ரசமநம் ஆயுர்வர்த்தனமுத்தமம் ||

**End :**

ஆதித்யம்ப்ரேக்ஷ்ய ஜப்தவாது பரம்ஹர்ஷ மவாப்தவாந் ||
ராவணம்ப்ரேக்ஷ்ய ஹ்ருஷ்டாத்மா யுத்தாய ஸமுபாகமத் ||
த்ரிராசம்ய சுசிர்ப்பூத்வா தநுராதாய வீர்யவாந் ||
ஸர்வயத்நேந மஹதா வதே தஸ்ய த்ருடோ பவத் ||

அதராவிரவதநநி ரீக்ஷ்யராமம்
முதிதமநா : பரமம் ப்ரஹ்ருஷ்யமாண:
நிசிசரபதி ஸங்க்ஷயம் விதித்வா
ஸுரகணமத்யகதோ வசஸ்த்வரேதி !!

(கு. - பு.)—

இந்நூல், ஸம்ஸ்கிருத ராமாயணத்தில் "ஆதித்தியஹ்ருதயஸ்தோத்திரம்" என வழங்கும் ஸ்தோத்ரமாகும்; இங்குத் தமிழ் எழுத்தில் மிகப்பிழையுடன் எழுதப் பெற்றுள்ளது. ஏடுகள் மிகவும் சிதைந்து கிடக்கின்றன.

---

## No. 2238. ஆசௌசவிஷயம்.

## ĀŚAUCAVIṢAYAM.

Substance, palm-leaf. Size, 12 × 1¼ inches. Pages, 76. Lines, 9 on a page. Character, Tamil and Grantha. Condition, much injured. Appearance, very old. Seems complete.

This explains the Hindu *Dharma Śāstra* rules for the observance of pollution by relatives on the occasions of births and deaths. Contains many references to the works on *Dharma Śāstra*, upon which this treatise is apparently based; the names of such works form the sub-headings in this treatise.

**Beginning :**

ஶ்ருதிஸ்ம்ருதிகாரம். விஜ்ஞாநேஶ்வரீய. . .
ஷடஶீதி யதீந்த்ரதீபிகா.

ஆஶௌசமென்பது ஸபிண்டாதிகளுக்கு ஜநநமரணாதி ப்ராப்தமாகும் தோஷ விஶேஷம். இது காய . . . . காலஶௌசமென்றும், காய ஸ்நாநஶௌசமென்றும் மூன்று விதம். காயஶௌசமாவ மிருக்கிற........ஶௌசம் த்ரய........ஸ்பர்ஶாதி. காயஸ்நாந ஶௌசம் ஸபிண்ட ஜநநமரணாஶௌசம். ஆஶௌசத்தில் ஸந்த்யா வந்தநம் பண்ண வேண்டும். அதிலும் மாஜ்ஜநாதிகளை மாநஸிக மந்த்ரத்தால் பண்ணவேண்டும். அர்க்யப்ரதாநம் ஜபம் இவை களை...............ரித்துப் பண்ணவேணும். அமந்த்ரகமாய் ப்ராணா யாமம் பண்ணவேண்டும். அந்த ஆஶௌசம் ஜநநநிமித்தகம் என்றும் மரணநிமித்தகமென்றும் இரண்டு விதம். இந்த இரண்டு வியாஶௌசங்களிலும் ஶாஸ்த்ரமான அக்நிஹோத்ர ஔபாஸந மாஸங்களும் அசலாராலே...........ஸ்நாநம்பண்ணி அந்யர் மூலமா ஸ்த்தானே பண்ணலாம். ஔபாஸநம் ஸந்த்யா வந்தநாஸ ஶ்ராத்தபாகங்களுள் ஸம்க...............அந்யமொழிகியால் பண்ண வேண்டும். அல்லது அந்யஸ்த்ரவத்தால் பண்ணவேண்டும்.

ஷடஶீதியதீந்த்ர தீபிகா. பாராஶரஸ்ம்ருதிஸம்க்ரஹ:.

ஜநநாஶௌசம் ஸ்ராவமென்றும் பாதமென்றும் ப்ரஸவமென்றும் மூன்று விதம்.

(௩. ௪.) மூன்று நாலு மாஸங்களில் மாதாவினுடைய உதரத்தில் நின்றும் ரக்தரூபமாக வெளிப்படும். . . . த்துக்கு ஸ்ராவ மென்று பேர்.

(௫. ௬.) ஐந்து ஆறு மாஸங்களில் மாதாவினுடைய உதரத்தில் நின்று வெளிப்படும். . . . . . . . . . வெளிப்படும் ரக்தரூபமான கர்ப்பத்துக்கு பாதமென்றுபேர். (௭) ஏழாம் மாஸம் தொடங்கி மாதாவினுடைய உதரத்தில் நின்றும் . . . . . . . . . வெளிப்படும் பிண்டரூபமான கர்ப்பத்துக்கு ப்ரஸவ மென்று பெயர்.

மூன்றும்மாஸ ஸ்ராவத்தில் மாதாவுக்கு மூன்று நாள் ஆசௌசம். நாலாம்மாஸ ஸ்ராவத்தில் மாதாவுக்கு நாலு நாட்கள் ஆசௌசம். இவ்விரண்டு மாஸ ஸ்ராவத்திலும் பிதாவுக்கு ஸ்நானமாத்ரம்.

நாலாவது மாஸத்தில் ஏற்பட்ட கர்ப்பஸ்ராவத்தில் பிதாவுக்கு த்ரிராத்ராசௌசம். ஜ்ஞாதிகளுக்கு நாலாவது மாஸ கர்ப்பஸ்ராவத்துக்கு ஸ்நானமாத்ரம் கர்ப்பஸ்ராவத்தில் ஸபிண்ட புருஷர்களுக்கு த்ரிராத்ராசௌசம். ஸபிண்ட ஸ்த்ரீகளுக்கு ஆசௌசமில்லை. (௫. ௬.) ஐந்து, ஆறு மாஸ பாதத்துக்கு கர்ப்பஸ்ராவப்ரகாரம் க்ரமமாக (௫. ௬.) ஐந்து ஆறு நாள் ஆசௌசம். அப்பொழுது பித்ருஸஹோதர ஜ்ஞாதி ஜ்ஞாதிஸ்த்ரீகளுக்கு . . . . . . நாள் ஆசௌசமும். ஏழாம் மாஸம்தொடங்கி எப்போது ப்ரஸவித்தாலும் மாத்ரு பித்ரு ஸஹோதர ஜ்ஞாதிகளுக்கு ஸம்பூர்ணமான ஆசௌசம் உண்டு.

உதிப்ரஸவே ஸபிண்டானாம் ஸர்வேஷாம் ||

பூர்ண ப்ரஸவத்தில் ஸபிண்டர்களுக்குப் பத்து நாள் ஆசௌசம். ஸமானோதகர்களுக்கு ஆசௌசமே யில்லை.

கூடஸ்தன் தொடங்கி ஏழு தலைமுறைக்குள் பட்டவர்கள் ஸபிண்டர்கள். ஏழு தலைமுறை தொடங்கிப் பதினாலு தலைமுறைக் குள்பட்டவர்கள் ஸமானோதகர்கள். பதினைந்தாவது தலைமுறை தொடங்கி இருபத்தோர் தலைமுறைக்குட்பட்டவர்கள் ஸகோத்ரர்கள் என்று பெயர் பூர்ணப்ரஸவத்தில் மாதாவுக்கு ௩௰ நாள் ஸ்த்ரீப்ரஸவத்தில் ௪௰ நாள்.

* * * * * *

மாடும். ஸம்ஸ்கார-யதோக்த்ரீவிதா—பாதஸ்ரப்படி நியமத்துடன் ஆசௌசமிருந்து ப்ரேதகர்மத்தை நிறைவேற்றினபக்ஷத்தில்கர்த்தாவினுடைய பந்துக்கள் ப்ரேதத்வத்தைவிட்டு பித்ருத்வத்தை அடைகுவார்கள். கர்த்தாவின் பந்துக்கள் மாதாபிதா முதலானவர்கள். பித்ருத்வமாவது ஸ்வர்க்கலோகம் அடைந்து ஸந்தோஷமாக இருப்பதாகும். அல்லது, அதுக்கு காரணமான தேஹவ்யாப்தி: | பித்ருக்களுக்கு ப்ரேதத்வ விமோசனம் பண்ணிவைத்தால் புத்ராதிகள விஷயத்தில் பித்ருக்கள் உத்தரோத்தரம் ஶ்ரேயோபிவ்ருத்தி யுண்டாகும்படியாயும் அனுக்ரஹிப்பார்கள். தேவப்ராஹ்மண ஸந்தர்ப்பணத்தைவிட

விப்ரவசனமே ப்ரமாணம். அது ஏன் என்றால், கர்த்ராதி களுக்கு ஜநநமரண ஸம்பந்தாதிகளால் நிரம்பவும் ப்ரேதத்வ ஸக்தி உள்ளவர்களாகையால் தேவப்ராஹ்மண ஸந்நிதாநமான ஸர்வகர்மங்களிலும் ப்ரதம விப்ரர்களையே பூஜிக்கவேண்டுகையாலும் சுத்திஹோமாதிகளான ஸர்வயஜ்ஞங்களிலும் நாந்தீகர்மத்தால் முதலில் விப்ரர்களைப் பூஜித்து பச்சாத்தேவதைகளை யஜிக்கவேண்டுகையாலும் விவாஹோபநயநபும்ஸவநஸீமந்தாதி கர்மங்களில நாந்தீஸ்ராத்தம் பண்ணியே தேவதைகளை ப்ரீதி பண்ணிவைக்க வேண்டுகையாலும் தீர்த்தயாத்ரையிலும் தத்க்ஷேத்ரங்களைப் ப்ரவேசித்து தீர்த்தஸ்ராத்தம் முதலானவைகளைப் பண்ணிப் பின்பு தத்க்ஷேத்ர ஸ்வாமியை ஆராதிக்க வேண்டுகையாலும் இத்துணையும் ஸாக்ஷாத் விப்ரர்களுக்கு விப்ரத்வப்ராப்தி யன்றிக்கே நேரிடாதாகையால் விப்ரர்களுக்கு நாந்தீஸ்ராத்தத்தில் தேவதாத்வமும் இல்லாததால் அப்போது கர்த்ராதிகளுக்கு ஒரு கர்மத்திலும் அதிகாரமில்லாததாலும் ஆசௌச நியமங்களுடன் கர்த்ராதிகள் விப்ராதிகளுக்கு ப்ரேதத்வத்தை நிவ்ருத்திபண்ணினால் அத்தால் அவர்கள் ப்ரேதத்வத்தைவிட்டு விப்ரத்வத்தை யடைந்து தான் பண்ணின கர்மா கர்மபலத்தையும் கர்த்ராதிகளால் பண்ணப்பட்ட தானஸ்ராத்தாதிபலத்தையும் அநுபவித்தவர்களாய்த் தங்களுக்கு இந்த உபகாரம் பண்ணின கர்த்ராதிகளுக்கு ஸாஸ்வதமான ஸ்ரேயஸ்ஸை ப்ரார்த்திக்கிறார்கள். லோகத்தில் சாமாந்யகாரிகளாயிருந்தாலும் கர்த்ராதிகளுக்கு ஸாக்ஷாத் விப்ராதிகள் ஸர்வ ஸ்ரேயஸ்ஸுக்களைக் கோரக் கண்டிருக்கிறோம். இப்படி உபகரித்த கர்த்ராதிகளுக்கு ஸ்ரேயஸ்ஸைப் ப்ரார்த்திப்பார்கள் என்கிறவதில் கேட்கவேண்டுவதென்ன. ஆகையால் விப்ரர்களுடைய ஆசீர்வாதத்தால் கர்த்ராதிகள் தீர்க்காயுஸ்ஸையும் ஸர்வகார்யமு மாரோக்கியத்தையும் புத்ர ஸந்ததிகள் உள்ளவரையில் வம்ஸாபிவ்ருத்தி யையும் பெற்று, உத்தரோத்தரம் ஸ்ரேயோபிவ்ருத்தியையும் [உண்டாகும்] அடைகுவார்கள்.

(கு. - பு.)—

இந்நூல் தர்ம சாஸ்திரங்களைச் சார்ந்ததாய் ஆசௌச விஷயத்தை நன்கு விளக்குவதாயுளது. மணிப்பிரவாள நடையான் அமைந்து ஒன்பது கட்டங்களுடன் இருக்கிறது. விருத்தியா சௌசம், க்ஷயாசௌசம் என்ற இவ்விரண்டையும் எளிய நடையில் நன்கு விளங்குமாறு உணர்த்துகின்றது. அங்கங்கே நுதலும் விஷயங்களுக்கு ஷடசீதி, தர்மப்ரதீபிகை, வைத்திய நாதீயம், ஸ்மிருதிஸங்கிரஹம், சதக வியாக்கியானம் முதலிய நூல்களை ஆதாரமாகக் கொண்டு இயற்றுவதாகத் தோற்ற அந்நூல்களின் பெயர்கள் தலையங்கமாகக் அங்கங்கே குறிக்கப்பட்டிருக்கின்றன. ஆருவது கட்டத்திலிருந்து ஒன்பதாங் கட்டம் வரையில் கட்டத்தின் எண்கள் முறை பிறழ்ந்து தவருக எழுதப்பெற்றுள.

## No. 2239 ஞானவேத்தம்.

### JNĀNAVĒTTAM.

Pages, 4. Lines, 8 on a page.

Begins on fol. 80-a of the MS. described under No. D. 2249.

Complete.

Songs, on *Yōga jñānam*, composed after the fashion of the songs of those working the Picotta. From the concluding lines, it is made out that the author is the son of "Irāmayōgi," and disciple of "Irājayōgi."

**Beginning :**

ஞானவேத்தம்.

பிள்ளையாரும் வாரி பிள்ளையாருமங்கே
பெருத்த மூலாதாரம் சிறுத்தவிதழ் நாலாம்
உரைத்த கம்பமாகி ஓங்கியுச்சிதொட்டு
தாங்கியதன் கீழாய்த் தானிரண்டதாகி
தங்கியே வாயுவாறு அங்கியேகடந்து
சங்கிலி பிளந்து சமத்தவாயுவாறு
ணிங்கிது வுரைத்தே ணிரண்டுடனே வாரி.

**End :**

. . . . . . . . தூரமில்லையத்தான
சாதிகுலமில்லே சற்குருவறிந்தால்
நித்திய மதுவே பத்தியாய்ப்பணிந்தால்
முத்திதருமத்தான் வாமநெறிசீவன்
ராமயோகிதந்த ராசயோகி [சேஷசன்] (சீடன்) ?
சாதனருளாலே பாசமறச்சொன்னேன
பிரியாமலேயத்தான் பிள்ளையாரும் வாரி.

ஞான எத்தம் முற்றும்.

(கு. - பு.)—

இந்தச் சிறு நூல் யோகஞான விஷயத்தைக் குறிப்பாக வுணர்த்துவது. எத்தம் இறைக்குமவர்கள் பாடும்பாட்டைப்போல "பிள்ளையாரே வாரி" என்று தொடங்கி இந்நூல் பாடப்பெற்றிருததலின் இக்குறி காரணக்குறியென்க. இதற்கு ஆசிரியர், "இராமயோகி" என்னும் ஒரு ஞானியாரின் புத்திரனும் "இராசயோகி" என்பவரின் சீடருமான ஒருவர் என்று ஈற்றயலடிகளால் உணரக்கிடக்கிறது. முற்றும் உளது. சிதலுற்றிருக்கிறது.

---

## No. 2240 அகத்தியர் பரிபாஷை ஐந்நூறு.

### AKATTIYAR PARIBHĀṢAI AINNŪṞU.

Substance, plam-leaf. Size, $9\frac{1}{4} \times 1\frac{6}{16}$ inches. Pages, 430. Lines, 6 and 9 on a page. Character, Tamil. Condition, injured. Appearance, old.

Complete.

Same work as that described under No. R. 265 (b) of the Triennial Catalogue of Tamil Manuscripts. Vol. II.

(கு. - பு.)—

இந்நூல் மூவருடக்காட்லாக்கு 265 (b) நம்பர் பிரதியிலே வந்துள்ள நூலேயாகும். இப்பிரதியில் இந்நூல் முற்றும் உளது. ஏடுகள் சிதலுற்றுக் கிழிந்திருக்கின்றன. அப்பிரதிக்கும் இப்பிரதிக்கும் பலவிடங்களில் பாடபேதங்கள் காணப்படுகின்றன.

---

## No. 2241 தன்வந்திரிசெயநீர் ஐம்பது.
### DHANVANTIRI ŚEYNĪR AIMPADU.

Substance, plam-leaf. Size, 8×1¼ inches. Pages, 24. Lines, 9 on a page. Character, Tamil. Condition, much injured. Appearance, old.

Complete in 46 Stanzas.

Same work as that described under No. R. 946 (d) of the Triennial Catalogue of Tamil MSS. Vol. VI.

(கு. - பு.)—

இந்நூல் மூவருடக் காட்லாக் 946 (d) நம்பர் பிரதியில் வந்துள்ளதே. இப்பிரதியில் இந்நூல் 46 ஆவது செய்யுளோடு முடிவடைகிறது. ஏடுகள் மிகவும் சிதைந்துள.

---

## No. 2242 தன்வந்திரி தண்டகம்.
### DHANVANTIRI DAṆḌAKAM.

**Pages, 68. Lines, 8 on a page.**

**Begins on fol 140 a of the MS described under No. D. 2246.**

Complete.

A treatise, in the *Daṇḍakam* style, by Dhanvantari, and treats of Indian Medicine. At the end there is a verse explaining what is known as *Rāhukālam* in Indian Astrology.

**Beginning :**

தன்வந்திரிதண்டகம்.

அண்டமெனும் பரப்பிரம்ம வருளைப்போற்றி
அன்பான மனோன்மணித்தாய்ப்பாதம் போற்றி
குண்டமெனுங் குண்டலியின் பாதம் போற்றி
குருவான பராபரத்தோன் பாதம் போற்றி.
வண்டமெனும் வழலையுட வதீதம் போற்றி
வளமான வறுமுகவர் பாதம் போற்றி
மண்டமெனுஞ் சத்திசிவன் பாதம் போற்றி
மதியான ரவிமதியின் அருளே போற்றி (௧)

போத்தினேன் வாசியுடை மூலங்காப்பு
வளமான வென்குருவின் பாதங்காப்பு
ஆத்தினேன் வகாரசிவகாமி காப்பு
அன்பான நந்திமூலம் ரிஷிமூலங்காப்பு
மாத்தினேன் சிவபதத்தில் ஐம்பூதங்காப்பு
மகத்தான தொண்ணூற்றாறு கருவே காப்பே (௨)

* * *

காப்பாகும் சகலகலை சேதியெல்லாம்
கருத்தான தண்டகத்திற் கருவாய்ச்சொன்னேன்
வாய்ப்பாகுஞ் சிவனியென் மகனே கேளு
வளமானகலைக்கானமன்னருக்கு
ஆப்பாகுந்தரப்பிதுதான் செப்போடு சிட்டு
அரகரா விந்நூலார் கொடுக்கப்போரார்
மாப்பாகுந்திறவுகோலெல்லாமைந்தா
மாட்டுகிற விந்நூலை மருவிப்பாரே (௬)

வைத்து மே தேவிக்குப்பூசைபண்ணி
வளமான மையெடுத்துத் திலதம்போட்டு
ஆய்த்துமே உலகமதில் போனுயானால்
ஆருமுனைக்காணுர்களறிந்துகொள்ளு
மைத்து மே நூறுக்குள் சகலகலை யெல்லா
மாட்டிவிட்டேன் இதுக்குள்ளேபாருபாரு
நைத்து மே யிதினமேலே நாற்பதுதானசொச்சம்
நலமான தண்டகத்தின் கருவாமுற்றே (௱க)
போட்டுமேதலைப்பிண்ட கபாலம்மூடி
புகழான தீபத்தை யெரித்துக்கொள்ளு
ஆட்டுமேதிரிசாமமெரித்திட்டாக்கால்
அப்பனே நெலக்கணம் போலடையாப்பற்றும்
நாட்டுமே மைந்தனே சொறண்டிக்கொண்டு
நலமானவைங்கோலத்தையிலம்விட்டு
வாட்டுமே மத்தித்துச் சிமிழில் வைத்து
வளமான வஞ்சனுதேவியாமே (௱௩)

* * * *

**End :**

சொன்னேனடா நூற்று நாற்பதுக்குண்மைந்தா
சொற்பெரிய சூட்சுமமெல்லாங் கொட்டினேன்பார்
வன்னேனடா வகையாக விந்நூற்சொன்னேன்
வளமான சூட்சமதண்டகமாமிந்நூல்
கன்னேனடா நான் சொன்ன நூலுக்கெல்லாம்
கருக்கிடையாங்கலைஞ்ஞான தண்டகமாமிந்நூல்
மன்னேனடா இந்நூலில் பூட்டச்சொன்னேன்
மைந்தனே திறக்குகிற விபரஞ் சொன்னேன் (௱௩௯)
சொன்னேமே யிந்நூற்போலாருஞ்சொல்லார்
சொற்பெரிய கடல்நூல் எண்பதையும்பாரு
வன்னேமே வழிகளது நன்றாய்த் தோற்றும்
வகையான நூலதுதான் வண்மை பாரு
மன்னேமே இந்நூலைப்பார்த்தோருக்கு
மகத்தான குருடருக்கு வெளிச்சம்போலாம்
அன்னேமே தண்டகத்தை யறையில்வைத்து
அனுதினமும் பூசித்து அடிபணிந்தேமுற்றே (௱௪௰)

குரு வாழ்க. இப்படிக்கு எழுதி முடிந்தது முற்றும்.

(கு. - பு.)—

இந்நூல் தன்வநதிரி பகவானுல் இயற்றபபெற்றதோர் தண்டகம் என்ற நூல் வகையாகும். இது நூற்று நாற்பது பாடல்கள் கொண்டுள்ளதென்று நூலாசிரியரே 101 ஆவது பாடலிலும் 139 ஆவது பாடலிலும் உணர்த்தியிருக்கின்ருர், இதில் இந்நூல் முற்றும் உளது. இது பல கருக்களேயும் நுவல்கின்றது. எடுகள் மிகவும் சிதனுற்றுள. இறுதியில் இராகுகாலம் உணர்ததும் செய்யுள் ஒன்று வரையப்பெற்றுள்ளது.

---

## No. 2243 தன்வந்திரிவாலேசாஸ்திரம்.
## DHANVANTIRI VĀLAI ŚĀSTIRAM.

Pages, 71. Lines, 6 and 7 on a page.

**Begins on fol 55 a of the MS described under No. D 2231.**

Complete.

A treatise on Indian Medicine, in various Tamil metres.

**Beginning :**

குருவாழ்க : குருவேதுணே.

தன்வந்திரியார் அருளிச்செய்தவாலே.
வாலேசாஸ்திரம் : குணமும் மருந்தும்.
வேகமாய் நெறிசேரும் விணேகளும்
தாகபோகம் விடாத்தளர்ச்சியும்
சோகவாரியினுல் வருதுன்பமும்
போக யானே முகத்தனேப்போற்றுவாம். (க)

---

வாலேக்கிறக்க குணக்கவியும்
மருந்து மந்திர யந்திரமும்
காலக்கழிப்பும் நீர்சொரிவுங்
கட்டுஞ்சிலது வேறுடனே
கோலக்குளிகையெண்ணெயுடன்
குணத்தின்படியே கொள்வதற்குச்
சீலேதருவாய் விஞயகஞர்
சிந்தித்தார் சஞ்சீவியென்றே (க)

ஆகும் நாள்விந்துவிட்டு
அஞ்சுநாள் கருப்போலாகும்
போக மூவைந்துநாளில்
பொருந்தியமுட்டை போலாம்
ஏகமாதத்திலக்கம்
இரண்டினில் மார்மட்டாகும்
பாகமா மூன்ருந்திங்கள்
பகருந்தி மட்டுமாமே. (ங)

மட்டுட நாலாமாதம்
வளர்ந்திடும் பாதமெங்கும்
கட்டுடன் அஞ்சாமாதம்
கருது சரணமாமாறில்
தட்டுடன் எலும்புசீவன
தலைமயிர் நரம்பேழாகும்
எட்டுடனறி வாயொன்
பதில் திசைப்பிறவிதானே (ரு)

**End :**

இலைக்கள்ளி வடக்குவேர்ப்பட்டையிதினுடனே
கலக்கமிளகுள்ளி சுக்குக்கடுக்காயும்—பிலக்கவரைத்
தடைசுட்டுத்தான் குளவியருந்தமூலம் சமூலம்
புடை புடைத்து விட்டோடிப்போமே (உ௱உ)

சென்னயுருவியிலை சிறுகவொருபிடியை
யுண்ணநல்லெண்ணெய் தனிலோருழக்கில்—மின்னய்கேள்
வரிக்குமரியன்னம்வாங்கிப் பஞ்சத்தாரைப்
பெருக்கியுண்ணச் சீழ்மூலம் போம் (உ௱ரு)

காட்டுக்கருணை கறிக்கருணை கருதும் பிரண்டைபிளியரணை [கொடி
வாட்டமான மருட்கிழங்கு வகையோாபத்தும் பலமாக [வேலி ?
நாட்டிற் படிதான் வரகரிசி நலமாயிடித்துச்சர்க்கரையுங்
கூட்டிக்கலந்து உண்ணிடவே கூவிமூலமோடிடுமே (உ௱ச)

(கு. - பு.)—

இந்நூல் சித்தர் நூல்களைச்சார்ந்தாய் வைத்தியத்தைப் பிரதான விஷயமாய்க்கொண்டு வியாதியின் குணங்களையும், அவைகளைப் போக்கற்குரிய பல நன்மருந்து முறைகளையும் விரிவாக வெடுத்துணர்த்துகிறது. இது, வெண்பா, விருத்தம், அகவல் என்ற பலவகையான செய்யுள் வகைகளும் அமையப்பாடப்பட்டுள்ளது. முதலில் கரு உத்பத்தியாகி அது ஒன்பது மாதம் வரையிலும் வளருமாற்றையும் பின்னர் சிசுவாக உதிக்குமாற்றையும் உணர்த்திப் போருகிறது. இருநூற்றுப்பதின்நான்கு பாடல்கள்கொண்டுள்ளது. எழுத்துப்பிழை மிகவுளது. ஏடுகள் பல செல்லரிப்புண்டு சிதைந்து கிடக்கின்றன.

---

## No. 2244. தன்வந்திரி வாலை சூத்திரம்.
## DHANVANTIRI VĀLAI SŪTTIRAM.

Pages, 12. Lines, 7 on a page.

Begins on fol. 101 of the MS. described under No. 2246.

Incomplete, 20 stanzas only.

Same work as the above.

(கு. - பு.)—

இந்நூல் முன் பிரதியில் வந்துள்ள நூலேயாகும். இப்பிரதியில் இந் நூலின முதல இருபது செய்யுட்கள் மாத்திரம் உள. ஒவ்வொரு செய் யுளிலும் சிற்சில சொற்கள் பிரதி பேதங்களுடன் காணப்படுகின்றன. 107-ஆவது ஏடு முதல் 139-ஆவது ஏடு வரையில் உள்ள ஏடுகள் இல்லை. ஆகவே முற்றுப் பெறவில்லை.

---

## No. 2245. தேரையர் சகுனகவியும் பதார்த்தகுண சிந்தாமணியும்.

## TĒRAIYAR ŚAKUNAKAVI AND PADĀRTHAGUṆA CINTĀMAṆI.

Pages, 22. Lines 7, on a page.

Complete.

Begins on fol. 110-A of the MS. described under No. 2231.

Similar to the work described under No. D. 1957. By Tēraiya-munivar.

**Beginning :**

(தேரையர் சகுன கவியும் பதார்த்தகுண சிந்தாமணியும்.)

தேரன் கவியுஞ் சிறுகாலே யுண்டி
வாரமுடைய மனையாளும்—நேரே
வறைத்திருந்த சாந்தும் அகிற்புகையுமுண்டே
நறைத்திருந்து சாகார் நலம். (க)

அன்று கழுவிய தோராடையும் ஆன்பாலுந்
தென்றலு லாவி வருந்திண்ணையும்—நன்று
உறைத்திருந்த நல்லோர் ஒருவருண்டானால்
நறைத்திருந்து சாகார் நலம். (உ)

*         *         *         *         *         *

போசனத்துக் கானதிசை பூருவமுந்தக்ஷிணமும்
ஆசறவே அன்னமருந்தலாம்—காசினியில்
குற்றம் வருமே குடக்குவடக்கானதிசை
சற்று மிருந்தன்னம் அருந்தார். (கூ)

*         *         *         *         *         *

தாதுகெடும் வெள்ளிசனி சருவநாசமாம்
நீதியுடன்வெய்யோனே தீயகற்றும்—ஓதுகுரு
மானங்கெடுக்கு மானஞ் செவ்வாய் மெய்யி
லான மயிர்தான் களைந்தக்கால். (யஉ)

*         *         *         *         *         *

வாழை நீர் :—

வாழைநீர்தான் குளிர்த்தி வல்ல பலனுண்டாகும்
பேழைவயிறுடையும் பெண்மயிலே—ஏழையாள்
ரேக்தக்ரிச்சினம் போம் நீரிழிவைத்தான்போக்கும்
சேத்திரணம் போமெனவே செப்பு. (௩அ)

கொத்துமல்லி.

கொத்தமல்லி வேம்பு . . . . . நீர் காய்ச்சலேத்தூரத்தும்
மத்த விககல் தாகந்தனைமாற்றும்—பித்தம்போம்
மந்தந்தனையறுக்கும் வாய்வு விகாரம்போம்
செந்திருவே யிககுணத்தைச் செப்பு. (௱உ௰)

கடுகு.

வாதசைத்தியம் போம் மாருக்கடுப்புவலி
காதம் போயோடிக கடியுமே—பேதையரே
தாளிக்க வாகுந்தணலாகுங கண்டீர்
தாளித்த நல்ல கடுகு. (௱உ௰க)

நாய்க்கடுகு.

சூதக வாய்வு போம் சுரோணிதத்தில் வாதம்போம்
வாதம் வலிகுன்மம் மடியுமே—மாதுநல்லீர்
பேயகமே புகை காட்டார் பேசாதே யோடிவிடும்
நாய்க்கடுகு செய்யும் நயம். (௱உ௰உ)

ஸ்ரீராமஜெயம் :
குருவே துணை.

(கு. - பு.)—

இந்நூல் தேரையரால் இயற்றப்பெற்றதென்று தெரிகிறது. இதில் எண்ணெய் தேய்த்துககொள்ளல், மயிர் நீக்குதல், உண்ணல் உறங்கல் முதலிய இவையெல்லாம் இன்னின்ன தினங்களிற் செய்யலாம் செய்ய லாகா என்னும் செய்தியும், ஒவ்வொரு பதார்த்தங்களினுடைய குண குணங்களும் அவற்றினுகும் பயன்களும் நன்கு விளங்குமாறு கூறப்பட் டிருக்கின்றன. ஏடுகள் மிகவும் சிதலுற்றுள.

---

## No. 2246. தேரையர் சகுனகவியும் பதார்த்தகுண சிந்தாமணியும்.

## TĒRAIYAR ŚAKUNAKAVI AND PADĀRTHAGUṆA CINTĀMAṆI.

Substance, palm-leaf. Size, 11 6/16 × 1 2/8 inches. Pages, 37. Lines 7, on a page. Charecter, Tamil. Condition, injured. Appearance, old.

Complete.

Begins on fol. 1-A. The other works herein are Tēraiyar Padārtha-guṇa Cintāmaṇi 19 (*b*). Dhanvantiri Vālaisūttiram 101-A. Dhanvan-tiridaṇḍakam 140-A.

Same work as the above.

(கு. - பு.)—

இது, முன் பிரதியில் வந்துள்ளதேயாகும். இப்பிரதியில் இந்நூல் முற்றுமுளது. ஏடுகள் ஒரு சிறிது சிதலுற்றிருக்கின்றன.

## No. 2241. தேரையர் பதார்த்தகுண சிந்தாமணி.
## TĒRAIYAR PADĀRTHAGUṆA CINTĀMAṆI.

Pages 128. Lines, 7 on a page.

Begins on fol. 121-A of the MS. described under No. 2231.

Complete in 357 Stanzas.

Similar to the work described under No. D. 1957.

**Beginning :**

பதார்த்த குண சிந்தாமணி.

உலகமும் யாவையும் உண்டு படைத்திடு மோங்கிய மால்மருகன்
பலகலை யாயுருவேதமு மப்பமபகருமாநந்தமிழில் ?
கல முடன் அறுசுவை வர்க்க முஞ்சாற்றிட வென்னுவில்
கலகல நற்பத நடனமெனத் திருக்கணபதி காப்பாமே. (௧)

சொல்லிய மூலிகை பலவித வர்க்கமுந் தொடரு மறுபதுநால்
வல்லவராமேல வணமும் லோகமும் வளரும் நவரத்தினம்
புல்லிதநாபி விஷமது வாகும் புகழும் பாஷாணம்
நல்வித குணமுஞ் சொல்லிய நாவலர் நற்பத முந்துணையே. (௨)

திருமணி மார்பன தங்கை செகமருள் பொருட்டா லோகம்
இருவினை நீக்கவேணும் இறங்கியே சிவனைக் கேட்க
அறுசுவை சல வர்க்கத்தை யரனுமைக் கருளிச்செய்யக்
குருவெனு நந்திகேட்கக் குவலையந் தன்னி லீய்ந்தார். (௩)

பூமியில முல்லை நெய்தல் புகழ்ந்திடுந்தூமபாலை
தாமிது குறிஞ்சி யைந்தில் சன . . . . மாகாசம் மூன்றும்
காமிது வருணன் ரேன்றக் கடாட்சித்த பரத்தினலே
நேமிது சலமுமேலை நிறைந்திடும் பூமியெங்கும். (௪)

சொல்லிய இந்த நீரால் துணிந் துண்ணும் மனிதர்க்கெல்லாம்
சொல்லு வாய்குண . . . . . . . சுருதிநூலாய்ந்து
சொல்லிருவினை யுமந்திரத் தொல்லையாம் மனிதர்க்கெல்லாம்
சொல்லு வாயறிவுள்ளோனே சொல்குணந் தவறிடாதே. (௫)

* * * * * *

கிணற்று நீர்.

கடுத்திடுமலமும் மூத்திரங் கருகிடு மேனியெல்லாம்
எடுத்திடுங்கிருச்சிர ரோகம் எழுந்திடும் வெட்டைக்கா கா
கொடுத்திட வாதமையங் குலாவிய சீதளத்தைப் போக்கும்
தொடுத்திடும் லவணமூறிச் சொரிந்திடுங் கிணற்று நீரே. (௰௧)

**End :**

. . . . . . . . . . . . . . . . . . (௫௮)

௲௮௱௪௰௩. 1843-ம்ஆு ஏப்ரல்மீ ௰௬உ திருச்சிராபுரத்திலிருக்கும் அய்தர் சாயுபுவினுடைய தேரையர் அருளிச் செய்த பதார்த்த குண சிந்தாமணி. சென்னைமா நகரிலிருக்கும் சின்னய்யன் கையெழுத்து. ஞாயிற்றுக்கிழமை காலமே எ. மணிக்கு முடிந்தது.

(கு. - பு.)—

இது, டிஸ்கிருபடிவ் காட்லாக்கு 1957-ஆவது நம்பரில் வந்துள்ள 'பதார்த்தகுண சிந்தாமணி' யென்ற நூலைப போன்றுளது. இதனை இயற்றியவர் தன்வந்திரியாவார் என்று நூலிறுதியிலே காணப்படும் தொடர் மொழி யொன்று தெரிக்கின்றது. (சாஅ) 408. பாடல்கள் கொண்டுளது. உள்ள ஏடுகள் எல்லாம் சில சிதலுற்றும் சில முறிந்தும் கிடக்கின்றன. ஆகவே உள்ள பாடல்களைச் சரியாகத் தெரிந்து உணர்தற்கு அரிதாகும். பல ஏடுகள் கயிற்றிற் கோத்து வைத்தற்கும் முடியாத வண்ணமாய் அத்துணை முறிநது கிடக்கின்றன.

---

## No. 2248. தேரையர் பதார்த்தகுண சிந்தாமணி.
## TĒRAIYAR PADĀRTHAGUṆA CINTĀMAṆI.

Pages, 160. Lines, 7 on a page.

Begins on fol. 19 (*b*) of the MS. described under No. D 2246.

Complete in 402 Stanzas.

Same work as the above.

(கு. - பு.)—

இந்நூல் முன் பிரதியில் வந்துள்ள நூலேயாகும் : இப்பிரதியில் கடைசியில் ஐந்தாறு செய்யுட்கள் நீங்கலாக முற்றுமிருக்கிறது. ஏடுகளில் பல புழுக்களான அரிக்கப்பெற்றிருக்கின்றன.

---

## No. 2249. பிரம்மமுனி கருக்கிடைச் சூத்திரம் முந்நூற்றெண்பது.
## PIRAMMAMUNI KARUKKIḌAIC CŪTTIRAM MUNNŪṞṞEṈ PADU.

Substance, palm-leaf. Size, $15\frac{3}{4} \times 1\frac{1}{4}$ inches. Pages, 140. Lines, 6–8. on a page. Character, Tamil. Condition, injured. Appearance, old.

Begins on fol. 1. The other work herein is (1) ஞானவெத்தப்பாட்டு Ñānauēttappāṭṭu 80-a.

Complete.

Same work as that described under No. R. 266-C.

**End :**

* * * * * *

செய்த்துமே சித்தருடை நூலையெல்லாம்
ஒட்டியே ஆயிரத்தில் வெளியாய்ச் சொனேன்
பத்துமே ஆயிரத்தைக் குறுக்கி நன்றுய்ப்
பாடினேன் முந்நூற்றுச்சில்வானந்தான்
உய்த்துமே கருவெல்லாம் வெட்டை வெளியாக
ஒளியாமற் சத்தியமாய்ச் சொல்லிப்போட்டேன்
கைத்துமே சிறு பிள்ளை முதலாயுள்ள
கருவறியா மூடர்களுங் காணுவாரே. (௩அ௰௩)

வாரான கருவையெல்லாம் வெளியாய்ச் சொன்னேன
வாதமொடு வைத்தியமும் வகையாய் சொன்னேன
வாரான வஞ்சன முந்திலதஞ் சொன்னேன்
வசியமொடு வழைப்புவிததை மாரணமுஞ் சொன்னேன
ஆரான ஞானமொடு வாசியோகம்
அடங்கி நின்ற பூரணமும் அறியச்சொன்னேன
தேரவே வழலையொடு கருவுஞ் சொன்னேன்
செப்பினேன் கருக்கிடை சூத்திரந்தான் முற்றே. (௩௮௰௪)

பிரம்ம முனியார் அருளிச் செய்த கருககிடைச் சூத்திரம் எழுதி முடிந்தது முற்றும்.

(கு. - பு.)—

இந்த நூல் 'பிரம்ம முனி' என்ற சித்தர் பெரியாரால் இயற்றப் பெற்றதாகும்; முந்நூற்றெண்பது பாடல்களைக் கொண்டு முற்றுப் பெற்றுளது. இது, மூவருடக் காடலாக்கு 266-c நம்பர் பிரதியில் வந்துளள தேயாகும். அபபிரதியில் [௩௬௰] (360) பாடல்களேயிருக்கின்றன. இப்பிரதியில் முற்றும் உளது. இறுதிப் பாடல்கள் இரண்டும் இங்கு எடுத்துக்காட்டாகக் காட்டப்பட்டிருக்கின்றன. இரஸவாத வைத்திய முறைகளைப் பிரதானமாகக கொண்டுளது. மற்று இவ்வாசிரியர் வைததிய விஷயமாக இரண்டாயிரம் பாடல் கொண்டதொரு நூலும், அதற்கும் சுருக்கமாக ஆயிரம் பாடல் கொண்டவொரு நூலும் அதற்கும் சுருக்கமாக முந்நூற்றெண்பது பாடல்கள் கொண்டுள்ள விந்நூலையும் இயற்றிய போநததாக இந்நூல் முதலில் (2) இரண்டாம் பாடலில் உணர்த்தியிருக்கின்றார். இது முடிந்த பின்னர் 80, 81-ஆவது ஏடுகளில் ஏத்தப் பாட்டொன்றும், மற்றைய ஏடுகளில் வைத்திய முறைகள் பல வசனத்தில் எழுதப்பட்டு உள. ஏடுகள் சிதலுற்றிருக்கின்றன.

---

## No. 2250. கேரளாலங்காரம்.

## KĒRAḶĀLAṄKĀRAM.

**Substance, palm-leaf. Size $15\frac{3}{4} \times 1\frac{1}{4}$ inches. Pages, 150. Lines, 6 on a page. Character, Tamil. Condition, much injured. Appearance, old.**

**Same work as that described under No. R. 6.**

(கு. - பு.)—

இந்நூல் மூவருடக் காடலாக்கு 6-ஆம் நம்பரில் வந்துள்ளதேயாகும். இப்பிரதியில் இந்நூல் முற்றும் உளது. இந்நூலின் செய்யுட்கள் (௪௱௫௰௮) (458) என்று இறுதி வாக்கியத்தால் தெரிகிறது. ஏடுகள் மிகவுஞ் சிதைந்து முறிந்து கிடக்கின்றன.

இது முடிந்த பின்னர் சில ஏடுகளில் நட்சத்திரம், கிரகங்கள், இராசிகள் முதலியவைகளின் பரியாயப் பெயர்களும், இன்னும் சிலவும் எழுதப்பட்டுள.

## No. 2251. பஞ்சபட்சி சாத்திரம்.
## PAÑCAPAKṢI ŚĀTTIRAM.

Pages, 38. Lines, 8 on a page.

**Complete :**

Begins on fol. 91 of the MS. described under No. D. 2231.
Similar to the work described under No. R. 164 (*b*).

**Beginning :**

பஞ்சபட்சி சாத்திரம்.

உன்னியே யொருவனுரைத்த முதலெழுத்தைப்
பனணிப்பறவை யதாய்ப் பார்க்குங்கால்—உன்னி
உதையந் திசைபட்சி உண்மை யறிந்துரைக்கக்
கதை காவியக்களிறே காப்பு. (க)
துய்ய மலருறையுந் தோகையே உந்தனுடை
செய்ய மலர்ப்பாதஞ் சேவிப்பேன்—பொய்யில்லா
ஐந்துவகை பட்சிதன் கதிநிமித்தங் குணத்தைச்
சிந்தைதனில் நிற்கவே செப்பு. (உ)
அகரமே வல்லூறு ஆந்தை இகரமதாம்
உகரம் பெருங்காக்கையுண்மை—பகருங்கால்
எகரமது கோழியெந்நாளும் மஞ்ஞை
ஒகர மயிலென்றே யுரை. (ந)

பூர்வபட்சம் பகல் வாக்கியத்துப் பாடல்.
வாக்கியம்.

நாரிவாடி பூவேதோ செவ்வாய் ஞாயிறு வல்லூறு
குறைந்த திங்கள் புதனுந்தை கவ்வாய் வியாழம் காரண்டம்
கருதும் வெள்ளி கோழியதாம் பிவ்வாய் சனியில் மயிலுண்ணு,ம்
வனமெ பக்கத்தடைவிது வென்றவ்வாய் நூலையகத்தியரும்
அமரற் கருளிச் செய்தனரே. (க)
உண்டு நடந்து உலகாண்டு நித்திரையாய்த்
தண்டியூர் முற்பகலிற் சாவாகும்—உண்டேனை
அரசாயிறந்து அநேக வழி நடந்து
விரவாயுறங்கு மிரவில். (உ)
வல்லூறு உண்ண வாந்தை வழி நடக்க
நல்ல குறு காகம் நாடாளப்—பொல்லா
உறக்கமது கோழி யொண்டொடி யீரிங்கே
திறக்கு மயிலென்றே யியம்பு. (ந)

**End :**

அபரபட்சத்து வாரப்பட்சி யறிய பகலில்.

திங்கள் சனி மயில். ஞாயிறு செவ்வாய் கோழி.
புதன் காக மிரவில், வியாழம் ஆந்தை.
வெள்ளி வல்லூரு.
சனி திங்கள் கோழி வெள்ளி மயில்.
புதனுந்தை வியாழம் வலியன்.
ஞாயிறு செவ்வாய் வல்லூறு.

பூர்வபட்சத்து வாரங்கள் எழுக்கும் பகல்.
பந்துகட்டு வாக்கியம்.
நாரிவாடி பூவேதோ.
இதற்கு ராப்பருந்துகட்டு வாக்கியம்.
பூவே குடே ஞேஞரி.

அபரபட்சம் வாரங்கள் எழுக்கும் பகல் பந்துகட்டு
தேஞேடே பூவிதே.
இதற்கு ராப்பருந்துகட்டு வாக்கியம்.
பூவே சூடிமாலோனே.

பஞ்சபட்சி சாஸ்திரம் எழுதி முடிந்தது.
முற்றும்.

இவை சாஸ்திரம் :—

ஆனைக்குளத்துச் சேரியிலிருக்கும் பத்தீசு வாத்தியார் எழுதிய தென்றறியவும்.

அ ஆ க கா ங ஙா ச சா ஞ ஞா ட டா ண ணா த தா ந நா ப பா ம மா ய யா ர ரா ல லா வ வா ழ ழா ள ளா ற றா ன னா இ ஈ கி கீ ஙி ஙீ சி சீ ஞி ஞீ டி டீ ணி ணீ தி தீ நி நீ பி பீ மி மீ யி யீ ரி ரீ லி லீ வி வீ ழி ழீ ளி ளீ றி றீ னி னீ உ ஊ கு கூ ஙு ஙூ சு சூ ஞு ஞூ டு டூ ணு ணூ து தூ நு நூ பு பூ மு மூ யு யூ ரு ரூ லு லூ வு வூ ழு ழூ ளு ளூ று றூ னு னூ எ ஏ கெ கே ஙெ ஙே செ சே ஞெ ஞே டெ டே ணெ ணே தெ தே நெ நே பெ பே மெ மே யெ யே ரெ ரே லெ லே வெ வே ழெ ழே ளெ ளே றெ றே னெ னே ஒ ஓ கொ கோ ஙொ ஙோ சொ சோ ஞொ ஞோ டொ டோ ணொ ணோ தொ தோ நொ நோ பொ போ மொ மோ யொ யோ ரொ ரோ லொ லோ வொ வோ ழொ ழோ ளொ ளோ றொ றோ னொ னோ. அகாரம் வல்லூறு. இகாரம் ஆந்தை. உகாரம் காகம். எகாரம் கோழி. ஒகாரம் மயில்.

(கு. - பு.)—

இது மூவருடக் காட்டலாக்கு 164 (b) நம்பர் பிரதி போன்றுள்ளது. முற்றும் உளது. ஏடுகள் மிகவும் சிதலுற்றுச் சிதைந்து கிடக்கின்றன.

---

## No. 2252. தொல்காப்பியம் நச்சினார்க்கினியர் உரையுடன். TOLKĀPPIYAM WITH NACCINĀRKKINIYAR'S COMMENTARY.

Substance, Sritalam. Size, $17\frac{1}{2} \times 2\frac{1}{4}$ inches. Pages, 156. Lines, 20 on a page. Character, Tamil. Condition, injured. Appearance, old.

Begins on fol. 1-a. The other work herein is Ilakkaṇaviḷakkam 163-a.

Contains the chapters on Orthography and Etymology.

Complete.

Same work as that described under No. D. 47.

(கு. - பு.)—

இந்நூல் டிஸ்கிருப்டிவ் காடலாக்கு 47-ஆவது நம்பரில் வந்துள்ளதே யாம். இப்பிரதியிலும் எழுத்ததிகாரம். சொல்லதிகாரம் இவ்விரண்டும் நச்சிஞர்க்கினியர் உரையுடன் உள. 79 to 162 எடுகள் ஒன்றும் எழுதாமல் விடப்பட்டுள்ளன. 163-ஆவது எட்டில் இலக்கண விளக்கம் ஆரம்பிக்கப்பட்டுள்ளது. எழுத்துக்கள மிகவும் சிறியனவாய் எழுதப்பட்டிருக்கின்றன. ஆயினும் தெளிவாயிருக்கின்றன. சிதைந்திருககின்றன.

---

## No. 2253. இலக்கண விளக்கம் உரையுடன்.
## ILAKKAṆAVIḶAKKAM WITH COMMENTARY.

Pages, 92. Lines, 20 on a page.

Begins on fol. 163-a of the MS. described under No. D. 2252.

Incomplete.

Same work as that described under No. D. 36.

(கு. - பு.)—

இந்நூல் டிஸ்கிருப்டிவ் காடலாக்கு 36-ஆம் நம்பரில் வந்துள்ள நூலேயாகும். இப்பிரதியில் இந்நூலின் பொதுவியல் "உவப்பினு முயர் வினும்" என்ற (5) ஐந்தாஞ் சூத்திரம் வரையிலும் உள்ளது. அதற்கு மேலான பகுதியையும் எழுதுவதற்குச் சில எடுகள் வெற்றேடுகளாய் விடப்பட்டிருக்கின்றன. எடுகள் சிதைந்துள. எழுத்துச்சிறியவையாயினும் தெளிவாகவிருக்கின்றன.

---

## No. 2254. பூசைக்கோவை
## PŪJAIKKŌVAI.

Pages, 5. Lines, 7 on a page.

Complete.

Begins on fol. 183 of the MS. described under No. D. 1127

A directory, in verse, for the worship of God Śiva, as it is performed by true *Śaiva Siddhāntins,* with flowers, offerings of various kinds, etc.

**Beginning :**

பூசைக்கோவை.

பூதசுத்தி.

உழிதரு காலுங் கனலும் புனலொடு மண்ணும் விண்ணும்
இழிதருகால மெக்காலம் வருவது வந்ததற்பின்
உழிதரு காலத்துன்னடியேன் செய்த வல்வினையைக்
கழிதருகாலமுமாய வைகாத்தெம்மைக்காப்பவனே. (க).

* * * * * *

மந்திரசுத்தி.

அல்லிக்கமலத்தயனு மாலு மல்லா தவருமமரர் கோனுஞ்
சொல்லிப்பரவு நாமத்தானைச் சொல்லும் பொருளுமிறந்த சுடரை
நெல்லிக்கனியைத் தேனைப்பாலை நிறையின்றுதைய முதின்சுவையைப்
புல்லிப்புணர்வதென்று கொல்லோ வென்பொல்லாமணியைப் புணர்ந்தே

* * * * * *

**End :**

சோடசோபசாரம்.

சோதியே சுடரே சூழொளி விளக்கே
சுரிகுழற்பணைமுலை மடந்தை
பாதியே பரனே பால்கொள்வெண்ணீற்றாய்ப்
பங்கயத்தயனுமாலறியா
நீதியே செல்வத்திருப்பெருந்துறையில்
நிறைமலர்க்குருந்த மேவிய சீ
ராதியேயடியே னுதரித்தழைத்தால்
தேந்துவையென்றருளாயே. ?

* * * * *

ஞான பூசை.

மனமுதற்காரணமெல்லாம் . . . மைசத்தாகி ஞானக்
கண்ணினாலுன்னியந்தக் கருத்தினாலெவையு நோக்கி
யெண்ணியஞ்செழுத்தை மாறி பிறைநிறையுணர்ந்து போற்றுப்
புண்ணியந்தனக்கு ஞானப்பூசையாப்புகலுமன்றே.

திருச்சிற்றம்பலம்.

(கு. - பு.)—

பூசைக்கோவை யென்னும் இச்சிறு நூல், சைவ சித்தாந்திகள் சிவ பெருமானைப் பூசித்து வழிபடற்குரியனவாய், பூதசுத்தி, ஆன்மசுத்தி, மந்திரசுத்தி, திரவிய சுத்தி, இலிங்க சுத்தி, இலிங்க ஆவாஹநம், வஸ்திராபரண புஷ்பங்கள் அணிவித்தல், நிவேதநஞ் செய்தல், மற்று ஷோடச உபசாரங்கள் முதலியன செய்தல், ஆகிய இவைகள் எல்லாவற்றிற்கும் ஒவ்வோர் பாடல் விழுக்காடாக வமைந்துள்ளது. இவைகளைக்கொண்டே சைவர்கள் பூசை செய்வார்கள்போலும். எழுத்துப்பிழை உள.

---

## No. 2255. நாயன்மார் திருவவதார மரபு.
## NĀYANMĀR TIRUVAVATĀRA MARAPU.

**Pages, 10. Lines, 8 on a page.**

**Complete :**

Begins on fol. 23 of the MS. described under No. D. 584, Vol. II.

Gives the caste, date of birth, the means of salvation, etc., of the 63 *Śaiva Saints* called *Nāyanmār*

**Beginning :**

நாயன்மார் திருவவதார மரபு.

சைவசமய சிரோமணிகளாகிய அறுபத்து மூன்று நாயன்மார்கள் திருவவதாரஞ் செய்த மரபுகளேயும், திருநட்சத்திரங்களேயும், அவர்கள் முத்தியடைந்த விதத்தினேயும் கூறுகினறது. தில்லேவாழந்தணர். சிறுத்தொண்ட நாயனூர் மரபு—மாத்துவவந்தணர். சிவனடியார்களே வழிபட்டு முத்தியடைந்தவர். மாதம் சித்திரை, நட்சத்திரம் பரணி.

மங்கையர்க்கரசியார் மரபு.

பாண்டி முடி மன்னர் பிராட்டியார் குருவருளாலே முத்தியடைந்தவர், மாதம் சித்திரை. நட்சத்திரம், உரோகிணி. விரன்மீண்ட நாயனூர் மரபு—வேளாளர். சிவனடியார்களே வழிபட்டு முத்தியடைந்தவர், மாதம் சித்திரை, நட்சத்திரம், திருவாதிரை. இசைஞானி நாயனூர் மரபு—சிவ வேதியர். குருவருளாலே முத்தியடைந்தவர், மாதம், சித்திரை. நட்சத்திரம் சித்திரை. திருக்குறிப்புத்தொண்ட நாயனூர் மரபு—ஏகாலியர். சிவனடியார்களே வழிபட்டு முத்தியடைந்தவர். மாதம் சித்திரை. நட்சத்திரம் சுவாதி. திருநாவுக்கரசர் மரபு—வேளாளர். குருவருளாலே முத்தியடைந்தவர். மாதம், சித்திரை. நட்சத்திரம், சதையம்.

**End :**

முனேயடுவார் நாயனூர் : மரபு, வேளாளர். சிவனடியார்களே வழிபட்டு முத்தியடைந்தவர், மாதம் பங்குனி, நட்சத்திரம் பூசம்.

காரைக்காலம்மை மரபு—வணிகர். சிவனடியார்களே வழிபட்டு முத்தியடைந்தவர். மாதம், பங்குனி. நட்சத்திரம், சுவாதி.

தண்டியடிகள் மரபு—தொன்ருமை. சிவலிங்கத்தை வழிபட்டு முத்தியடைந்தவர். மாதம் பங்குனி. நட்சத்திரம், சதையம்.

* * * * *

மாணிக்கமூர்த்திசுவாமிகள் மரபு—மாத்துவ வந்தணர். குருவருளாலே முத்தியடைந்தவர், மாதம், ஆவணி. நட்சத்திரம், மகம்.

அறுபத்து மூன்று நாயன்மார் மரபுகளில் ஒவ்வொன்றிலும் இத்துணேயர் என்பதைச் சொல்லுவது.

* * * * *

அறுபத்து மூன்று நாயன்மார்களது புராணத்தின் செய்யுட் டொகையறிவது.

(கு. - பு.)—

இது, சைவசித்தாந்தத்தில் (63) அறுபத்து மூன்று நாயன்மார்களின் மரபு, முத்தியடைந்த வகை, அவதரித்த மாதம், நட்சத்திரம், இன்னின்ன மரபில் இத்துணேயர் ஆவர் என்னும் இவ்விஷயங்களேக்குறிப்பாக வசன நடையில் எடுத்துணர்த்துவது. பின்னர் பெரிய புராணத்தின் ஒவ்வொரு புராணத்துக்கும் உள்ள பாடல்களின் மொத்த எண்களும் எழுதப்பட்டுள.

## No. 2256. அளவை வாய்ப்பாடு முதலியன.

### ALAVAI VĀYPPĀḌU, ETC.

Pages, 14. Lines, 6 on a page.

Complete :

Begins an fol. 1 of the MS. described under No. D. 82, Vol. I.

A work on Indian weights ; contains also some miscellaneous information like the names of the "Seven Sages", "Five Virgins", etc.

**Beginning :**

நெல்லு (க) கொண்டது பகு [மி] (மெ) டை. பகுமெடை (உ) கொண்டது பிளவு. பிளவு (உ) கொண்டது [குண்ணி] (குன்றி). குன்றி (உ) கொண்டது மஞ்சாடி. மஞ்சாடி (உ) கொண்டது பணவெடை. பணவெடை (சு) கொண்டது வராகனெடை. வராகனெடை (ய) கொண் டது. பலம். பலமறியும்படி. சேர் (பலம்) (அ).

(கு. - பு.)—

இச்சிறு நூல், அளவையாறனுள் எடுத்தலளவையினையெடுத்துணர்த்து வது. இப்பிரதியில் முற்றுப்பெற்றதென்றேதெரிகிறது. பின்னர், அஷ் டகஜங்கள், அஷ்டமாநாகங்கள், அரிச்சந்திரன் முதலான சக்கிரவர்த்திகள் (சு), அறுவர், ஸப்தரிஷிகள், அவர் பத்நிமார்கள், குலபர்வதங்கள் (அ) சிரஞ்சீவிகள் எழுவர், ஸப்தபுரிகள், பஞ்சகன்னியர், பிரஹ்லாதர் முத லான பரமபாகவதர்கள் பதினெவர் (யரு). ஆழ்வார் பன்னிருவர், ஆகிய இவர்களுடைய பெயர்கள் இன்னின்னவையென்று எழுதப்பெற்ற சில ஏடுகளும்உள. ஏடுகள் சிதைந்துள. பிழைகள் உள.

---

## No. 2257. சங்கச்செய்யுட்கள்.

### SAṄGACCEYYUṬKAḶ.

Pages, 3. Lines, 9 on a page. Character, Tamil. Condition, injured. Appea, rance, old.

Begins on fol. 4-a of the MS. described under No. D. 138, Vol. I. Contains 5 Stanzas only.

A collection of stanzas from *Puṟanāṉūṟu*.

(கு. - பு.)—

இதில் புறநானூற்றின் செய்யுட்களான "மண்டிணிந்த நிலனும்", "எனிதோதானே," "நாளன்று போகி," "நாராய் நாராய்," என்று தொடங்கும் ஐந்து செய்யுட்களேயுள. ஏடுகள் சிதல் உற்றுக்கிடக்கின்றன.

---

## No. 2258. ரஹஸ்யத்ரயஸாரம்.

### RAHASYATRAYASĀRAM.

Substance, palm-leaf. Size, 17¼ × 1 9/16 inches. Pages 328. Lines, 8–11 on a page. Character, Tamil and Grantha. Condition, injured. Appearance, old.

Incomplete.

Same work as that described under D. No. 971.

(கு. - பு.)—

இந்நூல் டிஸ்கிருப்டிவ் காடலாக்கு 971-வது நம்பரில வந்துள்ள நூலேயாகும். இப்பிரதியில் இந்நூல் ஆதி முதற்கொண்டு 29-ம் அதிகாரமாகிய சரமஸ்லோகாதிகாரத்தில் சிறிது பாகம் வரையில் உள்ள தாதலின் முற்றுப்பெறவில்லை. முதலில் சில ஏடுகளில் வடமொழியி லான தனியன்களிருக்கின்றன. ஏடுகள் மிகவும் சிதலுற்று முறிந்து கிடக்கின்றன.

---

## No. 2259. கீலக வருடப் பஞ்சாங்கம்.
## KĪLAKA VARUḌAP PAÑCĀṄGAM.

Substance, palm-leaf. Size, 8 × 1 $\frac{3}{8}$ inches. Pages, 38. Lines, 8 on a page. Character, Grantha. Condition, much injured. Appearance, old.

Incomplete.

The Indian Almanac for the Tamil year *Kīlaka*.

(கு. - பு.)—

இது, கீலக வருஷத்திய பஞ்சாங்கமாகும். இதில் சைத்ரசுத்தம் முதற் கொண்டு புஷ்யசுத்தம் வரையில் உள்ளது. சில ஏடுகள் முனபின்னாக வுள. ஏடுகள் மிகவும் சிதிலமாயுள. நடுவில் 17, 20 ஆகிய ஏடு களில்லை.

---

## No. 2260. முருகர் தரிசிப்பு.
## MURUKAR DARIŚIPPU.

Pages, 6. Lines, 8 on a page.

Begins on fol. 115 of the MS. described under No. D. 1157, Vol. III.

Complete.

A poem, in which the author prays to God Subrahmaṇya to show himself before the author, his devotee. This seems to be a part of a longer work.

**Beginning :**

ஒரு முகமாய் வாலையாய்க் குமாரனுகிக்
குறையில்லா தறுமுகமும் வடிவுமாகி
அருளுருவாயோங்கார அகாரமாகி
ஆறெழுத்தாய் மூலமந்திரமுமாகி
மருவாகி மாணிக்கவொளியாய் நின்ற
வன்னியாய் மலர்க்கமல நடுவே நின்ற
திருமுகமும் பன்னிரண்டு கையும் வேலும்
திருவடிவு மடியேற்குத் தரிசிப்பாயே

**End :**

ஐவருமே தானெடுங்கிப் போகா முன்னும்
ஆலம்போலொற்ற கண்பஞ்சடையா முன்னும்
கைவசமாக் காண்பதற்கேகி யானுங்
காணி யாற்றங்கரையிற் காண்ப்பெற்றேன்

உய்வதற்கு உனக்குயானடிமையாற்றுந்
முயர்ந்ததிருப்படை வீடு உரைப்பார் சுவாமி
தெய்வசிகாமணியே உன் முகங்களாறுந்
திருவடிவு மடியேற்குத் தரிசிப்பாயே || ம ||

*　*　*　*　*

(கு. - பு.)—

இது, முருகப்பிரானைத் தரிசிக்க விழைந்தார் ஒருவர் அக்குமாரக் கடவுளை விளித்து எனக்குத் தரிசனம் தந்தருளல் வேண்டுமெனப் பிரார்த்திப்பதாக வமைந்துளது. பத்துப் பாடல்களைக் கொண்டுள்ளது. பின்னர், "தண்டாயுத முந்திரிசூலமும்" என்று தொடங்கும் இரண்டு பாடல்கள் உள. அவை இத்துடன் சேர்ந்தவையல்ல வென்று தெரிகிறது. ஏடுகள் சிறிது சிதைந்துள. எழுத்துப்பிழைகள் மிகவுள. இது ஒரு பெரிய நூலின் ஒரு பகுதியென்று தெரிகிறது.

---

## No. 2261. காசீம் படைவெட்டு.

### KĀŚĪM PAḌAIVEṬṬU.

**Substance, palm-leaf. Size, 16 × 1 inches. Pages, 80. Lines, 8 on a page. Character, Tamil. Condition, injured. Appearance, old.**

Contains 131 stanzas only.

A poem, in the *Paḍaiveṭṭu* style, on the story of "Kāsim." In the 6th stanza of this poem the author, a Muslim poet, refers to himself as "Nāleṭṭil Venṟār". This differs in many places from its printed edition.

This work has been printed.

**Beginning :**

மறைப்பொருளே திசையெங்கும் போற்றும் வேந்தன்
மன்னவர்க்கும் மன்னவனே பிறவாய் நின்ற
உறை பகருமடுகமதெந்தன மருகனலி யோங்கு புகழாகவந்த ?
உசனுக்காக தருவளருங்காசீங்கதை
தருவளருங்காசீங்கதை போருக்குத்
தண்டமிழ்நூல் பாடவெந்தன்றகைமைக்கு
நிறை நிறையாயளவளவாய் நிறைந்து நின்ற
நித்தனே நித்தனே நித்தருக்குக் காப்புத்தானே (க)

உலகு நிலையேழுங் கடல்களேழும் பரிடமேழுமெவ்வகையும்
இலகுமகமது படைத்தகோவேயிற் சூல மகமது திருப்போனூர்
திலதமனையஞேரலிபுலியார் செல்வரசனுடைதிருமகனூர்
கலகம் வருவாரை வென்ற சிங்கங் காசீங்கதை பாடகாத்தருளே (உ)

*　*　*　*　*

ஆக்கியோன் பெயர்.

தான முதவி நீதர் காசீம்சங்கைப் புராணத்தைத் தமிழ்ப்படுத்தி
மானபுராணங்கள் சாமினுர் சொல்மாலீனவரவர்தான் மைந்தரா
[ஞே
தீனைவிரும்பிய விசுமாயல்கான் செய்யுந்தலீசு கொடை சிறப்
[பினுலே
ஞானமுறை கூட்டிப்பீருகான சொல் நாஎேட்டில் வென்ருர்
[பாடினுரே. (சு)

**End :**

நிறை சூலியம்பல் செய்தோமோ நீதி நெறிதப்பி நடந்தோமோ
கறை சூதுவம்பு பகர்ந்தோமோ கண்டார்தமையெல்லாம் பொரு
[தோமோ
மறை சூதளம் பேசி நின்றேமோ மன்றிலிருந்தோ ஞ் சொன்
[ஞேமோ
இறசூல் கோத்திர மதனிற்பிறந்து எங்கடமக்கிது வருவானே(ாகூ0)
அல்லிது படக்காரியமோ வடியாள் தனக்கொன்று பாக்கியமோ
வல்லவினையெல்லாமெனக் கேத்தமன்னர் தலையிலே யெழுதுவா
[னேன்
எல்லையுலகினிலெனக்கான வெந்தன்கணவரையென்புலம்ப
கல்லையுரையாத அசன் மகனுர் கல்புதெரியாமற் புலம்புனுற்
[ருர். (ாகூ0உ)

(கு. - பு.)—

இந்நூல் முகம்மதியர் மதத்தைச் சார்ந்து "படைவெட்டு" என்று வழங்கும் ஒரு வகைப் பிரபந்த காவிய வகையாகும்; இது அச்சிடப் பெற்றுள்ளது. "நாளெட்டில் வென்ருன்" என்றும் "பீருகான்" என்றும் வழங்கும் முகம்மதியப் புலவரான் இயற்றப்பெற்றதாகும் என்ற விச்செய்தி இந்நூலின் (சு) ஆருவது செய்யுளால் அறியக்கிடக்கிறது. இது நூற்றைம்பது பாடல்களால் அமைந்துளது. இப்பிரதியில் நூற்று முப்பத்திரண்டு பாடல்கள் வரையிலுமேயிருக்கிறது. அச்சுப்பிரதிக்கும் இப் பிரதிக்கும் பல விடங்களில் மிகவும் பாடபேதங்கள் காணப்படுகின்றன. எழுத்துப்பிழையுடன் உளது. எடுகள் சிதைந்திருக்கின்றன.

---

## No. 2262. அமானல்லா கதை.

## AMĀNALLĀ KATHAI.

Substance, palm-leaf. Size, $12\frac{1}{4} \times 1\frac{1}{4}$ inches. Pages, 160. Lines, 6 on a page. Character, Tamil. Condition, much injured. Appearance, old.

Incomplete.

Otherwise known as *Ulukku Malukkup Paḍaiveṭṭu.* The subject matter of this poem is the "story of Amānallā." No particulars of the

**Beginning :**

உலுக்கு மலுககுப் படைவெட்டு.

மன்னு முலுக்கு மலுக்குப்படை வெட்டையான்
பனனு தமிழறிந்து பாடவே—உன்னுமுயிர்
ஆரண நூற்கெட்டாத வாதியிறையோனுன்
காரணமாங் கர்த்தாவே காப்பு (க)
அமானல்லா கிருபை செய்யும்.

**End :**

உன்னை வதையாது விடுவேனுனது
மன்னருகு நீயணுகியே
மன்னுமி சுலா நெறிவரச் சொல்லு
வனல்லது மறுத்திடுகிலோ
தன்னு பலசேனையுடன் தன்னையும்
மிமைப்பமை துணித்திடுவன்யான்
இன்னவையலிப்புலி சொன்னு
ரெனமெனக்கணமிறங்கி மொழியும். (௩௱௫௰௫)

அன்னகுடையிருமை அலிப்புலி
யெனும் பெருமை தானறிகிலா
தென்னுடனெதிர்க்க வசமோ வெவர்க்கு
முமக்குமொருநி குரடையிற
சொன்னபடி ராசனொடு சொல்லிவிடு
மென்றடி தொழுது பகருவார்
துன்னுயிர் தனக்கருக வெந்நரகி
லல்லது தனை துணி செய்வேன். (௩௱௫௰௬).

இவ்வித முரைப்பாயென

* * * * *

(கு. - பு.)—

இந்நூல் முகம்மதியர் மதத்தைச் சார்ந்ததாய் "உலுக்குமலுக்கும் படைவெட்டு" என்ற பெயர் வாய்ந்ததாயுளது. இதனை இயற்றியவர் பெயர் முதலியன ஒன்றும் தெரியவில்லை. ஏடுகள் மிகவும் முறிந்து கிடக்கின்றன. முற்றுமில்லை. எழுத்துப் பிழைகள் உள.

---

## No. 2263. அமீன் தோத்திரம்.

### AMĪN TŌTTIRAM.

Substance, palm-leaf. Size, 15 × 1 inches. Pages, 78. Lines, 5. on a page. Character, Tamil. Condition, injured. Appearance, old.

Incomplete.

A poem in praise of Amīn, a Muslim. No particulars of the author are given in the poem.

**Beginning :**

அமீன் தோத்திரம்.

அலகமந்துலில்லா வனைத்தும் படைத்தாளுகின்ற
அல்லா நினதூதர முகம்மதிற் சூல நெபிமேற் சொல்லாலிவ் வண்ணம்
தொடங்கினேனென் பிழைகளையெல்லாம்
பொறுத்து இரங்கு வாய் எங்கோவே
கோமானேயெங்கட்குதநாயே குதரத்துள்ள சீமானே
யாவுந்தெரிந்த திறலோனே நீமாளமன வதனெ ?

**End :**

. . . . கஞ்சப்பதம் தாருமய்யா வினி
ஒருக்காலு மும்மை நெஞ்சில் மறக்காமலிருக்க
நீருதவிசெய் . . . மய்யா
* * * * *
முத்திரை மேவும் புயாசல ராசரே
முஸ்த்தநவியே கருணேசரே
ஒருக் காலமும்மை நெஞ்சில் மறக்காமலிருக்க
நீருதவி செய்தருளுமையா. (உ)

(கு. - பு.)—
இந்நூல் முகம்மதியர் மதத்தைச் சார்ந்ததாய் " அமீன் " என்பவர்மீது இயற்றப்பெற்றதொரு நூலாகும். இப்பிரதியில் முற்றுமில்லை. ஏடுகள் சிதைவுற்றிருக்கின்றன. எழுத்துப் பிழைகள் மிகவுள. இயற்றியவர் பெயர் முதலியன ஒன்றும் விளங்கவில்லை.

---

## No. 2264. திருவாய்மொழி.
## TIRUVĀYMOḺI.

Substance, palm-leaf. Size, 15¾ × 1½ inches. Pages, 190. Lines, 9 on a page. Character, Tamil. Condition, very much injured. Appearance, old.

Same work as that described under No. D 716.

(கு. - பு.)—
இந்நூல் டிஸ்கிருப்டிவ் காடலாக்கு 716-வது நம்பரில் வந்துள்ளதே யாகும். இப்பிரதியில் முதற்பத்து மூன்றுந் திருவாய்மொழி முதல் நூல் முற்றும் உளது. ஏடுகள் மிகவும் முறிந்தும் புழுக்களால் அரிக்கப் பெற்றும் படிக்கற்கியலா வண்ணமாய் அத்துணை சிதைந்து இருக்கின் றன.

---

## No. 2265. பாண்டவர் வனவாசம்.
## PĀṆḌAVAR VANAVĀSAM.

Substance, palm-leaf. Size, 14⅜ × 1¼ inches. Pages, 132. Lines, 6 on a page. Character, Tamil. Condition, much injured. Appearance, old.

Incomplete. wants 40 foll. in the beginning and end.

A poem, in the *Ammānai* style, on the " forest life of the *Pāṇḍavas*."

**Beginning :**

ண்டிரென்று
பொய்யில்லா நீள் தருமன் புகன்றார் காணம்மானை
பார்வேந்தன் சொல்லைப் பரீக்ஷித்து வுங் கேட்டு
தார்வேந்தே நீரிருக்கத் தம்பிமார் தாமிருக்கத்
தேனுருஞ் சோலைசூழ் தேசமெல்லாம் நன்றாக
நாணுவோ வென்று நகைத்தனன் காணம்மானை
சிங்கத்தாளுளுகின்ற தேசமெல்லாம்மாளவென்றால்
பங்கமின்றி நாய் தனக்குப்பட்டம் பொறுக்குமோதான்
செறிவாக வுந்தனுடைய தேசம் நாளுளுகைக்கு
அறுவாக வென் கையிலாகாதெனறே யுரைத்தான்
பார்த்தனுடைப் பொன் பகரும் மொழிகேட்டு
வாய்த்த புகழ்த் தருமன் மகிழ்ந்துரைபபானம்மானை.
* * * * *

**End :**

எராருந் தீர்த்த மிழிந்தாடலுற்றாரம்மானை
* * * * *

வந்திவர்கள் செலலும் வழியிற் சில வானரங்கள்
கண்டு மனமகிழ்ந்து காவலரே நீரார் தாம்
ஆண்டகைக் கண்ணனொடு போந்தோமிப் பூதலத்தில்
அந்நாளிலுங்களையும் அவனிதனில நாங்காணோம்
எந்நா டெத் தேசம் யாவரென்றாரம்மானை
மன்னு குருகுலத்தில் பாண்டு மைந்தர் நாங்களுந்தான்
மன்னுகலி வந்து மண்ணுலகில் புகுந்தமையால்
அத்தினபுரத்தைவிட்டு அச்சுதனைத்தான் நினைந்து
மெத்தியதோர் கானகத்தில் மேவினோ மென்றுரைத்தார்
கீதம் பயில்வானரங்கள் கேட்டு மனமகிழ்ந்து
ஆதலாலெங்கள் அனுமாற் கிளையவன்காண் வீமன்.

(கு. - பு.)—

இந்நூல் பஞ்சபாண்டவர்கள் காடுறைந்த கதையினை உணர்த்துவது. அம்மானையென்ற பிரபந்த விசேஷத்தால் அமைந்துளது. முதலில் 40 எடுகளும், முடிவில் பல எடுகளும் இல்லை. நடுவிலும் சில சில எடுகளு மில்லை. சில அடியோடு ஒடிந்துள.

---

## No. 2266. குருபரம்பராப்ரபாவம் மூவாயிரப்படி.

### GURUPARAMPARĀPRABHĀVAM MŪVĀYIRAPPAḌI.

Substance, palm-leaf. Size, 17⅜ × 1½ inches. Pages, 284. Lines, 7 on a page Character, Tamil and Grantha. Condition, injured. Appearance, old.

Incomplete. Wants 1 to 20 and 26 foll. in the beginning.

Contains a biographical account of *Vadakalai Śrī Vaiṣṇava Gurus* from Śrī Nārāyaṇa down to Śrī Vēdānta Dēśikar and Nayinārācār. By Tritīya Brahmatantra Svāmi.

Printed.

**Beginning :**

நாய்ச்சியாரை அழைத்து நீர் யாருக்கு வாழ்க்கைப்பட வுகந்திர் என்ன, அவளும் "மானிடவர்க்கென்று பேச்சுப்படில் வாழகில்லேன்" என்ன, ஆழ்வாரும் பின்னை என்னென்ன, அவளும் "புளவாய்பிளந்தமணி வண்ணனுக்கென்னை வகுத்திடுமின்" என்ன, ஆழ்வாரும், அவன் எவ்வூரான் என்ன, அவளும் அவனூரெல்லாஞ் சொல்லுமென்ன, ஆழ்வாரும் திவ்விய தேச மாகாத்மியங்களையெல்லாம் அருளிச்செய்ய, தெனாடும் வடநாடுந் தொழ நின்ற திருவரங்கத் திருப்பதி வைபவத்தைக கேட்டருளின இவ்வாண்டாள் லஜ்ஜாவிஷ்டையாய்ச் சில மநோரதங்களை அநுபவித்து அவ்வநுபவத்தைத் "தையொரு திங்களுந் தரைவிளக்கி" என்று தொடங்கி நாய்ச்சியார் திருமொழியாலே பிரகாசிப்பித்தருளித் திருவரங்கச் செல்வனாரிடத்திற் குடிகொண்ட நெஞ்சினளாயிருக்க ஆழ்வாரும இது கைகூடும்படி எங்ஙனே யென்றிருக்க, அன்று ராத்திரியில் திருவரங்கச் செல்வனாரும் உம்முடைய பெண்ணை கோதையை அழைத்துக் கொண்டுவாரும் என்று ஸ்வப்நங்காட்டியருள, ஆழ்வாரும் ஸந்துஷ்டராயிருக்க, கோயிலிலே அழகிய மணவாளனும் ஸமஸ்த பிருதங்களோடே ஆண்டாளை அழைத்துக்கொண்டு வரும்படி ஜனங்களுக்கு ஸ்வப்நங்காட்டியருள.

**End :**

பின்பு திருமலை ஸ்ரீநிவாஸாசார்யர் முதலான முதலிகளும எம்பெருமானாரப்பிள்ளைக்கொண்டு [நயி] நாயனாராசார்யருக்கு ஸ்ரீஹஸ்தியாதிவாஸ கைங்கர்யங்களையெல்லாம் நடத்தி முன்னோர்கள் நியமனப்படிக்கு நயினாராசார்யர் ப்ரஹ்மதந்த்ரஸ்வதந்த்ர ஜீயர் இருவரும் ப்ரவசந ப்ரவர்த்தநம் முதலானவைகளுக்கு நியமித்தருளின க்ரமத்தைக்கொண்டு பரக்கத்திருவத்யயநத்தையும் செய்தருளினார்கள். பின்பு இப்படி நயினாராசார்யர் நியமனப்படிக்கு முதலிகளும் ஸம்ப்ரதாய ப்ரவசநம் பண்ணிக்கொண்டிருக்கிற நாளையிலே மணவாளமாமுனியும் வேதாந்ததேசிகரிடத்தில் க்ரமமாக ப்ரதிபத்தி தலையெடுத்துப் பெருமாள் கோயிலேற வெழுந்தருளிக் கிடாம்பி நயினார் திருவடிகளிலே ஆச்ரயித்து ஸாஸ்த்ர ஸம்ப்ரதாய விஷயங்களையும் திருமந்த்ரார்த்தத்தையும் தேசிகஸ்ரீஸூக்திகளைக்கொண்டு ரஸிகரித்துத் தெளிந்து தம் வாக்ஜாலத்திலும் பெரிய பெருமாள் ஸ்ரீரங்க நாச்சியார் நியமனப்படிக்கு தேசிகரு

க்குப் பிற்பட்ட தமக்கு அவலோதிகள் வேண்டுவதில்லை யென்று தம் சிஷ்யர்களுக்கு நியமித்தருளி வேதாந்ததேசிகர் ஸம்ப்ரதாயமே ஸத்ஸம்ப்ரதாய மென்று காட்டியருளினார்.

பின்பு கேஶவாசார்யரிடத்தில் ஸமஸ்தவேதார்த்தத்தைப் பெற்றவ ரான ஒருவர் கடிகாஶதம் அம்மாள் ஸந்நிதியில் ஶாஸ்த்ராப்யாஸம் பண்ணி திருமந்த்ரார்த்தத்தையும் ஸாங்கஸமஸ்தவிஷயங்களையும் அதி கரித்து அகிலஶாஸ்த்ரஜ்ஞராய் ஆசார்யஶக்தி தலையெடுத்திருக்கிறவருக்கு ஸகலவிஶேஷார்த்தங்களையும் கடிகாஶதம் அம்மாள் ப்ரஸாதித் தருள அவரும் வடதேசத்தில் திக்விஜயம் பண்ண அஹோபிலம் அழகிய சிங்கரும் அவருக்குத் திருவாராதநத்தையும் ப்ரஸாதித்து ஸந்யஸித்துக் கொள்ளும்படியும் ஸ்வப்நங் காட்டியருள, அப்படியே ஸந்யஸித்தருளின வண்ஶடகோப ஜீயரும், அந்த அழகிய சிங் கரை யெழுந்தருளப் பண்ணிக்கொண்டு கடிகாஶதம் அம்மாள் திருவடிகளிலே வந்து உடனே ஸேவித்து அச்செய்தியை விண் ணப்பஞ் செய்ய, அம்மாளும் போர உகந்தருளி திவ்யதேஶங்களில் ஜீர்ணோத்தாரணங்களையும் ஸித்தாந்தப்ரவசநத்தையும் பண்ணிக் கொண்டிருக்கும்படி நியமித்தருள, வண்ஶடகோப ஜீயரும் அப் படியே ஆழ்வார் திருநகரி முதலான திவ்யதேசங்களில் ஜீர்ணோத்தாரணங்களையும் ஸம்ப்ரதாயப்ரவர்த்தநத்தையும் செய்து கொண்டு எழுந்தருளியிருந்தார்.

வேதாந்ததேசிகர் ஸம்ப்ரதாயத்தில் ஆஶ்ரயித்திருக்கிற ஜீயர்கள் ஸ்ரீ வைஷ்ணவர்கள் திவ்யதேஶங்கள் தோறும் நிறைந்து குடி கொண்டு ஸமஸ்தபகவதாசார்ய கைங்கர்யங்களையும் ராமாநுஜ ஸித்தாந்த ப்ரவசநபரராய தேஶிகதிவ்ய ஸூக்திப்ரவசநத்தை யுஞ் செய்துகொண்டு இருக்க, திவ்ய தேசங்கள் தோறும் எழுந் தருளி யிருக்கிற திவ்யதம்பதிகளான பெருமாள் பிராட்டியார்களும் உளமகிழ்ந்து தம்முடைய ஸித்தாந்தமான வேதாந்ததேசிகஸம்ப்ர தாயமே எங்கும் தழைக்க வேண்டுமென்று அநுக்ரஹித்தருள, அப் படியேவேதாந்ததேசிக ஸம்ப்ரதாயஸ்தர்கள் திவ்யதம்பதிகள் திருவுள் ளம் உகக்கும்படி வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள். இவ்வர்த்தங் களை யெல்லாம் நம் ஆசார்யரான த்விதீய ப்ரஹ்மதந்த்ர ஸ்வதந்த்ர ஜீயர் செய்தருளின பன்னீராயிரப்படி குருபரம்பராப்ரபாவத்தி லும் திருமலை ஸ்ரீநிவாஸாசார்யர் செய்தருளின ப்ரபந்நதிவாகரத் திலும் பரக்கக் கண்டுகொள்ளுவது.

नान्यं मन्ये गुरुपादात् श्रीमद्वेदान्तदेशिकात् |
[illegible] ||
[illegible] ब्रह्मतन्त्रस्वतन्त्रेण यतीन्द्रेण |
गुरुपरम्पराप्रभावोऽयं संग्रहेण प्रदर्शितः ||
[illegible] |
[illegible] ||

*  *  *  *  *  *

[illegible]
[illegible]
[illegible] |
[illegible]
[illegible]
[illegible] ||
[illegible] |
ब्रह्मतन्त्रस्वतन्त्राय द्वितीयब्रह्मणे नमः ||
श्रीमद्वेदान्तगुरवे नमः |
श्रीमद्ब्रह्मतन्त्रस्वतन्त्रयतीन्द्रमहादेशिकाय नमः ||

(கு. - பு.)—
இந்நூல், ஸ்ரீவைஷ்ணவ மதத்தில் வடகலை ஸம்பிரதாயப்படிக்கு ஸ்ரீமந்நாராயணன் பிராட்டியார் முதற்கொண்டு ஸ்ரீமத் வேதாந்த தேசிகன் நயினார் ஆசார்யர் இவர்கள் வரையிலான எல்லா ஆழ்வார் ஆசார்யர்களுடைய வைபவங்களையும், அவர்கள் வாயிலாக அத்தியாத்ம ஸம்பிரதாயம் குலையாதபடி முறையே ஓராண் வழியாக வந்து நிலவிய முறையினையும் எடுத்து உணர்த்துவது. த்வதீய ப்ரஹ்மதந்திரஸ்வதந்திர ஸ்வாமி இயற்றிய பன்னீராயிரப்படி குருபரம்பரையைப்படி நூலாகக்கொண்டு ஸ்ரீமத் த்ருதீயப்ரஹ்மதந்திர ஸ்வதந்திர ஸ்வாமியால் இயற்றப்பெற்றது. மூவாயிரம் கிரந்த அளவைக்கொண்டது. அச்சிடப் பெற்றுள்ளது. இப் பிரதியில் முதலில் 20 ஏடுகளில்லையாதலின் அதிலடங்கிய பகுதி நீங்கலாக மிகுதியான பகுதி முற்றும் உளது. ஏடுகள் மிகவுஞ் சிதைந்து கிடக்கின்றன. எழுத்துகள் மிகவுந் தெளிவாக வெழுதப்பட்டிருக்கின்றன.

---

## No. 2267. கூர்ம புராணம்.

## KŪRMA PURĀṆAM.

Substance, palm-leaf. Size, $15\frac{1}{2} \times 1\frac{1}{2}$ inches. Pages, 658. Lines, 7 on a page.

Incomplete. Wants 1 to 76 foll. in the beginning.

Same work as that described under No. D 548.

Colophon :—

சாலிவாகனசகாப்தம் ஹளசயிஉ-க்கு மேற்செல்லா நிறைவிக்கிரமஹு புரட்டாசிமீ ய்கஉ ஞாயிற்றுக்கிழமை அசுவநி நக்ஷத்திரம் . . . . சுபதினத்தில் காஞ்சீபுரம் சாலை வீதியிலிருக்கும் ஏகாம்பிர அய்யர் குமாரன் முருகையர், குமாரனாகிய வைத்தியலிங்கம் படிக்கின்ற கூர்ம புராணம் எழுதி நிறைந்தது. வைத்தியலிங்க ஐயர் கையெழுத்து.

(கு. - பு.)—

இந்நூல் டிஸ்கிருப்டிவ் காடலாக்கு 548-ஆவது நம்பர் பிரதியில் வந்துள்ள நூலேயாகும். இப்பிரதியில் பதினாறும் அத்தியாயமாகிய அந்தகாசுரன் சாரூப்யம் பெற்ற வத்தியாயத்தின் (ளாங) 103-ஆவது செய்யுள் முதற்கொண்டு முற்றும் உளது. ஏடுகள் மிகவும் சிதைவுற்றிருக்கின்றன. நடுவிலும் 73-ஆம் அத்தியாயமான தானவிதி யுரைத்த வத்தியாயத்தின் பத்தாம் (10) பாடல் முதல் (79)-ஆவது அத்தியாய முழுமையும் இல்லை. (80) அத்தியாயம் வேறு எண் கொடுத்து எழுதப்பெற்றுள்ளது.

---

## No. 2268. வருணகுலாதித்தன் உலாமடல்.
## VARUṆAKULĀDITTAN ULĀMAḌAL.

Substance, palm-leaf. Size, 15 × 1 inches. Pages, 95. Lines, 5 on a page. Character, Tamil. Condition, injured. Appearance, old.

Complete.

Same work as that described under No. D. 332.

(கு. - பு.)—

இந்நூல் டிஸ்கிருப்டிவ் காட்லாக்கு 332-ஆவது நம்பர் பிரதியிலே வந்துள்ள நூலேயாகும். இப்பிரதியிலே முற்றுமிருக்கிறது. அதற்கும் இதற்கும் மிகப்பாட பேதங் காணப்படுகிறது. ஏடுகள் செல்லரிப்புண்டு சிதைந்துள. எழுத்துகள் தெளிவாக வெழுதப்பட்டிருக்கின்றன.

---

## No. 2269. சிட்டுக்கவிகளும் சிங்காரப்பாடல்களும்.
## ŚIṬṬUKKAVIKAḶUM ŚIṄGĀRAPPĀḌALKAḶUM.

Pages, 20. Lines, 6 and 7 on a page.

Contains nearly twenty stray stanzas of poetic merit.

Begins on fol. 55-a of the Ms. described under No. D 82, Vol. I.

Similar to the work described under No. D 356, Vol. I.

**Beginning :**

மாலை செந்தமிழ் :

மாலைத்தாமரை விழித்திரு மணங்கொளத்துளப
மாலைத்தாமரை வாருதியெழுங்கதிர் மலர்ததுங்
காலைத்தாமரை காட்டிய கருணையங்கண்ணுள்
காலைத்தாமரைக் கணமகலாது நங்கருத்தே. (க)

செந்தமிழ் காட்டினிற் சஞ்சரித திடுகவிச்
சிந்துரக் கூட்டங்கள் சின்னபின்னங்கள்பட
வென்ற கண்டீரவஞ்செய்வாணி சிம்மாசனன்
சுந்தரத் துரைமக்கள் மெய்க்க வவதானஞ்சொல்
சொக்கய்யன் மகிழ் பேரனுஞ் சூரசம்மார வடிவேலர் பதசேகரன
சொக்கன் வரவிட்டவோலை. (உ)

* * * * *

பூமகள் மருவு மார்பனே இமையோர்
போற்றிய சங்கு சக்கரனே பூவையர்,
பதினாறாயிரம் பேரைப்புணர்ந்திடுநிரந்தரம்
முகுந்தா தேமலிதுளப மாலிகாபரணு
திகழ்வடமலை மிசையமர்ந்த தேவனே.

* * * * *

**End :**

அஞ்சு பொருளான புவனேசுவரி,
ஏகாங்கி அகண்ட . . . காமிநி அச்சுதாநந்தி
கௌமாரி வித்தியாதரி யாநந்தி மௌனசக்தி
கஞ்சுளி விநோதி இளநாகாபரணத்தி மிகுகாயத்திரி நிஷ்களி

* * * * *

கொஞ்சுகிளியாய் சுகவாரி பரிபூரணி மோகாம்பரி குமரனைப் பெற்ற . . . .

((கு. - பு.)—

இச்சிறு நூல் டிஸ்கிருப்டிவ் காட்லாக்கு 356-ஆம் நம்பரில் வந்துள்ள நூலேபோன்று வெவ்வேறு விஷயமான பல பாடல்களால் தொகுக்கப் பெற்றுள்ளது. சிதலுற்றிருக்கிறது. இடையிற் சில இசைக்கவிகளும் உள.

---

## No. 2270. முமுக்ஷுப் படி.

## MUMUKSUP PADI.

Substance, palm-leaf. Size, 8½ × 1½ inches. Pages, 46. Lines, 8 on a page. Character, Tamil and Grantha. Condition, much injured. Appearance old.

Complete.

(கு. - பு.)—

இந்நூல் டிஸ்கிருப்டிவ் காட்லாக்கு 951-ஆவது நம்பர் பிரதியில் வந்துள்ளதேயாம். இப்பிரதியில் இந்நூல் முற்றும் உள்ளது. ஏடுகள் மிகவும் சிதலுற்றுக்கிடக்கின்றன. இது முடிந்த பின்னர் ஆராதநக்ரமம் வடமொழியிலானது ஒன்று உளது.

---

## No. 2271. சிவயோக தீபிகை.
## ŚIVAYŌGA DĪPIKAI.

Substance, palm-leaf. Size, 7½ × 2⅝ inches. Pages, 106. Lines, 10 on a page. Character, Tamil and Grantha. Condition, injured. Appearance, old.

Complete.

Same work as that described under No. D 1823.

(கு. - பு.)—

இந்நூல் டிஸ்கிருப்டிவ் காடலாக்கு 1823-ஆவது நம்பரில் வந்துள்ள நூலேயாகும். இப்பிரதியில் இந்நூலின் ஐந்து படலங்களும் இருக்கின்றன. பின்னர் இந்நூலின் சம்பந்தமாகவே "ஸஹஜ: ஶிவராஜயோக:" என்கிற பெயருடன் இரண்டு படலங்கொண்டதொரு சிறு நூல் 18 பக்கங்களில் உளது. ஏடுகள் மிகவும் சிதலுற்றிருக்கின்றன.

---

## No. 2272. வாலை தீட்சை.
## VĀLAI DĪKṢAI.

Pages, 2. Lines, 7 on a page.

Complete.

Begins on Fol. 103-a of the MS. described under No. D. 1490.

Contains the sacred spells and mystic diagram relating to Goddess Vālaidēvi.

**Beginning :**

அகம்ருத்திர சுரூபம் நித்தியதே, சுகபாபவினை
சுவ்தி அகம்முத்தியஷ்த மாத்திரெருருத்திர
சுரூபம்மா சாக்ஷி நீ . . .

* * *

**End :**

மூலமந்திரம் : ஹ்ரீம் அம்ஸா அய்யுங்கிலியும்
சௌவுந் தூல் சூட்சும பிராணுகாரண பரிசோதையா
மீதிஷ்ட்டந்தீ சுவோமி சுவாகா என்று உரு. ாஅ.
யம் ஆம் லம் வம் ஸம் ஷம் தம் அம் ஞம் றீம்

(கு. - பு.)—

இது வாலை தேவியின் மந்திரம் ஆகும். இதில் பீசாக்ஷரம், மூல மந்திரம், பூசைக்குரியதாய் மந்திரங்கள் எழுதிய ஒரு யந்திரம், ஆகிய இவைகளே உள. ஏடுகள் சிதைந்துள. எழுத்துப் பிழையுள.

---

## No. 2273. திருப்புகழ்.

### TIRUPPUKAḶ

**Pages, 4. Lines, 5 on a page.**

Begins on fol. 77-a of the MS. described under No. D 1490, Vol. III

Contains only one stanza

Same work as that described under No. D 1649.

(கு. - பு.)—

இந்நூல் டிஸ்கிருப்டிவ் காட்லாக்கு 1649-ஆவது நம்பரில் வந்துள்ள நூலேயாகும். இதில் "உ ஊ இ ா எ எ அ ஆ உ வாய சிவாய நமா வென்னும்" என்று தொடங்கும் ஒரே பாடல் மாத்திரம் உளது. ஏடுகள் சிதைந்துள. எழுத்துப் பிழையுளது.

---

## No. 2274. கருநிலைப் போதகம்.

### KARUNILAIP PŌDAKAM.

**Pages, 7. Lines, 7 on a page.**

Begins on fol. 48-a of the MS. described under No. D 314.

Complete.

Same work as that described under No. R. 302 (m) of the Triennial Catalogue of Tamil Manuscripts, Vol. II.

(கு. - பு.)—

இந்நூல் மூவருடக்காடலாக்கு 302 (m) நம்பர் பிரதியில் வந்துள்ள நூலேயாகும். இப்பிரதியில் இந்நூலின் பத்துப் பாடல்களுமிருக்கின்றன. ஏடுகள் மிகவும் சிதைந்திருக்கின்றன.

---

## No. 2275. தனிப்பாடல்கள்.

### TANIPPĀḌALKAḶ.

**Pages, 4. Lines, 8 on a page.**

Begins on fol. 29-a of the MS. described under No. D. 314, Vol. I.

Complete.

A collection of stray *Śrī Vaiṣṇava* devotional songs. The particulars of the author are not known.

**Beginning :**

பொன்னி நதிப்புனலாடப்பெறுவேனுகிற்
பொன்மதிளேழுங்கட ந்துட்புகுவேனுகில்
மன்னுமணிப்பொட்டகஞ்சூழ்ந்திடுவேனுகில்
மரகதப்பொன்மேனியிற்கண்வைப்பேனுகிற்
பண்ணரிய திருமணத்தூணருகேசென்றுன்
பங்கயப்பொற்சேவடியைப்பணிவேனுகில்
இன்னமுமிப்பிறப்படியேன்வேண்டுகின்றேன்
ஈசனேயெழில் அரங்கத்தெம்பிரானே. (க)

வரும் பொருனைத்துறையாடப்பெறுவேனுகில்
வடமூலக்கருடனடிபணிவேனுகில்
அரும்புமணிகோபுரத்துட்புகுவேனுகில்
ஆதிநாதன் சரணந்தொழுவேனுகில்
விரும்புதிருப்புளி நீழல் வலமாய்வந்துன்
மெய்ஞ்ஞானமுத்திரைக்கைக்காண்பேனுகிற்
றரும்புவியிலிப்பிறப்பே வேண்டுகின்றேன்
சடகோபயதிராசன் தம்பிரானே. (உ)

**End :**

வெண்பா.

மண்டலத்தில் நானோர் மருத்துவரைப்பின் செல்லேன்
பண்டிதருக்கிச்சை சொல்லிப்பாற்கிலேன்—எண்டிசையும்
வேற்றுமருந்தொன்றறியேன் வேங்கட வா என்பிணிக்கு
மாற்று மருந்துன்றிருநாமம். (உ).

ஒன்பது திருப்பதி விவரம்.

ஸ்ரீவைகுண்டம் குளந்தைக்கள்ளப்பிரான்
வாருணமங்கையில் நம்மிடர் கடிவார்
துய்யபுளினங்குடி காசினி வேந்தர்
திருக்கோளூர் வைத்தமாநிதி பெருங்குளம்
மாயக்கூத்தர் அரவிந்தலோசனர்
துங்கமல மங்கை தேவபிரான் தென்திருப்பேரை,
மகரக்குழைக்காதர் திருநகரி ஆதிநாராயண
சுவாமிநம்மாழ்வார் ஆக (கூ) ஒன்பது திருப்பதி

இது, ஸ்ரீரங்கம் ஆழ்வார் திருநகரி தென்திருப்பேரை என்கின்றவித் திவ்யதிருப்பதிகளிற் கோயிற்கொண்ட எம்பெருமானுதியரைத் " திருவடி தொழுது இறைஞ்சப்பெற்றால் இன்னும் இப்பிறவியையே யான்வேண்டு கிறேன் " என்று ஒருவர் வேண்டும் சிலபாடல்களையும், ஆழ்வார் திருப் பாதங்களே தனக்கு ஆதாரமாகும் என்ற (உ) பாடல்களும் மற்றுஞ்சில திருப்பதிகளை யுணர்த்தும் சிலபாடல்களுமே இருக்கின்றன. ஆசிரியர் இன்னாரென்று தெரியவில்லை. ஏடு நக்குப்பிழையுள்ளது.

## No. 2276. அத்திகிரி மாகாத்மியம்.
### ATTIGIRI MĀHĀTMIYAM.

Pages, 16. Lines, 5 on a page.

Begins on fol. 112-a of the MS. described under No. D. 841, Vol. II.

Same work as that described under No. D. 1034. Text only.

(கு. - பு.)—

இது டிஸ்கிருப்டிவ் காட்லாக்கு 1034-ஆவது நம்பரில் வந்துள்ள நூலே யாகும். இப்பிரதியில் மூல மாத்திரம் உளது. அங்கு வியாகியானத் துடனிருக்கிறது. ஏடுகள் மிகவும் முறிந்தும் சிதலுற்றுங் கிடக்கின்றன.

---

## No. 2277. அந்திமோபாய நிஷ்டை.
### ANTIMŌPĀYA NIṢṬAI.

Pages, 53. Lines, 6 on a page.

Begins on fol. 98-a of the MS. described under No. D. 806, Vol. II.

Same work as that described under No. R. 116 (c) of the Triennial Catalogue of Tamil Manuscripts. Vol. II.

(கு. - பு.)—

இந்நூல் மூவருடக் காடலாக்கு 116 (c) நம்பர் பிரதியில் வந்துள்ள நூலேயாம். இப்பிரதியில் இது கூரத்தாழ்வான் திருப்பேரனாரான "நடு விற்றிருவீதிப்பிள்ளை பட்டர்தம்" நிஷ்டையைக் கூறும் பகுதி வரையில் உளது. ஏடுகள் மிகவும் முறிந்துஞ் சிதலுற்றுங் கிடக்கின்றன.

---

## No. 2278. திருக்குறள் பரிமேலழகர் உரையுடன்.
### TIRUKKUṞAḶ WITH THE COMMENTARY OF PARIMĒLALAKAR.

Substance, palm-leaf. Size, 15 × 1-6/16 inches. Pages, 412. Lines, 8 on a page. Character, Tamil. Condition, injured. Appearance, old.

Incomplete.

Same work as that described under No. D. 151.

(கு. - பு.)—

இந்நூல் டிஸ்கிருப்டிவ் காடலாக்கு 151-ஆவது நம்பரில் வந்துள்ளதே யாகும். இப்பிரதியில் ஆதி தொடங்கிப் 'புணர்ச்சி மகிழ்தல்' அதிகாரம் வரையில் உரையுடன் உள்ளது. சில ஏடுகள் முன்பின்னாகச் சேர்க்கப் பட்டுள்ளன. முதல் ஏடு பாதி முறிந்து கிடக்கிறது. 38 to 52 ஏடுகளில்லை. மற்றைய ஏடுகளும் நுனியில் முறிந்துள.

## No. 2279. திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராணம் வசனம்.

## TIRUVĀLAVĀYUḌAIYĀR TIRUVIḶAIYĀḌAṞ PURĀṆAM (in) PROSE.

Substance, palm-leaf. Size, 11¾ × 1-6/16 inches. Pages, 726. Lines, 9 on a page. Character, Tamil. Condition, much injured. Appearance, old.

Complete.

A prose rendering of the work noticed under No. 605 of the Descriptive Catalogue of Tamil MSS. in this Library. The prose style is good. The name of the author is not known.

**Beginning :**

திருவாலவாயர் தம்பிரானுர் திருவிளையாடற் புராணம்.
கடவுள் வணக்கம் :—

மல்குக வேத வேள்வி வழங்குக சுரந்து வானம்
பல்குக வளங்க ளெல்லா . . . வறங்க ளின்ப
நல்குக வுயிர்கட் கெல்லாம் நான்மறைச் சைவ மோங்க
. . . . மெல்லாம் புரவலன் செங்கோல் வாழ்க. (க)

* * * *

வென்றுளே புலன் களைந்தார் மெய்யுண ருள்ளந் தோன்றும்
சென்றுளே யமுத முற்றுத் திருவருள் போற்றி யேற்றுக்
குன்றுளே யிருந்து காட்சிக் கொடுத்தருள் கோலம் போற்றி
மன்றுளே மாறியாடும் மறைச் சிலம்படிகள் போற்றி. (௩)

* * * *

திருவாலவாயர்த் தம்பிரானுர் திருவிளையாடற் புராணத்தின்
வசனம் : கடவுள் வணக்கம் :—

இந்தப் புராணம் வழங்குங் காலத்தில் வேதத்தினுலே செய்யப்பட்ட யாகாதிகள் எல்லாம் வழங்கும். வான் மாரியும்பொழியும். சகலமான பயிர் முதலாகிய வஸ்த்துக்களும் பல்கியிருக்கும். சகல சனத்துக்கும் . . ளைக் கொடுக்கும். நாலு வேதத்திலேயுஞ் சொல்லப்படாநின்ற சைவ சமயம் விளங்கியிருக்கும் . . . . னுடை செங்கோல் நீதியாய் நடக்கும். சந்திர சடாதாரியாய் மதுரையிலே யிருக்கப்பட்ட சொக்கலிங்கத்தினுடைய திருவிளையாடலை யாராமொருவர் பக்தியுடனே கேட்கப்பட . . . சங்கநிதி பத்மநிதி போல் செல்வமோங்கி நல்ல கீர்த்தியைக் கொடுக்கப்பட்ட குமாரர்களை உண்டா . . . சத்திராதிகளை யெல்லாம் சயம்பண்ணி நல்ல மணத்தைப் பெற்று எந்நாளும் வியாதியில்லாமல் . . ஆயுசு வரைக்கும் சுகத்தையடைந்து மேல் சொக்கலோகம் சேர்ந்து தேவரூபமாய் அவ்விடத்தில் உள்ள போகமெல்லாம் அனுபவித்து மேல் புண்ணிய ரூபமாய சிவனுடைய பாதச்சாயலிலே சேர்ந்து வாழ்வார்கள். * * *
* * * * *

இதுவுமல்லாமல் மேகமாகப்பட்டது சமுத்திரத்தினுடைய சலத்தைப் புசித்து அதனுடைய உவரைப் போக்கித் துல்லியமாககி உலகங்கள் எல்லாம் புசிக்கும்படியாய் எப்படிச் செய்கிறதோ ? அப்படியே சொல்லும் பொருளும் தெளிந்து ஆய்ந்த கேள்வியுடைத்தாகிய பெரியோர் என் புன் சொல்லி னுடைய குற்றத்தை நீக்கித் திருவாலவாயானுக்கு இனிதாகச் செய்வார்கள். இந்தச் சொக்கலிங்கத்தினுடைய சரித்திரத்தை வேதங்கூடத் துதித்திளைக் கும். அதை என் சொல்லினாலே அளவிடற்கரிதா[யா]னாலும் சொல்ல வேணுமென்கிற ஆசை என் சொல்வழியிலே நில்லாமல் நடக்கிறது. அவையடக்கம் முற்றும்.

திருநாட்டுச் சிறப்பு.

இப்பால் திருநாட்டுச் சிறப்பு :—நீலகண்டனாயிருக்கப்பட்ட அசுந்தரேசு வரன் பாண்டிய ராசாவாய் உறைவாங்கப்பட்ட வாளினாலே க்ஷத்திரியர்களை யெல்லாம் சயம்பண்ணி வேத வழியினாலே செங்கோல் செலுத்தி இராசசிய பாரம் பண்ணின பாண்டிய நாட்டினுடைய சிறப்பைச் சொல்லுவோம். மேகங்களானவை தேவதைகளுக்கெல்லாம் நாயகனாகிய சொக்கலிங்கத்தி னுடைய விபூதி சர்வாங்கமும் தரித்த மேனியைப் போலே வெண்மையாய்ப் புறபட்டுச் சமுத்திர சலததை [மேய்ந்து] (குடித்து)ப் பார்வதியினுடைய நிறத்தைப்போல் பசுமையுள்ளவையாய்ப் பல்லுயிர்களுக்கும் பசியாற்றுவான் பார்வதி இருபையுண்டாகிறதுபோலே நீர் சுரந்து எழுந்து வாய்திறந்து இடித் துப் பகலொளி மழுங்கக் கறுத்து வாளைப் போலே மின்னி இந்திர சாபமாகிய வில்லைப் பிடித்து நீர்த்தாரையாகிய அம்பை எய்து கோடையாகிய எதிராளி யின்பேரிலே யுத்தம்பண்ண வருதல்போல் ஆகாசம் எல்லாம் மொய்த்துக் கொண்டு அகத்திய பருவதத்தின் உச்சியின்பேரிலே * * *
* * * * * *

**End :**

நிறைந்து நமக்கு ஆநந்தமாயிற்று என்று அருள்சுரந்து அகத்தியரைச் சமீபத்திலே யழைத்துச் சிரசின்மீது கையை வைத்து முதுகு தடவி எம்மை ஒப்பானவனே ! உன்னுடைய பெண்சாதியானவள் மகா பதிவிரதை. பார் வதியை யொப்பானவள். ஆதிலினாலே உன்னை யொத்தவர் இந்த உலகத் திலே யார் ? நிறைந்த தவம் புரிந்தவனும் தவத்திலே உறுதி பெற்றவனும் நீயே அல்லவா ? உனக்கு அரிதான வரம் நாம் கொடுக்கவேண்டுவது ஒன்றுமில்லை யென்று சொல்லிக் கருணை செய்து மகாலிங்கத்திலே சென்று இருந்தார். தனக்கரிதாகிய வரம் நல்கும் சிவலிங்கமொனறு தன் பெயரினாலே ஸ்தாபிதம் பண்ணினார். வசிஷ்டர் முதலான இருஷி களும் தங்கள் பெயராலே இலிங்கங்கள் பிரதிட்டை செய்தார்கள் ! அந்த லிங்கங்களுக்கும் அருச்சனை செய்து தோத்திரம்பண்ணி அஷ்டமூர்த்தியாய் எழுந்தருளியிருக்கிற சொக்கலிங்கத்தைத் திரிகாலமும் வந்து தரிசனம் செய்துகொண்டு இன்பமான மனத்தராகித்தே [னுகளை] (னை)ச் சுற்றின வண்டுபோல் அந்த மகாஸ்த்தலத்தில் வசிஷ்டர் முதலான இருஷிகள் தபசுகளைச் செய்து கொண்டிருந்தார்கள். திருச்சிற்றம்பலம்.

அருச்சனைப் படலம் முடிந்தது.

குரோதிஞு ஐப்பசிமீ ௵ பொழிச்சலூர் முத்தையா எழுதின அறுபத்து நாலு திருவிளையாடல் எழுதி நிறைவேறியது.

(கு. - பு.)—

இது டிஸ்கிருப்டிவ் காடலாக்கு 605-ஆம் நம்பரில் வந்துள்ள நூலுக்கு உரை நடையில் அமைந்த தொன்றாகும். இப்பிரதியில் முற்றும் உள்ளது. வசன நடையும் சிறப்பாகவுளது. அங்கங்கே பிழைகளிருக்கின்றன. ஏடு கள் மிகவும் சிதலுற்றும் முறிந்தும் கிடக்கின்றன. இதை இயற்றியவர் இன்னாரென்று தெரியவில்லை.

---

## No. 2280. திருச்சிற்றம்பலக்கோவையார் உரையுடன்.

## TIRUCCIṞṞAMBALAKKŌVAIYĀR WITH COMMENTARY.

Substance, palm-leaf. Size, 15 × 1-2/8 inches. Pages, 444. Lines, 9 on a page. Character, Tamil. Condition, much injured. Appearance, old.

Incomplete. Contains 1 to 361 stanzas only. Wants beginning and end .

Same work as that described under No. D. 1169.

(கு. - பு.)—

இந்நூல் டிஸ்கிருப்டிவ் காடலாக்கு 1169 - ஆம் நம்பரில் வந்துள்ள நூலேயாகும். இப்பிரதியில் ஆதி தொடங்கி முந்நூற்றறுபத்தோராவது (361) பாடல் வரையில் உள்ளது. ஏடுகள் மிகவும் சிதலுற்றிருக்கின்றன.

---

## No. 2281. தனிப்பாடல்கள்.

## TANIPPĀḌALKAḶ.

Pages, 3. Lines, 4 on a page.

Begins on fol. 29-a of the MS. described under No. D. 260, Vol. I.

Contains 6 stanzas only.

A collection of stray stanzas.

Similar to the work described under No. D. 356.

**Beginning :**

கோசிகர் பிருகு வதிஷ்டர் வான்மீகி
குறு முனி வியாசர் பராசர்
காசிபர் முதலாய்ச்சரகு நீர்வாய்வு
கந்த மூலாதிகள் பொசித்துந்
தேசுள மடவார் போகம் விட்டகலார்
சின்ன லோகமுஞ் சிதையார்
மாசறு நெய்பால் அருந்திடு மனர் கோ

ஒருகோட்டுக் கலைமுனியு மொளி திகழும் புலியாடை யுடுத்த கோவும்
மருமலரிற றிசைமுகனும் வானவர்க்கு மிறையவனு மயிடன் தானுங்
கரியநிறத் திருமாலும் வாலியும் பராசருமே காமனம்பால
பெருமை யிழந்தன ரென்றுற் சிறுமனிதர்க்கெப்படியோ பேசுங்காலே
(உ)

**End :**

சித்திரமுங் கைப்பழக்கஞ் செந்தமிழு நாபபழக்கம்
மற்ற தெல்லாங் கல்வி மனப்பழக்கம்—நித்தம்
நடையும் நடைப்பழக்கம் நண்புந் தயவுங
குடையும் பிறவிக் குணம். (ரு)

ஆடை சுற்றி யழகாய்த் திரியினும்
வாடை யேறி வளர்மனை புககினும்
ஓடை யேந்தி யுழநது திரியினும்
பாடை யேறினு மேடதுகை விடேல். (சு)

(கு. - பு.)—

இது டிஸ்கிருப்டிவ் காடலாக்கு 356 ஆவது நம்பர் பிரதியில் வந்துளள நூலைப் போன்றதாய்ச் சில உலக நீதி விஷயமான ஆறு பாடல்களைக் கொண்டுள்ளது. எழுத்துப் பிழையுடன் உளது.

---

## No. 2282. அனுஷ்டான விதி.
## ANUṢṬĀNA VIDHI.

Pages, 17. Lines, 5 on a page.

Begins on fol. 51-a of the MS. described under No. D. 1827 of the Descriptive Catalogue of Tamil MSS. Vol. IV.

Complete.

Similar to the work described under No. D. 1339.

**Beginning :**

கணபதயே நம: என்று குட்டிக்க. குரவே நம: என்று கைகூப்பி மூலத்தினுல் நிரீக்ஷணம். இருதயததினுல் பிரோக்ஷணம். அஸ்திரத்தினுல் தாடனம். கவசத்தினுல் . . . . . . . . அஸ்த்திரத்தினுல் தாளத்ரயம். அஸ்திரத்தினுல் திக்பந்தனம். கவசத்தினுல் அவகுண்டனம். மூலத்தினுல் தேனு முத்திரை. மகா முத்திரை கொடுக்கிறது. இது சல சுத்தி: அஸ்த்திரத்தினுல் சிரசில் பிரோக்ஷணத்ரயம். அஸ்திரம் தர்ப்பணத்ரயம். அஸ்திரசத்தசபம். அஸ்திரம் ஒரு தர்ப்பணம் ஆசமனம்: ஆத்துமதத்வாயநம: வித்தியாதத்வாயநம: சிவதத்வாயநம: என்று ஆசமனஞ்செய்து கீழ்மேல் உதடுகளை அஸ்திரத்தினுல் துடைத்து இருதயத்தால் தொடுமிடம் பனிரண்டும் தொட்டு கரந்நியாஸம் அங்கந்நியாஸம் செய்கிற வயணம்: வலது கையாலே இடது கை மேலே மூன்று தரம் * * * * * இரண்டு தரமும் அஸ்திரத்தினுல் துடைத்து இடது கையாலே வலதுகை மேலுங் கீழும் ஒருதரம அஸ்திரத்தால் துடைத்து இரண்டு கையுங் கூட்டி உள்ளங்கையிறையில்
* * * * * *

**End :**

நியாஸம் செய்து மூலத்தால் (௱௨அ) உரு செய்து இல்லாவிட்டால் குரு சொற்படி செய்து பின்பு நியாஸம்பண்ணி யெழுந்திருந்து பிரதக்ஷிணம் செய்து சூரிய ஸ்தோத்ரம் செய்யும்படி :—

ஆதியே யுனைத் தொழுவேன
ஆதிமூலமே யுனைத் தொழுவேன்
சோதியே யுனைத் தொழுவேன
சூரியா வுனைத தொழுவென்
ஒத்தைத் தேரேறி யுலகமெல்லாம்
வலம் . . ருவருவிர சித்ததடுதே நிற்கும்

சிவ சூரியாயநம : என்று மூன்று பிரதக்ஷிணம் செய்து நமஸ்காரஞ் செய்து ஆசமனஞ் செய்து செபம் செய்தவிடத்திலே அஸ்த்திரத்தினாலே ப்ரோக்ஷித்து இருதயத்தால் மாரில் அடக்கிக்கொள்ளவும்.

(கு. - பு.)—

இச்சிறு நூல் டிஸ்கிருப்டிவ் காடலாக்கு 1339-ஆவது நம்பர் பிரதியில் வந்துள்ள நூலே போன்று சூரியனை வழிபடுதற்குரிய பூசையை யநுஷ்டிக்கும் முறையை விளக்குகின்றது. இது மிகவும் எழுத்துப் பிழையுடன உளது. ஏடுகள் மிகவும் சிதலுற்றிருக்கின்றன. இதற்குப் பின்னர் சோதிட விஷயமாய்த் தக்தயோகம், சித்தயோகம், மரணயோகம், அமிருத யோகம் ஆகிய இவைகளை விளக்கியுணர்த்துஞ் செய்யுட்கள் (அ) எட்டு. (21 to 28) என்ற எண்களிட்டிருக்கின்றன. ஆகவே இச்செய்யுட்கள் ஒரு பெரு நூலின் ஒரு பகுதியெனக் காணக்கிடக்கின்றன.

---

## No. 2283. நீதி வெண்பா உரையுடன்.
## NĪTIVEṆPĀ WITH COMMENTARY.

Pages, 33. Lines, 6 on a page.

Begins on fol. 1-a of the MS. described under No. D. 17, Vol. I.
Contains 54 stanzas only.
Same work as that described under No. D. 185.

(கு. - பு.)—

இந்நூல் டிஸ்கிருப்டிவ் காடலாக்கு 185-வது நம்பர் பிரதியிலே வந்துள்ள நூலேயாகும். இப்பிரதியில் (ருச) ஐம்பத்து நான்கு செய்யுட்களே உரையுடன் உள. ஏடுகள் ஒரு சிறிது முறிந்திருக்கின்றன. எழுத்துப் பிழைகளிருக்கின்றன.

---

## No. 2284. ஐந்தாம் அரிச்சுவடி.
## AINDĀM ARICCUVAḌI.

Substance, plam-leaf. Size, 17½ × 1 inches. Pages, 250. Lines, 5 on a page. Character, Tamil. Condition, injured. Appearance, old.

Complete.

A kind of "Fifth Reader" for the beginners of Tamil study. Perhaps the author of this book has himself written the "four" readers previous to this. This shows how the problem of providing "Readers" for youngsters engaged the attention of the old type of Pandits, who themselves learned Tamil in the traditional method.

**Beginning :**

ஐந்தாம் அரிச்சுவடி :—

முதலாவது . . . . . . மொழிப் படலம் . . . பெயர்கள், வினைகள், ஒத்தவசனங்கள், வாக்கியங்கள், நயங்கள், குழகங்களும்:, முதலாவது பெயர்ப் பரிச்சேதம். கூட்டுப்பாடம். நாலசை ஒரு மொழிப் பெயர்கள் :—

அ - கிர்த் - தி - யம், அக் - கி - யா - னம், அக - கி - ர - மம்
அக் - கி - ர - மி, அக் - கு - ரோ - ணி, அங் - கா - ர - கன்
அ - சங் - கி - யம், அ - சத் - தி - யம், அ - ச - ரீ - ரி,
அ - சாத் - தி - யம், அ - சாத் - தி - யன், அ - சே - த - னன்
அ - சே - த - னன், அ - டங் - கா - மை, அ - டு - க் - க - ளை.
அ - டை - மா - னம், அ - டை - யா - ளம், அட் - ட - வ - ணை,
அ - தி - கா - ரம், அ - தி - ச - யம், அ - தி - சா - ரம்,
அத் - து - வா - னம், அ - நித் - தி - யம், அ - நி - யா - யம்
அந் - த - கா - ரம், . . . . . . . . . . . . . .
அ - ப - ரஞ் - சி, அ - பத் - தி - யம், அ - ப- ரா - தம்,
அ - பாக் - கி - யம், அ - பாத் - தி - ரம், அ - பி மா - னம்
அ - பி - ஷே - கம், அப் - பி - யா - சம், . . . . .

**End :**

நித்தியமா சூதைக் கற்றுக்கொள்ளுவார்
சதந்தியமாய் வேதைப் பெற்றுக்கொள்ளுவார்.
மிஞ்சியே விரகத்தில் விழுந்திடுவார்
அஞ்சியே நரகத்தில் அழுந்திடுவார்.
வஞ்சத்தை நம்பிக் கற்றிடுவார்கள்
நெஞ்சத்தில் வெம்பி அற்றிடுவார்கள்.
பூதத்தை விடுத்தான் மந்திரவாதி
காதத்தில் தடுத்தான் தந்திரவாதி.

* * * *

ஆபத்தால் வீணில் தலையிட்டுக் கொள்ளாதே
கோபத்தால் தூணில் தலைமுட்டிக் கொள்ளாதே.
கல்லாரைப் புகழ்ந்து அடுக்கப் போகாது.
வல்லாரை இகழ்ந்து விடுக்கப் போகாது || ௩௰ ||
உள்ளத்திலே யிட்டுண்கிறவன் கொடையன்

மிகுந்தகல்வி கற்றுக் கொள்ளுவான்
தகுந்த செல்வம் பெற்றுக்கொள்ளுவானா.
உங்கள் உத்தநம்பி பேச்சு
எங்கும் மெத்தவும நம்பலாச்சு. || ௬௨ ||

ஆறுவது பன்மு காண்டம் முற்றும்.
இனி வருவது ஏழாவது சேர்படு காண்டம்.

(கு. - பு.)—

இந்நூல் ஆரம்பக் கல்விக்கு இன்றியமையாது வேண்டியதாய்ப் பாலர்களுக்குரிய 'அரிச்சுவடி' என்கிற நூலாகும். இது ஐந்தாவது என்று குறியுடன் காணப்படுகின்றதாதலின் இதற்கு முன்னுள்ள (1—4) அரிச்சுவடிகள் இந்நூலாசிரியர் தம்மாலேயே தொகுத்து வைத்திருக்கப் பெற்றிருக்க வேண்டுமென்று உணரக் கிடக்கிறது. இதில் பெயர், வினை, ஒத்தவசனம், வாக்கியம், நயம், குழகம என்ற பெரும்பாகுபாடுகளுடன் பலவகைச் சொற்களும் தொகுக்கப் பெற்றிருக்கின்றன. இது, பண்டைய காலத்துப் புலவர்கள் ஆசிரியர்கள் எல்லாரும் பாலர்களுக்கு ஆரம்பக் கல்வியிலேயே வெகு விமர்சையாகவும் ஊக்கமூட்டத்தக்கதாயும் கல்வி புகட்டிவந்தார்கள் என்பதற்கு ஓர் எடுத்துக்காட்டாயிருக்கும். எழுத்துப் பிழையுடன் உளது. வைணவரில் ஒருவர் இதனைத் தொகுத்திருப்பாரென்று ஊகித்தற்கிடனுண்டு. சிதைந்துளது.

---

## No. 2285. சரநூல் உரையுடன்.
## ŚARANŪL WITH COMMENTARY.

Substance, plam-leaf. Size, 11¼ × 1-2/8 inches. Pages, 99. Lines, 5 on a page. Character, Tamil. Condition, injured. Appearance, old.

Complete.

Same work as that described under No. 512 of the Triennial Catalogue of Tamil Manuscripts, Vol. IV.

(கு. - பு.)—

இந்நூல் மூவருடக் காடலாக்கு 512-வது நம்பர் பிரதியில் வந்துள்ள நூலேயாம். இப்பிரதியில் முற்றும் உரையுடனிருக்கிறது. எழுத்துக்கள் தெளிவாக வெழுதப்பட்டிருக்கின்றன. முதலில் சில ஏடுகள் மிக முறிந்துள. மிகுதியான ஏடுகள் ஒரு சிறிது சிதலுற்றுள. எழுத்துப் பிழையுடன் காணப்படுகிறது. பத்தாவது ஏடு இல்லை.

---

## No. 2286. சூடாமணி நிகண்டு.
## CŪḌĀMAṆI NIKHAṆṬU.

Substance, plam-leaf. Size, 12 3/16 × 1 inches. Pages, 188. Lines, 6 on a page. Character, Tamil. Condition, injured. Appearance, old.

Incomplete.

Same work as that described under No. 13 of the Descriptive Catalogue

(கு. - பு.)—

இந்நூல் டிஸ்கிருப்டிவ் காடலாக்கு 13-ஆவது நம்பர் பிரதியில் வந துள்ள நூலேயாம். இப்பிரதியில் ஆதி தொடங்கி 8-ம தொகுதியாகிய பண்பு பற்றிய பெயர்த் தொகுதியில் பனனிரண்டாஞ் சூத்திரத்தின தொடக்கம் வரையிலும் மூல மாத்திரமிருககிறது. ஏடுகள் ஒரு சிறிது சிதலுற்றிருக்கின்றன.

---

## No. 2287. பட்டினத்துப்பிள்ளையார் பாடற்றிரட்டு.
## PAṬṬINATTUPPIḶḶAIYĀR PĀḌAṞṞIRAṬṬU.

Substance, plam-leaf. Size, 8-6/16 × 1 inches. Pages, 64. Lines, 5 on a page. Character, Tamil. Condition, injured. Appearance, old.

Incomplete.

Same work as that described under No. 1859.

(கு. - பு.)—

டிஸ்கிருப்டிவ் காடலாக்கு 1859-ஆவது நம்பர் பிரதியில வந்துளள நூலேயாகும்; இப்பிரதியில் நூற்றுப் பதினைந்து (115) பாடல்கள் மாத் திரம் தொகுக்கப்பெற்றுள்ளன. அச்சுப் பிரதியிற்கண்ட முறைபோலில்லா மலிருக்கின்றன. சில பாடல்களில் அங்கங்கே பாட பேதங்கள் காணப் படுகின்றன. அச்சுப் பிரதியில் இல்லாத இரண்டொரு பாடல்கள் இதி லிருக்கின்றன. ஏடுகள் ஒரு சிறிது சிதைந்துள. எழுத்துப் பிழை உள இது, "பட்டினத்துப்பிள்ளையார் ஞானக் கலித்துறை" என்ற தலைக் குறியுடன் காணப்படுகிறது.

---

## No. 2289. உதயண குமார காவியம்.
## UDAYAṆA KUMĀRA KĀVIYAM.

Substance, palm-leaf. Size, 17¼ × 1-2/8 inches. Pages, 96. Lines, 5 on a page. Character, Tamil. Condition, good. Appearance,

Complete.

Same work as that described under No. D. 98.

(கு. - பு.)—

இந்நூல் டிஸ்கிருப்டிவ் காடலாக்கு 98-ஆவது நம்பர் பிரதியில் வந்துள்ள நூலேயாகும். இப்பிரதியில் இந்நூல் முற்றும் உள்ளது. இறுதியில் இந்நூலின் சிறு பிரிவுகளாகிய ஒவ்வொரு காண்டங்களுக்கும் உள்ள மொத்த செய்யுட்களுடைய எண்களை யுணர்த்தும் இரண்டு பாடல்கள்

## No. 2289. குருபரம்பராப்ரபாவம் ஆறுயிரப்படி.
## GURUPARAMPARĀPRABHĀVAM ĀṞĀYIRAPPAḌI.

Substance, palm-leaf. Size, 17 × $1\frac{1}{2}$ inches. Pages 488. Lines, 6 on a page. Character, Tamil and Grantha. Condition, injured. Appearance, old.

Incomplete.

Same work as that described under No. 45-a of the Triennial Catalogue of Tamil Manuscripts, Vol. I.

**Colophon :**

𑌜𑍍𑌞𑌾𑌨𑌵𑍈𑌰𑌾𑌗𑍍𑌯𑌸𑌂𑌪𑍂𑌰𑍍𑌣𑌂 𑌸𑌰𑍍𑌵𑌜𑍍𑌞𑌂 𑌦𑍇𑌵𑌰𑌾𑌜𑌦𑍇𑌶𑌿𑌕𑌮𑍍 |
𑌦𑍍𑌰𑌮𑌿𑌡𑍋𑌪𑌨𑌿𑌷𑌤𑍍𑌸𑌾𑌰𑌜𑍍𑌞𑌂 𑌯𑍋𑌗𑌿𑌨𑌂 𑌪𑍍𑌰𑌣𑌮𑌾𑌮𑍍𑌯𑌹𑌮𑍍 ||

(கு. - பு.)—

இந்நூல் மூவருடக் காடலாக்கு 45-A-ஆவது நம்பர் பிரதியில் வந்துள்ள நூலேயாகும். இப்பிரதியில் இளையாழ்வார் (இராமாநுசர்) திருநாடேற வெழுந்தருளும் கட்டம் வரைக்கும் உள்ளது. ஏடுகள் மிகவும் சிதலுற்றுக்கிடக்கின்றன. மேறகாட்டிய ஸலோகம் இந்நூலாசிரியரின் தனியனாம். இத தனியன் அசசிட்டப புத தகங்களில் காணபட பெறவில்லை.

---

## No. 2290. உள்ள முடையான்.
## UḺḶAMUDAIYĀN.

Substance, palm-leaf. Size, 16 × $1\frac{1}{4}$ inches. Pages, 28. Lines, 8 on a page. Character, Tamil. Condition, much injured. Appearance, old.

Incomplete.

Same work as that described under No.D. 1992. of the Descriptive Catalogue of Tamil Manuscripts, Vol. V.

(கு. - பு.)—

இந்நூல் டிஸ்கிருப்டிவ் காடலாக்கு 1992-ஆவது நம்பர் பிரதியில் வந்துள்ள நூலேயாகும். இப்பிரதியில் இந்நூல் மாதுருபாவம் முதற்கொண்டு உரோகபாவம் வரையிலும் உள்ளது. முடிந்த பின்னர், "பாபக்கிரங்கள் அறியவும்" என்றதான தலைப்பெயருடன் ஆறு ஏடுகளில் சில சோதிட விஷயங்கள் எழுதப்பட்டிருக்கின்றன. - ஏடுகள் மிகவும் சிதலுற்று முறிந்து கிடக்கின்றன.

---

## No. 2291. 𑌸𑌾𑌰𑌸𑌂𑌗𑍍𑌰𑌹𑌗𑌾𑌥𑌾𑌵𑍍𑌯𑌾𑌖𑍍𑌯𑌾𑌨𑌮𑍍.
## SĀRASAṄGRAHAGĀDHĀVYĀKHYĀNAM.

Substance, palm-leaf. Size 17·10/16 × $1\frac{1}{4}$ inches. Pages, 7. Lines, 7. on a page. Character. Tamil and Grantha. Condition, much injured. Appearance, old.

Begins on fol. 1. The other works herein are Virōdhaparihāragādhāvyākhyānam 4-b. Munivāhanabhōgagādhāvyākhyānam 16 (*b*).

A commentary, in the *Maṇipravāḷa* style, on *Sārasaṅgraha*, one of the 32 *Rahasyas* of Śrī Nigamānta Mahādēśika, the well known *Visiṣṭādvaitin* leader, and the verses found in it.

By "*Ś*rīmad Rāghavāryar."

**Beginning :**

ஸ்ரீமாந் வேங்கடநாதார்ய: கவிதார்க்கிககேஸரீ |
வேதாந்தாசார்யவர்யோ மே ஸந்நிதத்தாம் ஸதா ஹ்ருதி ||
அநாதிவ்யத்நேவஸ்ருதிஷு கவிதார்க்கிகஷட்பதிஷு . . .
. . . . ப்ரபந்நப்ராஸங்க ப்ரதிதக்ருதஸங்க்ஷேப ப்ரதிபா ||
. . . . இந்த ஸ்லோகங்களை இங்கே யநுஸந்திப்பது.

ஸ்ரீமத்வேதாந்தாசார்யர் ஸாரஸங்க்ரஹ மென்கிற ரஹஸ்யத்தைச் செய்தருளக் கடவராய் "அஸ்மத்தேஸிகமஸ்மதீய பரமாசார்யா நஶேஷாந் குரூந் ஸ்ரீமல்லக்ஷ்மணயோகிபுங்கவ மஹாபூர்ணௌ முநீம் யாமுநம் | ராமம் பத்மவிலோசநம் முநிவரம் நாதம் ஶடத்வேஷிணம் ஸேநேஶம் ஶ்ரியமிந்திராஸஹசரம் நாராயணம் ஸம்ஶ்ரயே" || என்கிற ஸ்லோகத்தாலே ஸ்வாசார்யபர்யந்தம் ஸகலத்ருஷ்டிகம் ப்ரதிதமாயிருக்கிற அந்த ஆசார்ய ஸந்ததி ஸ்மரணத்தைச் செய்தருளி "பூதம் ஸரஶ்ச மஹதாஹ்வய பட்டநாத ஸ்ரீபக்திஸார குலஶேகர யோகிவாஹாந் | பக்தாங்க்ரிரேணு பரகால . . . . . யதீந்த்ர மிஶ்ராந் ஶ்ரீமத் பராங்குஶமுநிம் ப்ரணதோஸ்மி நித்யம்" || என்கிற ஸ்லோகத்தாலே பூதத்தார் முதலாகத் திருப்பாணாழ்வார் பர்யந்தமாக ப்ரதிதரான ஆழ்வார்களையும் அநந்தரபாவியாக அவிஶேஷ . . . . . . . ரான யோகிவாஹநர் பூங்கோதை யதிராஜரையுங் குறித்துப் ஸ்மரணத்தைச் செய்தருளி. "யதீஶ்வர ஸரஸ்வதீ ஸுரபிதாஶயாநாம் ஸதாம் | வசஸ்ஸு கவிபஶ்ச ஸுக்தாநாம் ஸ்மருதிகாந் பாதே ஸுபக:" ||

* * * * * * *

ஜ்ஞாநஸங்கோசம் தீர்ந்து அநாதியாக ஜ்ஞாநஸங்கோசமில்லாத அயர்வறுமமரர்களுடைய ஆநந்த ஸாகரத்திலே மூழ்குகை ஆத்மாவுக்கு ஸுகம் ப்ராப்யமென்னுமளவான ப்ரபந்தத்தாலே ஜ்ஞாநாதி நிக்ஷேபத்தைப் பண்ணி இனிமேலொரு பாட்டாலே ஸகலஸார ஸங்க்ரஹமாயிருக்கிற அம்ஶவிஶேஷ ஸூக்ஷ்மமான ஜ்ஞாதாஜ்ஞாத ஸங்க்ரஹணம் பண்ணுகிற ப்ரகாரத்தை ஸங்க்ரஹேண அருளிச் செய்கிறார்.

நின்னருளாங்கதியன்றி மற்றொன்றில்லேன்
நெடுங்காலம் பிழை செய்த நிலைகழிந்தேன்
உன்னருளுக்கினி தான நிலையுகந்தேன்

மன்னிருளாய் நின்றநிலை யெமக்குத்தீர்த்து
வானவர்தம் வாழ்க்கைதர வரிதத்தேனுன்னை
இன்னருளா லினியெமக்கோர் பரமேற்று
மென்றிருமாலடைக்கலங் கொள்ளென்னை நீயே.

என் திருமால் என்னுடைய திருமாலே: எனக்கு ஸ்வாமியாய் ஸ்ரீ விஷயத்தில் ப்ராப்திமானே! நின் அருளாங்கதியன்றி மற்றொன்றில்லேன் உன்னுடைய க்ருபையாகவாகா நிற்கிற கதியன்றிக்கே வேறு ஒரு கதியில்லாதவன். அருள்-க்ருபை-கதி-கதி: ஸ . . கதிஶப்த: காரணவ்ருத்த்யா உபாயவாசீ | இங்கு நான் என்று ஒரு பதமத்யாஹார்யம் | இந்த அத்யாஹார்ய பதத்துக்குக் கழிந்தேன், உகந்தேன், பூண்டேன், வரித்தேன், என்கிற க்ரியா பதங்களோடு அந்வயம். "ரக்ஷத்ஸ்வ: ந்யாஸயாமாஸ்யாமி," "நின் திருவருளும் பங்கயத்தாள் திருவருளுங்கொண்டு," "நின்னருளே பொருந்தினேன்," "ந்யாஸ கேவலம் ஶாஸ்த்ரவாக்யாத்," "கேவலம் த்வதீயயைவ தயயாதிப்ரபந்தம்," இத்யாதிகள் படியே த்வதீய ந்யாஸாதிரிக்த ப்ரயோஜனாபாவாத் ஸாத்யனை அடியேன் என்றபடி. நெடுங்காலம் பிழைசெய்த நிலை கழிந்தேன்-நெடுங்காலம் தீர்க்ககாலம். அநாதியாக என்றபடி. பிழைசெய்த-அபராதத்தைப் பண்ணுநிற்கிற, பிழை-தப்பு-அபராதமென்றபடி. செய்கை-பண்ணுகை. நிலை-ஸ்வபாவம். நிலையில் நின்றும் கழிந்தேன்-நிவ்ருத்தனானேன். "அபாயேப்யோ நிவ்ருத்தோஸ்மி," என்கிறபடியே

* * * * * * *

என்னை அநந்யரக்ஷ்யனை என்னை. அடைக்கலம் கொள்ளு-ரக்ஷ்ய வஸ்துவாக ஸ்வீகரி. ஸர்வகாரணிகனான நீயே ஸ்வஸம்பந்த்ய ஸாமர்த்ய காருண்யஸம்பந்தாதி விசேஷங்களாலே வைதிகனைக் கொண்டு என் ரக்ஷணபரத்தை அஸக்தனான என்றலையிலே சுமத்தாதே ஏறிட்டுக்கொள்ளு என்றபடி. 'நின் அருளாம் கதி,' என்கிற ப்ரயோகத்தாலே காருண்ய ப்ராதிகூல்ய வர்ஜநாநுஸந்தான ப்ரகாரத்தையும், த்விதீயபாதத்தாலே ஆநுகூல்ய ஸங்கல்ப மஹாவிஶ்வாஸ ரூபானுஸந்தான ப்ரகாரத்தையும், த்ருதீய பாதத்தாலே கார்ப்பண்ய ரூபானுஸந்தான ப்ரகாரத்தையும், சதுர்த்த பாதத்தாலே ஸாத்ய ஸ்வரூபமான ஆத்மநிக்ஷேப ரூபத்தையும் ஸங்க்ரஹேண காட்டியருளினார் என்றதாயிற்று.

அத்ர ஶ்லோக: ஸங்க்ராஹகஸ்து ப்ராபணாகஸ்மின் ப்ருதோத்ப்ரதாயத

த்வஞ்சேதேவாபிதாஸ்ய ஸ்வயி நிஹிதபராந் ரக்ஷிதும் ஸாபராதாந் வக்ஷ்யஸீதா த்ராயஸ்வ ஸந்த்யஸாரா: ஸகலஜகத ஸதா நவ்யவஸ்யந்த ஜுஷ்டம்" || என்கிற ந்யாஸவிம்சதி ச்லோகத்தை இங்கே யநுஸந்திப்பது.

இதி ஸாரஸங்க்ரஹ வ்யாக்யாவிவ்ருதி: ஸம்பூர்ணா |
ஹரி ஓம் | ஸ்ரீமதே ஸ்ரீநிவாஸதாத தேசிக மஹாகுரவே நம: ||
ரஹஸ்ய ஸங்க்ரஹஸ்ரீமத் யோவ்யாக்யாம் கரோதிய: |
தஸ்மை குரவே ஸ்ரீமத்ராகவார்யாய மங்களம் ||

---

(கு. - பு.)—

இந்நூல் ஸ்ரீமந்நிகமாந்த மஹா தேசிகன் இயற்றிய முப்பதிரண்டு ரஹஸ்யங்களுக்குள் "ஸாரஸங்க்ரஹம்" என்கிற ரஹஸ்ய க்ரந்தத்தின் உள்ளுறைப் பொருளைக் குறிப்பாக வெடுத்துணர்த்தி அந் ரஹஸ்யத்தின் கடையகத்துள்ள "நின்னருளாங் கதியன்றி மறறொன்றில்லேன்." என்ற தமிழ்ப் பாடலுக்கு ஒரு விரிவுரையாய் மணிப்ரவாளம் என்ற நடையில் அமைந்ததொரு நூலாகும்; இப்பிரதியில் இது முற்றுமுள்ளது. இந்நூலாசிரியர் "ஸ்ரீமத் ராகவார்யர்" என்று கடையிற்காணும் வடமொழி ஸ்லோகத்நால் தெரிகின்றது. ஏடுகள் மிகவும் சிதலுண்டு நுனியில் முறிந்து கிடக்கின்றன. எழுத்துப் பிழை மிகுந்துள்ளது. இந்நூல் இப்பிரதியில் 34-ஆவது ஏட்டிலிருந்து தொடங்கியுளது. இங்கு அதையே முதலேடாகக்கொண்டு வருணிக்கப்பட்டுள்ளது.

---

## No. 2292. விரோதபரிஹாரகாதாவ்யாக்யாநம். VIRŌDHAPARIHĀRAGĀTHĀVYĀKHYĀNAM.

Pages, 20. Lines, 7 on a page.

Begins on fol. 4 (*b*) of the MS. described under No. D. 2291.

A commentary, in the *Maṇipravāḷa* style, on the *Virādhaparihōra*, one of the 32 *Rahaṣyas* of Śrī Nigamānta Mahādēśika, and on the verses found in it. Perhaps by the author of the work noticed next above.

**Beginning :**

ஸ்ரீமாந் வேங்கடநாதார்ய: கவிதார்க்கிககேஸரீ |
வேதாந்தாசார்யவர்யோ மே ஸந்நிதத்தாம் ஸதா ஹ்ருதி ||

ஸ்ரீமத்வேதாந்த தேசிகர் விரோத பரிஹார மென்கிற **ரஹஸ்யத்தைச் செய்தருளக்கோலி** "ஸ்ரீமந் நாராயணஸ்ஸாக்ஷீ ஸர்வஜ்ஞஸ்ஸர்வதேஹிநாம் | **ஸ்வயாதீநஜகத்வ்யாப்தி விரோதி விதிவாரக:" || என்**

பாயாத³ஸ்மாந் யதீந்த்³ர ஸ்தீபக: | ஏஷயம் பே⁴தவாஸ்ய:”
என்கிற அநந்தரப்பிறலேயும் யதீந்த்ரநாயகனைக் குறித்து மங்களம் செய்தருளி அநந்தரம் “பரவுமறைகளெல்லாம்” என்கிற பாட்டாலே திருவாழியாழ்வானை யனுஸந்தித்து உபகாரகமான விரோதி பரிஹாரமென்கிற ரஹஸ்யத்தை முடித்து அநந்தரம் “அலர்ந்தவம் புயத்திருந்த” என்கிற பாட்டாலே திருவாழியாழ்வானை “வாழி வாழியே” என்று கொண்டாடுகிறாரென்று பாவ தாத்பர்யம். இப்படி பரபக்ஷ நிரஸந பூர்வகமாக ஸ்வஸித்தாந்த ஸ்தாபநம் செய்த ஆஶ்ரித ஸம்ரக்ஷணம் பண்ணுகிற ஹேதிராஜரான திருவாழியாழ்வான் மிகவும் வாழக்கடவரென்று அருளிச்செய்தது. அநந்தரம், விடை - விருஷபங்களை, உடன் - கூட, எழ் - எழாயிருக்கிற, அன்று - அந்தக்காலத்திலே, அடர்த்தவன் - ஸம்ஹரித்தவன், நீளாவிவாஹ காலத்திலே ஏழு விருஷபங்களையும் கூட ஸம்ஹரித்தவனான ஸ்ரீ க்ருஷ்ணனுடைய என்றபடி, மெய் அருள்பெற்ற - மெய்யாயிருக்கிற கிருபையைப் பெறாநிற்கிற, அமோக க்ருபா விஷய பூதராயிருக்கிற என்றபடி, நல்லார் - நன்மையாலே அதிகீயராயிருக்கிற ஆசார்யர்கள், ஆசார்யர்களுக்கு நன்மையாவது - ஸ்வயமாசரித்வ ப்ரஸ்தாபிதத்வமும், அநிஷ்டா ப்ராப்த மஹாலக்ஷ்யமாம், அடைய - காத்ஸ்ந்யேந, அறிந்து, உரைக்க - சொல்ல, அத்⁴யாத்ம விஷயத்திலே ப்ராப்தங்களான ஶங்கைகளையும் தத்ஸமாதா பரிஹாரங்களையும் காத்ஸ்ந்யேந ஸ்வாசார்ய ப்ரஸாதத்தாலே அறிந்து, ஸ்வஶிஷ்யாந் ஸூக்ஷ்ம ஸந்தர்க்கங்களோடேகூட பஹு ப்ரமாணோபபத்தி பூர்வகமாக “ஶ்ரவயாதிஸ்ஸ்ரோஹோபதேஶ:” என்கிறபடியே பாஶ்சாத்யராலே உபதேசிக்க வென்றபடி, அடியோமும் - தாஸபூதரான நாமும், “ஶிஷ்யஸ்தேஹம் ஶாதி மாம் த்வாம் ப்ரபந்நம்” என்கிறபடியே அதச்ஶிஷ்யராய் ஶிஷ்யபூதராய் ப்ரபந்நரான நாமும் என்றபடி, அறிந்தனமே - அறிந்தோமே, பரபக்ஷ ப்ரதிக்ஷேப பூர்வக ஸ்வஸித்தாந்த ப்ரதிஷ்டா நிரூபணம் பண்ணும்படி அத்⁴யாத்ம விஷயத்திலே வரும் ஶங்கைகளையும் தத்பரிஹாரங்களையும் அறிந்தோம் என்றபடி.

கேஷாஞ்சித் மோஹஸந்த்யா ஸமாஸ்ருதாய நாயோதய
ஸ்தைர்யாத்³யை ப்ரதிநந்த்ய விவிதோபதாஸ்தோஜாதிஹ |
ஸாஷ்டாங்கம் ஸாஷ்டாங்கம் த்ருஷ்டிம் த்யாதிப்ரபா⁴வப்ரபா⁴வகா:
ஸ்வஶிஷ்யா ஶ்ரீவிப்ரஸம்ஹ பதவீ தே³வதே³ஶிகா தே³ஶிகா:||
என்கிற ஶ்லோகத்தை இங்கே யநுஸந்திப்பது. இரண்டு ஶ்லோகங்

நிர்த்தயான இப்ப்ரபந்தத்தை ஶிஷ்யர்களும் ஸப்ரஹ்மசாரிகளும் வேதவாஹ்ய குத்ருஷ்டிகளும் விஶ்வஸித்து க்ரஹிப்பார்களோ என்கிற ஶங்காபரிஹாரார்த்தம் |

இதி விரோதி பரிஹார காதாவ்யாக்யா ஸம்பூர்ணா ||

(கு. - பு.)—

இந்நூல், ஸ்ரீமந்நிகமாந்த மஹாதேசிகன் அருளிய முப்பத்திரண்டு ரஹஸ்யங்களுள் ஒன்றாகிய "விரோதி பரிஹாரம்" என்ற ரஹஸ்யத்தின் உட்பொருளைக் குறிப்பாக எடுத்துணர்த்தி அதில் உள்ள தமிழ்ப் பாடல்களின் விரிவுரையாய் அமைந்ததொரு நூலாகும். மணிப்ரவாளம் என்ற நடையில் அமைந்துளது. எழுத்துப் பிழை மிகவுமுள்ளது. ஏடுகள் மிகவும் சிதைந்திருக்கின்றன. நூலாசிரியர் பெயர் இதிலிருந்து தெரியவில்லை. முன்நம்பரில் உள்ள நூலின் ஆசிரியர் 'இராகவாரியர்' என்கிறவரேயாயிருப்பர் என்று தெரிகிறது. இது முடிவுற்ற பின்னர் 48 (b) நம்பர் ஏட்டில் 'ப்ரயாணபத்ததி காதாவ்யாக்யாநம்' என்னும் நூல் தொடங்கப்பெற்று இரண்டு ஒரு தொடர் மொழிகளே காணப்படுகின்றன. 48—80-ஆன ஏடுகளில்லை. (81)-ஆம்ஏட்டில் "ரஹஸ்ய ஶிகாமணி காதாவ்யாக்யாநம்" என்ற நூலின் இறுதியில் ஒரு சிறிய பகுதி மாத்திரம் முடிந்துள்ளது.

---

## No. 2293. முநிவாஹநபோககாதா வ்யாக்யாநம்.
## MUNIVĀHANABHŌGAGĀTHĀVYĀKHYĀNAM.

Pages, 23. Lines, 7 on a page.

Begins on fol. 16. (b) of the MS. described under No. D. 2291. Complete.

A commentary, in the *Maṇipravāḷa* style, on the *Munivāhanabhōga* one of the 32 *Rahasyas* of Śri Nigamānta Māhādēśika, and the verses found in it.

**Beginning :**

ஶ்ரீமாந் வேங்கடநாதார்ய꞉ கவிதார்க்கிககேஸரீ |
வேதாந்தாசார்யவர்யோ மே ஸந்நிதத்தாம் ஸதா ஹ்ருதி ||
ப்ரணதிம் வேங்கடேஶஸ்ய வாதபோதவிநீதயே |
யதநுக்ரஹதோ யஸ்ய ராத்தாந்த ரஹஸ்யார்த்தாம் ரஸாயநம் ||

ஶ்ரீமத்வேதாந்தாசார்யர் முநிவாஹநபோகமென்கிற ரஹஸ்யத்தைச் செய்தருள உத்யமித்து.

வ்யாவ்யாஸதி ஹத்யா விரக்தலோகாய வேங்கடேஶகவி꞉ |
முக்தோ விலோகந முதித முநிவாஹந போக்யவ்ருத்திம் ||

என்கிற ஶ்லோகத்தாலே வக்ஷ்யமாணார்த்த ஸங்க்ஷேபகமான வேதார்த்த நிர்த்தேஶாத்மக ஶப்தஸ்வாரண ப்ரவர்த்தகாகவும், "விஜ்ஞாதம் விஜாநதாம்" என்கிறபடியே விஷய ப்ரயோஜநாதி

ா-ுவாதாவநுவதா-ஷ்ய கடநவ-ுவ-்கமாகவும் விசேஷி-்கவ்ரதி ஜ்ஜைைச் செய்தருளி இனிமேல ஒரு பாட்டாலே வ்ராவிவ்ராவிக வ்ரவநுகத்த்ரீ வ்ரவநு வ்ரஸம்ஸா வ-ுவ-்கமாகவும் * *
* * * கடந வ-ுவ-்கமாகவும் ஸ்ரீரங்கநாய உத்த மான ஸ்ரீசெஷ்டஉ॥ஜாவாய-் ஸஂஜ்ஜையை "ஸூவிநொகிஹி ஶாஸ்த்ரா ய-்ரதாவாராது ஷ்டாவயகாவி| ஷ்யசோவாரகெயஷ்டாக் கஷ்டாஉாவா ய-் உவாகெ"||என்கிறபடியே ககூத்த-்மாகப் பெற்றுமென்கிறார். யஷ்டா, "நாஹம் வ ஸாதிவெகாணொ நயொகீஹூஉயெ ரவள| ஹூதாயசெஷ்டமாயஷெ கதவஷ்ராதி நாரஉ"|| என்கிறபடியே "கற்பாரி ராமபிரானை யல்லான் மற்றுங்கற்பரோ" உகாஜிகளிற்படியே வகரவதி-் திருமகனில் வ்யதிரிக்தமான ஒரு வஷ்டுவையும் உத்தே சித்து மாநம் பண்ணுதே "என்னமுதினைக் கண்ட கண்கள் மற் றொன்றினைக் காணுவே" என்கிறபடியே அந்தச் சக்கிரவர்த்தித் திருமகனுக்கும் ஞூராதயாய் ஸ்ரீகூஷ-ுவியான ஸ்ரீரங்கநாய னையே வாஹக்தியாலே ஸாக்ஷாத்கரித்து மாநம் பண்ணு நின்ற திருப் பாணுழ்வாராலே அருளிச்செய்யப்பட்ட இப்பத்துப் பாட்டையும் . . . . . மறையின் பொருளென்று கொண்டாடா நிற்கிற ஸாத்விக ஸசெ-ுஹங்களோ? கிஷ்டயொஜநமாக உத்தமம விஷ்டக காரமஸாமி ஸக்ஷ ஸாமர வரிஷ்டகமான ஹ-ுதிக்குள்ளே 'வெஉாஜாவாய-்ர்' என்று சொல்லப்பட்டோம். ஞூராவிகொத்தஷ-்த்தாலே நாம் பெரியோமல்லோம், என்றைக்கும் ஸஉஸஉத்த-்ங்களை நமக்கு உரைப்பார் உளரென்று ஸஉஸஉத்த-்ங்களைத் தேடுவோமென் கிறார்:—

காண்பனவு முரைப்பனவு மற்றொன்றின்றிக்
கண்ணனையே கண்டுரைத்த கடிய காதல்
பாண்பெருமாளருள் அருள்செய்த பாடல்பத்தும்
பழமறையின் பொருளென்று பரவுகின்றோம்.
வீண்பெரிய விரிதிரை நீர்வையூத்துளளே
வேதாந்தாசாரிய னென்றியம்ப நின்றோம்
நாண்பெரியோமல்லோம் நன்றுந்தீது
நமக்குரைபபாருள (ரென்று) (ரேனும்) நாடுவோமே.

நாம்—"முனிவாஹநர்" என்று திருநாமம் ஆம்படியாகவும், "ஸ்ரீசெஷ்டஉாஜாவாய-்ர்" என்று திருநாமம் சாத்தியருளும்படியாக வும் தங்களிருவரிடத்திலும் பெரிய பெருமாள் வ்ராஸொஹஞ்செய் தருளின இஸ்ஸம்பந்தத்தையிட்டு விஶேஷித்துத் திருப்பாணுழ்வா ருக்கு உாஸஹ-ுகரான நாம், "நம்பாணநாதன்" என்று மநா வாஷ்டாராஸாரத்தின் முதல்பாட்டிலே தாமேயருளிச்செய்தாரிறே.

*　　*　　*　　*　　*　　*

"[illegible]"

[illegible]

[illegible]

[illegible]

[illegible]

(கு. - பு.)—

இந்நூல், திருப்பாணாழ்வார் தாம் அருளிச் செய்த "அமலனாதிபிரான்" என்கிற திவ்விய பிரபந்தத்துக்கு வியாக்கியாந ரூபமாய் ஸ்ரீமந்நிகமாந்த மஹா தேசிகனால் அருளிச் செய்யப் பெற்ற "முநிவாஹந போகம்" என்ற முப்பத்திரண்டு ரஹஸ்யங்களுக்குள் ஒன்றான ரஹஸ்ய கிரந்தத்தின் உள்ளுறைப் பொருளைக் குறிப்பாக வெடுத்துக்காட்டி அதில் உள்ள தமிழ்ப் பாடல்களுக்கு விரிவுரையாய் "மணிப்ரவாளம்" என்ற நடையில் அமைந்ததொரு நூலாகும். இப்பிரதியில் இது முற்றும் உளது. நூலாசிரியர், "ஸ்ரீமத் பாதுகாஸேவகராமாநுஜ மஹாதேசிகன்" என்னும் துறவியாரின் சீடரில் ஒருவரான "ஸ்ரீரங்கநாத தாஸன்" என்பவராவார் என்று கடையகத்துக்காணும் இரண்டு வடமொழி ஸ்லோகங்கள் தெரிக்கின்றன. மற்று, "அமலனாதிபிரான்", "பகவத்தியாந ஸோபாநம்", என்ற நூல்களைப் போல அதே மேணியில் "ஸ்ரீமத் கோபால தேசிகன்" என்பவரானும் திருக்குடந்தை ஆராவமுதன் விஷயமாக "[illegible]" என்பதாக ஒரு துதி நூலும் இயற்றப் பெற்றிருக்கிறது என்கின்றவிச் செய்தி இறுதியிற் காணப்பெறும் தொடர் மொழிகளால் அறியக் இடக்கிறது. சிதலுற்றிருக்கிறது. பிழையுடன் உளது.

---

## No. 2294. தர்ம பரீக்ஷை.
## DHARMA PARĪKṢAI.

Substance, palm-leaf. Size, 15½* 1¼ inches. Pages, 218. Lines, 5 and 6 on a page. Character, Tamil and grantha. Condition, good. Appearance, old.

Incomplete.

A *Maṇipravāḷa* rendering of the *Kanarese* work of the same name by Vṛttavilasa. Deals elaborately with the doctrines of the *Jains*.

By Vijayahaṁsa Munivar, disciple of Śriman Munibhadra Svamigal.

**Beginning :**

கர்நாடக தர்ம பரீக்ஷை.

[illegible]த்துடனே கூடின ஸர்வ ஜீவன்களாகிற வண்டு ஸமூஹங்களுக்கு விசேஷ ஸந்தோஷத்தைப் பண்ணுகிற ஸகல [illegible] மாகிற [illegible]த்தைப் போக்க . . . . க்கிற [illegible]

[illegible] உதியா நின்று மிகவும் வ்ருத்தமாய் [illegible] கூடி ஸ்வர்ண ஸ்வரூபமாக அபரஞ்சி ஸ்வரூபமாகி உதியா நின்ற கலஶாப்தி மத்யவர்த்தியான ஶேஷனைப்போல் நிஜசோபையுடனே விளங்கியிருக்கிற ஸ்ரீவைகுண்டநாத மூர்த்தியை நமஸ்கரித்து பிரம்மா விஷ்ணு, ருத்ரன் இவர்களுடைய ஸ்வரூபமாகிய யக்ஷிணீ தேவியைச் சொல்லுகிறேன் என்றவாறு. (க)

உத்தரவாதித்துள்[?] (வந்தர்களுக்குள்) உத்தமோத்தமரும் ஸ்ரீமாதி ஸ்வஸ்திகத்துள் யாணி ப . . . . ரும் [illegible] நைத்தில் உத்பவஜன ஸ்தோத்ர பாத்ரரும் ஸகல ஶாஸ்த்ர விஶேஷ மந்த்ர ஸஹிதரும் ஆகிய ஸர்வ ஸாதக பாதங்களை ஸம்ஸார ஸமுத்ரம் கடக்கவேண்டி நமஸ்க்கரிக்கிறேன் என்றவாறு. (உ)

ஸகல ஸம்பத்தைக் கொடுக்கப்பட்ட ஶக்தி ஸித்த ஸ்வரூப உபாஸ்ய ஸர்வ ஸாதக . . . ங்களை நமஸ்கரித்தேன் என்றவாறு. (ங)

க்ரமமாக ஸத்யம் தேமாங்கனி, ஜபமாலை, பாஶம், கத்தி, அம்பு, புஷ்பபாணம் இவைவிற்றை வலது கையிலும், அபயம், கமண்டலம், பாஶம், கேடையம், விலலு, தனுஸ? உபஸ்தவாலம் இவைகளை யிடது கையிலும் தரித்து ஸ்வர்ணமயமாகிய ஸித்தாயினீ தேவ கருடவாஹநத்தின்மேலேறி எங்களுக்கு இஷ்டார்த்த பலங்களைக்கொடுக்க ஶரணமாக அடைந்தேன் என்றவாறு. (ச)

* * * * * *

ஆதிகாலத்திலே ஸௌநாஸமான [illegible] யக்ஷிணீ தேவியைப் பார்த்து வல்லவன் கந்நடயத்தில் செய்த? யக்ஷிணீ தேவியை ஸகலமானபேரும் இருந்து கேளுங் கோள் என்றவாறு. (கக)

ஸப்த ஸமுத்ரம் ஸமுத்ரஞ் சூழ்ந்த ஜம்பூத்வீபம். அந்த த்வீப மத்யத்துள் ஸுமேரு. அந்த மஹாமேருவுக்குத் தெற்கு பாரத க்ஷேத்ரம். அதிலே ப்ரஸித்தமான பாரதக்ஷேத்ரத்தில் இருக்குந் தேசங்களில் மிகவும் அழகு பொருந்தி யிருக்கப்பட்டது விஜயா நகரமென்பது. அதினுடைய ஸௌந்தர்யமும் அழகும் சொல்லிமுடியாதாகிலும் சிறிது சொல்லுகிறோம் புண்ய ஜீவன்களே என்றவாறு. (கஉ)

* * * * * *

வஜ்ரகாஷ்டங்களினாலேயும் ரத்நங்களினாலேயும் செய்யப்பட்ட கோபுரங்களும்வைடூர்யத்தினாலே யழுத்தப்பட்ட கவாடங்களும்

அநேக நவரத்தின கசிதமாகி சந்திர ஸூர்யர்கள் உதித்தாப்போல் வீதிகளும், மாட கூட மண்டபங்களும், உப்பரிக்கைகளும், அநேக ஸுவர்ண ரத்நங்களினாலே செய்த ஜிநசைத்யாலயமும், தபோதநாச்ரமங்களினாலே விளங்கிய வைஜயந்தபுரம். அந்தப் பட்டணத்து ராஜா ஜிதசத்ரு என்பான். அவனுடைய பட்டத்தரசி வாயுவேகை யென்பாள். ரூபத்தில் ரதியிலும் மிகுந்தவள். ஸகல வித்யா நிபுணை. இவர்களிருவரும் உத்க்ருஷ்ட விஷய காமபோகங்களை அநுபவித்து இருக்கிற நாளில் ராஜஸ்த்ரீ புஷ்பவதியாய் நாலாநாள் குளித்து யாவஜ்ஜீவமான வெண்பட்டுக்கட்டி ஹம்ஸதூலிகா மெத்தையிலே இலக்ஷ்மீயும் நாராயணனும் சயநங்கொண்டாப்போல் ஸுகநித்ரையாநின்றகாலத்துள் ஸுகநித்ரைவசித்து நித்ரைசெய்யும்பொழுது ஸ்ரீதேவியும், ஸிம்ஹமும், ஐராவதமும், பூர்ண சந்த்ரனும், ஸூர்யனும் ஆக [ப] விடியசாமத்துக்கு ஸ்வப்நங்கண்டு எழுந்திருந்து தான்கண்ட ஸ்வப்நத்தைத் தனது ப்ராணேச்வரனாகிய ராஜாவுக்குச்சொல்ல, ராஜாவும் நிமித்தஜ்ஞரை யழைப்பித்து ஸ்வப்நபலங்கேட்க நிமித்தஜ்ஞர் சொல்லுகிறார் ஸ்ரீதேவியைக் கண்டலால் ஸ்ரீபதிக்கேசவனும், ஸிம்ஹத்தைக் கண்டலால் ஸிம்ஹபராக்ரமனும், ஐராவதத்தைக் கண்டலால் ஸர்வராஜவைபவனும், சந்திரனைக் கண்டலாலே ராஜவம்சோத்தாரகனும் ஸூர்யனைக் கண்டலால் லோகப்ரகாசகனும், தேஜஸ்வியுமாகிய புத்ரன் உன் ஸ்த்ரீ கர்ப்பத்திலே அவதரிக்கப் போகிறான் என்று சொல்லக்கேட்டு * * * * * *

**End :**

நவம: ஸர்க: :—

ஜிநாவேமன் நீங்கள் ப்ராஹ்மணர்கள் எல்லாரும் கூடியுக்தஸ்வபாவத்தினால் அப்ரஸந்நசித்தராகி த்வேஷித்தீர்கள் என்றறிந்து என்னுடைய ப்ரதிஜ்ஞைக்கு ஸார்த்தகமாயிற்றென்று தன் மனஸ்ஸில் ஸந்தோஷஸம்பந்நனாகி க்ரோதையோடே கூடிப்பார்த்துப் பூமியில் நிக்ஷிப்தமாகிக்கொண்ட ஸ்தூலாகாரத்தைவிட்டு ஆச்சரியமாயிருக்க முன்னே வித்யாபலத்தையெடுத்து அதிசயமான ஆபரணங்களைப் பூண்டு த்விஜஸமூஹங்கள் ஸத்காரஞ்செய்யத் தக்கதாக திவ்ய ஸம்பத்தி காட்டினன். அதினாலே விப்ரரெல்லாரும் கொண்ட ஆச்சர்யம்விட்டு ஸபையிலவர் முன்னே கேட்டது எங்களுக்குத் தெரிய அறிவிக்க வேணும் என, ஜிநாவேமன் அவர்களுக்குச் சொல்லப் போகிறான். பரமஜ்ஞாந நிபுணர், கருணாகரர், உபயவிய பரிக்ரஹரஹிதர், நிரவத்யசரிதர், எங்கள் குருதேவ. ஜிநயோகிவாஸபூஜ்யப்ரதிகர். ஹிம்ஸை, அஸத்யம், அஸ்தேயம், அப்ரஹ்மம், பரிக்ரஹம் இப்படிப்பட்ட தோஷம் இல்லா[த](து)ஜீவ

தது. ஈஶ்வரன் அநுமாநமும் ஶப்தன் ப்ரமாண ப்ரமாணமும் போல விருவகைப்படும். ஶப்தஜ்ஞ மநுஷ்யன் யுக்தாயுக்தங்களை விசாரித்துப் பரீக்ஷித்துக் கொள்ளுவான். அதெப்படியென்றால் ஶ்லோக:—

ஶ்ரவணம் (ஶ்ரு)தஜ்ஞதே நிவர்ஷணம் ச்சேதநதாபநம் |
ஶ்ரீம் ஸ்வர்ணம் பரீக்ஷ்யதே ததா தர்ம சதுர்விதை: ||

இப்படி ஸ்வர்ணம் ப்ரமாணவ்யாபாரத்திலால் பரீக்ஷித்துக்கொள்ளு கிறாப்போலே தர்மத்தைப் பரீக்ஷித்துக்கொள்ளுவது. அதல்லாமல் ஸமயத்ரயமென்பது எப்படியென்னில், லோக ஸமயம், பாஷண்டி ஸமயம், தேவதா ஸமயம் என்பன. ஸர்வஜ்ஞ காரணத்தினால் ஸர்வ ஜநங்கள் ஸந்தேஹவிடாமலிருக்கிறது லோகஸமயம். எப்படியென்றால் ஸமுத்ரம் மடுகூபம் தடாகம் இவைகளிலே ஸ்நாநஞ்செய்கிறதும் மலை மேலே ஏறிவிழுகிறதும் அக்னியில் விழுகிறதும் யாகத்தில் பிராணி களைக் கொல்லுகிறதும் இவையெல்லாம் ஸத்கர்மமென்று சொல்லு கிறதும், ஸமுத்ரஸ்நாநம் இவைகளை யோக்யமென்று பூஜிக்கிற தும், ஸூர்ய பக்ஷத்தில் தேவஸம்ஸ்காரம் பித்ருஸம்ஸ்காரம் இவர் களுக்கு த்ருப்தியாமென்று சொல்லுகிறதும் ப்ரமாணஹீநமான லோக ஸமயம். இது நிஶ்சயமாகத்தெளியவும்; ஸமயஸமயமென்பது விபூதி பூசுகிறதும் ருத்ராக்ஷ கமண்டலு ஜடாதாரணி போடுகிறதும் காஷாய வஸ்த்ரம் கட்டுகிறதும் இருப்பிடமும் கத்தி எலும்பு மாலை கட்டிக் கொள்ளுவதும் நிர்வாணத்தில் இப்படியிருப்பவர் ஸமயிகளென் றும் தபஸ்விகள் என்றும் எங்கும் ஸஞ்சரித்துத்திரிவர்கள். இது ஸமயஸமயமென்பது. அநேகதேஹங்களும் ஸஹஸ்ரபாதங்களும் பல முகங்களும் பல நேத்ரங்களும் பல ஹஸ்தங்களும் பல ஶாஸ்த்ரங் களும் பலரூபங்களும் பல அலங்காரங்களும் சிலபேரை ரக்ஷிக் கிறதும் பலரை நிக்ரஹம் செய்கிறதும் சிலரிடத்து ஸந்தோஷமும் சிலரிடத்துக் கோபமும் ஸ்த்ரீகளுக்கு வஶமாய் நடக்கிறதும் ஸ்த்ரீ கள் சிலரை மோஹிக்கிறதும், சிலரைத் தூஷிக்கிறதும் ஸ்தோத் ரம் செய்கிறதும் பூமியை ரக்ஷிப்பனென்றும் கோபித்தால் கெடுத் துப் போடுவான் என்றும் கண்டகல்லுகளை எங்கும் ஸ்வாமியிருக் கிறான் என்று வணங்கிறதும் இவையெல்லாம் தேவதாமூடம். அதல்லாமல் தேவன் என்கிறவன் என்றால் ஸர்வஜ்ஞ ஶ்ரீதாவமியென் னும் த்ரிஜ்ஞாநத்துடன் ஸ்வர்க்கலோகத்திலே வந்து அவதரித்தவுடனே மஹாபாவகாரண ஜந்மாபிஷேகாநந்தரம் தீக்ஷை கைக்கொண்டு உத்தம க்ஷமாமார்த்தவார்ஜவஸத்ய ஶௌசஸம்யமதப த்யாகமாகிஞ்சந்ய ப்ர ஹ்மசர்யமென்னும் தஶதர்ம யுக்தங்களுடன் நடந்து த்வாவிம்ஶதி

பரிஷஹங்களை? ஜயித்து மண நாகீக ஸமேர ராஜ்யவஷமோமோ வ ஹோமத்துக்குக் காரணமான கரி காரம வைநாயந ஸ்ரீமநோ ஷ்ரம ஸாஷண வஸ்ராதி ஸமஸ்தத்தையும்விட்டு ஏகாகியாகித்தநிகி யிருக்கிற ரணத்தைப் ஸாதித்து உத்தமர் தெளிவர் * * *
* * * * * * *

இப்படிக்கொத்த சுத்தாரளவஸ்த்ாநங்களைப் பரிஹரித்து ஜைந ஷ்ராவகரவகைகளினாலே உபசரிககமே வநங்களை விடுகிற பரிணா மதையும் பஞ்சேந்திரிய விஷயங்களை உபஸமிப்பிக்கிற பேதமும் ஸஜவ ஜீவன்களுடனே ஐக்ய வைராக்ய காரணாய் மாஷ்ஷு மான ஸாவதை யமேஞ்ஜ்ாநமென்று சொல்லப்படும். இந்திரிய விஷ யம் விட்டதும் அந்த வைராக்ம் நிற்பதும் யமேஷ்ஜாநம். இது மோக்ஷஜ்ாந மென்கிறது. * * * * *
ஸவர்ஜ்ஞனென்கிறது முதலாகி அநேகாநுஷ்டாநமங்களினால் விளங் கா நிற்பன். அதுவுமல்லாமல் நிரவத்யம் நிஷ்களங்கம் நிரஞ்ஜநம் மேஹிதம் நிர்மோஹம் நிர்விகல்பம் நிராபேக்ஷம் நிஷ்ப்ரபஞ்சம் நிஜரணம் நிர்மயம் நிகர்மம் நிரவம் * * * * விகார மம் இப்படியாக ஸகலதோஷத்தினால் விடப்பட்டு பரஞ்ஜோதி ஸ்வரூபனை விகாரமனென்கிறதினால் அப்படிக்கொத்த தேவ னே சுத்தன என்று நம்புவது, அப்படிக்கொத்தவனை நம்பாமல் ஹீநனும் நிஷ்டயனும் * * * மாகியவனைத் தேவ னென்று நம்பாதே. ஜிநரையே நம்புகிறது ஸம்யக்த்வம். அஹந்தரே தேவர், அவரைப்போல் நிஷ்பரிக்ரஹமாயிருக்கிறதே தபஸ்வை அதனுடைய பேதங்களையுஞ் சொல்லுகிறேன் கேளுங்கோள் என்று சொல்லுகிறான். அந்தத் தபஸ்ஸென்பது * *

* * * * * * * *

அயிகஸந்தோஷத்தராகி யமேமே ஸம்வஸத்துக்குக் காரணம் என்று நம்பினர். ராஜாவும் . . . . . . ரமும் ப்ரீதியுடனே வ்ரதங் கைக்கொண்டு ரணங்களை யரித்து மோக்ஷயம் விட்டு ஸம்யக்த்வத்தையடைந்து அவர்கள் எல்லாரும் மோக்ஷ . . .
. . . . . ஸ்ரீயும் முன்தேடின த்ரவ்யமெல்லாங்கொண்டு ஜிந சைத்யாலயங்களைச் செய்தனர். அப்படி ஸகலஸவ்ய ஜநங்களும் நாநாவ்ரகாரமான தாந * * * *

(கு. - பு.)—

இந்நூல் ஜைன மதத்தைச் சார்ந்ததாய் அம்மதக் கோட்பாடுகளை விரி வாகத் தக்க மேற்கோள்களுடன் ஸகல பவ்விய ஜநங்களும் உணருமாறு எடுத்துக்கூறுகின்றது. இது, கர்நாடக பாஷையில் " வ்ருக்க விளாஸன் "

என்னுய பெரியார் இயற்றிய "தர்ம பரீக்ஷை" யென்னும் நூலுக்குத் தமிழ்மொழி பெயர்ப்பாக ஸ்ரீமந முநிபத்ர ஸ்வாமிகளுடைய சீடராகிய "விஜய ஹம்ஸ முனிவர்" என்பவரால் மணிப்ரவாள நடையில் இயற்றப் பெற்றதென்று படலங்களின் கடைகளில் காணப்பெறும் தொடர் மொழி களால் தெரிகின்றது. இதில் அருகக் கடவுளே ஸகலருக்கும் வழிபாட்டிற்கு உரியவர் என்றும், ஸம்யக் தரிசனம், ஸம்யக் ஞானம், ஸம்யக் சாரித்ரம் என்ற இம்மூன்று தத்வமும் இன்னும் பல்வேறு தத்வங்களையும் நன்கு எடுத்துணர்த்தி இருக்கின்றார்.

இது, வைதீக மதத்தை மிக விரிவாக வெடுத்துத் தூஷித்தியற்றப் பெற்ற தாகும். இந்நூலில் முதல் நூற்கேற்பப் பத்து படலங்கள் அமைந்துள. இது ஜைனக் கிரந்தங்களுள் மிகவும் சிறப்பு வாய்ந்ததாகப் போற்றப்பட்டு வருகிறது. ஆதிமுதல் ஒன்பது படலங்கள் வரை பூர்ணமாயும் பத்தாவது படலத்தில் ஒரு சிறிய பகுதி மாத்திரமும் இங்குளது. பிராம்மணர்களுக்கு மிகக் கருணையுடன் அறிவுறுத்தியதாக உளது. எழுத்துப்பிழை சொற் பிழை மிகக் காணப்படுகின்றன.

---

## No. 2295. நூற்றெட்டிலக்கம்.
## NŪṞṞEṬṬILAKKAM.

Substance, palm-leaf. Size, $7\frac{3}{4} \times \frac{3}{4}$ inches. Pages, 222. Lines, 4 on a page. Character, Tamil. Condition, injured. Appearance, old.

Complete.

Begins on fol. 1-a. The other work herein is Gouḷikkāḍal & Tummalkāḍal. 112-a.

Similar to the work described under No. D. 2017.

**Beginning :**

நூற்றெட்டிலக்கம் : (ரா-அ. இலக்கம்) விநாயகன் திருவுளம். இந்த சாஸ்திரம் பார்க்கிற விதம் எப்படியென்றால் நூற்றெட்டிற் குறைய மூன்று தரம் கணக்கு சொல்லச்சொல்லிச சொன்ன கணக்கை தொகை கூட்டி எட்டிற் பெருக்கி ஒன்று மிகுந்தால் முதல் எட்டில் முதல் வரி பார்க்கவும். இப்படி எட்டு எழு மட்டும் பார்க்கவும். எட்டுக்கப்பால் பார்க்கவேண்டாம்.

விநாயகரை பிரதிஷ்டைபண்ண நன்றோ தீதோ :—

விநாயகரை பிரதிஷ்டைபண்ண நன்று
தரணி யிடங்கொள்ள நன்று
இந்த ஊரில் குடியிருக்க நன்று
அடிமைகொள்ள நன்று

கடன்கொடுத்து வாங்கச் சண்டையாம்
இந்த வீடுகட்ட மிகவும் நன்று
இந்த நாட்டில் விதைத்தால் லாபம்வரும்

தேர்சமைக்க நன்றோ தீதோ
தேர்சமைக்க நன்று
விநாயகரை எழுந்தருளப்பண்ண நன்று
காணியாட்சிகொள்ள மத்தியமம்
இந்த ஊரில் குடியிருக்க மகாவின்பம்.
அ[டு](டி)மைகொள்ள மிகவும் நன்று
கடன் கொடுத்து வாங்க நன்று
இந்தவீடு மச்சிடச் சுகமுண்டாம்
இந்த ராசாவின் பேரிலே தண்டுவரும்.

**End :**

கடலேறிப் போனவன் வருவானோ வாரானோ
கடலேறிப் போனவன் ச[டு](டி)தியில் வருவான்
எருமைகொள்ள நன்றாய்ப்பலிக்கும்
ஏற்றம்வைக்க நன்றாய் வழங்கும்
கடைச்சரக்கு மலியும் கொள்ளவேண்டாம்
உடுக்கப் புடவைகொள்ள விர்த்தியாகாது
புதைத்த உடைமை பின்பு காணும்
நாலு சீவன் வருஷத்தில் காணும்
கூட்டு வளப்பனுசெய்ய அதிகலாபமுண்டு.
இந்தக் காதுகுத்த உருகிப்போகும்
தண்டு வாணிபம்பண்ணப் பலியாது
மழை சிலவிடத்தில் செழிக்கப் பொழியும்
பருத்தி சரக்குப் போடவேண்டாம்
இந்தவீடு மச்சிட நன்று
இந்த ராசாவின் பேரிலே தண்டுவரும்
வாய்க்கால்வெட்ட ஏரி உடையும்
இந்த மனை அதிக லாபம் வரும்.

(கு. - பு.)—

இது, டிஸ்கிருப்டிவ் காடலாக்கு 2017 ஆம் நம்பரில் வந்துள்ள நூல் போன்றதாகும். இதற்கும் அதற்கும் வெகு பேதங்கள் காணப்படுகின்றன. விஷயத்தில் மாத்திரம் வேறுபடாதது. இப்பிரதியில் இந்நூல் முற்றும் உள்ளது. ஏடுகள் சிறிது சிதைந்திருக்கின்றன. இறுதியில் சில ஏடுகள் முறிந்து கிடக்கின்றன. எழுத்துப்பிழை வெகுவாகக் காணப்படுகின்றன. நிமித்த சாத்திர வகைகளில் இதுவும்ஒன்றாகும்.

---

## No. 2296. கௌளிக்காதலும் தும்மற்காதலும்.
## GAUḶIKKĀDAL AND TUMMAṞKĀDAL.

**Pages, 14. Lines, 7 on a page.**

**Begins on 112-a of the manuscript described under No. D. 2295.**

**Complete.**

A treatise on 'divination' with the help of the chirping of the house—lizard, and the sneezing of human beings. According to the author of this work, both of them have the same significance.

**Beginning :**

கௌளிக்காதல், தும்மற்காதல் பதினாறுகோணததும் ஆகாசம் பூமியிலும் பார்ப்பது :—

ஞாயிறு :— ஞாயிற்றுக்கிழமை கிழக்கு முதலாகப் பிரதக்ஷணமாகப் பார்ப்பது :—ஆதிவாரம் நாளசொல்லுங் கௌளி பிராம்மணசாதி கோவர்ணம். முதுகில் வெகு இரேகைகள் உண்டாயிருக்கும். ஆணும் பெண்ணும் கிழக்கு முகமாக விருக்கும். ஆகாரங் கொண்டிருக்கும். கிழக்கே கௌளி சொன்னாலும் தும்மினாலும் பயம். தீவு திசையிலே கேடுசொல்லும். அக்கினி மூலையில் கேது இருப்பன். சாவு வார்த்தை சொல்லும். திவு திசையில் கலகம். தெற்கு அங்காரகன் இருப்பன் கலகம். திவுதிசையில் அவகேடு சொல்லும். நிருருதியில் புதன் இருப்பன். உறவின் முறையார் வருவார். திவுதிசையில் அசனம் வரும். மேற்கு சனியிருப்பான். கட்டுவர்க்கம் வரும். திவு திசையில் தனகாரியமாகும். வாய்வு மூலையிலே இந்திரன் இருப்பான். புது வஸ்திரம்வரும். திவு திசையில் தனகாரியமாகும். வடக்கே பி.கசுபதி இருப்பான். அர்த்தலாபம். திவுதிசையில் பரிமள புஷ்பம் வரும். ஈசானியத்தில் சுக்கிரனிருப்பன். ஓலைவரும். திவுதிசையில் உறவின் முறையார் வருவார். ஆகாயததில் சூரியன் இருப்பான். வெகு சிந்தனையாகும். பாதாளத்தில் சகல காரியமும் சயமாகும். ஞாயிறு முற்றும்.

**End :**

சனிக்கிழமை.

கௌளி சாதி. அச்சங்கருப்பு ஆகாரமில்லாமல் ஆணும் பெண்ணும் பசியிலே சிக்கியிருக்கும். கிழக்கே ராகு இருப்பான். வெகு வார்த்தை சொல்லும். திவுதிசையில் விஷமவார்த்தை வரும். அக்கினி மூலையில் சந்திரனிருப்பன். போசன பரிமளம் வரும். திவுதிசையில் வித்தை நடனம் கேள்விப்படும். தெற்கு சுக்கிரனிருப்பன். ராசஸ்தானம் போகும். திவுதிசையில் காய் பழங்கள் வரும். நிருருதியில் அங்காரகனிருப்பான்.

* * * * * *

மேற்கு பிரகஸ்பதியிருப்பன். புது வஸ்திரம் வரும். திவுதிசையில் தூரத்திலேயிருந்து புதுவார்த்தை வரும். வாயு மூலையில் இந்திரன் இருப்பன். வஸ்திராபரணம் வரும். திவுதிசையில் பிரியமான பந்து ஜனங்கள் வரும். வடக்கே கேது இருப்பன். கேடு வார்த்தை சொல்லும். திவு திசையில் சண்டை வரும். ஈசானியத்தில் சனியிருப்பன். வெகு பயம் சொல்லும். திவுதிசையில் குரோதம் வரும். பாதாளத்திலே யமன் இருப்பன். போசனம் உண்டாகும். காய் பழங்கள் வரும். ஆகாயத்தில் சூரியனிருப்பன். துக்க வார்த்தைகள் கேட்பார். சொல்லும் சனிக்கிழமை பலன் முற்றும்.

(கு. - பு.)—

இச்சிறுநூல். நிமித்த சாத்திர வகைகளில் ஒன்றாகும். இதில் கௌளியானது இன்னின்ன திசையில் கொட்டினால் அது கொண்டு இன்னின்

யிருக்கிறது. ஞாயிறு முதலாய் சனியிறுதியான கிழமைகள் ஒவ்வொன்றிற் கும் பலன்கள் கூறப்பெற்றிருக்கின்றன. இப்பிரதியில் முற்றும் உளது. காதல் என்னுஞ் சொல்லுக்கு ஆந்தை, கௌளி இவை முதலியவற்றின் ஒலிகளும் பொருள் கொள்ளுதல் வழக்காறு உண்மையின் கௌளி சொல் லென்று பொருள் கொள்க. "தும்மற்காதல்" என்று ஒருசொல் நூலா ரம்பத்துக் காணப்படுகின்றது. அதற்கேற்ப ஞாயிற்றுக்கிழமையின் "பலன் கூறுமிடத்து கிழக்கே கௌளி சொன்னாலும் தும்மினாலும் பயம்" என்ற இவ்வொரு தொடர்மொழி காணப்பெறுகின்றதே யல்லாமல் வேறு ஒன்றும் காணப்பெறவில்லை. ஆகவே, கௌளி சொல்லுக்குக் காட்டிய பலன்களே தும்மற் காதலுக்கும் கோடல் வேண்டும்போலும்.

---

## No. 2297. தேரையர் கிஷாயத்திரட்டு.
## TĒRAIYAR KIṢĀYATTIRAṬṬU.

Substance, palm-leaf. Size 14-2/8 × 1-6/16 inches. Pages, 36. Lines, 5–7 on a page. Character, Tamil. Condition, slightly injured. Appearance, old.

Begins on fol. 1-a. The other work herein is Vaidyattiraṭṭu Nāṟpatteṭṭu 19-a.

Complete.

Explains the method of preparation and uses of certain decoctions used in Indian Medicine.

By Tēraiyar.

**Beginning :**

தேரையர் அருளிச்செய்த கிஷாயம்.

புகலுஞ் சீந்தில் பற்படகம் பூசுஞ் சந்தமிலாமிச் சுந்
திகழும் வோர்க் கொம்பிருவேலி சித்தா முட்டியுடன் காசு
தகவே யொவ்வொன்றோர் கழஞ்சு தண்ணீரிரு நாழியிலிட்டுச்
சுகமாய்க் காய்ச்சிக் குடிப்பீராய் சோரும் பித்த சுரந்தானே. (க)

**End :**

துத்தந் துருசு பாஷாண
மெத்திய கெந்தி மிருரசவகையும்
பத்திய பாகற் சாற்றிலரைத்துத்
தித்திய மிளகளவுண்டைகள் செய்யே. (ர)
சீதசுராங்கஞ் செப்பக்கேள்
ஓதிய கந்தியுயர்ரசம்வாளங்
கோதறு திரிகடு கடுகொடு சிவதை
மாதறு பாலில் மாத்திரை செய்யே. (ரக)

சிவமயம் சர்வதாரிஹூ சித்திரைமீ அஉ முற்றும். கூஅாஉமஅஹூ

கபாலததுல சூலைகருக கணடத்துல் இசுவுக்குத் தைலம். நல்லெண்ணெய் படி (க) வெங்காயச்சாறு படி (?). குத்துக்காசம் முட்டி பட்டையரைத்த விழுது (டலம்) (ா) மூன்றும் கலக்கி அடுப்பேற்றித் தைலமிறக்குகிற பதத்தில் சிறுபாலடையிலை (பலம்) (ரு) எண்ணெயில் போட்டு எரித்து வடித்துக்கொள்ளவும். தலை முழுகினதினம் பத்தியம் சலபுஷ்பம் புளியாகாது.

(கு. - பு.)—

இந்நூல் வைத்தியநூல்களைச் சார்ந்ததாய்த் "தேரையர்" என்னுஞ் சித்தர் பெரியாரால் இயற்றப்பெற்றது. (ாக) நூற்றுஒரு பாடல்களால் அமைந்திருக்கிறது. இதில் பலவகையான சுரங்கள் எல்லாவற்றையும் போக்கற்குரிய பலவித கிஷாயங்களையும் இறக்குமாற்றை நன்கு விளக்கியிருக்கின்றார். முற்றியபின்னர். கபாலசூலை கண்ட இசிவுகளுக்கு உரிய தைலவகையொன்று எழுதியுளது.

---

## No. 2298. தேரையர் வைத்தியப்பாடற்றிரட்டு நாற்பத்தெட்டு.

## TĒRAIYAR VAIDYAPPĀḌAṞṞIRAṬṬU NĀṞPATTEṬṬU.

Pages, 10. Lines, 7 on a page.

Begins on fol. 19-a. of the manuscript described under No. D. 2297.

Complete.

Contains certain recipes used by the *Siddha* School of Indian Medicine.

**Beginning :**

வைத்தியப்பாடற்றிரட்டு நாற்பத்தெட்டு :—

வாதந்தானெண்பதாகும் வருகின்ற பக்கவாதம்
சீதமே நடுக்குவாதஞ் சிறந்திடு முடக்குவாதம்
சூதமெய் சந்துவாதம் தோன்றிய முகத்தில் வாதம்
பேதமாம் வாதந்தீரப் பெருகிடு மருந்துகேளே. (க)

மருந்துதான் சித்திரமூலம் வளருமாவிலங்கை கொன்றை
திருந்திய முருங்கைசங்கு சிறந்த வெள்ளறுகு வேம்பு
பொருந்திய வெருக்குச்சுக்குப் புகலுந் திப்பிலிமரீசங்
கருநிறலவண மஞ்சுங்காயம் மண்டலந்தான் கொள்ளே. (உ)

**End.**

நயன ரோகத்துக்கு மருந்து :—

இந்த மாநீலகாச மியைந்திடும் பித்தகாசம்
மந்தமாம் படலம் புல்லம் மயிர்க்குத்துப் புழுவெட்டோடுஞ்
சந்திகாமாலைக் கண்ணுந்தளர் நேத்திர வாய்வுதானும்
நந்திசொல் விழியினுள்ளே நயன ரோகத்துக்கெல்லாம். (சக)

உரைத்திடு முத்துவெள்ளி யுயருந்தாம்பிரஞ்சுக்கோடு
கரைத்திடு துரிசு துத்தங்கலைத் தலையோடும் பொன்னும்
நரைத்திடும் பிதிரொணி நற்புங்கு நிம்பச்சாற்றால்
அரைத்திடக் கண்ணிற் றெண்ணூற்ருறுமே யகன்றுபோமே.
(சஎ)

போமிது பொன்னுங்காணி புகழ் சிறுகீரை முத்தம்
போமிது சீந்தில் நிம்பம் பொருவு சண்பகம் லவங்க
மாமிது மதுர மேலமடருஞ் செங்கழுநீர் கோஷ்டம்
நாமிது சொன்னேமெண்[ணே] (ணெய்) நற்பதஞ்செய்து மூழ்கே.
(சஅ)

(கு. - பு.)—
இந்நூல் வைத்திய சாத்திரத்தைச் சார்ந்ததாகும். ஆசிரியர் இன்னு ரென்று குறிக்கவில்லை யாயினும் மேல் நூலின் ஆசிரியரான தேரைய ரேயாயிருக்கலாமென்று தோற்றுகிறது. இதில் நாற்பத்தெட்டுப் பாடல் களைக்கொண்டு வாத ரோகங்கள் முதலாய் நேத்திர ரோகங்கள் காறும் உள்ள பல்வேறுவித நோய்களின் விவரங்களும், அவைகளைப் போக்கு தற்காம் பல்வேறுவகை நன்மருந்துகளின் முறைகளும் விளக்கமாகக் கூறப்பட்டிருக்கின்றன. வைத்தியஞ் செய்கின்றூர்க்கு இது மிகவும் உப யோகமாக விருக்கும் என்பதில் ஒரு சிறிதும் ஐயமின்று. இப்பிரதியில் நாற்பத்தெட்டு செய்யுட்களு மிருக்கின்றன.

---

## No. 2299. கொக்கோகம் உரையுடன் (மதனநூல்).
## KOKKŌKAM WITH COMMENTARY (MADANANŪL).

**Substance, palm-leaf. Size, 14¾ × 1-2/8 inches. Pages, 32. Lines, 6 and 7 on a page. Character, Tamil. Condition, injured. Appearance, old.**

Incomplete. Contains Adhyāyas 6 and 7 only.

Same work as that described under Nos. 188, 439 (*b*) and 540 of the Triennial Catalogue of Tamil Mss. Vols. II, IV and V.

**Beginning :**

பொன்னி நாட்டு றைதரும் பூவைமார் சொலும்
நன்னய மொழிகளும் நயப்பின்நாடியே
பண்ணிய புறத்தொழில் கலவி பண்ணிய
பின்னரிற் கூடினுற் பெரிதுவப்பரே. (ω௫)

என்பது, காவேரி சூழ்ந்த சோழதேசத்துப் பெண்கள் தாம் நல்லவசனம் பாராட்டி அங்குலி சுரதம் காமாயுத மதநாங்குசம் காமமர்த்தனம் கரிகர லீலையாகிய அகத்தொழில் தவிர்த்து, நிதம்பசும்பனம் நீக்கி மைத்த லீலைகளையெல்லாஞ்செய்து போகஞ்செய்யச் சந்தோஷமாவார்கள், என்ற வாறு.
(ω௫)

தென்றிசை நாட்டுச் சேயிழை மடவார்
திரண்முலை யிறுகுறத்தழுவிக்
கன்றிட விதைய தாடனஞ்செய்து
கவரிதழ்ப்பற்படப்பருகி
யொன்றியவுகிரான் முலை வடுகாட்டி
யுயர் விரற் சும்பனவிதத்தாற்
றுன்றியே மதனத்திருநதி பெருக்கித்
தோய்ந்திடின் மகிழ்நது தோய்குவரால். (௰௬)

என்பது, தமிழ்நாடாகிய பாண்டியதேசத்துப் பெண்களை மார்புற வழுந்தக் கட்டியணைத்து மார்பின் நடுவே விடாமல் குட்டனம் தாடனம்செய்து அதரத்திற் பற்குறிகாட்டி முலைகளில் நகம் தைக்கவூன்றிக் குய்யத்திற் கரிகர லீலைசெய்து புளகித கம்பிதமாக்கிப் புணர்ச்சி செய்திடில் அவர் கணவனிடத்திலே வெகுப்பிரீதியாகிக் கலந்திருப்பார் என்றவாறு. (௰௬)

ஒட்டிய மறுயு மங்கமென்றுரைக்கும்
ஒளிபெருந் தேயத்து மடவார்
மட்டறத் தழுவுஞ் சுரத சும்பனத்தால்
மருவுவரிலங்கையின் மடவார்
எட்டுடனுரைத்த புறத்தொழிற்கலவிக்
கிரக்கமாயிரவு நண்பகலும்
விட்டுயர் காமத்திருவிழா நடத்தி
யகத்தொழிற் கலவி வேட்டிருப்பார். (௰௭)

என்பது, ஒட்டிய தேயத்துப் பெண்கள், அநாயுமதேயத்துப் பெண்கள், அங்கதேயத்துப் பெண்கள், காசுமீர தேயத்துப் பெண்கள் இப்படிச் சொல்லப்பட்டப் பெண்கள் எல்லாம் மட்டில்லாத ஆலிங்கனம், சும்பனம் சுரதக்கலவியாகிய போகஞ்செய்யில் மிகவும் அவர்களுக்கு நன்மையாம். இலங்கைநாடாகிய அச்சிமலாக்காய் காலிகொம்பு கொட்டியாரம் மட்டக்குளம்பு திரிகோணமலை, கண்டி, சிங்களம், யாழ்ப்பாணம் முதலாகிய இலங்கை நாட்டுப் பெண்கள் எல்லாருக்கும் ஆலிங்கனம் தாடனம் சும்பனம் பற்குறி நகக்குறி அங்குலிசுரதம் கீலகதாடனம் சரசவிநோதம் ஆகிய இவ்வெட்டுவகைப் புறத்தொழிலுஞ்செய்து சம்போகஞ் செய்யில் மிகவுமிரங்கி இராத்திரியும் பகலும் காமத்திருநாள் நடத்தி விநோதார்த் தங்களாய் மிகவும் நாட்டமாய் வாழ்வார்கள் என்றவாறு. (௰௭)

*   *   *   *

தேசக்கலவிக் கரணம் முற்றும்.

வேறு.

நாடு நாடுள்ள நங்கையர் வண்ணமும்
பீடு சார்ந்த கலவியும் பேசினோ
மாடவர்க்கு மரிவையர்க்குமணங்
கூடிடுஞ் சுரதாரம் பங்கூறுவாம் (௨௰)

என்பது, நாடு நாடாகிய ஐம்பத்தாறு நாட்டுத் தேசத்திலுண்டாகிய பெண்கள் தேசாசாரமும் அவர்கள் கலவி விருப்பமும் அவர்கள் சேர்ந்து கலந்திடுஞ் சுரதக் கலவி வகையும் நன்றாய் அறியும்படி சொன்னோம். இனி, அது நிற்க, முதற் பிரதமை யாரம்பமாகக்கூடும் நாயகிக்குச் சுரத வாரம்பமும் மற்றும் உள்ள நாயகிகள் சுரதாரம்பமும் நாயகன் நாயகிக்கும் அன்பு மாசையுமாகக்கூடும் சுரதாரம்பமும் ஆகிய இவையெல்லாம் சொல்வோம் என்றவாறு. (உ௰)

ஆறும் அத்தியாயம் முற்றும்.

ஆக விருத்தம் (௱எ௰௧).

ஏழாம் அத்தியாயம். சுரதாரம்பம்.

திருவுங் கல்வியுஞ் செல்வமுஞ் செல்விசே
ருருவு நல்ல விளமையு மு[றறமம்] (த்யமம்)
தருவின் மிக்கக்கொடையி னற்றகுதியும்
பரவு முன்சொலுமிங்கிதப்பார்வையே. (க)

என்பது, இலக்ஷ்மீகரமும் அழகும் சகல கலைகளும் கல்வியும் மிகுந்த செல்வமும் முப்பத்திரண்டுறுப்புக் குறைவில்லாத சுந்தரமும் சரீர உதஸாஹ பலமும் சுகபோசனவாரோக்கியமும் கற்பகத்தருவைப் போலக் கொடுக்குங் கொடையும் இங்கிதமாகிய வசனமும் பிரியமான பார்வையும் உள்ளவனே காமுகக் காளையாகிய நாயகன் என்றவாறு. (க)

* * * *

**End :**

குன்றெனு வுயரிய கொங்கைமீதுற
வென்றிவேள் விசயங்கள் வெட்டலென்னவே
யொன்றிய பற்குறி யொழுங்கு பட்டிடிற்
பன்றியின் சுவை யெனப்பகரப்பட்டதே.

என்பது, குன்றுபோல் உயர்ந்த முலைத்தலைத்திலே வெற்றி வேளாகிய மன்மதன் விசயம் எழுதிக்கட்டிய மாலை மேலே கொடி பறக்கின்றதுபோலப் பிரகாசம் பொருந்திய பற்குறியின் பெயர் வராகசும்பனம் என்று சொல்லுவார். (௪௧)

இயல்பல விடுவிடு தூர்த்த வென்றிணை
கயல்புரி கண்ணினர் கையிற் தள்ளியே
அயர்வுறு சீற்கார மரும்பச்செய்வடு
மயலுறு காமத்தை வளர்க்குந் தெய்வமே. (ரு௰.)

என்பது, நாயகி நாயகனைப் பார்த்து இப்படிச் செய்வது இயல்பல்லவே. பெண்கள் கண்டால் நகைப்பார்கள். விடு விடு விடடா விடடா தூர்த்தா விடடா தொகுத்து விடடா என்றுஞ் சுருக்குச் சுருக்கென்று தைக்கும் போதெல்லாம் ஈச்சுக்கொட்டித் தள்ளித்தள்ளிவிட இரண்டு சேல்கெண்டை போல கண்ணுள்ள நாயகிக்கு அமிருத தானங்களிலே வைத்த பற்குறி வடுக்கள் விகாரத்தை விளைவிக்குந் தெய்வமென்பது. (ரு௰)

ஆலிங்கனப் பெயர்கள், சும்பனப் பெயர்கள், நகக்குறியின் பெயர், தந்தக்குறியின் பெயர் இ[து]வை யெல்லாம் கிரந்த . . .

(கு. - பு.)—

இந்நூல் மூவருடக் காடலாக்கு 188, 439 (b) (540)-ஆகிய இந்நம்பர் பிரதிகளில் வநதுள்ள நூலேயாகும். இப்பிரதியில ஆறும் அத்தியாயத்தின் (15) பதினைந்தாவது செய்யுளிலிருநது அது முழுமையும் எழாவது அத்தியாயமென்ற தலைப்பெயருடன கூடிய "சுரதாரம்பம்" என்ற பகுதியும் உரையுடன் உள. ஏடுகள் சிதைந்திருக்கின்றன. உரை நடை நன்றாகவுளது. உரை ஆசிரியர் இன்னாரெனறு விளங்கவில்லை. எழுத்துப்பிழைகளுள.

---

## No. 2300. ஆரூட நவநீதம் உரையுடன்.
## ARŪḌHANAVANĪTAM WITH COMMENTARY.

Substance, palm-leaf. Size, 8-14/16 × 1-2/8 inches. Pages, 160. Lines, 6 on a page. Character, Tamil. Condition, injured. Appearance, old.

Complete.

An elaborate treatise on the art of Divination and Augury with the help of the signs of the zodiac, the planetary positions and aspects, the five kinds of birds, the chirping, etc., of the house-lizard, human sneezing, etc.

**Beginning :**

கடவுள் துணை.
ஆரூடநவநீதம்.

இதில், இராசியாரூடம், கிரகாரூடம், ஆரூடச் சுருக்கம், ஆரூட சக்கிரம், பஞ்சபக்ஷிச் சுருக்கம், பல்லிநூற் சுருக்கம், தும்மற்காதல் இவைகள் அடங்கியிருக்கின்றன. இது, நாகப்பட்டினத்துச் சமீபம் வடக்குப் பொய்யூரென்று வழங்குகின்ற "பொய்கைநல்லூர்" சுப்பைய தேசிகரால் மொழிபெயர்த்தியற்றப்பெற்றது. சென்னைப்பட்டினம் கவி ரஞ்சனி அச்சுக்கூடத்தில் பதிப்பித்த புஸ்தகத்தை முருச்சாம்பேடு அப்பாவு உபாத்தியாயர் எழுதத் தொடங்கியது. தாதுஹூ தை மாதம் ஐந்தாம் தேதி.

சு. வைத்தியநாத தேசிகர் இயற்றிய சாற்றுக்கவி.
பதினாறு சீர் (16) ஆசிரிய விருத்தம்.

சீர் மருவு முலகில் வளமலிசோழ நாட்டினிற்
சிறந்திடும் நாகை நகரின்
றென்பால தாகும் **வடபொய்கைநல்லூர்**தனிற்
**றேசிகரின் மரபில்** வந்தோன்
செல்வத்தினுமிகுங் கல்வியே பொருளெனத்
தென்றமிழும் வடமொழிகளும்
தேர்ந்ததிற் சித்தாந்த வேதாந்த நிச்சயத்
திறமையுணர்கின்ற நிபுணன்
அருமை செறி பஞ்சாக்கரமனுவினெறிகொண்டு
வாகம விதிப்படிக்கு
அரிய மாணுக்கருக்குபதேச குருவாகு
மன்புருவமான சுகுணன்

அறிவினால் வைத்திய நூல்வழியதாகவே
அவிழ்த விதிகளு முணர்ந்தோன்
அதுவலது சோதிட நால்வகையுளின்னமு
மரும்பொருளுணர்ந்ததிரன்
சுருதிநெறி தவறாத **சுப்பைய தேசிகன்**
சொற் பொருட் கடமை யுணர்ந்து
சுலபமா யாவர்க்கு நன்மை தீமைகளினது
சுபா சுப பலன்கள் விளங்க
சோதிட நால்வகையு ளாரூட நூல்களின்
சோதனை நிமித்த மாதி
துகளறு மாரூட நவநீத மெனுமதிற்
சொலு மிராசியாரூடமும்
பரிதி முதலாகிய கிரகத்தினாரூடமும்
பண் பாரூடச் சுருக்கம்
பார்க்கு மாரூடத்தின் சக்கிரமுமிது வலாற்
பஞ்சபட்சியின் சுருக்கம்
பல்லி நூற்சுருக்கமும் தும்மலால் வருபயனும்
பார்த்தவர்கடாம் வியப்ப
பலருக்கு முபயோகமாகவே யச்சிற்
பதிப்பித்தனன் மகிழ்ந்தே. (க)

---

சுபநிமித்த விருத்தம்.

முடிமாலை சங்குகுடைவாசி வேழம்
முழவோசை செம்பொன் மணிதேர்
கொடி வீணைகன்னி மடவார்கள் பூர்ண
குடமாயுதங்கள் கவரி
கடி மேவினோர்கள் மது கோவிறைச்சி
கனி தீபம் வெண்ணெய் தயிர் பால்
இடர் தீரிரட்டை மறையோர்கள் மன்ன
ரெதிராகிலென்றுமினிதே. (க)

இதன்பொருள்.—மகுடம், பூமாலை, சங்கு, குடை, குதிரை, யானை, மங்களவாச்சியம், சுவர்ணம், இரத்தினம், தேர், கொடி, வீணைகானம், கன்னிகை, சுமங்கலி, நிறைகுடம், அரசர்கையிற் பிடிக்கும் ஆயுதம், சாமரம், மணம்புரிந்தோர்கள், மதுக்குடம், பசுமாடு, மாங்கிசம், பழவர்க்கம், தீபம், வெண்ணெய், தயிர், பால், சமாதான வார்த்தை, இரட்டை பிராம்மணர், அரசர்கள் இவைகள் எல்லாம் எதிர்வர சுபமுண்டாம்.

துர்நிமித்த விருத்தம்.

அரவம்பன்றி நாய்கழுதை யழுதல் கலகம் தலைவிரித்தோர்
சிரமுண்டி தரந்தகர் முடவர் சூனைவிறகு பிற சோறு
பரவுந்தவத்தோர் மாசடைந்தோர் பஞ்சோடெண்ணெய் மருந்த [னலம்
நரிதோலு லெலும்பு நரை கண்டால் நன்மை சிறிதும்பெற
வரிதே. (உ)

இதன் பொருள்.—பாம்பு, பன்றி, கருநாய், கழுதை, அழுகுரல், கலகக்குரல், தலைமயிர் விரித்தோா, மொட்டைததலையர், குருடர், மூடவர், குசப்பாண்டம், விறகுக்கட்டு, முதுகிலவரும் அனனம், தபசிகள், அங்க வீனர், பஞ்சுப்பொதி, எண்ணெய்க்குடம், அவிழ்தவகை, அககினி, நரி, தோற்சுமை, எலும்பு, நரைத்தலையா இவர்களை எதிர்வரக் காரிய ஹானி யாம். (உ)

விநாயகர் தரிசனம்.

மூஷிக வாஹனு, மோதக ஹஸ்த்தா,
சாமள ரூபா, மஹேஸ்வர புத்ரா.

கடவுள் துணை.

ஆரூடநவநீதம்.

விநாயகர் துதி.

சீர் சிறந்த திறைகடல் வைப்பினிற்
பார் விளங்கப் பலித்திடுஞ் சோதிடத்
தாருட நவநீத வரும்பொருட்
கார் நல்லியானை கழலிணை யேற்றுவாம். (க)

நவக்கிரக துதி.

சூரியபகவான் துதி.

திருவருள் சுரந்து மிக்க செகத்துயிரதனைக் காக்க
வருபிதாவாகித் துன்ப வல்லிருளதனை யோட்டி
மருவிய சுகத்தை நல்க வாயிரங்கதிர் பரப்புங்
குரவனும் பரிதிபுத்தேள் குரைகழற்றலைமேற்கொள்வாம். (க)

சந்திரபகவான் துதி.

செல்வமோ டின்ப நல்கிச் செகத்துள வுயிர்கட்கெல்லாம்
பல்கிடு மாதாவாகிப் பாயிருளதனை யோட்டிப்
புல்கியே யமுதமாகப் பொழிந்திடக் கதிர் பரப்பி
நல்கிய சோமனுர் தம் நற்பதந்தலைக்கொள்வோமே. (உ)

அங்காரகபகவான் துதி.

செயமொடு வீரமாண்மை தீரமாம் பராக்கிரமங்கள்
நயமுள வெற்றிநல்கி நட்பு சோதரனேயாகித்
தயவுடன் பூமியின் பந்தானியம் மிகவுமோங்கி
யுயர்வுசெய் சேயின்பாத மொளிமலர் தலைமேற்கொள்வாம். (ங)

* * * *

கேதுபகவான் துதி.

மாதுமைபாகன் சொற்ற வரத்திஞலமுதபானத்
தேது வுமுண்டயனுகி யெவ்வுயிர்களுந்தழைக்கக்
கோதிலா ஞானமோட்சங் குருபத்தியருளுநல்கும்
கேதுவாம் பகவான் பாதம் இளர் முடிமிசைக்கொள்வோமே.

சிறப்புப்பாயிரம் ஆசிரியப்பா.

திருவருள் சிறந்த திரைகடல் வரைப்பி
னருள் வளர்ந் தொளிரு மாரண நான்குக்
கங்கமோராறுளமர்ந்த சோதிட நூல்
பங்கமில்* நான்கு பாகமாய்ப் பகுத்தது
ளாரூடந்தன்னை யாவருமெளிதிற்
றேறும்படியாய்த் தெளிவிக்கவேண்டி
ஞானப்பிரதீபிகையிலம்பாகமின்னு
மானநூற் பலவுளாராய்ந்தெடுத்து
மேல்வரும் பலனை விளக்கியே காட்டி
நால் வகையாக நவின்று **மாருட**
**நவநீதமென்று** நாமத்தை நிறீஇப்
புவனியில் விளங்கப் புகன்றுமே பஞ்ச
**பட்சி நூற் சுருக்கமும் பல்லி நூற் சுருக்கமும்**
**தட்சணத்தும் மலாற் றுன் வருபலனும்**
நன்றாய் விளங்க நற்பொருள் காட்டிக்
குன்றின்மேற்றீபமாய்க் கோதற வமைத்தனன்
**நாகர்புரி**யெனு நன்னகர்த்தென் பாற்
பூகமார் பொழிற் சூழ்**பொய்கை நல்லூரி**
லந்தி வண்ணனுகமத்துரைத்திடுஞ்
சந்தான குரவர் தம்மிலொருவராய்
வருபரஞ்சோதியார் மரபில் வந்துதித்துக்
குருபரனாகிக் கோதிலாநெறி சேர்
வயித்தியலிங்க மாதவன் வரத்தால்
செயத்துடனளித்த திறமிகும் புதல்வன்
அம்பணிசடிலத்தரனடிக்கன்பு செய்
சுப்பைய தேசிக னெனுந்தூயோனே. (க)

* முகூர்த்தம், சாதகம், சிற்பம், ஆரூடம் எனும் இந்நான்குமென்ப.

நூற்பெருமை.

ஆரூட நவநீதப் பலனை நன்றாயறிவதற்குத்தரைமெழுகிப் பீடம் [வைத்துச்
சீருடனே புத்தகத்தை யதன்மேல்வைத்துச் சிறந்த மலர்கொண்டு [நவக் கோடம்மைப்
பேர்பெறவே பூசித்துத் தூபதீபம்பேணி நிவேதனமுடனே [சொர்ண புஷ்பம்
நேருடனே தான் சாத்தித்தியானஞ்செய்து நினைத்தெடுத்துப் [பலாபலனை நிகழ்த்தவேண்டும். (உ)

நவக்கிரங்களுக்குமுரிய தானியம்.

கோதுமை செந்நெற்றுரை குறும்பயர் கடலை மொச்சை
தீதிலா வெள்ளுளுந்து செப்பிய கொள்ளோடொன்பான்
ஆதித்தன் முதலானோர்க்குமவ்வவர் வாரந்தன்னில்

சொல்வோர் மகிமை.

ஆரூட நவநீதத்தின் அதன் பலனறிய வேண்டிற்
சூரியன் முதலாயுள்ளோர் துணைப்பதம் மனதிலோர்ந்து
பாரினிலலகைவைத்துப் பகுத்தெண்ணி யறிந்துபார்த்து
காரிய நன்மை தீமை கண்டுரை செய்வாய் நீயே. (ச)

இதுவும் அது.

சுத்தனுயிருந்து பாரிற் சோதிட வாரூடத்தா
னத்தியே வருவோர்க்கெல்லா நன்மை தீமைகளுரைத்துக்
குற்றமில்லாமலியாருங் கொடுத்திடும் பொருள் கைப்பற்றிச்
சத்தென யாருமேற்றத் தரணியில் வாழ்வாய் நீயே. (ரு)

கேட்போரியல்பு.

கருங்கடற் சூழ்நதவைப்புக் காசினி மாந்தர்க்கெல்லாம்
வருமின்பதுன்பமான வகைதனை யறியவேண்டி
பருதியாதிய நவக்கோள்பண்புணர்ந்தறி வோர்தம்மை
குரவராய் மனதிலெண்ணிக் கொண்டவரிடததிற் சென்றே. (சு)

இதுவும் அது.

வெள்ளிலை யடைக்காயோடு விரும்பு தட்சிணையும் வைத்து
உள்ளுளே யிவர்தானந்த வுண்மைசொன்னவக்கோளென்று
கள்ளமிலாது கேட்கிற் கதிரவன் முதலாயுள்ள
வள்ளலோரருள் பெற்றோர்கள் வகுத்திட விளங்குமன்றே. (எ)

இராசியாரூடம் கலிவிருத்தம்

ஆரூடப்பலனி யாருமறிவதற்
காரூடமறுபான் மொழிக்காரிய
மாரூட நவநீதத்திராசியாம்
ஆரூடமிது யாவர்க்கு முண்மையே. (க)

முன்னின்றோர்கள் மொழியுமிலக்கத்தைப்
பன்னிரண்டினிற் பகுந்ததின் மிச்சத்தை
யுன்னி ராசியாய்க் கொன்றுக்கொருபத்தி
தன்னை நீக்கியதான வரக்காண்பதே. (உ)

விபரம்.—அலகையள்ளி வைத்துப் பன்னிரண்டுக்கீந்த மிச்சம் இராயாம், அல்லது முன்னின்றார் சொன்ன[து] (தொ)கையைக்கேட்டுப் பன்னிரண்டிற் கீந்த மிச்சம் இராசியாம். அந்த இராசியைக்கண்டு இராசியொன்றுக்கு ஒரு பத்திவீதம் எண்ணிக்கண்ட பத்தியிலுதிக்கும் இராசியிற் பலன் அறிக.

இராசியாரூட அட்டவணை.

| | | | |
|---|---|---|---|
| தேவாராதனைசெய்ய. | (க) | எண்ணிய கருமம். | (ருசு) |
| ஆலயமெடுக்க. | (உ) | அகவிலை நிலை. | (ருஎ) |
| அபிடேகஞ்செய்ய. | (ங) | காலமறிதல். | (ருஅ) |
| உற்சவஞ்செய்ய. | (ச) | வருஷ நிலை. | (ருகூ) |
| உபதேசங்கொள்ள. | (ரு) | எழும்பிய வாக்கு. | (சுல) |

* * * அட்டவணை முற்றும்.

தேவதாராதனைசெய்ய. முதலாவது.

மேடம்—தேவாராதனை செய்வதாற் சுபமே.
இடபம்—சுப்பையன்வாக்கு யெப்பவும் நிசமே.
மிதுனம்—வானம் வழங்கத்தான் வளம்பெருகும்.
கடகம்—கால்முஞ்செழித்து மேலாய்வளமுறும்.
சிம்மம்—தானியமெங்குமே நிறைவெய்தும்.
கன்னி—எண்ணிய கருமம் நண்ணிற் சுபமே.

*       *       *       *

அறுபதாவது. எழும்பியவாக்கு.

மேடம்—வாக்கெழும்பியது பார்க்கவும் நிசமாம்.
இடபம்—பின்னாள் வானந் தன்னாற் பெய்யும்.
மிதுனம்—வகுத்த காலம் மிகத்துயராகிடும்.
கடகம்—எங்குந்தானியம் பொங்கும் விலையே.
சிங்கம்—இப்போதெண்ணம் பிற்பகல்பலிக்கும்.
கன்னி—காரியந்துவக்கிற் சாரியாய் வராது.
துலாம்—மருந்து கொள்ளத்திருந்துமுடலே.
விருச்சிகம்—எப்போதுற்ற நோயிப்போதீராது.
தனுசு—மருத்துவஞ்செய்யப் பெருத்திடு நோயே.
மகரம்—சேர்த்தமணிதனல் வாய்த்திடுந்திருவே.
கும்பம்—நண்பனலென்றுந் திண்பகை யிலையே.
மீனம்—தத்துக்கொள்ளினு முற்றதோசுகமே.

இராசியாரூடம் முற்றிற்று.

பஞ்சபட்சிச் சுருக்கம் வெண்பா :

வல்லூறிருபதமும் வளராந்தை தாளிணையும்
சொல்லரிய காகத்துணையடியும்—வல்லபமாங்
கோழி யிருசரணக் கோகனக மஞ்சை கழல்
வாழியென நெஞ்சே நீ வாழ்த்து. (க)

*       *       *       *       *

உன்னி யொருவனுரைத்த முதலெழுத்தைப்
பண்ணிப்பறவைய தாய்ப்பாவித்து—வந்நேரம்
உத்த பறவைக் குணத்தை யோர்ந்து பலாபலனை
நித்தியமாய்ச் சொல்லு நிலை (உ)

*       *       *       *       *

பல்லி நூற்சுருக்கம் :

வல்லியுமை தனக்கு மகேசுவரனார் தாமுரைத்த
பல்லி நூற் சூட்சம் பகரவே—நல்லவருள்
தந்தருளுஞ் செந்தமிழ்க்குகந்த பொருளுக்குதவி
தந்தருளுந்தந்தி முகன்றாள். (க)

*       *       *       *       *

இவ்விதமாய் அருக்க நிலையறிந்து கெளளி சொன்ன திசை
தொட்டுப் பதினாறு கோணமாக்கிப் பலன் சொல்லுவது.

*       *       *       *       *

தும்மற் காதல் :

மனிதர் கடும்மறனில் வருபலன் கட[னே] (மை)
வியந்துரைக்க விநாயகன் காப்பு

---

தும்மலுற்ற வாரத்தை கிழக்கே வைத்து
சூழ்வலமாய்ச் சனிக்கிழமை யீருயெண்ணி
சம்மதிச்சதிசை தொட்டுச் சனி மட்டெண்ணித்
தககதும்மற் பலனவற்றைச் சாற்றக் கேண்மின்
தம்மிலே கலகமொன்று விடரிரண்டு
தகுதியுள்ளோர் வரு மூன்று அலைவு நான்கு
சும்மை நிதி வரவைந்து சுகந்தாறு
துலையாத கலக மேழ்துன்ப மெட்டே. (க)

இதன் பொருள். தும்மிய வாரத்தைக் கிழக்கேவைத்து வலமாகச் சனி வரைக்கும் எண்ணி நிறுத்தி தும்மிய திக்கு முதல் சனி வரைக்கு மெண்ணிக்கண்டது பலன்.

* * * * *

முன்வலத்தும்மலின் மொய்த்த தீமையாம்
பின்னிடத்தும்மலிற்பெருக்க நன்மையாம்
மன்னிய தெற்கொடு வடக்கு வாயுவிற்
நுன்னியதும்மலாற் சுக முண்டாகுமே.

முற்றும்.

---

வீரிய புஷ்டிக்கு மருந்து:

நூறு வருஷத்திய வேப்பமரத்தினுடைய பட்டை சுமார் இரண்டு சேர் பொடி செய்து அதில் பசுவின் மோர் ஒரு படிவார்த்துப் பிறகுச் சீனு கற்கண்டு நாலு சேரும், சீரகம் இரண்டு சேரும் இதில் வேளைக்குப்பட்டை ஊறின மோரில் அரைபடி வார்த்து அதில் ஒரு சேர் கற்கண்டு அரை சேர் சீரகம் தூள் செய்து ஷெ மோரில் போட்டுக்காலமே சாப்பிடவும். ச.சு. தினம்.

தாது புஷ்டிக்கு மருந்து :

மூன்று வருடத்திய வெல்லத்தில் இரஸ்தாளி வாழைப்பழமும் பசுவின் நெய்யும் கலந்து தினம் தினம் சாப்பிடவும். ஒரு பலம் வெல்லத்துக்கு இரண்டு வாழைப்பழமும் ஒன்றரைப்பலம் பசுவின் நெய்யும் சேர்த்துக் கொள்ளவும்.

**(கு. - பு.)—**

இந்நூல் சோதிடவகையில் ஒன்றுன் "ஆரூடம்" என்கிற சாத்திரத்தைச் சார்ந்ததாகும். நாகப்பட்டினத்துக்கருகாமையிலே பொய்யூரென்று வழங்கப்பெறும் "பொய்கைநல்லூர்" என்னும் ஊரிலே சிறப்புற்றிருந்த தேசிகர் மரபிலுதித்தார் "சுப்பைய தேசிகர்" என்னும் புலவரால் இயற்றப்பெற்றதாகும். இந்நூலாசிரியர்தம் பெருமையானது முதலிற் காணப்பெறும் ஓர் சாற்றுக் கவியான ஆசிரிய விருத்தப்பாவான் நன்கு உணர்த்தப்பட்டிருக்கிறது. இதிலே இராசியாரூடம், கிரகாரூடம், பஞ்சபட்சியாரூடம், பல்லிக்காதல், தும்மற்காதல் என்கிறவைகளாகிய பல பகுதிகள்

கொண்டு ஆருடப் பலன்கள் வெண்ணெய் திரட்டிஞற் போலச் செவ்வனே விளக்கப்பட்டிருககின்றன. ஆகவே இந்நூற் பெயர் உவமவாகு பெயரா மென்க. இப்பிரதியில் இந்நூல் முற்றும் உள்ளது. இந்நூல் ஏற்கனவே சென்னை மாநகரில் "கவிரஞ்சனி" என்று அச்சுக்கூடத்தில் பதிப்பிக்கப் பெற்றதென்றும், அதனை முருச்சாம்பேடு அப்பாவு உபாத்தியாயர் என்பவர் தாம் தாதுருஞ் தைமீ" ருஉ இவ்வோலையேட்டகத்தில் எழுதிவைததார் என்றும்தாய இச் செய்திக் குறிப்பும் முதலேட்டில் குறித்துவைக்கப் பெற்றுள்ளது. இதுமுடிந்தபினனர் வீரிய புஷடிக்கு ஓர் மருந்து முறையும், தாது புஷ்டிக்காம் ஒரு மருந்து முறையும் எழுதப் பெற்றிருக் கின்றன. ஏடுகளும் அங்கங்கே ஒரு சிறிது சிதலுற்றிருக்கின்றன. அங் கங்கே எழுத்துபபிழைகளும், சில சொற்பிழைகளும் காணப்பெறுகின றன.

---

## No. 2301. பாண சாத்திரம் நூறு.
## BĀṆA ŚĀTTIRAM NŪṞU.

**Substance, palm-leaf. Size, 13 10/16 × 1⅝ inches. Pages, 52. Lines, 5 on page. Character, Tamil. Condition, much injured. Appearance, old.**

Complete.

A treatise, in verse, on the making of various kinds of fire—works. Attributed to Bhōgar.

**Beginning :**

போகர் பாண சாஸ்திரம். பூவர்த்தி.

சொல்லரிய வல்லபைதன் பாதத்தாணை
துதித்துமே சுத்தன் திரி . . . . . .
. . . . . லுப்புப்பலமே நாலு
நலமான கெந்தக மோர் பலமே யொன்று
. . . . . . . ன்று காணுதிம் மூன்றுங் கண்மைபோலாட்டிச்
சொல்லரியக . . . . . .
சொருகியே யடைத்திட்டுச் சொரூபம்பாரே. (க)

பாரப்பாபூவர்த்தி . . . . . . . .
. . . . . . . லுப்புப்பலமேயாறு.
சீரப்பா கெந்தக மொன்றரைப்பலந்த . . . . . .
. . . . . . . . . . . . . . . . . ல்
மூரப்பா மூன்றையுமேயரைத்துமைபோல்
முனை தண்டவாளப் பொடியொன்றரையே . . . . .
. . . . . . . . . . . . . . . ளோதான்
கடாவிக் கொளித்திடவு திரும்பூவும் பாரே (உ)

பூவுதிரப்புருசுப்பண்ற புதுமைகேளு
புகழான . . . . . . . . . .
மேவு திருங் கெநதியதுப் பலமேயொன்று
மென்மையாம களளிக்கரியது வொன்ருய்த்
தாவுதிரும் . . . . . . . . . . . .
தண்டவாளப்போடியொன்றே முக்கால் சேர்தது
மாவு திருமண் குழாய்க்குளளே கெட்டித்து
மணத . . . . . . . . .
* * * * *

தருகுமே யாகாசப்பாணம் பண்ணத்
தரைதனிலே பிறக்கு முப்புத்தானே பலமே
மருகுமே மகத்தான கெந்தியொன்று
மானிலத்திற் கள்ளி சுட்ட கரிதாணிரண்டு
வருகுமேவகை மூன்றும் அரைத்துமைபோல்
வகையாக மூங்கிற்குழற்குட்கிட்டித்து
மருகுமே மணத மிருகீழ் மேலிட்டு
மடங்காமல் எழும்பிட வாலநாலுக் கொன்றே. (அ)

ஒன்ருகக் கதலியிஞர் தன்ஞற் சுற்றி
யுறுதிபெற வன்னத்தையரைத்துப்பூசி
நன்ருகச் சரவர்த்தி குழாய்க்குள் வைத்து
நலமாகக் கொளுத்திவிடவெழும்பும்பாரு
சென்ருகும் வெடிமருந்து அடியில வைத்து
செகமறிய வந்தரத்தில் வெடிக்கும்பாரு
நன்ருகு மத்தாப்புச்சர மருந்து வைத்தால்
நல்வெளிச்சம் பொரி பறக்கும் நவிலக்கேளே. (கூ)

**End :**

சூ [ஷ்ஷ] (ட்ச)ம்பார் பூவர்த்தி சொல்லக்கேளு
சுப்பிரமங்கம்பி உப்புப் பதினைஞ்சாகும்
நா [ஷ்ஷ] (ட்ச)ம்பார் கெந்தி யொனறு காரியொன்றே கால்
நன்ருக வரைத்துமே நளினமாகத்
தா [ஷ்ஷ] (ட்ச) ம்பார் தண்டவாளம் நாலொக்கொன்று
துப்பாமல் பொடிதது மே தானே சேர்த்து
ஆ [ஷ்ஷ] (ட்ச) ம்பார் கடு தாசிக் குழைக்குள்ளிட்டால்
அகலாத பூவர்த்திப் பாரும்பாரே ( rா)

பாரப்பா வின்னும் பூவர்த்திகேளு
பக்குவமா முப்பெட்டுக்கெந்தியொன்று
ஆரப்பா கரியொன்று மூன்று மொன்ருய்
அரைத்திடுவாய்மைபோலே யகலவே தான்
சேரப்பா அரப்பொடி நாலுக்கொன்று சேர்த்துச்
செகமறியப்பிசிறியே சேர்த்துவிட்டாற்
பூராப்பா பூவர்த்தியாகும்பாரு
பூப்போலே யுதிருமென்று புகலிஞரே (rாக)

புகலிேனும் பாணவிதனைப் புதுமை செய்யப்
புலவோர்களிதைப் பார்த்துப் பொறுத்துக்கொள்ள
நல்கினும் நன்றாக வணக்கஞ் செய்து
நகையாமற் பிழைபொறுத்து நாயேன் மீதிற்
சொல்லினுமிம் முறையே பிரகாசமாகச்
சு [ஷ்ஷ] (ட்ச) முள்ள பெரியோர்கள் தயை செய்வார்கள்
பல்கினும் பாண புத்தகமே யொன்று
பாடினும் பாட்டு நூற்றிரண்டுமாமே (௱௨)

(1) அரப்பொடியென்று சொல்லப்பட்டதெல்லாம்
தண்டவாளப் பொடி என்று அறிந்து கொள்ளவும்.

(2) கரியென்றதெல்லாம் களிக்கரி யென்றும் அறி
ந்து கொள்ளவும். மடபபளி பகவதி சகாயம்.

(கு. - பு.)—

இந்நூல் பலவகையான பாணங்களைத் தயாரிக்கு மாற்றைச் செய்யு ம் வகையான் உணர்த்துகின்றது. இதில் அநேகவிதமான பூவர்த்திகள், பலவகையான புருசுகள், மத்தாப்புக்கள் நட்சத்திர பாணங்கள், சக்கிர வாணங்கள், ஆகாச பாணங்கள், நக்ஷத்திரமாலை புருசுகள், மரம், சாமரம் முதலியவைகள் போன்று விசித்திரமாய்க் கிளம்பியெரியும் புருசுகள் இன்னும் இன்னோரன்ன பலவகையான பாணம் முதலியனவற்றைச் சுலபமாகத் தயாரிக்கும் முறைகள் பல நன்கு விளக்கப்பட்டிருக்கின்றன. போகர் இயற்றியதாகவுள்ளது. நூற்று ஒரு செய்யுட்களான் அமைந்துளது. மிக வருமையானது. இறுதியில் இந்நூலின் மொத்த எண்ணைத் தெரிக்குஞ் செய்யுள் ஒன்று ௱௨ ஆஞ் செய்யுளாகவுளது. முதலிலே சில ஏடுகள் அடியோடு மிகவும் முறிந்தும் அங்கங்கே பல ஏடுகள் சிதைந்துமிருக்கின்றன. எழுத்துப்பிழைகள் காணப்படுகின்றன.

---

## No. 2302. திருவரங்கப் பதிற்றுப்பத்தந்தாதி.
## TIRUVARAṄGAPPADIṞṞUPPATTANTĀDI.

**Substance, palm-leaf. Size, 10-9/16 × 1 inches. Pages, 104. Lines, 4 on a page. Character, Tamil. Condition, much injured. Appearance, old.**

This is a work in 100 stanzas in praise of Śrī Raṅganātha, as worshipped in the temple at Śrīraṅgam. The name of the author is Vēṅkaṭācala-dāsa.

**Beginning :**

திருவரங்கர்பதிற்றுப்பத்தந்தாதி.

ஆழ்வார் வணக்கம் : காப்பு.

தென்பார்சிறந்தொளிர் சீரரங்கேசர் திருவடிமே
லன்பாற் பதிற்றுப்பத்தந்தாதி சூட்டியருள் பெறநாந்
தன்பாற்கருணை பெருகி மறைத்தமிழ் தந்துலகை
நன் பாற்பொருத்திய மாறன் பதாம்பு [திருவடி] நாடுகவே

எம்பெருமானார் வணக்கம்.

வாதாம் பற்பல சமைய மயக்கிருடீர்ந்துர்கனுய்ய வந்து தோன்றிச்
சாதாந்தற் கருத்திரங்கிச் சந்தேயி விபரீதந்தலை சாய்ந்தோட
வேதாந்தப் பழம் பொருளாம் விசிட்டாத்து விதப்பொருளை
விளக்கியாண்ட
போதாந்தத் தொளிர் பூதூ ரெதிராசன்றிரு
வடிகள் போற்றல் செய்வாம். (உ)

ஆசிரியன் வணக்கம்—வெண்பா :

ஓதித்தொழுது மேலுள்ளமே நாரணனை
ஆதிக்குரவாருள் பெறுதும்—நீதித்
தருமந்திர மருவுந் தன்னருளாலுண்மைத்
திருமந்திர மளித்தான் சீர் (ங)

நூல் :

உலகமெங்கு நிறைந்த பரப்பிரமமாகி
யொளிர் திருநாராயணவென்றுயர் நால்வேதம்
பலகலை [நூல்] (தேர)யனரன் வானவருமேத்தப்
பதின்மரொடு பாகவதர் பணிந்து போற்ற
வுலகில் புகழார்ந்த திருவரங்க மேவி
யனந்தன் மேற் கண்வளரு மாதி மூர்த்தி
இலகிய நின்றிரு வடியே சரணம்புக்க
வெளியேனையருள் புரிந்தாளெம்பிரானே (க)

எம்பிரா னெவ்வுயிர்க்கு முயிராமீசன்
இந்திரன் சந்திரமவுலி யிறையோன் வேதன்
நம்பிரானென்று பணிந்தேத்த நாளு
நயந்தருளு நளினமலர் மங்கைநாதன்
வெம்பிராவணனையுயிர் வீட்டிமேனாள்
வீடணனுக்கருளரங்கவி மானமேய
தம்பிரான்றிருவடியாரடியார் பாத
தாமரையேதலைக்கணியாந்தமியனேற்கே || உ ||

* * * * * *

ஒன்றாகிப் பலவாகி யாவுமாகி
யொன்று பல வன்றாகி யாவுமின்றி
நின்றாய் நீயென்றுணர்த்துமல்லால் வேதம்
நின்னிலைமையுள்ளபடி யின்னுந்தேரா
தென்றாலிங்கியாவரஃதறியவல்லார்
எம்பெருமானெழிலரங்கத் தெந்தாயுன்றன்
குன்றாலன்றானிரை காத்திலங்கை வென்ற
குடக்கடலிற் குடைந்தாடிக்குளிக்கின்றோமே (அ)

**End :**

நவில்வ வெலா நின்கிளவி நடிப்பவெலா
நின்செயலே நனவிற்ருேன்றுந்
துவிதமெலா நின்னினைவின் சூட்சியன்றே
சுதந்தரமென் ருெழும்பனேற்கு
புவிமுதலாயாவு நீ பொருந்துயிர்கள்
பாவைகளுநன் புணர்ப்பினுடிக்
குவிவவெலா நினனுளளே யாதலினுற்
திருவரங்கக் கோயுட்டேவே. (கூகூ)

தேவரெலாந்தொழுதேத்துந்திருவாங்கக்
கோயில் வளர் தேவ தேவன்
காவலெலாமி யாவருக்கு மாயினு
னடியேற்குக் கதியுமானுன்
மூவரெலா முடையவரென்பாரவரு
ளிவனே மெய்முதல் வனுை
ஞேவலிலா முத்தொழிற்கு மொரு மூர்த்தி
யுளனுனுலதந்தானே. (ா)

**Colophon :**

பிறங்குலக மிசையோங்கு பெருவீடாந்
திருவரங்கம் பெரிய கோயில்
அறங்குலவ வருள்புரியு மழகிய நம்
பெருமாள் பொன்னடி மேலன்பின்
நிறங்குலவு **பதிற்றுப்பத்தந் தாதித்**
தமிழ் மாலை நிலவமென்மை
திறங்குலவு குணநேசன் **வேங்கடா
சலதாசன் சேய்தான் மாதோ** (ாக)

(கு. - பு.)—

இந்நூல், திருவரங்கம் பெரிய கோயிலிற் கோயிற் கொண்டெழுந்தருளியிருக்கும் திருவரங்கநாதனென்னுந் திருமாலின்மீது துதிரூபமாய் அந்தாதித்தொடையான் அமைந்த நூறு செய்யுட்களாலாகிய தொரு பிரபந்தவிசேடமாகும். இப்பிரதியில் இந்நூல் முற்றுமுள்ளது. இந்நூலாசிரியர் "வேங்கடாசலதாசன்" என்னும் பெரும் புலவராவாரென்று இறுதியேட்டிற்காணும் நூற்ருேராவது செய்யுளால் தெரிகின்றது. செய்யுள் நடை நன்ருகவுளது. அச்சு இயற்றியதாகத் தெரியவில்லை. நூலாரம்பத்தில் ஆழ்வார் வணக்கம், எம்பெருமானுர் வணக்கம், மந்திர குருவணக்கம் ஆகிய இவற்றைத் தெரிக்கும் மூன்று செய்யுட்களுமிருக்கின்றன. ஏடுகள் மிகச்சிதலுற்றிருக்கின்றன.

---

## No. 2303. அகத்தியர் ரஸவாத சூத்திரம் எட்டு.
## AKATTIYAR RASAVĀDASŪTTITRAM EṬṬU.

Substance, palm-leaf. Size, 8½ × 1 and 9-6/16 × 1⅜ inches. Pages, 6. Lines, 6–9 on a page. Character, Tamil. Condition, injured. Appearance, old.

Complete.

Begins on fol. 1-a.. The other works herein are Akattiyarsūttiram-padimūnṟu, 4-a. Do sūttirampadinā ṟu, 10-a. Ḍamarānandarsūttiram, 17-a. Akattiyar sūttiram padineṭṭu, 24-a. Maccamunisūttiram, 31-a. Akattiyar pakṣiṇi, 43-a. Do Daṇḍakam, 59-a. Ābhicārika prayōgamuṟai with commentary 74 a.

Same work as that described under No. R. 238 (*d*) of the Triennial Catalogue of Tamil Manuscripts, Vol. II.

(கு. - பு.)—

*இந்நூல் மூவருடக்காடலாக்கில் 238 (d) நம்பர் பிரதியில் வந்துள்ள நூலேயாகும். இப்பிரதியில இநநூலின் எட்டுச்செய்யுளுமிருக்கின்றன. ஏடுகள் சிதலுற்றிருக்கின்றன. இதற்கு "அகத்தியர் சுருக்கம் எட்டு" என்று மற்றொரு பெயரும் உண்டு. இரஸவாத விஷயமானது.*

---

## No. 2304. அகத்தியர் சூத்திரம் பதின்மூன்று.

## AKATTIYARSŪTTIRAM PADINMŪNṞU.

**Pages, 11. Lines, 6 on a page.**

**Begins on fol. 4-a-of the Ms. described under No. D. 230".**

Complete.

Thirteen verses, on Alchemy and Yôga, attributed to Akattiyar, and said to be a summary of 1,200 verses on the same subject by the same author.

**Beginning :**

*அகத்திசுவரர் ஆயிரத்திருநூற்றுக்குச் சுருக்கம் பதின்மூன்று.*

*ஆதியென்றும் பூரணைத்தாய் அருளைப்பற்றி*
*அறைகிறேனுயிரத்திருநூற்றுள்ளே*
*சோதியென்று வாதத்துடன் சூட்சுமந்தன்னை*
*சுருக்கமுடன் பதின்முன்றிற்குருவைச் சொல்வேன்*
*பேதியிலே பேதியப்பா சத்தபேதி*
*பெருமையினை மாணுக்கர் பேசக்கேளு*
*சாதியிலே வாதமது அஞ்சுமாச்சு*
*சாற்றுகிறேன் வெளியாகச் சாற்றக்கேளே.* (க)

*சாற்றுகிறேன் உலகுக்குப்பத்து மட்டுஞ்*
*சதிரான பெரியோர்க்கு அறுபத்துநாலு*
*போற்றுகிறேன் சித்தருக்குத் தொண்ணூற்றுறு*
*புகழான விருடிகட்கு நூறுமாகும்*
*மாற்றுகிறேன் ஞானிகட்கு ஆயிரந்தானுகும்*
*மைந்தனே சொல்லிவிட்டேன் ஆருஞ்சொல்லார்*
*தேற்றுகிறேன் இப்படியே வாதமாச்சு*
*செகச்சால குருவிடத்திற்றேறக்கேளே.* (உ)

கௌப்பா ரேசகத்திற் பழக்கம்பண்ணு
கெட்டியான பூரகத்தி லேர்ந்து வாங்கு
மூளப்பா கும்பகத்தில் அங்ஙெனறானு
முனையான சுழினைபற்றி முட்டிப்பாரு
நீளப்பா மனோன்மனியையகண்டத்தூனு
நிலமான வாசியையிலலதிரியேத்து ?
வாளப்பா தன்மய மாஞ்சோதி கண்டால்
வாமெல்லாமுந்தனுக்குச் சித்தியாச்சே (௧)

* * * * *

ஆருமென்ற கெந்தியொன்று பூரமொன்று
அழகான வீரமொனறு கெவுரியொன்று
வேகமென்ற சூதமொன்று பச்சையொனறு
விதமான சரியிடையே பதங்கமேற்று
போகமென்ற வாலுகையின் நீரை வாங்கிப்
புகழாகத் துருசதுக் குச்சுருக்கையேற்று
மாகமென்ற செம்பு வெள்ளி ரெண்டிற்குக்கும்
மகத்தான வாதமெல்லாம் மலைபோலாமே (௫)

* * * * * *
* * * * * *

**End :**

பேச்சென்ற மவுனசத்தி யொளியுங்கண்டு
பெற்றதல்லோ பேரென்று பேசினார்கள்
காச்சென்று அறுவரையுங் கண்டமூர்த்திக்
கனம் விட்டு இறங்கியல்லோ கொங்கணரைக் கேட்டார்
ஆச்சென்ற மவுனியல்லோ இறங்கிவந்தார்
அப்பவுமே மவுனியென்று அறியமாட்டார்
கோச்சென்ற மவுனத்தைத் தெளிந்த பேர்கள்
கோசிவனே யானுக்காற்றேர்ந்து பாரே (௰௨)
பாங்கான மனோன்மணியின் சோதி கண்டாற்
பலபலவாம் வாதமெல்லா மவர்க்கேசித்தி
தூங்காமலாடற்றிற்றூங்கு தூங்கு
சொட்டர்களே மாய்கை வந்து கொல்லும்பாரு
தேங்காமன் மவுனத்தினீரியேத்தித்
தெண்டிரையிற் சஞ்சார மாதிமேவிப்
பூங்காகும் மதமடக்கியஞ்சும் போக்கிப்
பூலோக ஞானியென்று வாழ்வார் முற்றே.
அகத்தியர் சூத்திரம் பதின்மூன்று.

**(கு. - பு.)—**

இந்நூல், அகத்தியர் தாம் இயற்றிப்போந்த ஆயிரத்திருநூறு பாடல்கள் கொண்டுள்ள நூலொன்றுக்குச் சுருக்கமாகப் பதின்மூன்று பாடல்களால் அமைந்துள்ளது. இதுவும் அகத்தியராலேயே இயற்றப் பெற்றதாகும். இச்செய்தியினை இதில் முதற்பாடலிலே ஆசிரியர் உணர்த்தியிருக்கின்றார். இப்பிரதியில் இந்நூல் பாடல்கள் முற்றுமிருக்கின்றன. எழுத்துப்

## No. 2305. அகத்தியர் முப்பூ பதினாறு.
## AKATTIYAR MUPPŪ PADINĀṚU.

Pages, 14. Lines, 6 on a page.

Begins on fol. 10-a of the Ms. described under No. D. 2303.

Complete.

Same work as that described under No. R. 168 (e) of the Triennial Catalogue of Tamil Manuscripts, Vol. II.

(கு. - பு.)—

இந்நூல் மூவருடக் காடலாக்கு 168 (e) நம்பர் பிரதியில் வந்துள்ள நூலேயாகும். இப்பிரதியில் இந்நூல் முற்றுமிருக்கிறது. இறுதியில், வேறு: "பாரிந்த நூலைப் பகர்ந்தாலெழுநரகம், பாரிநத நூலைப்பண்பதாய்ப்பூசிப் பாய், பாரிந்த நூலைப்பதினாறு சுருக்கமென்று, பாரிந்த. " . . . ." என்றதாய் ஓர் பாடல் அரைகுறையாய்க் காணப்படுகிறது.

---

## No. 2306. இடமரானந்தர் சூத்திரம் பதினாறு.
## IḌAMARĀNANDAR SŪTTIRAM PADINĀṚU.

Pages, 14. Line, 6 in a page.

Begins on fol. 17-a of the Ms. described under No. D. 2303.

Complete.

Same work as that described under No. 267 (j) of the Triennial Catalogue of Tamil Manuscripts, Vol. II.

(கு. - பு.)—

இந்நூல் மூவருடக்காடலாக்கு 267 (j) நம்பர் பிரதியில் வந்துள்ள நூலேயாகும். இப்பிரதியில் இந்நூலின் பதினாறு பாடல்களுமிருக்கின் றன. இப்பிரதியில் முதற் பாடலின் ஈற்றடியில் "ஞானந்தம் பேசி வைத்தேன் **எழுவத்தஞ்சில்,** நலமான வாதவித்தை நவிலுவேனே" என் றிருப்பது அப்பிரதியில் "ஞானந்தம் பேசி வைத்தேனெழு **நூற்றஞ் சில்,** நலமான வாதவித்தை நவிலுவேனே" என்றதாயிருக்கிறது. இவ்வாறே எல்லாப்பாடல்களிலுமே அநேகமாகப் பாட பேதங்கள் காணப் படுகின்றன. எழுத்துப்பிழைகளிருக்கின்றன.

---

## No. 2307. அகத்தியர் சூத்திரம் பதினெட்டு.
## AKATTIYAR SŪTTIRAM PADINEṬṬU.

Pages, 13. Lines, 6 on a page.

Begins on fol. 24-a of the Ms. described under No. D. 2303.

Complete.

A treatise on *Yōga*, on the *Siddhis* to be attained by *Yōga* and on Alchemy. The author claims that this work contains rare and

**Beginning :**

அகத்தியர் சுருக்கம் பதினெட்டு.

பாரப்பா ரவிமதியு மொட்டிப்பாரு
பார்க்கையிலே யிருவழியும் ஒன்ருய்ப்பாரு
நேரபபா கண முன்னே நிறுத்திஞக்கால்
நெற்றியிலே கருணை நதி நெருங்கியூறுங
காரப்பா அவ்விடததை நித்தம் நிததம்
கண்ணோட்டம் பார்த்தல்லோ கருதிப்பார்த்து
ஊரப்பா வருடமொன்று நாட்டமாஞல்
உனமுகந்தான் ஒளியாலே யுற்றுக்காணே. (க)
காணவேயினனு மொரு கருவைக்கேளு
கதிரவன்ருனுதிக்கு முன்னே கதிரைப்பாரு
ஊணவே சுழிதனிலே யுற்றுப்பாரு
உரைப்பான சுருபமது வொளியாய்க்காணும்
நாணவே நான் சொன்னபடியே நாட்ட
நகாரமது நயனமதில் நாடி நிற்கும்
பூணவே மூன்றெழுத்தும் புருவமய்யம்
பொருளாக வைத்துமுனே பூசை பண்ணே (உ)
பண்ணப்பா சிவயோக சமாதி நிட்டை
பரிவாக விருநேரம் பாங்காய் நீயும்
கண்ணப்பா சிமிட்டாதே தன்னைப்பார்த்து
கண்டுகொள்ளவேண்டுமென்று கருத்தைநாட்டி
நண்ணப்பா பஞ்சகற்பஞ் சிறசிந்போடு
நன்மையுடன் ஒருபோது திறமாய்க்கொள்ளு
திண்ணப்பா வொருபோது வமுதுகொண்டால்
திசைநாடி பத்துமொன்ருய்ச் சேருந்தானே. (ங)

தானே தான் தனித்திருந்து பாரு பாரு
சங்கல்பம் விகல்பம் ரெண்டுந்தள்ளி நீயும்
ஊனோடேயுயிராக வுறவேயாகி
உள்ளாடி நின்ற சிவன்றன்னைப்பார்த்து
ஆணோடே பெண்ணிரண்டு மொன்ருய் நின்ற
அடிமுடியும் நடுவாகி யமர்ந்து நிற்கும்
மானோடு மழுவேந்திக் கருவும் போத்தி
மந்திரமாம் வாசிதனில் வாழுவாரே. (ச)

வாராக வின்னமொரு வரிசை கேளும்
வன்மையுட ஹுறங்கவென்ருல் வன்மை சொல்வேன்
நேராகக் கால் நீட்டி வலக்கை மேலாய்
நெறிதவருப் பூரணத்தை நினைந்து நீயும்
பாராமல் நீயுறங்கும் போதுதானே
பற்றி நின்ற மனமங்கே பாய்ந்து நிற்குங்
காராமற் காண்பதற்குக்காணெண்ணுது
கண்டவர்க்கிந்நூஈறன் முத்தியென்னே (ரு)

முத்தியிது மோட்சமிது வொன்றுய்ப்பார்த்து
முக்கியமிது ஒருவருக்குஞ் சொல்லொண்ணுது
சத்தியது சம்புவிது சராசரமுமிது வாஞ்
சத்தி வித்தை சதாசிவனுந்தானே தோன்றும்
பத்திமுத்தி காண்பதற்கு மூலமேவிப்
பார்த்தவர்கள் கெதியடைவார் பார்க்கார்க்கில்லை
சத்தி நடுவொ. . . . . . . . . . . . . . . . .

* * * * * *

சும்மா நீ பார்க்கையிலே மனத்தையங்கே
சுழிமுனையிலொட்டியங்கே காலைப்பாரு
அம்மா நீதேவியென்று அடங்கிப்பாரு
அப்போவல்லோ காயசித்தி யோகசித்தி
அம்மாளு மப்பாவு மதிலே காணும்
ஒரு மனதாய்ச்சுழி முனையில் மனத்தையூன்று
நம்மாலே யானதெல்லாஞ் சொன்னேமப்பா
நாதாக்களித்தை யெல்லாம் பாடார் காணேன. (அ)

காணுகின்ற வோங்காரம் வட்டஞ்சுற்றி [ம] (க்)
கனலெழும்பிக்கண்ணிலே கடுப்புத்தோன்றும்
பூணுகின்ற இடகலையிற் பம்பரம்போலாடும்
பொல்லாத தேகமெல்லாம் இறுகிக்காணும்
ஆணுவங்களானதெல்லாமொழிந்து போகும்
அஞ்சுவிதம் பொறிவழியே யடியினிற்கும்
ஊணுகின்ற வெழுத்தெல்லாந் தேவியாகும்
ஓங்காரக்கம்பமென்ற வுண்மைதானே. (கூ)

* * * * * *

**End :**

ஆமிந்த வுறுதி சொல்லார் சித்தரெல்லாம்
ஆதிதொடுத்தந்தவரை யழகாய்ச் சொன்னேன்
ஓமிந்த வென்னுடைய சுருக்கம்போலே
யொருவருந்தான் உரைக்கவில்லை யுறுதிமெத்த
நாமென்று சிவசாபந்தீர்த்தேனப்பா
நாட்டிலுள்ளோர் எல்லோரும் பிழைக்கவேண்டி
தாமதங்களில்லாமல் தன்னைக்கார்த்துச்
சரயோகஞ் செய்தவனே தலைவனுமே (ம்கூ)
தலைவனுயிருப்பதற்கு வாதசித்தி
சாராமலிருந்து விட்டால் தவம் மெய்யாமோ
கலைவகுத்து வாசிகண்டு வழலைமார்க்கங்
கண்டவர்கள் நாதவிந்து காணலாகும்.
அலைதனிலே யொதுங்குமுப்பு அண்டபிண்டம்
அமர்ந்து நிற்கும் எழுபிறவி யர்ணவாறே
உலைதனிலே யெழுகாய்ச்சல் கம்பியுப்பு
உண்மைதனையறியார்க்கு வாதமாமே (ம்எ)

ஆமென்று வாதத்தின் கருவையெல்லாம்
அம்பதிலே சொல்லிவிட்டேனலேயவேண்டாம்
வாமென்ற வாதவித்தை வயித்தியமுஞ் சொன்னேன்

. . . . . . . . . . . . . . . . . . . . . . .

. . . . . . தானறும்மலேயாமல் தன்னேக்கண்டு
தயங்காமல் மயங்காமல் தலேவணங்கி
எமமென்று திரிந்தாலே வாதமாமோ
எழுபிறைப்பையறிந்து இனியியம்புவாயே. (௰அ)

முற்றும்.

(கு. - பு.)—

இந்நூல் அகத்தியரால் இயறறப்பெற்றது. பதினெட்டுச் செய்யுட்களாலாகியது. இதில் முற்றுமுளது. இந்நூலில் யோகாப்பியாசமுறைமையினேயும் அதன் வாயிலாகச் சகல சிததியும் பெறுமாற்றைத் தெரிவிக்கின்றது. இரஸவாத விஷயமும் நுதலப்பெற்றுள்ளது. இதனே மிக வருமையான நூலென்று ஆசிரியர் தாமே புகழ்ந்து கூறியிருக்கின்றுர். எழுத்துப் பிழையுடன் காணப்படுகின்றது. சில பாட்டுக்களில் இரண்டொரு அடிகளில்லாமலிருக்கின்றன.

---

## No. 2308, மச்சமுனி சூத்திரம்.
## MACCAMUNI SŪTTIRAM.

Pages, 22. Lines, 9 on a page.

Begins on fol. 31-a of the MS. described under No. D-2303

Complete.

This is a summary, in verse, by Maccamunivar, of his own treatise, entitled *Maccamunivar Perunūl Eṇṇūṟu*, and dealing with Alchemy and Medicine.

**Beginning :**

மச்சமுனி சூத்திரம்.

நடுமெய்யகாரவகாரத்திரயமே சொல்
கட விகடத்தானே முகன் காப்பாம்—திடமான
சாரத்துறையுஞ் தனிச்சூடன் தண்ணீருங்
காரத்துறை கனகங்காண். (க)

பொன்னணிமூலர் போக்கிரச வாதம்
நன்னயமாக நாட்டினுன் பாட்டன்
கன்னியினுண்ட சவுக்கார மன்றியே
பின்னெருகாரம் பிதறுகின்றேனே. (உ)

ஆரமிடு மூவரின் பூ வயறிந்தபின்
சீருளவாதிபாய்த் திட்டஞ் செலுத்துவேன்
பாரிற் பதிறு மூளத்தாய்த்தோன்றிச்
சீருளவாதியாய்ச் சிவமானவாறே (௩)

வானான பூவினடுக்கவே வாழுவர்
கூறுன பூவையைக் கூர்மையிற் காய்ச்சிப்
பிதற்றுஞ் சிவத்தைப் பாணியிற் சுத்தியாய்ப்
பாறையிலுப்பை யெழுதாங்காய்ச்சே. (ச)
காய்ச்சிய மூப்பூ கனத்த குருவாக
வாய்ச்சிடவேதான் வகாரம் பலிக்கும்
மூச்சிடு மூடக்கசடருக்கெய்தாது
பாய்ச்சிடு மந்தப் பசுபதிபாசமே. (ரு)
பசுவின் குணத்தைப் பகருவேன் மக்களே
பொசிப்புண்டு சோம்பல் போகம் பெருத்தவன்
அசுக்கை மனத்தனுகா வெளிமட்டை
முசுக்குணமில்லா மூதேவிமாடே. (சா)
மாடென்பான் கன்றென்பான் மக்கள் பிதாவென்பான்
கூடென்பான் பேயென்பான் குலதெய்வமேயென்பான்
ஞானியென்பான் யோகியென்பான் நல்லோரைத்தான் பழிப்பான்
நாடென்பான் சண்டாளன் நாய்ப்போற்றிரிவானே. (எ)
திரிவான் குளங்கரை தீர்த்தங்கள் தானென்பான்
திரிவானவன் கோவிற்சென்று வலஞ்செய்வான்
சுருதியினுதந்தூசிப்பான் விந்துவை
அரிதான பெண்ணை ஆசிப்பான் கோபியே. (அ)

*        *        *        *

*        *        *        *

ஆடியசுண்ணம் வழலையிதப்பா
பாடிப்படித்துப்பாரில் விள்ளாதே
கூடிக்குழைந்து குளிகை செய்வோர்க்கு
நாடிவழலையே நாட்டுவகாரமே. (சயஉ)
வகாரத்துறையும் வாலையைப்பூசி
யகாரத்தையோதி யடங்குஞ்சிவந்தான்
மகாரத்திலே வளைந்த சமரசம்
உகாரத்திலே உளைந்திடுஞ்சத்திக்கே. (சங)
சத்தியமாகச் சொன்னேன் தவறில்லை
முத்தியும் புத்தியும் முதல்ஞானமுட்படச்
சித்திக்க வேதையுஞ் செப்பினே னெண்பதில்
பத்தியறிவாகா பார்ப்போர்?கருளுவோமே. (சச)
அருளும் புண்ணுக்க ரப்பரெனக்குத்
திருமூல ரெங்கள் சித்தப்பனுகும்
பொருள்காட்டும் முன்னோர் போகரெனக்குத்
தருமச்சமாமுனி தானுமென்பேரே. (சரு)
பேராம் பெருநூற்பெருமை யெண்ணூறு
மாராய்ந்து பார்த்தும் அதிலிந்த வெண்பதும்
சீராகப் பார்த்துச் சிறுபிள்ளையு மாடும்
பாரநான் தீட்சை பகருமொருநூறே. (சசா)

நூறும் நிகண்டு நுண்மையாய்ச் சொன்னேன்
வேறொரு நூலும் விளம்பவுமில்லை
தேறுமின்னூலிற் சகமெல்லாம் பொன்னாகும்
பாரான வாதி மகிழ்ந்து செய்வாயே. (சஎ)

வாய்த்த வழலையில் வீரத்தைக் கூட்டிச்
சாய்த்திடு கல்லுப்புக் கப்பியே யூதிடு
தேத்திய சுண்ணஞ் சகமெய்த்த சாரஞ்சேர்
நீத்துரை நீராம் பூரத்தை நீத்திடே. (சஅ)

நீத்திய சுண்ணத்தால் தாளகம் நீறும்
காத் ரி தாரத்தால் கருநாகம் நீறும்
சூத்திர வங்கத்தாற் சூடடு நிமிளையே
சாத்து நிமிளை சாரத்தால் கொல்லுமே. (சகூ)

கொல்லுமே சாரங் கூறுந்துருசியை
வெல்லுமே சாரம் வெண்சுணணமாயிடுஞ்
செல்லுமே தங்கந்திடமான சுண்ணமாம்
வல்லிய சூதமகத்தான சுண்ணமே. (ரும)

**End :**

விடாதே பிரமன்மேல் வீடுமால் பட்டிணம்
படாதே மேல்ருத்திரன் பட்டணமாகு
மடாதே மயேசுவரன் மகத்தாமடிமுடி
கொடாதே கொடுக்குங்கூறு மவுனமே. (அக)

மவுனத்தொளியாய் வளர்ந்த சதாசிவம்
மவுனத்தொளியாம் வளர்ந்திடுஞ்சம்பு
மவுனத்தின் வாசல் வழியைத்திறக்க
மவுனத்தமுர்தம் வழலைக் கோப்பெண்ணே. (அஉ)

ஒப்பான வாயிரமாவிகள் கண்டவன்
எப்போதுஞ் சாகாதிருப்பான் சிவனவன்
அப்பா பராபரத்தாண்டவெ(ழு)]ளு]த்தைச்
செப்பச் சிவமாஞ் சேரவுமுற்றுமே. (அங)

தேவி சகாயம்.

மச்சமுனியார் சூத்திரம் எண்பது முற்றும்.

(கு. - பு.)—

இந்நூல், ‘ மச்ச முனிவர் பெரு நூல் எண்ணூறு ’ என்னும் நூலுக்கு சுருக்கமாய் அமைந்துள்ளது. எண்பது செய்யுட்களாலாகியது. மச்ச முனிவராலேயே இயற்றப்பெற்றதாகும். இப்பிரதியில் இந்நூல் முற்றும் உள்ளது. இதில் இரஸ வர்தத்திற்காம் சில கருக்களும், சுண்ணம், பற்பம், தைலங்கள் முதலியனவும் கூறப்பட்டுள்ளன. எழுத்துப் பிழைகள் அங்கங்கே காணப்படுகின்றன. இதில் இந்நூலாசிரியர் தாம் இயற்றிய வேறு நூல்களின் பெயர்களும் கூறப்பட்டிருக்கின்றன. இதனை சகூ, சஎ-ஆஞ் செய்யுட்களால் உணரலாம்.

## No. 2309. அகத்தியர் பட்சிணி.
## AKATTIYARPAKṢIṆI

Pages, 31. Lines, 8 on a page.

Begins on fol. 43-a of the MS. described under No. D-2303

Complete.

Same work as that described under No. 261 (*m*) of the Triennial Catalgoue of Tamil Manuscripts, Vol. II.

**Beginning :**

அகத்தியர் பட்சிணி.

பூவது வாசமாகும் பொருந்திய தண்டகததை
நாவது வோதுநதானே நடுவனையிருந்துகேளு
போவது வருவதாகும் பூரணங் காப்புத்தானே
ஆவது கோடிவிதைதையானநதர் காப்புத்தானே. (க)

மண்ணது விண்ணுமாகி மாநிலத்துதிததோர்க்கெல்லா
மொண்ணது பொருளதானென்றுற்பனம் விளக்கமாகக்
கண்ணது மெய்யுமாகிக் காரண முடிவாய் நின்ற
வெண்ணுமித் தண்டகந்தா னியம்புதற் காதிகாப்பாம். (உ)

**End :**

விருததம்.

திருமகள் பதியிலாகித் திருவருவாகமேவி
யருவுருவாகிமுந்த வகத்தியன் என்ற நாமங்
கொண்டனனிசன வந்து குறுமுனியென்றுறைக்கப்
பண்டுள்ள நநதியென்பால் பட்சிணியென்றுர் முற்றே. (௱உ௰கூ)

பட்சிணி நந்திமூலர் பாடலும் நம்மைப்பார்த்துப்
பட்சிணி பாடினுர்கள் பகர்கின்ற தண்டகத்தில்
நிச்சய மிந்நூறன்னி னிகழ்த்திறேமேகமொன்றுய்
அச்சமுமில்லே பார்ப்போர்க் காதியாண் கற்ப மூற்றே. (கட௰)

முற்றிலு நூறுங்கூட்டி முப்பத்திரண்டும்பாரு
வுத்தருமதுவாய்க்காணு முற்பனத்துறுதி தோன்றும்
கற்றவரென்னுறன்னேக் கைவிட்டாரார் தான்பார்
செத்தபேரில்லேயிந்நூல் சே[ற்](ர்ப்)பது முத்தியாமே. (௱ட௰க)

அகத்தியர் அருளிச்செய்த பட்சிணி முற்றும்.

திருவுளச்செயல் உண்டானபடியே முடியும்.

(கு. - பு.)—

இந்நூல் மூவருடக் காடலாக்கு 261 (m) நம்பர் பிரதியிலே வந்துள்ள நூலேயாகும். இப்பிரதியில இந்நூல் முற்றும் உளது. அப்பிரதியிலே முதலிற் சில காணப்பெறுத காப்புச் செய்யுட்கள் இப்பிரதியிற்காணப் படுகின்றன. அப்பிரதியில் (௧உ௰௪) பாடல்களே யிருக்கின்றனவாதலின் இறுதியில் உள்ள பாடல்கள் இங்கு எழுதிக் காட்டப்பெற்றிருக்கின்றன. அதற்குமிதற்கும் அங்கங்கே பலவாகப் பாடபேதங்களிருக்கின்றன. ஏடுகள் சிதலுற்றுள. எழுத்துப்பிழைகள் மிகவாகக் காணப்படுகின்றன.

## No. 2310. அகத்தியர் தண்டகம்.
## AKATTIYAR DAṆḌAKAM.

Pages, 29. Lines, 7 on a page.

Begins on fol. 59-a of the MS. described under No. D-2303

Complete.

Same work as that described under No. 164-a of the Triennial Catalogue of Tamil Manuscripts, Vol. II.

(கு. - பு.)—

இந்நூல் மூவருடக் காடலாக்கு 164 (a) நம்பர் பிரதியில் வந்துள்ள தேயாகும். இப்பிரதியிலும் இந்நூல் முழுமையுமிருக்கிறது. அங்கங்கே அதற்குமிதற்கும் பிரதிபேதங்கள் காணப்பெறுகின்றன. எழுத்துப் பிழைக ளிருக்கின்றன.

---

## No. 2311. ஆபிசாரிக பிரயோகமுறை உரையுடன்.
## ĀBHICĀRIKA PIRAYŌGAMUṞAI WITH COMMENTARY.

Pages, 11. Lines, 9 on a page.

Begins on fol. 74-a of the MS. described under No. D-2303

Incomplete.

Deals with witchcraft and magic for a malevolent purpose. The name of its author is not known.

**Beginning :**

(மங)

ஆலடிச் சொரித்தவளை யைங்காயம் வெள்ளைப்பூண்டு
மேலிடுங் கருவுமுன்னே யியம்புமந்திரங்கள் நூறும்
மாலையிற் காலைதன்னில் வளந்ததோரிடத்தில்வைக்க
மேலெலாமதுவேயாகும் பின்னுமிப்படிச் செய்யுந்தானே. (மச)

என்பது, சொரித் தவளையைக்கொண்டு வந்து ஐங்காயமும் நல்ல பாம்பின் விஷப்பல்லும் நாட்டினிற் கருவுங் கூட்டித் தவளையைச்செலுத்தி வாயை யறுத்து ஆறுநரம்புகொண்டு மாலைகட்டி மூலமந்திரம் (ாஅ) நூற்றெட்டுரு செபித்து மாலையிலாவது காலையிலாவது காளி கோவிலுக்குப் பலி கொடுத்துத் தூப தீபங்கொடுத்துப் புதைக்கச் சொரிக்குஷ்டமாகும் என் றவாறு. (மச)

செய்யதோர் கொட்டாங்காயுந் திறமாகத் தும்பையொன்றும்
பையதுசக்கிரங்கள் மந்திரங் குருவுங்கூட்டி
மைய்யத்தில் மரிக்கடத்தினம் சாணத்திற் புதைக்கப்பின்னே
கைய்யினிலோடுங்கொண்டு போவாரேகத்தபேர்கள். (மரு)

என்பது இரட்டைச்சரட்டையில் தவளையைக்கொண்டுவந்து கால்நறுக்கிப் போட்டுக் கவுதும்பைக்கு வெள்ளிக்கிழமையிற் காப்புக்கட்டித் தீப தூபங் கொடுத்து வேர் பிடுங்கிவந்து வளையம் ஆடிச்சரட்டைக்குள்ளேகூடப் போட்டு மூலமந்திரம் (ாஅ) உரு செபித்துத் தேவி சக்கிரம் எழுதிக்

கூடப்போட்டு ஆறு நரம்பு மலைவாய்க்கட்டிக் காலையிலாவது மாலையிலா வது வாசப்படியில் வைக்கவும். ஊரைவிட்டு ஓடிப்போவான். திரும்ப கோசலகோமயத்தில் சுத்தி பண்ணி ஓடுகிற தண்ணியில் விடவும் என்ற வாறு. (௰௫)

பேருடன் கருவுந்தொட்டுப் பின்னவன ஐங்காயங்கூட்டி
ஊரொடு சுற்றிவநது ஊமத்தம் வேரிற் புதைக்க
மாரொடு மதிகுலைந்தூமத்தங்காய் தின்றுப்போலும்
ஆரெனும் வெரியதாகுமயர்வாரே யறிந்துகொள்ளே. (௰௬)

என்பது, ஒரு ஊமச்சியூமத்தகையும் ? எடுதது நீர்க்குழி மண்ணுங்கருவும் ஐங்காயமும் ஊமத்தை விரையும் வாயைப்பிளந்து அதுக்குளளே போட்டு ஆறு நரம்பால் கட்டி அவனிருக்கிற ஊரைச்சுற்றி வந்து மூல மந்திரம் (௱அ) உரு செபித்துப்புதைக்கவும பைத்தியங்கொள்ளுவான். திரும்ப அதையெடுத்துப் பாலிலே போட்டு ஓடுகிற தண்ணியிலேவிடவும் என்ற வாறு. (௰௬)

**End :**

செகத்தினிற் ச்மசானருத்திரன் இருநூறு உருவே சொல்லி
அகத்தினிற் கருவிரண்டு அப்பிர ங்கள்ளிக்கட்டை
முகத்தினி லேங்காயமிட்டு மின்னடிகீழே வைக்க
மகத்தான கருமமெல்லாம் மருவிநின்றுடுமென்றே. (௪௫)

என்றது, மலமும் நாட்டினிற் கருவுங் காலடி மண்ணும் ஐங்காயமும் வஸ்த்து விட்டரைத்துத் திருகுக்கள்ளிமுடியிலே துளையிட்டு அதுக்குள்ளே செலுத்தி வாயை உள்ளிச்சோறுகொண்டு மூடித் தேவி பூசை செய்து மின்னடியின்கீழே வைககவும், தாக்கும். திரும்பவெடுதது ஓடுகிற தண் ணியிலே விட்டுக்கட்டையிலே பிளந்து எடுத்துவிடவுமென்றவாறு. (௪௫)

பருவினகழுவெனும்பும் மணிவிரல் நரம்புங்கோத்து
வெருவியவில்லுகட்டி விளம்புறக் கழுவுதன்னைக்
கருதிய கருமமெல்லாங் காலடி மண்ணிலாகுஞ்
சுருதிய மருகநெல்லைப் பொரியெனச் சொல்லுவாரே. (௪௬)

என்பது, கழு நரம்பு எடுத்து முதுகுத்தண்டெடுத்துவந்து * * * * * வெளவால் பிடித்துத் தோலையுரித்துக் காளியுருவெழுதி அவன் பேரும் எழுதி மலமும் நீர்க்குழி மண்ணும், நாட்டினிற்கருவும் ஐங்காயமும் வஸ்த்துவும் விட்டரைத்துப் பூசினபின்பு காளியுருவெழுதிப் பேரும் எழுதி மருக்காறை முள்ளுகுததி இரணவீரபத்திரகாளி மந்திரம் (௱அ) உரு செபித்துச் சித்தியாக்கிப் பூசை பலியும் கொடுத்துக் காலடிக்கருவுங் கூட்டி வஸ்த்துவிட்டரைத்து ஓட்டினில் வீரபத்திரகாளியைச் செபிக்க மாற் றில்லை மரணமாம் என்றவாறு. (௪அ)

திருச்சிற்றம்பலம்.

(கு. - பு.)—

இந்நூல் “ ஒட்டியம்,” “ சல்லியம் ” என்ற நூலே போன்றதாய் ஆபிசாரிக கருமங்கள் பலவற்றையும் இயற்றுதற்கான சில பிரயோக

முறைகளையுணர்த்துகின்றது. இதுபோல ஒவ்வொரு காமங்களும இன்னின்னம் இயற்றல் வேண்டும் என்று நுதலிப் பல கருக்களையும் அவைகளை உபயோகிக்குமாற்றையும் நூலாசிரியர் நன்கு தெரிவித்து இருக்கின்றார். அங்கங்கே சில குறிப்புச சொற்கள் காணப்படுகின்றன. தெற்றென அவையிற்றின் பொருள்கள் விளங்கவில்லை. நூலாசிரியர் இனுறுரென்று தெரியவில்லை. இப்பிரதியில் ஆதியில் (ச) நான்கு ஏடுகளில்லை. இறுதியில் (உ௰) ஆம் ஏடுமில்லை. ஆகவே அவற்றிலுள்ள பகுதி நீங்கலாக மற்றைய பகுதிமாத்திரமேயுள்ளது. ஒவ்வொரு பாட்டுக்கும் ஒரு விளக்க உரையும் உடன் எழுதப்பெற்றுள்ளது. இந்நூல் இத்துணைத்தென்றும் இன்ன பெயரிற்று என்றும் என்னுதிய செய்தியொன்றும் ஒருவாற்றானும் விளங்கவில்லை.

இது முடிவுற்றபின்னா சுபாசுப நிமித்தவிஷயமான மூன்று பாடலும், "குட்டிச்சாத்தான்" விஷயமான ஒரு மந்திரமும் எழுதப்பெற்றுள.

---

## No. 2312. வைத்தியமும் மந்திரமும்.

### VAIDYAM & MANTRAM.

Substance, palm-leaf. Size, 7-10/16 × 1¼ inches. Pages, 150. Lines, 9-11 on a page. Character, Tamil. Condition, injured. Appearance, old.

Incomplete.

Contains old Indian Medical recipes, and magic incantations and spells and magic diagrams believed to be efficacious in curing diseases.

**Beginning :**

வைத்தியமும் மந்திரமும் :—

நாடி பரீட்சையறிய.

ஏசுங்குடியிலிடார் நன்று எதிர் நின்று
பேசும் மனையாளிற் பேய்நன்று—நேசமிலா
வங்கணத்தீ நன்று வலியபகை வாழ்விலாச்
சங்கடத்தினல்லதே சாவு.
அன்னமே கோழியோனுன் மயிலென நடக்கில் வாதம்
பின்னையேராமையட்டை பெருத்திடிற் பித்தமென்க
சொன்னவா மயிலினல்லாய் சுற்றிய தவளை பாம்பு
அன்னமேயையமென்று அறிந்துகொள் நாடிதானே. (க)

* * * *

இதில் ஒரு மாத்திரையும் திரிகடுவும் வெதும்பிப் பொடி செய்து . . . . . . . தேனும் இஞ்சிச்சாறும் விட்டு இரண்டு நேரமுங் கொள்ளப் பதினெட்டு வாதம், எண்பது வாயுவு, இருபத்தாறு சத்தி குன்மம், வலி குன்மம், எரி குன்மம், அ. . . மல் பித்தம் பதினாறும், குன்மம் பைத்தியத்தோடே சேர்ந்தும் குடல் செழிக்கை, வாயுவு, முகவாதம், மண்டைச் சூலை, பீனிசம் பதினெட்டு, நாசியடைப்பு, கபால வாயுவு, தலைவலி, பிடரி வலி, வாதம், செவி நோயும், கெந்த தாளியும், தொண்டை

நோவு, நெஞ்சு நோவு, மு . . ல் கண் வலி, அண்ட வாதம், குட்ட வாதம், ஆநந்த வாயுவு, அந்திர வாயுவு, உள் வலிபபுப் பிற வலிபபு. * * * * முழஙகால முட்டித் திமிர் வாதம், நடுக்கு வாதம், இவையெல்லாநதீரும். மற்றுமுள்ள வியாதிக்கெல்லாம் அனுபானததுடனே செய்தால் குண மாம். பத்தியம் : பசுவின் பால், பசுவின நெய், துவரம்பருப்பு, பச்சைப் பயறு இவைகளாம்.

மகாதாளிச் சூரணம் :—தாளிச்சப்பத்திரி, சுக்கு, மிளகு, திப்பிலி, இலவஙகப்பட்டை, இலவங்கப்பத்திரி, ஏலம், நாகேசுரம், இலவங்கம், கோஷ்டம், தூம்பிராஷ்டகம், திப்பிலிமூலம், கொத்தமல்லி, கச்சோர மாவது, கிச்சிலிக்கிழங்கு, கடுக்காய், தாணிக்காய், நெலலிப்பருப்பு, கொடி வேலி வேர், வெட்டிவேர், இலாமிச்சம் வேர். . . . . மாவது மேதிப் பால் தற்கோலப்பொட்டு இரேணுகம், கோரைக்கிழங்கு, சடாமாஞ்சில், நல்ல சந்தனம், அகில் சந்தனம், ஆக வகை உயஎ வகைக்கு வராக னெடை (சு) ஆறு. இந்தப்பிரகாரம் கொண்டுவந்து உலர்த்திச்சூரணம் பண்ணி அதுக்கு இரட்டிப்பு சர்க்கரைகலந்து பிசைந்து தினம் அரை பலம் தேனில் இரண்டு வேளையும் சாப்பிடவும். இதுக்குத் தீரும் வியாதி. வாயுவு, பைத்தியம், சிலேஷ்மம், பாண்டு, சோகை, சூலை, அதிசாரம், சுவாசகாசம், சுரம், சீதம், தலை சுற்றல், தலை வேதனை, மனசு செரிச்சது,? அக்கினி மந்தம், அன்னத்துவேஷம், அரோசிகம், சூலையெரிவு, சிலேசம், அதிவிரணம், விசூசி, ஏப்பம், விக்கல், வெளுப்பு, உடம்புவிட்டுவருகிறது, சருவ வாயுவு சுரம், நாடியில்லாமலிருக்கிறது, கால் அசந்து போகிறது, அசீரணம், உதர சோஷணம் முதல் இரத்த பித்தமும், இரத்தம் எடுக்கிறதும் தீரும். வீரிய விருத்தி உண்டாம். பததியம் : கைப்பு, புளிப்பு, கடுகு, கலியாணப்பூசணிக்காய், பாகற்காய், அபத்திய பத்திய முதலான வாத வஸ்துக்கள் தவிர்த்துக் கொள்ளக் குணமாம்.

**End :**

மறுதோன்றிக்குப் பேய் விட்டுப்போம்.

மருதோன்றி மரத்தில் கிரகண காலத்தில் கிரகணம் விடச்சே வெட்டி விழத்தட்டிக் கண்டமாக்கி நறுக்கி, உலர்த்தி, ஒரு பானையிலிட்டுத் தைலம் வடித்து அத்தைலத்தைத் தீப தூபங்கொடுத்து இதுக்கு மந்திரம் "பகரி சுவாகா உம் பட்" என்று பன்னீராயிரம் உரு செபித்து இந்தத் தைலத் துக்கு முப்பலி கொடுத்துச் சுத்தமானதொரு தலத்தில் வைத்துக்கொள் ளவும். யாவர் ஒருத்தர் பேய்ப்பிடித்தபேர் அவரை, அந்தத் தைலத் திலே திலதமிட்டுக்கொண்டு எதிரிச்சுப்பார்க்கப் பேய் போகிறேன் என்று அபயமிட்டுப்போம். மரணம் முற்றும் * * * * * * * * * * *

புத்தியுண்டாக : தேவதாளி சமூலமும் சூரணம் பண்ணித் தேனில் குழைத்து விழுங்கப் புத்தியுண்டாம்.

மழுவெடுக்க : கைத்தாழஞ்சாறும் வெண்ணெயும் விடிய நேரத்திலே விழுங்கிச் சிறுகீரை வேர் பல்லில் அடக்கி மழுவெடுக்கவும்.

பெருந்துத்தி வேர் நீரிற் பிசைந்து காலில் தடவி அக்கினியிலே நடக்கலாம். தாளியிலைச்சாறும் கொத்தான்சாறும் காலிற்தடவி நெருப்பில் நடக்கலாம் வேகாது. எண்ணெயில்லாமல் விளக்கெரிய. வெள்ளிய சீலையில் ஆலரசு [யிறளி] (இறலி) இம்மூன்று பாலும் சீலையிற் பிடித்துத் திரிபண்ணி விளக்கேற்ற எரியும்.

முள்ளில் நடக்க : சேப்பு நெரிஞ்சில் வேரும் ஓரிலைத்தாமரை வேரும் தலைமாற்றிக் குளிசமாடி வாயிற்போட்டுக்கொண்டு நடக்க முள்ளு தையாது.

எருமைநாக்கும் அணில்பிசசும் செம்பு மோதிரத்தில் சத்தாக அடைத்துப் போட்டுக்கொண்டு தென்னைமரத்தைத் தொடக் காய் உதிரும். புலி பாயாமலிருக்க : மகிழம்விரையை வாயில் அடக்கிப்போகப் புலி பாயாது. பெருங்காயமும் வெங்காயமும் அரைத்துக் கத்தியில் தடவிக் கட்டிவிட அந்தச்சாவல் நிக்காது. ஓரிலையரைத்து அரிசியில கலந்து விடியநேரத்தில் திண்ணவிட்டுப் போருக்குவிடக் குத்துதையாது. நேர்வாளப்பருப்பு உருக்கிப் பஞ்சில் துவட்டிக் கத்தியில் தடவிக்கட்டக் குத்து தையாது. குப்பைமேனி வெள்ளிநாள் காப்புக்கட்டிச் சனிக்கிழமை நாள் பிடுங்கி அந்த இலையைக்கசக்கிச் சாற்றை அரைக்கழஞ்சு ரஸத்திலேவிட்டு நன்றாய் சாரித்து வைத்துக்கொண்டு அந்தவேரைக் குளிசமாட்டித் தலையில் வைத்துக்கொண்டு அந்தமருந்தைச் சாவல்கொண்டி

(கு. - பு.)—

இந்நூல், நெடுநாளாக வைத்தியர் மாந்தரீகர், இவர்கள் கையாண்டு வரும் தொன்றுதொட்டு வந்த அனுபவ வைத்திய முறைகளையெடுத்துணர்த்துவது. இதிலே பல்வேறுவகையான எல்லா நோய்களுக்கும் உரிய நன் மருந்துகள் விளக்கப்பட்டிருக்கின்றன. அத்துடன் பல மந்திர யந்திரங்களும் பொறிக்கப்பட்டிருக்கின்றன. (௩௯) ஆம் ஏடுமுதல் அதிகமாக மந்திர யந்திரங்கள் காணப்படுகின்றன. இவைகளல்லாமல் பல அருமையான விநோதமான விஷயங்களுக்குரிய கருக்கள் பிரயோகிக்குமாற்றையும் விளக்கியிருக்கிறது. பல ஏடுகள் மிகவுஞ் செல்லரிப்புண்டு முறிந்தும் படித்தற்கியலாதவாறு இருக்கின்றன. எழுத்துப்பிழை மிகவும் உள்ளது. நூலாரம்பத்து நாடி நிதானமறியச்சில செய்யுட்களிருக்கின்றன. அன்றியும் அங்கங்கே இடையிடையே இரண்டொரு வைத்தியப் பாடல்கள் காணப்படுகின்றன. இடையில் 43லிருந்து 51 வரை, 60, 62, 67, 70, 71, 74 இவ்வெண்களிட்ட ஏடுகள் காணப்பெறவில்லை.

---

## No. 2313. கொங்கணர் கடைக்காண்டம்.

## KOṄKAṆAR KAḌAIKKĀṆḌAM.

Substance, palm-leaf. Size 12 1¼ inches. Pages, 114. · Lines, 6 on a page. Character, Tamil. Condition, sligh injured. Appearance, old.

Incomplete.

Contains 211 stanzas only.

Same work as that described under No. 19 of the Triennial Catalogue of Tamil Manuscripts. Vol I.

(கு. - பு.)—

இந்நூல் மூவருடக் காடலாக்கு 19-ஆம் நம்பர் பிரதியில் வந்துள்ள நூலேயாகும். இப்பிரதியிலே (211)-ஆவது செய்யுள் வரையிலுமே உள்ளது. ஷை நம்பர் பிரதியில் "கொங்கண தேவர் ஐநநூற்றிரட்டு" என்ற பெயரான் உள்ளது. இப்பிரதியின் தலையிலே "கொங்கணர் கடைக்காண்டம்" என்று இந்நூலுக்குப் பெயர் எழுதப்பெற்றிருக்கிறது. எந்தப்பெயர் தகுதியுடைத்தோ? "கொங்கண தேவர் கடைக்காண்டம்" என்ற பெயரான் ஷை காடலாக்கு 275 (a) ஆவது நம்பரில் வருணித்துக் கூறப்பெற்றுள்ள நூலினும் வேறுபட்டுள்ளது.

---

## No. 2314. அகத்தியர் பூரணசூத்திரம் இருநூற்றுப்பதினாறு.
## AKATTIYAR PŪRAṆASŪTTIRAM IRUNŪṚṚUPPADINĀṚU.

Substance, palm-leaf. Size 9-10/16 × 1-10/16 inches. Pages, 44. Lines, 8 and 9 on a page. Character, Tamil. Condition, injured. Appearance, old.

Incomplete.

Wants 10 stanzas in the beginning.

Same work as that described under No. 177 of the Triennial Catalogue of Tamil Manuscripts, Vol. II.

(கு. - பு.)—

இந்நூல் மூவருடக் காடலாக்கு 177-ஆம் நம்பரில் வந்துள்ள நூலேயாகும். இப்பிரதியில் முதலில் இரண்டு ஏடுகளில்லையாதலின அவையிற்றில் அடங்கிய பத்துப்பாடல்கள் நீங்கலாக முற்றும் உளது. அங்கங்கே பலபாடபேதங்கள் காணப்படுகின்றன. ஏடுகள் ஒரு சிறிது சிதைந்துள. சில ஏடுகள் நுனியில் முறிந்து கிடக்கின்றன.

---

## No. 2315. அகத்தியர்ஞானம் நூறு.
## AKATTIYAR JÑĀNAM NŪṚU.

Pages, 41. Lines, 11 on a page.

Begins on fol. 45-a of the MS. described under No. D-2314.

Complete.

Same work as that described under No. 9-a of the Triennial Catalogue of Tamil Manuscripts, Vol. I.

கு. - பு.—

இந்நூல் மூவருடக் காடலாக்கு I (a) நம்பர் பிரதியில் வந்துள்ள நூலேயாகும். இப்பிரதியில் இது முற்றும் உள்ளது. நிற்க, ஷை பிரதியின் ஆதியில் "சிந்தையுறு ஞானந்தெரியவுரை பாடுதற்கு" எனத் தொடங்கி காணப்பெறும் ஒரு வெண்பா இப்பிரதியிலே காணப்பெறவில்லை. ஏடுகள் சிதைந்து இருக்கின்றன. அங்கங்கே சில விடங்களில் பாட பேதங்கள் காணப்பெறுகின்றன. ஈற்றுச் செய்யுளின் இறுதியடியில் பாதி எழுதாமல் விடப்பட்டிருக்கிறது. பின்னர் "அகத்தியநாதர்" என்று அரைகுறையாய் ஒரு தொடர்மொழியுளது.

## No. 2316, கொங்கணர் பூஜாவிதி.

## KOṄGAṆAR PŪJĀVIDHI.

Substance, palm-leaf. Size, 16¾ × 1 2/8 inches. Pages, 6. Lines 4 on a page. Character, Tamil. Condition, injured. Appearance, old.

Begins on fol 1-a. The other works herein are Bhōgar pujāvidhi 4 a. Nāḍinidānam 20-a. Akattiyarsūttiram 24-a. Akattiyarsūttiram aṟupattunālu 26-a. Neyccīlai sūttiram 34-a. Dīpasūttiram 35 a. Palaviraṟcūttiram 36-a. Vānmīkar uṟuppuccūttiram Pattu 37-a. Vānmīkar aḍitalaikkayiṟṟuccūttiram 38-b.

This is the introductory portion of the work entitled *Koṅgaṇar Dīkṣai Pūjai Vidhi*, and dealing with Alchemy, Yōga, etc.

**Beginning :**

கொங்கணசுவாமி பூஜா விதி.

வாதமாங் குணங்கள் மூனறும்
வரிசையாய்ப் பார்க்கவேண்டிக்
கோதறு குழலாள் சொன்ன
குருவுடன் . . . . . . .
. . . . . . . . . . பூசை பண்ணிச்
சிந்தையாற் செபங்கள் செய்ய
வளர்ந்திடும் ஞானபோதம் மாதகலாதே நிற்பள். (க)

போத . . . . .பொலிவுறச் சொல்லும்போது
தீதற மூலமூர்த்திச் சீர்பாதந்தொழுது போற்றிக்
கோதையாமாயிபாதங்கு . . . . செய்து
பேதரை யகத்திவாதப் பேழையிற் சொன்ஞேமையா. (உ)

**End :**

அறிவு பிறக்கு மருள்தோன்று
மடங்காக் கவனங் கொடுபோகும்
அறிவு புறக்கு மனஞ்செயிக்கும்
. . . . .போதந்தனிற்சேர்க்கும்
பிறிவு பிறக்கும் வெகு கோடி
பெருத்த வாத சித்தியுமாம்
நெறிவு பிறக்கு மாயிபதம்
நினை. . . . . . . ப்பு முற்றே. (ιஉ)

இவை பனிரண்டு பாவும் பாயிரம்.

திருச்சிற்றம்பலம்.

கு. - பு.—

இது "கொங்கணர் தீட்சை பூஜைவிதி" என்னும் நூலின் பாயிரமாகும். பனிரண்டு பாக்கள் உள. ஏடுகள் மிகவும் முறிந்து கிடக்கின்றனவாதலின் உள்ள செய்யுட்களெல்லாம் அநேக விடங்களில் இரந்த பாதத்துடன் காணப்படுகின்றன. எழுத்துப்பிழை மிக உள. இந்நூலின் பெரும்பகுதி இத்துணைத்தென்று தெரியவில்லை. இரஸவாத விஷயமானதாகும்.

## No. 2317, போகர் பூஜாவிதி.

### BHŌGAR PŪJĀVIDHI.

Pages, 32. Lines, 4 and 5 on a page.

Begins on fol 4-a of the MS. described under No. D-2316.

Complete.

Same work as that described under No. 277 (e) of the Triennial Catalogue of Tamil Manuscripts, Vol. II.

கு. - பு.—

இந்நூல் மூவருடக் காடலாக்கு 277 (e) நம்பரில் வந்துள்ள நூலேயாகும். இப்பிரதியில் இது முற்றுமிருக்கிறது. முடிந்தபின்னர் "கூடுவது எவ்வாறு வேதாந்த மார்க்கம்," "ஆச்சப்பா பதினாறு எட்டாந் தீட்சை" என்றுங்குத்தொடங்கும் இரண்டு பாடல் அதிகமாகக் காணப்படுகின்றன. ஏடுகள் மிகவுஞ் சிதலுற்றிருக்கின்றன. சில ஏடு முறிந்துள. அநேக இடங்களில் அப்பிரதிக்கும் இப்பிரதிக்கும் பல பாட பேதங்கள் காணப்படுகின்றன.

---

## No. 2318, நாடிநிதானம்.

### NAḌINIDĀNAM.

Pages, 8. Lines, 8 on a page.

Begins on fol. 20-a of the MS. described under No. D-2316.

A treatise on the feeling of the pulses, on the diseases caused by the derangement of the three humours, viz. *Vātam, Pittam, and Śileṭṭumam*, and on the symptoms of, and remedies for, such diseases.

**Beginning :**

. . . . . . நாடி . . திரட்டு.

வாதமும் பித்தமையம் அதனுடைகுணப் பாடத்தைத்
தீதற முனிவர்நூலைத் திறந்துபின் திரட்டதாக
ஓதிய சாத்திரத்தை யொழுங்குடன் கண்டுகொள்க
வாது சேர் வைத்தியர்க்கு வல்லிருள் விலக்குமாமே. (க)

வாதன் தான்தனித்துநின்று வந்திடும் பந்துபோலத்
தீதற வெழும்பிநின்று சிக்கிய மந்தம்பற்றி
ஏதுவாய்ச் சுரங்கண்டாலு மிடைவிடா நிற்குமாகில்
தாதுவைக் குறைத்து வுந்திதன்னையு மறைக்குமென்றே (உ)

வந்திடும் வாதநாடி மடங்கியே துடித்து நிற்கில்
முந்திய பழமலங்கள் முடுகியே சிக்குமென்க
அந்தமாம் வாதந்தப்பி யழுந்தி நின்ற[ன] சங்குமாகில்
பந்தியாய் வாய்வாய்த் தோன்றிய பாயப்பு? வந்தடுத்த தென்ன. (ங)

நீரிரு வாதநாடி நின்றது சோபமானால்
பாரிலே யெவர்க்கும் வாய்வு பற்றிட மந்தமாகும்
வேரி சேர்குழலாய் வாதம் விரைப்புடன் நெடுக நின்றால்
கோரில் லாச்சன்னிவந்து கூடிடு மூன்று நாளில். (ச)

வந்திடு மூன்றுநாளில் வாதமாஞ்சன்னி கூடில்
புந்தியே மறந்து வாயாற்புலம்பியும் . . . . பண்ணும்
பிந்தியே . . . . நாளிற் பிடரியிற் பின்னற்செய்யும்
அந்தமாம் அண்டத்துள்ளே தைலமே யிறககிடாயே. (ரு)

* * * * * *

காரிழை தனக்குப்பிள்ளை கெர்ப்பமேபற்றி நின்றால்
கூரிய வாதநாடி குண்டலப்புழுப் போலூரும்
வீரிய மூன்றுந்திங்கள் விட்டிற்போல் வதைந்துநிற்கும்
பாரிய ஏழாந்திங்கள் பையவே புழுப்போலாமே. (யக)

மாதர்கை பிடித்தபோது வந்திடும் வாதநாடித்
தீதற வெடித்துப்பாய்ந்து சிதறியே சிலும்பிநின்றால்
பேதைதன் வயிற்றினுள்ளே பெருத்ததோர் சுரோணிதங்கி
வாதைகள் பண்ணி மாதரிடையிலே வருத்தஞ்செய்யும். (யஉ)

இடுப்பொடு வயிறுநொந்து இடைவிடா [ ] சத்துலு(ச்சத்தமு)ண்டாம்
தடுத்திடுங் கர்ப்பந்தன்னைத் தங்கிடாவண்ணஞ்செய்யும்
அடுத்த தோராவினெய்யால் ஆனதோர் திருகுகள்ளி
கொடுத்திடக் கொம்மட்டிக் காய்க்குழம்பது கொடுக்கத்தங்கும். (யரு)

* * * * * *

மந்தமாய் வாதநாடி மயிலும் பேன் போலேயோடில்
இந்த மானிடரிரண்டு நாழிகை யிருப்புமில்லை
வந்தவன் முகமும் வேர்த்து மஞ்சனித்திருக்குமாகில்
முந்தவோர் நாழிகைக்குள் முடிவது திண்ணந்தானே (யசா)

வாதந்தான்தணித்து நிற்கில் வாயுவுந்தணித்து நிற்கும்
வாதந்தானு தறிநிற்கில் வலிகுன்மம்வந்து சேரும்
வாதந்தான் தவித்து நிற்கில் மரணமும் வந்து சேரும்
வாதத்தின் திரட்டதெல்லாமிவ்வகை வடிவுதானே (யஎ)

பரந்திடு மிரண்டாநாடி பித்தமே பிரண்டுநிற்கில்
வரண்டிடு மூலாதாரம் வாதையால் வடிவே செய்யும்
சுரண்டது பித்தநாடி கடித்துடன்துடித்து நின்றால்
அரண்டுமே பையித்தியந் தானடைவுடன் வந்துகூடும். (யஅ)

உதறியே பித்தநாடி யுழுவைப்போலுதறி நிற்கிற்
பதறியே யுடம்பழுத்திப் பத்திடுஞ்சிறு நீர்வற்றும்
உதவிய புத்திமாறிக் கிறுகிறுத்துழலை யுண்டாம்
விதவிய பசும் பயறும் நெல்லிக்காய் கிஷாயங்கூட்டே. (உய)

பித்தமே கதித்தாற்சூடும் பிலத்திறனுலர்த்திச் செய்யும்
பித்தமே மிகுந்தாலீளை யிரும்பலும் பிலத்துநிற்கும்
பித்தமே மிகுந்தாற்கோழை பெருமியே யிருமற்கொள்ளும்
பித்தத்தார் திரட்டாநூலைப் பேசினூர் பெரியோர்தாமே. (உரு)

ஐய்மாநாடித்தானு மரணைவால் போலே நேர்ந்து
பையவே மந்தம்பற்றிப் பதரிடா திருக்குமாகிற்
செய்வதொன்றில்லை காலன் கெடுவது உண்மைதானே
கைதனைப்பிடிக்க வேண்டாங்கழற்றிக் கொண்டப்பாற் போவாய் (உசு)

* * * * * *

சிலேத்தும நாடிதானே தெளிவுடனிற் கிற்றீதாம்
சிலேத்துமமந்தம் பத்திற் சேர்ந்திடுங் கோழைவாய்வு
சிலேத்தும மிகுந்து நின்றாற்செப்பிடு மரணந்திண்ணம்
சிலேத்துமந்திரட்ட தெல்லாந் தெளிவுடன் கண்டுகொள்ளே. (ஙக)

வாதமும் பித்தமையம் வளபலத்துடனே நிற்கப்
பேதமொன்றில்லா வண்ணம் பேசிய நிதானமாகில்
நீதியாய் நிலைக்கு நின்றால் நெடும்பிணிசிக்கவில்லை
நீதியே யொன்றோடொன்று தாவிடி[கள்](ற்) பிணிகள்தானே. (ஙஉ)

வாதமும் பித்தங்கூடிவன் பலத்துடனே யோடில்
தீதறு வயிற்றினுள்ளே திரண்டதோர் மந்தம்பற்றி
வேதனை யெரிப்புங்கூடி விரண்டிடு மெரித்தகுன்மம்
ஆதிசேர் சீனிகூட்டி யஷ்டசூரணங்கள் கொள்ளே. (ஙங)

**End :**

வாதமே கதித்தபோது வாயுவுமெழும்புங் கண்டாய்
வாதமே கதித்தபோது வந்திடுஞ்சன்னி தோஷம்
வாதமே கதித்தபோது வந்திடும் வியாதிமேலும்
வாதமே கதித்தபோது வன்னுடல் மெலிந்துகொல்லும். (ஙக)

வரச்சியாய வத்தினாலும் வருத்தமான் மலட்டினாலும்
மதிரத்திற் பிரீதியாலுஞ் சிக்கிரிப்புழுவினாலும்
உருக்கிடும் பேயினாலு மொண்டொடி முதுமையாலும்
உரப்பிலாச் சரீரத்தாலும் ஆயிழை மலடியாமே. (சய)

(கு. - பு.)—

இந்நூல், வாத பித்த சிலேஷ்ம நாடிகளைக்கொண்டு அவையிற்றின் பிரகோபம் முதலியவற்றால் உண்டாகும் மாறுந்தமான நோய்கள் பலவற்றின் உண்மைகளையுணரு மாற்றையும், அவைகளை நீக்கற்குரிய மருந்துகள் பலவற்றையும் முறையாக வெடுத்து உணர்த்துகின்றது. இது, இன்ன நூலைச்சார்ந்ததென்றும், இன்னார் இயற்றியதென்றும், இத்துணைத் தென்றும் ஆகிய இவற்றுள் ஒரு செய்தியினையும் அறிந்து கோடற் குரித்தான ஆதாரம் ஒன்றேனும் காணப்பெறவில்லை. ஆயினும் இது மிகுந்த நடை நோக்கும் (நோக்கு - அழகு) சொல் நோக்கும் பொருள் நோக்கும் உடைத்தாய்க் காணப்படுகின்றது. ஏடு முன்னிலைத்தாய் அமைந்துளது. இங்கு நாற்பது செய்யுட்களே காணப்படுகின்றன. ஏடுகள் மிகவும் ஒடிந்துள. எழுத்துப் பிழையங்கங்கே கண்ணுறுகின்றன.

## No. 2319, அகத்தியர் சூத்திரம் பத்து.

## AKATTIYAR SŪTTIRAM PATTU.

Pages, 3. Lines, 6 on a page.

Begins on fol. 24-*a* of the MS. described under No. D. 2316.

Complete.

Same work as that described under No. R. 168 (d) of Triennial Catalogue of Tamil Manuscripts Vol. II.

(கு. - பு.)—

இது மூவருடக் காடலாக்கு 168 (d) நம்பர் பிரதியில வந்துள்ள நூலேயாகும். இப்பிரதியில் இந்நூலின் பத்துச் செய்யுட்களுமிருக்கின் றன. இதன ஏடு இரண்டு பாகமாகமுறிந்து ஒடிந்துகிடக்கின்றது. புழுக்களா லும் அரிக்கப்பெற்றுள்ளது. நிற்க, இதில் இந்நூலாசிரியர் "பாரப்பா வாதத்திலிலட்சங்காப்பு, பாடினேனதைக் குறுக்கியிருநூருக, ஆரப்பா ஆதிகுருவழிலமார்க்கம், அடைவாகச் சொல்லிவிட்டேன் முப்பூவைத் தான், நேரப்பா முந்நூறிலடக்கிவிட்டேன், நேர்மையா யெண்பதிலே நிசமாய்ப்பாரு, ஆரப்பாவதிலடக்கம் பதிருக்குள், ஆச்சரியம் பதின் மூன்றும் பத்தும் பாரே" (2) என்ற இவ்விரண்டாஞ் செய்யுளால் இரஸ வாத விஷயமாக, இருநூறு, முந்நூறு, எண்பது, பதிறு, பதின் மூன்று என்றவிவ்வெண்களில் வேறு நூல்களும் நாம் இயற்றிப் போந்த மையைக் குறிப்பித்திருப்பது இங்கு நம்மால் குறிக்கொள்ளத்தக்கது.

---

## No. 2320, அகத்தியர் வைத்தியசூத்திரம் அறுபத்துநாலு.

## AKATTIYAR VAIDDIYASŪTTIRAM AṚUPATTUNĀLU.

Pages, 28. Lines, 6 on a page.

Begins on fol. 26-*a* of the MS. described under No. D. 2316.

Complete.

A treatise on Indian Medicine, attributed to the sage Akattiyar.

**Beginning :**

அகத்தியர் வைத்தியசூத்திரம் அறுபது ?

வாதத்துக்கு மருந்து.

ஆதியாங்கணேசன் காப்பு அறுநூற்றுக் கருவையெல்லாம்
சோதியாம் மாயிமாதந்துணே யெனவுட்கொண்டேறி
நீதியாந்திரட்டுச் சூத்திரம் நிலேத்த வாகடமாய்ச் சொல்ல
வாதியாம் பிணிகள் தீரமருந்துடன் குணத்தை கேளே. (க)

வாதந்தானெண்பதாகும் வருகின்ற பக்கவாதம்
தீதமெய்நடுக்கு வாதஞ் சிறந்திடு முடக்குவாதம்
சூதமெய்ச் சந்துவாதத் தோன்றிய முகத்தில் வாதம்
பேதமாம் வாதந்தீரப் பெருத்திடு மருந்துகேளே. (உ)

மருந்துதான் சித்திர மூல வளருமாவிலங்கு கொன்றை
திருந்திய முருங்கை சங்குசிறந்த வெள்ளறுகுவேம்பு
பொருந்திய வெருக்கு சுக்கு புகழ்ந்திப்பிலி மரீசங்
கருந்திற லவணமஞ்சுங் கால் மண்டலந்தான் கொள்ளே. (௩)

கொள்ளவே யெண்ணெய ஞ்சுங்கு லாவுதில்லைப் பாறகற்கம்
விள்ளவே முருங்கை வாகைமிகுத்த மாவிலங்கைமூலம்
கள்ள விழ்காயமிந்து கடியதிப்பிலி வசம்பு
உள்ளமா யெரித்துப்பின்னே யுடம்பிற் றெக்கடமுஞ் செய்யே. (௪)

* * * * * *

எரித்த நல்லெண்ணெய் பாலு நயந்திரு வேலிமிச்சம்
தரித்திடு சிந்தில் முத்தஞ் சந்தனந் தேவதாரம்
முரித்திடு தண்ணீர்மிட்டான் உயர்நிலப்பனை நன்னாரி
வருத்த மஞ்சனமஞ்சோடு பசுந்தலை தனக்குவாரே. (௰)

தனக்குறு ரத்தமூலந்தாங்கு முண்மூலஞ்சீயும்
மனக்குறு வாதபித்தம் வளரைய மூலத்தோடு
சினக்குறு முளையா மூலஞ்சீமலக்கு முதமெல்லாம்
கனக்குறு மருந்து சொல்லக்கன்னியே கேட்டிடாயே. (௰௧)

* * * * * *

**End :**

கற்ப மினிகேள் பறந்திடுநோ யெல்லாம்
அற்ப மிதென்று . . ட்டு சொல்லாதே
கற்பமி தாகுங்கன்ம வினையறும்
நொற்பமதாகும் நோக்குங் கஞ்சாவே. (௬௧)

கஞ்சாவைக் கற்பமென்று உள்ளே கொள்ளும்
கடை செட்டாலண்டம . ண்ட க . . . டரே கேள்
நஞ்சாகு ங்குருக்கொடுத்த வித்தைக்கெல்லாம்
நாவுலரு முகங்கறுக்கும் நயனம் பூக்கும்
சஞ்சாரம் வேண்டாது பெ . . . . . . . . . . .
. . . . . . . . . . . கெட்டுச் சாங்கமாகும்
அஞ்சாமலாணுவத்தை யொடுக்கி நிற்கும்
அறிவளிக்குஞ்சுணங்கனைப்போல லைச்சலாமே. (௬௨)

அலைச்சலல . . . . . ண்டை கட்டு . . . . . . . ம்
அப்பனே கண் சிவக்கும் தலைதூக்கொட்டா
நிலைத்தபுத்தி யாங்காரமறிவும் பாழாம்
நிலைகெட்ட விந்திரியம் மயங்கிப் போகுங்
கலைத்தெருவும் . . . . த் தெருவு மலைந்து போவாய்
கர்மமென்ற சண்டாளக் கசடனுவாய்
புலைக்குலமாய்ச் சென்மித்து அறிவைப் போக்கும்
புத்திகெட்ட சித்தர்களே? புகலக் கேளே. (௬௩)

கேளப்பா கஞ்சாவால் கெட்டு . . . . . . கோடி
கெட்ட புகை வெகு நாற்றங்கீதம் பாழாம்
தேளப்பா கொட்டுதற்போல் நெஞ்சிற்கட்டுஞ்
சீசீசீ கசுமாலச்சி . . . . . . . . . . .
வேள . . . . . . . ரித்த சிவனெனக்குச் சொன்னார்
வேதாந்த சட்டைமுனி தானுஞ் சொன்னார்
வாளப்பா விதைவிட்டுக் கற்பங்கேளு
வானவனை நமககரித்து வணங்கிமுற்றே. (சுஙச)

(கு. - பு.)—

இந்நூல், அகத்திய மகாமுனிவரால் வைத்திய விஷயமாய் இயற்றப் பெற்றதொரு நூலாகும். அறுபத்துநான்கு பாடல்களைக் கொண்டுள்ளது. ஆரம்பததில் " அகத்தியர் சூத்திரம் அறுபது " என்று குறித்துள்ளது. இதில், வாதம், மூலம், கிரஹணீ, குன்மம், மேகம், காமாலை, சூலை, பெருவயிறு என்னும் மகோதரம், சன்னி, கரப்பான், விஷக் கரப்பான், நயன ரோகம் இவை முதலியவாம் பல் வேறு நோய்களுடைய வகைகளும் அவைகளை நீக்கற்கு உரிய பலவகை மருந்து முறைகளும் நன்கு மிகத் தெளிவாகக் கூறப்பெற்றுள்ளன. இதில உள்ள ஏடுகள் பல புழு வரிக்கப் பெற்று அங்கங்கே கிரந்த பாதங்களுடன் காணப்படுகின்றன. எழுததுப் பிழை யுள.

---

## No. 2321, நெய்ச்சீலை நாடிசூத்திரம் பத்து.
## NEYCCĪLAINĀḌISŪTTIRAMPATTU.

Pages, 3. Lines, 6 on a page.

Begins on fol. 34-(*a*) of the MS. described under No. D. 2316.

Complete.

Explains how, by wrapping, for about an hour and a quarter, the wrist of a patient with a piece of white cloth soaked in cow's ghee, and by subsequently feeling the *Vāta nāḍi* of the patient, one can say whether the patient can be cured of his disease or not.

**Beginning :**

**சிவமயம் நெய்யில் நனைச்சீலை சூத்திரம்.**

சீலையை நனைத்து வெற்றித்திறமணிக்கடையிற் சுற்றிக்
காலமே மூன்றேமுக்கால் நாழிகை கண்டபின்பு
சாலவே சீலைவாங்கித் தனிவிரல் வாதநாடிக்
கோலமாய்க் குதித்துவாங்கிற் குறைந்திடுமரணமென்றே. (க)

வருந்தியே நனைத்தசீலை மணிக்கடை சுற்றிப்பின்பு
திருந்தியே மூன்றேமுக்கால் சென்ற பின்னுடைவாங்கிப்
பொருந்திய வாதநாடி புழுவென நெளியுமாகில்
அருந்தியே மருந்து செல்லுமவர் பிழைத்திருப்பர்தாமே. (உ)

நனைத்த வெண்சிலை தனனை நடுமணிக்கடையிற் சுறறி
நினைததிடு மூன்று நாழிகை கடநதபின வாதநாடி
யணைதத வாரியரே பாாக்கில் அறியதோர் வாதநாடி
சினதத கண்ணாவு போலே சிறியே நெளியுமாகில
இன்னத்தறி சாவு சொன்னோம் இருபததிரணடு நாளே. (ந)

மெல்லியே நனைததசீலை மிகமணிக்கடடிற் சுற்றிச்
சொல்லிய மூனறேமுககால் நாழிகை சென்றபினபு
அல்லியே யவிழ்ததுப் பார்க்கில் அமர்ந்திடும் வாதநாடி
யொலகியே யுரைதது வாங்கி லொன்பதா நாளிற்சாவே. (௪)

**End :**

. . . . . . . யாய் நெய்யிற சீலை
தோய்தது கைசுறறி வைத்து
கருதியநா[ளி](ழி)கை யொனறு
சென்று பினனவிழ்த்துப் பார்க்கிற
பருதிய வாத நாடி
பக்கஞ்சேர்ந் தெதிர்தது வாங்கில்
மிகுதியாய்க் குருதிச்ச . . . .
முப்பது நாழிகை யிற்சாவே. (௰)

ஆனெய்யை நனைத்துச் சுற்றி
மணிக்கடைக் குறிப்பு நெய்யி
லூட்ட வேசுற்றிப் பார்த்து
உள்ளதோர் நன்மை தீமை
குறிப்புடன் ஆய்ந்து பார்த்துச்
செகதலம் விளைவதாக
**நாடி வான்மீகர் சொன்னார்**
**நானென்று** மறைந்திலேனே. (௰க)

**(கு. - பு.)—**

இந்நூல், வெள்ளியதோர் சீலையை ஆவின் நெய்யில் நனைத்து அதை நோயாளரின் மணிக்கடைப் பாகத்தில் சுற்றிவைத்து மூன்று நாழிகை கழித்துப் பின்னர்க் கையிற் வாத நாடியைத் தொட்டுப் பார்த்து அதன் நிதானங்கொண்டறிந்துகொண்டு சாத்தியா சாத்தியக் குறியினைக் குறிப்பாக வுணருமாற்றைச் சுருக்கமாகப் பதினொரு பாடல்களான் உணர்த்துகின்றது. இதனை "வான்மீகர்" எனனும் ஒரு சித்தர் பெரியாரது சீடர் ஒருவர் இயற்றியதாகத் தெரிகின்றதன்றி அவரது இயற் பெயர் ஒரு வாற்றானுமிதிலிருந்து விளங்கிற்றிலது. இதில் பதினொரு பாடலுமிருக்கின்றன. எடுகள் மிகவும் புழுக்களால் அரிக்கப்பெற்று முறிந்து கிடக்கின்றனவாதலின் படித்தற்கியலாவண்ணமாயிருக்கின்றது. **எழுத்துப் பிழையுடனுளது.**

## No. 2322, வான்மீகர் தீபசூத்திரம் பத்து.
## VĀNMĪKAR DĪPASŪTTIRAM PATTU.

Pages, 4. Lines, 6 on a page.

Begins on fol. 35-(a) of the MS. described under No. D. 2316.

Complete.

Same work as that described under No. R. 940 (h) of the Triennial Catalogue of Tamil Manuscripts, Vol. VI.

**End :**

ஏத்திய தீபந்தானு மிருசுடர் முனையைப்போலத
தோத்திடும் விளக்கை நோக்கிச் சொல்பவர் பயணமாவார்
மாத்திரை யுயிர்கலங்கி வந்திடுந் திங்களொன்றில்
நாற்றிசை யுலகுள்ளோர்க்கு நயம்பெறவுரைத்தாரீசன். (௰க)

(கு. - பு.)—

இந்நூல் மூவருடக் காடலாக்கு 940 (h) நம்பர் பிரதியில் வந்துள்ள நூலேயாகும். இப்பிரதியிலே இங்கு இறுதியிலே காட்டப்பெற்றவிச் செய்யுள் அப் பிரதியில் இல்லாதாய் அதிகமாயுளது. ஏடுகள் மிகச் சிதில மாயும் முறிந்தும் இருக்கின்றன. எழுத்துப் பிழைகள் உள.

---

## No. 2323, வான்மீகர் பலவிரற்சூத்திரம் ஐந்து.
## VĀNMĪKAR PALAVIRAṞCŪTTIRAM AINDU.

Pages, 2. Lines, 6 on a page.

Begins on fol. 36 (a) of the MS. described under No. D. 2316.

Complete.

Same work as that described under No. R. 940 (g) of the Triennial Catalogue of Tamil Manuscripts, Vol. VI.

(கு. - பு.)—

இச்சிறு நூல் மூவருடக் காடலாக்கு 940 (g) நம்பர் பிரதியில் வந்துள்ள நூலேயாகும். இப்பிரதியில் இந்நூலின் ஐந்து பாடல்களும் இருக்கின்றன. ஏடு மிகவும் புழு வரிக்கப் பெற்றுள்ளது. எழுத்து பிழைகளிருக்கின்றன.

---

## No. 2324, வான்மீகர் உறுப்புச்சூத்திரம் பத்து.
## VĀNMĪKAR UṞUPPUCCŪTTIRAM PATTU.

Pages, 4. Lines, 6 on a page.

Begins on fol. 37-(a) of the MS. described under No. D. 2316.

Complete.

Same work as that described under No. R. 940 (d) of the Triennial Catalogue of Tamil Manuscripts, Vol. VI.

(கு. - பு.)—

இந்நூல் மூவருடக் காடலாக்கு 940 (d) நம்பர் பிரதியில் வந்துள்ள நூலேயாகும். இப்பிரதியில் இந்நூலின் பத்துச் செய்யுளும் இருக்கின் றன. அங்கங்கே சிலசில பதங்கள் பிரதி பேதங்களுடன் காணப்படுகின் றன. ஏடுகள் மிகவும் புழுக்களால் அரிக்கப்பெற்று மிகச் சிதைந்து கிடைக்கின்றன. எழுத்துப் பிழைகள் இருக்கின்றன.

---

## No. 2325, வான்மீகர் அடிதலை கயிற்றுச்சூத்திரம் பத்து.
## VĀNMĪKAR AḌITALAI KAYIṞṞUCCŪTTIRAM PATTU.

Pages, 3. Lines, 6 on a page.

Begins on fol. 38 (b) of the MS. described under No. D. 2316.

Complete.

Same work as that described under No. R. 940 (e) of the Triennial Catalogue of Tamil Manuscripts, Vol. VI.

(கு. - பு.)—

இந்நூல் மூவருடக் காடலாக்கு 940 (e) நம்பர் பிரதியில் வந்துள்ள நூலேயாகும். இப்பிரதியில் இந்நூலின் பத்துப் பாடல்களும் சிலசில விடங்களில் பிரதிபேதங்களுடன் இருக்கின்றன. ஏடுகள் மிகவும் புழுக் களால் தின்னப்பெற்றுச் சிதைந்திருக்கின்றன. எழுத்துப் பிழைகள் காணப்படுகின்றன.

---

## No. 2326, அகத்தியர் குருநூல் வைத்தியம் அறுநூறு.
## AKATTIYAR KURŪNŪL VAITTIYAM ARUNŪṞU.

Substance, palm-leaf. Size, 11 × 1⅜ and 10½ × 1¼ inches. Pages, 48. Lines 7 on a page. Character, Tamil. Condition, injured. Appearance, old.

Begins on fol. 130-a :

The other works herein are Siddhar pannūṟ pādaṟṟiraṭṭu 1-a. Tiru mūlar Śoccasūttiram 118-a. Bhōgar Āṟādhārakkaṭṭaḷai (Śempuśutti-muṟai) 124-a.

Incomplete.

Same work as that described under No. 948 (a) of the Triennial Catalogue of Tamil Manuscripts, Vol. VI.

(கு. - பு.)—

இந்நூல் மூவருடக் காடலாக்கு 948 (a) நம்பர் பிரதியில் வந்துள்ள நூலேயாகும். இந்தப் பிரதியில் இந்நூல் எண்பத்தொன்பதாவது பாடல் வரையிலுமேயுளது. ஏடுகள் நுனியிலே முறிந்து கிடக்கின்றன. "அகத் தியர் தண்டகம்" என்றதாய் ஒரு பெயர் இதற்குப் பெயராக ஆரம்பத் திலே குறிக்கப்பட்டுளதாதலின் இப்பெயரானும் இந்நூல் வழங்கப்பட்டு வந்தது போலும். எழுத்துப்பிழையுள. இதற்குப் பின்னர் (௰௬) என்ற இலக்கமிட்டு பூபதி மாத்திரையின் விவரம் எழுதப்பெற்றதோர் ஏடு காணப்படுகிறது. இது எந்த நூலைச் சார்ந்ததோ தெரியவில்லை. அதில் அடங்கிய பாடல்கள் (45 to 47) ஆகும்.

## No. 2327, சித்தர் பன்னூற்பாடற்றிரட்டு.
## SIDDHAR PANNŪṞ PĀḌAṞṞIRAṬṬU.

Pages, 164. Lines, 8 and 9 on a page.

Begins on fol. 1-a of the MS. described under No. D. 2326.

Complete.

A collection of verses from the metrical works on Alchemy and Medicine by Agattiyar, Bhōgar, Urōmariṣi, Koṅkaṇar, Śaṭṭaimuni, Bōdaimuni and other *Siddhas*. Contains various references to many similar works, and is thus valuable.

**Beginning :**

போகர் நிகண்டு (௲உ௱) ஆயிரத்திருநூறு.

பத்தான பூநீற்றைப பாண்டத்திற் போட்டு
. . . . . . . ர மனுஷனுடை அமுரிதானும்
நித்தான ரெண்டுபத்துப் படிதான் வார்த்து
நெற்பாக அதட்டியே கலக்கிப் போட்டுக்
கத்தான கற்சுண்ணம் படிதானைந்து
கனமான பாண்டத்திலளந்து போட்டு
சித்தான வமுரிபடி பத்து வார்த்துச்
சிறப்பாகக் கலக்கியே வேறேவையே. (க)

வேறான கல்லுப்பின் சுண்ணத்திற் பாதி
விரைந்துவொரு பாண்டத்திலளந்து போட்டு
ஆறான வமுரிபடி யைந்து வார்த்து
அதட்டியே கலக்கி வைத்து மூன்றுநாள் தானை
நன்றான நாலாநாள் தெளிவிறுத்து
நலங்காமல் ஐந்தாநாள் தெளிவிறுத்து வாங்கி
மூன்றான மூன்றையுமே கூடவிட்டு
மீறுமலடுப்பேற்றி யெரித்திடாயே. (உ)

அடுப்பேற்றி யெரித்திடுவாய்க் கமலம் போலே
அடிதனிலே பற்றாமல் அகப்பை கொண்டுவாங்கு
துடுப்பேற்றித் திரளுகிற பக்குவத்தில்
திலதமாய் நல்லெண்ணெய் படிதான்வாரு
அடுப்பேற்றி யெரித்துமே பதத்தில் வாங்கிப்
பரப்பான் சட்டியிலே யூற்றிப்போடு
குடுப்பேற்றி நீராறவிட்டுக் கத்திக்கொண்டு சீவிக்
கனமான நெல்லுப்பெ . . . போடே. (௩)

உரோமருஷி இருபத்தைந்தில் சொன்னது. உரோமர் உடுரு.

வெளியாகத் தோன்றுமப்பா விந்த நூலில்
வேறுவித மொன்றுமில்லை வண்ணனுறுதி
அளியாத பூநீரு நிலவுப்போடு
அன்றுரைத்த கங்கையுப்பு அமுரி நீரால்

மொளியாக வஞ்சுதிறங்காய்ச்சிப் பின்பு
மோசமே வாராமல் ஏழுதிறங்காய்ச்சிக்
களியாக மெழுகுபதம் வரும்போதப்பா
கடைமருந்தைச் சொல்லுகிறேன் கருதிக் கேளே. (க)

கேளப்பா வீரமுடன் பூரம்வெள்ளை
கிருபையுடன் வெடியுப்பு வூசியுப்பு
வாளப்பா சீனமொடு புனுகோடொக்க
வளமாகத் தாக்கியே பொடித்துப் போடு
ஆளப்பா வண்டம் போலு ருட்டிக்கொண்டு
அப்பனே ரவிதனிலே காய்ந்த பின்பு
தூளப்பா கடுங்கார மேத்தியேத்தித்
துடியுள்ள சுண்ணாம்பிற் புடத்தைப்போடே. (உ)

* * * * * *

உரோமருஷி ஐம்பது (ருய).

சுன்னத்திலே சோருங் கிளிஞ்சிதான்
சுன்னங்குடோரி துறையாம் வழலைக்குச்
சுன்னமிதை விட்டாற் கற்சுன்னமேதேது
சுன்னங் கருவித்தை [து](தி)றந்து விட்டேனே. (க)

இயல்பாக முன்சொன்ன சவுக்காரத்தை
இன்பமுள்ள சுன்னமதாய்ச் செய்வதற்கு
மயலாகச் சொல்லுகிறேன் மைந்தாகேளு
மார்க்கமுள்ள பழச்சாற்றிற் றேய்த்துத் தோய்த்து
நயமாக ரவி முகத்தில் நவநாள் போடு
நாடிநின்ற வெண்ணெயெல்லாங் கக்கிப்போகும்
செயமான சவுக்காரம் எண்ணெய் போகிச்
சிவா சிவா சவுக்காரங் கட்டிப்போச்சே. (உ)

கொங்கணவர் முதற்காண்டம் (ௐ) ஆயிரம்.

வாதத்துக்காதி யென்ற சவுக்காரந்தான்
வைக்கிறதோர்முறை கேளுமக்காள் மக்காள்
வேதத்துக்காதியென்றசவுக்காரத்தை
விரைந்து வொருகிளிபோலே விளங்கக்கட்டி
நீதத்துக்காதியென்ற கல்லுச்சுன்னம்
நிலையாகக்கிளிதனக்குக்கீழ்மேல்விட்டுப்
பேதத்துக்காதியென்ற நீரைவார்த்துப்
பேராக நீத்திமெள்ளக்கிளியை வாங்கே. (க)

வாங்கியிந்தப்படிமக்காள் சுன்னத்துள்ளே
வைத்து வைத்து நீருவாருநூத்துப்பத்து
வோங்கியிந்தக்காரமெல்லாம் உள்ளேபுக்கு

தேங்கியிந்தக் கட்டிமக்காள் தந்தம்போலாம்
சிறப்பாக விதிலேத்தக்கடுங்காரங்கேளு
போங்கியிந்த வண்டநீர்ப்பலந்தானென்று
போட்டதிலே சுண்ணும்பு தண்ணீர் வாரே. (உ)

வார்த்ததனைக்கரைத்து வைத்துத்தெளிவைவாங்கி
வாகாகத் தெளிவிலிடமருந்து கேளு
சேர்த்ததனைத்தெளிவிறுத்துச்சிராங்கைதானும்
சிறப்பான நாபியொடு வீரம் பூரம்
போத்ததனைச்சாரமொடுவுரமுஞ்சூடன்
புகழான சீனமொடு குருவண்டே தான்
ச(ா)ர்த்ததனிற்ருக்குடத்தின் வெணமலமும் புனுகும்
சார்வாக வெண்காரம் கூடக்கூட்டே. (ங)

கூட்டுகிற வெடையேது என்ருயானுல்
குறையாமல் வகையொன்று வராகனென்று
மூட்டுகிற முன்தெளிவிற்கரைத்துக்கூட்டி
முறையான பதினென்று மருந்துமொக்க
வூட்டுகிற வண்டம் மக்காள் ஐம்பத்தொன்று
வுடைத்ததின் வெண்கருவையிதிலே வாரு
ஆட்டுகிற வெருக்கம்பால் சேரைவார்த்து
அடைவாக மத்திச்சு அப்பால்வையே. (ச)

சவுக்காரத்துக்கு அண்டச்செயநீர் :

வைத்துடனே தெளிவாகும் மூன்று நாள் மக்காள்
வாய்திறந்து சொல்லாதே யண்டநீர்தான்
இத்துடைய வாட்டல்லோ சுன்னத்தாட்டு
இதைவிட்டால் கடுஞ்சுன்னமென்பதில்லை
வைத்துடனே முன்வைத்த சவுக்காரத்தைக்
கலந்து விந்த நீர்தோ [ச்சு] (ய்த்து) ரவியிற்போட்டு
பொய்த்துடனே போகாமற்றினந்தான்பத்துப்
பூட்டியந்தச்செயநீரிற்றுவைத்துப்போடே. (ரு)

*　　　*　　　*

## அகத்தியர் முப்பூவைம்பது.

பாரடாமுன்னுரைத்தமுப்பூவெல்லாம்
பரிவாகச்சித்தருக்குஞ்சிவயோகிக்கும்
சேரடா வைம்பதுக்குள் சொன்னேன் முப்பூ
செகத்திலுள்ள மாணிடர்கள் செய்யவேண்டி
ஊரடாவீறுகொன்ற வுலுத்தருக்கு
வுறுதியாய்த்தேகமெல்லாம் வலுத்துப்போச்சு
ஆரடாவெனைப்போலே சொல்லப்போருர்

**End :**

அகத்தியர்வகாரம் (உா) இருநூறு. (உ)

*          *          *          *          *

அமர்ந்த தொரு ஆனைக்கல்லறியமாட்டார்
அப்பனே பிண்டமது அறியாமூடர்
சுமந்த பிணம் போற்றிரிவார்வேதைகாணுர்
சொல்லுகிறேன் உப்புவித்தை அண்டஞ்சாக
நமன்கையிற்போனவுயிர்மீண்டதானுல்
நந்திசாரிந்த முறை நவில்வார் கேளு
சமனசிறு செய்நீராற் கொல்லுங்கொல்லுந்
தண்டானமது வப்பே சாரமாமே. (௩)
சாரமென்றுங்காரமென்றும் வழலையென்பார்
தன்னுக்குள் பயனென்றுஞ்சொல்லார் சொல்லார்
பூரமென்றுஞ் சொல்வதற்குப் பிறவிபேசார்
புகழான மதயானைக் கல்லைப்பேசார்
வீரமென்றும் அண்டமென்றும் விள்ளார் விள்ளார்
வேதைகளைப்பாடிவிட்டார் வெறுநூலாகக்
காரமென்ற கடுங்கார மஞ்சாங்காய்ச்சல்
கம்பியுப்புப் பூரமப்பா அடிதான்பாரே. (௪)
அடியென்று முடியென்று மண்டபிண்ட
மாகாசஞ்சிவனுருப்புக் கம்பிக்காச்சு
பிடியென்றுஞ் சொல்வதற்குத் தண்ணீருண்டாம்
குலயானைபட்டு விடுஞ் சாரச்சுன்னம்
மடியுமடா சரக்கெல்லாமிதிலே மாட்ட
மக்களே காயசித்தி மகிழ்ந்து பண்ணே. (௫)

*          *          *          *          *

*          *          *          *          *

என்றுமொருநீராலே பரக்கியெல்லாஞ்சாகும்
ஏகாந்தவுப்பிதப்பா சத்தி சத்தி
வென்றதொருநீரப்பா வருணன் பிள்ளை
மேலெழுந்த ரவிதனக்குச் சுத்தியாச்சு
நன்றாககண்டறிந்தால் அவனேவாதி
ரசவாதமிதிலப்பா சூதங்கட்டுங்
குன்றுன நெருநத்தைக்கொல்லுங் கொல்லுங்
குடிகெடுத்தசத்தியுடன்கூடும் போதே. (அச)
போதமென்றதாக நீரல்லான்மற்றும்
பொறியில்லை சத்தியில்லை சிவமுமில்லை
வாதமென்று காண்பதற்கு நீரைச்சேரு
வகையுடனே கைமுறையாய் வழியாய்ப்பாரு
நீதமென்ற நீராலே களிச்சுண்ணந்தான்
நிலத்ததப்பாவென்றாலே வாதந்தங்கும்

(கு. - பு.)

இந்நூல் இரஸவாத வைத்திய விஷயமான பாடற்றெகுப்பாகும். இதில் அகத்தியர், போகர், உரோமருஷி, கொங்கணர், சட்டைமுனி, போதைமுனி ஆகிய பல சித்தர்ப்பெரியார்கள் இரஸவாத விஷயமாகவும் வைத்திய விஷயமாகவும் இயற்றிப்போந்த நூல்கள் பலவற்றுள்ளும் பெரும்பான்மையாக இரஸவாதத்தையுணர்த்தும் பாடல்கள் பலவும் திரட்டி எழுதி வைக்கப்பெற்றுளளன. இதில் 40, 41, 53 to 59, 66 to 89, 100, 101, 103, 106 to 109 ஆன ஏடுகள் காணவில்லையாதலின் அவைகளில் அடங்கிய பாடல்கள நீங்கலாக மற்றைவையெல்லாமிருக்கின்றன. இந்தப்பிரதியிலிருந்து பலநூல்களினபெயரும், அவையீற்றின்மொத்தச்செய்யுளெண்ணிக்கைகளும், இன்னும் பல விஷயங்களும் அறியக்கிடக்கின்றனவாதலின் இது மிகவுமுபயோகமானதாகவிருக்கும். இதில் உள்ள பாடல்கள் இன்னின்ன நூல்களிலிருந்து திரட்டப்பட்டனவென்பதற்கும், இன்னின்ன பக்கங்களில்வந்துள்ளனவென்று உணர்தற்கும் ஒரு அட்டவணை முதலில் 3 பக்கங்களில் எழுதப்பெற்றிருக்கிறது. எழுத்துப் பிழையுள. 97 என்ற எண்ணிக்கையிட்டு (3) ஏடுகள் உள.

---

## No. 2328, திருமூலர் சொச்சசூத்திரம்.

### TIRUMŪLAR ŚOCCASŪTTIRAM.

Pages, 9. Lines, 9 on a page.

Begins on fol. 118-a of the MS. described under No. D. 2326.

Complete.

Appears to be a summary of a treatise on Alchemy, entitled *Muppū Irunūṟu*, by Tirumūlar.

**Beginning :**

திருமூலர் அருளும் சொச்சம் சூத்திரம் பாடல் (௩௨) முப்பத்திரண்டு. முப்பூ (உ௱) இருநூற்றுக்குச் சூத்திரம்.

குருவினடிபணியார் கோடி நூலாராய்வார்
வருவதுவுங் கற்பமெனும் வழியுமறியார்காணூர்
சருகுதுளியானது வுஞ்சமுசயமுந்தீரார்
ஒருபொருளுன்னுக்கு ளுயிரொன்றுங்காணுதே (க)

ஒருபொருளுன்னுக்குள் சிவமொன்றதுவிளவுங்
கருவிதுவுங் கங்கை கடலுப்புமிங்கிருக்கத்
தெருவு தெருவாயலையத் தெளியுமோ வுன்மனது
வருமோ வழலைக்கனலில் மண்ணி(லி)லைபாரே (உ)

பாருஞ்சிவகங்கையது பாரிலேதுங்காணூர்
ஊருகுளமேருநதி வாறுநதியுமல்லை
காருவெனு மேகசல பனிதுளி(யு)மல்ல

அன்னமயசுத்தசல வடிரியெறும்பெரு
சொன்னமயசத்த மொடாகாசமெனுங் கங்கை
நின்னயமுனக்குளபோலுள நிருவிசலமாகும்
உன்(ன)மயமே யன்னமய மொன்று பொருளாமே (சு)

* * * * *

எழுந்துசவம் பேசுமெனுமெய புலகு முஙிணவார்
கழிந்துவிடாச்சடமிருப்பக் கற்பமறிவோராய்
அழிந்துவிட ஓநினைவு ஆக்கையழியாமல்
பொழிந்தருவிக்கருக் குருவைப்போசனஞ் செய்வீரே (கூ)

**End :**

வேறுகவி

குருவான தந்தை குணநந்தியப்பா
**திருமூலனே** செயய தொழிற் சொன்னேன்
கருவூரார் கொங்கணர் பேர் கொண்டிலற்ருந ?
திருவருளொன்னூற் றரிசனமுற்றே (௩௰௩)

முற்றும்.

**(கு. - பு.)—**

இந்நூல் இரஸவாத விஷயமாகும். திருமூலர் தாம் இயற்றிப்போந்த "முப்பூ இருநூறு" என்ற தொரு நூலுக்குச்சுருக்கமாக வியற்றப்பெற்ற தென்று தெரிகிறது. முப்பத்துமூன்று செய்யுட்களான் அமைந்துள்ளது. முற்றும் உள்ளது. எழுத்துப் பிழை மிகவுள. ஏடுகள் சிதலுற்றிருக்கின் றன.

---

## No. 2329. போகர் ஆருதாரக்கட்டளை (செம்புசுத்திமுறை.)
## BHŌGAR ĀṚĀDHĀRAKKAṬṬAḶAI (ŚEMPUŚUTTIMUṚAI).

**Pages,** 11. Lines, 7 on a page.

Begins on fol. 124-(a) of the MS. described under No. D. 2326.

Contains 28 stanzas only.

Contains verses related to Alchemy. This is a part of a larger work.

**Beginning :**

போகர் ஆருதாரக்கட்டளை (செம்புசுத்திமுறை).

பொன்னுன லோகத்திற் பிழைக்க வென்ருல்
போக்கோடே துருசுக்குள் செம்பைக்கொல்லு
மன்னுகேள் செம்புக்குண் மாளாவிட்டால்
வாதமொன்றுங் காணுர்கள் மார்க்கம் பொய்யாம்
பண்ணுனநூல் பாரு பங்கம்பாரு
பருவத்தில் தோய்த்தெடுக்கப்பதத்தைப்பாரு
தென்னுனரவிபடவே வெளுப்பாச்சென்று

போட்டொன்றாய்க் குழம்பாக வைத்துக்கொண்டு
புகழாகச் செம்புபலம் நாலு வாங்கி
ஆட்டொன்றாயுருக்கிய திற்சாய்த்துவாநீ
அப்பனே பதினைந்துக் கதிகம்வேண்டாம்
நீட்டொன்றாய்ச் செம்பினுடையூறற் போகும்
நிலைத்தபின்பு இச்செம்பைக் குகைக்குள்வைத்து
மூட்டொன்றாய் அண்டமொன்று சாரமொன்று
புகழாகப் பலம்ரெண்டு பொரிக்காரங்காலே. (௩)

கால்ப்போடு சவ்வீரம் பலமும் நீதான்
கலந்தரைத்து ஒன்றாகக்கடுகத்தூவு
எல்ப்போடு செம்புருகி யாடும்போது
இயல்பாகக் குடுத்தேது இம்முறையே முக்கால்
மால்ப்போடச் செம்பினுடை யூறற்போகும்
வர்ணங்கள் வெளுப்பாகும் வாதிகாளே
சேல்ப்போடு இச்செம்பை வெள்ளிபத்தில்
சேரொன்று மாற்றஞ்சு திறமுமாமே. (௪)

திறமான செம்பொன்று வெள்ளிபத்தில்
சேர்த்துருக்கிச் செயிலிங்கங் குன்றிபோடு
அறமான தங்கமொரு பணந்தான்போடு.
* * * * *

**End :—**

வைத்திடு சுன்னமாய் வாரிதுரொயினை ?
இத்திசைச்சினம் இணங்கன் கல்லுப்புடன்
சத்தியாஞ்சூடன் சமனிவை யைந்தையும்
பத்திய கல்வத்தினிற் பாங்காட்டக்கேட்டிடே. (உஉ)

கேட்ட இணங்கன் கெடியான நீரில்முன்
ஆட்டிடில் சுன்னம் வகையாக நீ[த்தி](ற்றி)யே
ஆட்டிய நீரிலடைவாமிவ் வைந்தையும்
காட்டியவில்லை செய்கனலினுலர்த்திடே. (உ௩)

கனலினுலர்த்திக் கனப்புடம் போட்டிடு
வினவியெடுத்ததில் வெண்கருவிட்டரை
சனமானகாசுபோல் தட்டியனலிலே
இனமிதையூத வடங்காது சுன்னமே. (உ௪)

சுன்னத்தினாலே சுகமாய்க்குகைபிடி
சுன்னத்தைக் காசிடை தூக்கியே முன்வைத்த
அன்னத்தப்பால் கருவளமானவுப்புநீர்
இன்னத்திற்போட்டு இதமாய்க் கரைத்திடே. (உ௫)

கலந்தவுரம் பூரம் கார்நவாச்சாரம்
உலந்த சினஞ்சூடன் உப்பது நீருடன்
வலந்த வுவர்ப்பூவும் ஞானிவெண்காரமும்

சாரமுன்னீரில் சாரித்து மூன்றுநாள்
பாரின் முன் பார்க்கப்பதமாஞ்செய் நீரமம
காரமுன்வைத்த வெண்கணிரைப் போட்டிடே. (உஎ)

போட்டுத்துவைத்துப் புகழாக மூன்றுநாள்
வாட்டுரவியில் மகத்தாங்கடுங்காரம்
காட்டிடச் சுன்னஞ் சகலசரக்கெல்லாம்
மூட்டிடக்கோடி முறை முறை சுன்னமே. (உஅ)

கு. - பு.:—இது, போகர் ஆருதாரக்கட்டளையென்னும் நூலின் ஒரு பகுதியாகிய "செம்பு சுத்தி முறை" என்ற பகுதியெனக் காணப்படுகிறது. இதுவும் இதன் தலையிலிடப்பெயரான் விளங்குகிறது. இதில் இருபத்தெட்டுச் செய்யுட்களேயிருக்கின்றன. இந்நூல் இதனுணைத்து என்று அறிந்து கோடற்கு ஒரு ஆதாரமும் காணப்படவில்லை. இரஸவாத விஷயமானது. செம்பு சுத்தி முறையும் அதுகொண்டு பல காரியங்கள் செய்யுமாற்றையும் விளக்குகின்றது. எழுத்துப் பிழைகள் காணப்படுகின்றன. ஒரு சிறிது புழுவரிக்கப் பெற்றுளது.

---

## No. 2330. இரஸவாத நூல்.
## IRASAVĀDANŪL.

Substance, palm-leaf. Size, 10¼ × 1 inches. Pages, 100. Lines, 4 on a page. Character, Tamil. Condition, slightly injured. Appearance, old.

Complete.

A work in 100 stanzas, on Alchemy. The author's name is not known.

**Beginning :—**

ஆதியாம்பூ நீர்வழலை யாதியந்தமானவெடிகம்பியு நேராய்
சோதியமுந்தநுணுக்கி நல்ல சுந்தரசட்டியிற்றீபட நாட்டிப்
பூதியாய்ப்போகம் நினைக்கவெந்தன் பொக்கிஷம்வெட்ட எண்
[ணெய்கழ[க்க](ற்ற)
நீதியை விள்ளுவன் கேளாய்நல்ல நினைவொடிருப்பார்க்கு
[மேதினியோர்க்கும். (க)

சிப்பிச் செயநீர்.

மேதினியேரியில் நின்றெழுந்து சிப்பிகள்
வாயைத்திறந்திடுங்காரம்
பூதிக்குகந்திடம் பூரம் நல்ல
பூவுடன் வீரமும் சேர்த்து அரைத்து
ஆதிக்குங் கதைநீராய் அதைப்
பிண்டக்கரு வெனுஞ்சொல்வார்
ஓதியுணர்ந்திடும் முத்தாலசிவ
யோகிக்கும் போகிக்கு முண்மையிதாமே. (உ)

ஒருவராகன் திட்டம் போடந்த நீரில்
ஆண்மையாம் புட்டிகட் கேந்தி யந்தச்
சதை தண்ணீரெனாடு சுருக்கிடுசாயப்
வன்மையாய்க்கனுவுடுதிப்பிடுப் பின்னும்
மாளவெனுமிச்சம்பழந தண்ணீர் வார்த்து
கன்மைபோனு மரைத்து நனருய்க்
கலங்காமற் பில்லையை பவியிலுணர்த்தி. (௨)

உணர்த்தின பில்லையெடுத்து நல்ல
கற்சுண்ணும்புக்குள்ளே யுணர்வாயமைத்து
மனாத்தையுண்டாக்கச் சொல்வோன்மகினி
மாட்டியெரித்தும் மறுபடியாட்டிக்
குணத்தையறிந்து எரித்துச்சீராய்க்
குறையாமற் சாரணை நாலுதிறத்தி
பிணத்தையுந் தட்டியெழுப்பு நல்ல
பேரான நீரது வொருவருங்காணூர். (௩)

*    *    *    *    *

*    *    *    *    *

**End :—**

காணூர்கள் கமளிப்பால்விட்டு வலைதக்
கருதியே ஆட்டிடவெட்டுநாண்மப்ப
பூணூர்கள் பவியிலேபோடு புதுமை
பூணுமே வெந்திடும் பவியிலேகண்டேன்
ஊணூர்கள் அம்புவியிலும் மாந்தாறிவுற்று
உறுதியாய்ச் சொன்னது கண்டிடுங்காணும்
தோணூத பேச்சுமே தோணும் எந்தன
தொரைசாமி பூசையைச் செய்தவர்க்கொக்கும். (௯௯)

மூக்குமேயான் சொன்ன பேச்சு விந்து
உரமான கைமுறைவொக்குமே பாரு
ஆர்க்குமே கண்ணிலேகாணும் எந்தன்
ஆண்டவன் சொல்லாலும் யானுமே விண்டேன்
தீர்க்கமாய்க் குருவையுங் கார்த்துச் சிவன்சத்தி
தீட்சையைத்திறமாக விண்டேனே யானும்
காக்கவும் எந்நாளும் வாசிக்கருவைக்
கண்டாலும் எப்போதும் வாழ்ந்திடலாமே. (௱)

**கு. - பு. :—இந்நூல்** இரஸவாத விஷயமானது. **நூறு** பாடல்களான் **அமைந்**திருக்கின்றது. இயற்றியவர் இன்னரென்று விளங்கவில்லை. ஏடுகள் ஒரு சிறிது சிதைந்துள. எழுத்துப் பிழை மிகப் பொதிந்து கிடக்கின்றன. இதிலே சிப்பிச்செய்நீர், வெண்டாமரைப் பூகெந்தித்தைலம், வெண்காரச் செந்தூரம், வெள்ளைப்பாஷாணக்கட்டு, சவுக்கார வைப்பு, சூதக்கட்டு என்னும் இவைகளின் ஆக்குமுறைகள் எல்லாம் விரிவாகக்கூறப் பெற்றுள்ளன.

## IRASAVĀDANŪL SIDDHARMAYAM.

Substance, palm-leaf. Size, 13 × 1¼ inches. Pages, 90. Lines, 5 and 6 on a page. Character, Tamil. Condition, injured. Appearance, old.

Incomplete.

A treatise on *Yōga* and the various magical powers to be attained through it. Gives the particulars about various *Siddhas* like Agastya, Śaṭṭaimuni, Koṅkaṇar, etc.

**Beginning :—**

. . . . .
நேரப்பா மடங்களது மட்டுண்டப்பா
நிலையான பெருமையெல்லாம
. . . . .
. . . . ஆருமில்லை
. . . அண்டத்தில் சித்தப்பா கோடாகோடி
நேரப்பா சித்தர்மயம் அனந்தங்கோடி
நினைவாகவென்னூலே பாரு பாரு.
. . . . (க)

பாரப்பாவிப்படியே பார்க்குந்தோறும்
பரிவாக வைம்பது தான் யோசனைக்குமப்பால்
நேரப்பாதலந்தானு மொன்றுண்டப்பா
நிலையானதலப்பெருமை நிகழ்த்துறேனே
தேரப்பாமடந்தானும் இருபத்தெட்டுத்
தெளிவாகச் சித்தருடை வருக்கங்கேளு
பேரப்பா வவர்களுடைப்பெயரைக்கேளு
பெரிதான சித்தர்மயம் புகலுறேனே. (உ)

புகலுறேன் சித்தருடைய பெருமையெல்லாம்
பெரிதான திருமூலர்வர்க்கமப்பா
அரிதரிது . . . . . அடபனே மூலர்க்குக்
காலாங்கிப்பிள்ளை
பெரிதான போகரவர் . . . . . ருக்கும்
பேரான கொங்கணர்தான் பெருமைமெத்த
. . . . . கொங்கணர்க்கைந்நூறுக்கும்
திரண்டதோர் அன்பத்து ஏழுமாச்சே. (ங)

ஆச்சப்பா அவர்களுக்கு ஆயிரத்துமுந்நூறு
. . . . உண்டாச்சப்பா
நாச்சப்பா நடுமூலங் கண்டாரப்பா
நலமான குளிகைசித்தி வாதசித்தி
மூச்சப்பா யோகசித்தி ஞானசித்தி
. . . . அஷ்டாங்கஞ்சித்தி
தோச்சப்பா கவனசித்தி வாலைசித்தி
தூக்கான சிதம்பரந்தான் சித்தியாச்சே. (ச)

சிதையாமல் சுப்பிரமணியர் அறுகோணஞ்சித்தி
முத்தியென்ற முப்பத்து ஆறுஞ்சித்தி
முதல் . . . ணவடுகன்சித்தி
கத்தியுடை வீரருடன் காளிசித்தி
கடிதான சிதம்பரந்தான் கைக்குள்மாச்சு
பத்தியுடை நவகோண . . .
. . . முக்கோணமாச்சே. (ரு)

ஆச்சப்பா மடங்கள[து](வை) இருபத்தெட்டும்
அப்பனே இவர்களது ஆட்ட . . .
. . . ச்சப்பா ககனத்தின்குளிகையாடி
நலமான பெருமையெல்லாம் நாட்டம் பார்த்து
மூச்சப்பா யோகத்தின் பெருமைபார்த்து
முடிவான ஞானத்தின் பெருமைபார்த்து
ஓச்சப்பா வாகாயமோடியாடி
யுத்தமனேயிருக்கிறது மடங்கள தோறும். (சு)

தோறான மடத்துக்கு நேரே மேற்கு
துலையான யோசனை தானிருபத்தஞ்சு
ஆறான சதுரகிரியென்று நாமம்
அப்பனே யடிமலையிலைந்தங்கோடி
நேரான கைலாசன் வர்க்கமான
நிர்மலனுஞ் சட்டை முனியென்று நாமம்
பேறான பிள்ளைகள் தானிருநூற்றஞ்சு (உ௱ரு)
பெரிதான வர்க்கத்தின் பெருமைதானே. (எ)

பெரிதான பிண்ணாக்கீசர் என்று நாமம்
பேரான பிள்ளைகள்தான் முப்பத்தாறு
அரிதான வகப்பைசித்தர் பாம்பாட்டிசித்தர்
அப்பனே யவர்களுக்கு ஐம்பத்தேழு (ருஎ)
தெரிதான பிள்ளைகள்தான் தெரியச்சொன்னோம்
திறமான கருவூரார் திறமைகேளு
மருவான சுரூபந்தான் வகைதானாகும்
வரிசையாய் பிள்ளைகள்தான் பத்துமாமே. (அ)

ஆமப்பா வம்மலையிற் பின்னுங்கேளு
அப்பனே நாதாக்கள் கோடாகோடி
தேமப்பா யோகிகள்தான் கோடாகோடி
திறமான ஞானிகள்தான் கோடாகோடி
காமப்பா ரிஷிகளவர் கோடாகோடி
கற்பமுண்ணுஞ் சித்தரவர் கோடாகோடி
ஓமப்பா வுத்தமர்கள் பிராணயாமம்
உச்சரிக்குஞ் சிவயோகியநந்தங்கோடி. (கூ)

கொதிப்பான தனமுண்டு குணத்தைக்கேளு
நாடியடா வம்மலைக்கு நாமதேனம்
நலமான சித்தர்மயம் கோடாகோடி
தேடிவரும் பிள்ளைகள்தான் அனந்தங்கோடி
திறமான ரசகுளிகை கிட்டுங்கிட்டும்
ஆடியடா வம்மலைக்குத் தென்மேற்காக
அப்பனே கன்னியா குமரியாமே. (௰)
குமரியாம் நகரத்துள் குணத்தைக்கேளு
குறிப்பான காடதுதான் யோசனைதான் நூறு
அம்மரியாம் அகத்தியன்றன் நீருக்குள்ளே
அப்பனே மலைதானும் ஆறுண்டப்பா
அமரியாம் வழிதெரிந்து போகவென்றால்
வதையாக விக்கரையில் மாந்தர் நோன்று
பமிரியா மக்கரையில் டாந்தர் நோன்று
. . . . க்ஷத்திற்சேருமடா பருவம்பாரே. (௰௧)
பாரப்பா **பொதிகையென்று** உலகத்தோர்கள்
பாங்கான சதுரகிரி மலையைச் சொல்வார்
தேரப்பா பொதிகை யென்றமலை தானப்பா
நிலையாத சமுத்திரத்திற் சாரல்நிற்கும்
ஓரப்பா மலைதானும் யோசனையின் நூறு
உத்தமனே யுயரமது இருநூறுகும் (உா)
மூரப்பா மறிவதுதான் மூன்றாய் நிற்கும்
முக்கண்ணன் சாபமதால் முக்கோணமாச்சே. (௰௨)
ஆச்சப்பா வம்மலைக்குச் சேரவென்றால்
அப்பனே சிதம்பரத்தின் ஆட்டம்வேணும்
மூச்சப்பா யோகநிஷ்டை பிராணயாமம்
முடிவான தமர்வாசல் திறத்தல்வேணும்
ஓச்சப்பா வாலையுடை நிஷ்டை வேணும்
உததமனே வடுகனுடன் வீரன்வேணும்
. . . . ப்பா நாலுவகை திறமுண்டானால்
நலமாக வம்மலைக்கு நாடலாமே. (௰௩)

*　　*　　*　　*

**End :—**

இராவணன் வேதம் : தெலுங்கு :—

பாரப்பா ராவணன்றன் ஒருநாள் கேளு
பரிவாக வேதமது நாலுந்தூக்கி
நேரப்பா வேதமென்ற நாலையுந்தான்
நிலையாகச் சீர்தூக்கிப்பார்க்கும்போது
ஆரப்பா ஆயிரத்துஎட்டு வேதம்
அப்பனே சிக்கறுத்துக் கோத்து விட்டான்
ஊரப்பா ஊர்தோறும் பரவவில்லை
**உத்தமனே யப்பவடா தெலுங்குண்டாச்சு.** (௱௩௩)

அப்பனே அகத்தியர்தான் பண்ணுரைப்பா
வாச்சப்பா வடுகருக்கு . . .
வகையான பிராமணர்க்கும் ஆடும்பாரு
காச்சப்பா கன்னடியார்க்காகும்பாரு
கலையான குச்சிலியார்க்காகும் பாரு
மாச்சப்பா மராட்டயர்க்குமாகும் பாரு
மறையான மிலேச்சருக்குமாகும் பாரே. (௱௬௪)

பாரப்பா வனைவருக்கும் வேணும் வேணும்
பாங்கான சத்திரியர்க்கும் வேணும் வேணும்
நேரப்பா வைசியருக்கும் வேணும் வேணும்
நிலையான சூத்திரர்க்கும் வேணும் வேணும்
தேரப்பா துலுக்கருக்கும் வேணும் வேணும்
தெளிவான கலிங்கருக்கும் வேணும்வேணும்
ஏரப்பா வெடுத்திருக்கு மண்டத்தோர்க்கும்
இயலான தமிழதுதான் வேணும் பாரே. (௱௬௫)

பாரப்பா அதலமொன்றும் விதலமொன்றும்
பரிவான நிதலமொன்றும் எழுலோகம்
ஏரப்பா மேலே மூலோகமுண்டு
மெய்யான லோகமடா சத்திய லோகம்
ஏரப்பா விப்படியே கூடிநின்றால்
இயலான வண்டமடா வொன்றுமாகும்
ஆரப்பா வாயிரத்தெட்டு அண்டமாகும்
அப்பனே யவர்களுக்குந் தமிழே வேணும். (௱௬௬)

வேணுமடா சிதம்பரத்திற் பார்க்கவென்றால்
வரிவான தமிழதுதான் வேணும் வேணும்
பூணுமடா வாலையைத்தான் பூணவென்றால்
புகழான தமிழதுதான் வேணும் வேணும்
தோணுமடா சிவயோகம் வாசியோகம்
தூக்கவென்றால் தமிழதுதான் வேணும் வேணும்
ஆணுமடா வனைவருக்கும் வேணும் வேணும்
அப்பனே யனைவர்க்கும் அறிந்துபாரே. (௱௬௭)

பாரப்பா கிருதயுகத்திற் சித்தரப்பா
பரிவான பெருக்கனுடைக்கணக்கைக்கேளு
நேரப்பா கோடியாயி ரண்டிலட்சம்
நிலையான திரேதாயுகத்திலி லட்சங்கோடி.
தூரப்பா துவாபரத்துக் கோடிகேளு
தூக்கானவைம்பதென்ற வாயிரந்தான்
காரப்பா கலியுகத்தில் கோடிகேளு
கணக்காகவிருபத்தையாயிரந்தான்பாரே. (௱௬௮)

பரிவாக விப்படியே பெருகும்பாரு
வேரப்பா சித்தரென்று வேறேயெங்கும்
விதம்விதமாய்ச் சித்தருடைப்பெருக்கம் மெத்த
நேரப்பா விப்படியே யாயிரந்தான் கோடி
நிலையான லட்சமடா கலியுமானால்
காரப்பா கணக்கெல்லாஞ்சரியே யாச்சு
காணாத பரவெளியடைங்குவாரே. (௱௬௯)

அடங்குவார் சித்தரெல்லா மடங்கிப்போவார்
அப்பனே சோதியிலே கலப்பார்பாரு
கடங்குவார் கண்டு நன்றாய்க் களிகூர்வார்கள்
காணாதகாட்சியெல்லாங் காணுவார்கள்
சடங்குவார் சிலம்பொலியின் சத்தங் காண்பார்
சாத்திரத்தை யறிந்து நன்றாய்ச் சத்தங்கேளு
ஒடுங்குவார் நடனசக்தி பாதந்தனனில்
உத்தமனே யொடுங்கிநன்றாய் உருகுவாரே. (௨௱)

உருகுவாரிப்படியே சித்தரப்பா
உத்தமனே சித்தருடைப்பெருமை கேளு
வருகுவார் யுகந்தோறுவளர்ந்து நிற்பார்
வானென்ற அண்டத்திலாடுவார்கள்
சருகுவார் சமாதியிலேயடங்கி நிற்பார்
சரமான வாசியைத்தான் உட்கொள்வார்கள்
பெருகுவாரிப்படியே பெ . . . . . . . . . . .
. . . . . . . . . . .
. . . . . . . . . . . . . (௨௱௧)

கு. - பு. :—இந்நூல் சித்தராதற்குரிய யோகமுறைமையினையும், அவ்யோகத்தான் சகல விதமான சித்திகளையும் பெருமாற்றினையும், இவ்வுலகின் நிலப்பரப்படங்களிலும் உள்ள சித்தர்கள் பலருடைய இருப்பிடங்களையும், இவ்வுலகிலே நாலு யுகங்களிலும் சித்தர் குழாம் இதத்துணையனதோன்றுகின்றன என்பதனையும், இன்னும் அகத்தியர், சட்டைமுனி, கொங்கணர், இடைக்காடர், திருமூலர், பாம்பாட்டி, முதலானோரது குடும்ப வர்க்கம் இத்துணையன, அவை இன்னின்ன மலைச்சாரல்களிலே யமைந்துள்ளன என்றினை முதலிய விஷயங்கள் பலவற்றையும் எடுத்துக்கொண்டு தெற்றென விளக்குகின்றது. இது, இன்னாரால் இயற்றப்பெற்றது. இன்ன பெயருடையது. இத்துணைத்து என்றவைகட்குரிய சான்றுகளில் ஒன்றேனும் இதிலிருந்து விளங்கவில்லை. இங்குக் காணப்படும் செய்யுட்கள் இருநூற்றொன்றேயாம். இதில் இந்நூலாசிரியர், உலகில் ஒருவன் சித்தனாதற்கு விழைந்தானாகில் அவன்தான் தன்சிறிய காலத்தில் பதினாறு வயது முதற்கொண்டு யோகமுறைமையில் ஒழுகல் வேண்டு முறைமையினையும் அவனுக்குரிய ஆகார நியமத்தினையும், இன்னானுக்குச் சித்திக்குமென்ற

தினையும் நன்குகவிளக்கியிருக்கிறார். நிற்க, கடையகத்தில் தெலுங்கு பாஷை இராவணன் வேதமோதின காலத்தே பிறந்ததென்று கூறிப்போந்து இறுதியாகத் தமிழ்ப் பாஷையானது மிகப் பெருமை வாய்ந்தது, அது, யாவர்க்கும் இன்றியமையாதது, என்றதாயும் மிகவும் சிறப்பாகத் தம் வாயாரப் புகழ்திருக்கின்றார். ஏடுகள் பல புழுவரிக்கப்பெற்று மிகக்கிரந்த பாதங்களுடன் காணப்படுகின்றன.

---

## No. 2332. அம்பிகாநந்தர் முப்பூ சூத்திரம் இருபத்தைந்து.
## AMBIKĀNANDAR MUPPŪSŪTTIRAM IRUPATHAINDU.

Pages, 16, lines, 5 on a page. Character, Tamil. Condition, good. Appearance, old.

Begins on fol. 1 a. patañjaliyār vādattiṟavukōl 9-a. Irāmadēvar pakṣiniaimpadu 16-a. Ñānakkaḍāviḍai 30 a.

Complete.

A treatise, in verse, on Alchemy. Ambikānandar, the author, states, in the beginning of the work, that he is the third grandson of Tirumūlar, and the fourth son of Bhōgar and that he has written two other works, one on *Vāśiyōgam*, and another on Medicine, in addition to this work.

**Beginning :**

அம்பிகாநந்தர் மூப்பூசூத்திரம் இருபத்தைந்து.

கார் செறியும் மேனி விநாயகனே காப்பு
காலாங்கி காப்பு கருவூரார் காப்பு
மேர்வளரும் போகானந்தி காதங்காப்பு
மெய்யாகுங் கும்பமுனிபதமே காப்பு
தார்வளருஞ்சித்தரிருபாதங் காப்பு
சாத்திரமுஞ்சூத்திர முந்தானே காப்பு
பார்தனிலே வகாரதுறையிருபத்தைந்தும்
பாடுதற்கு மூலரெந்தன் பாட்டர் காப்பே. (க)

பாட்டர்திருமூலருக்கு மூன்றும் பேரன்
பாங்கானபோகருக்கு நாலாம்பிள்ளை
தாட்டிமாம் அம்பிகானந்தனென்பேர்
தருவான அரனுமையின்தாளைப்போற்றி
மூட்டினேன் வாத மெழு நூற்றுப்பத்தில்
முந்நூற்றிருபதனில் வாசியோகம்
பூட்டினேன் வைத்தியத்திலீரைந்நூறும்
பொன்கயிலைச்சட்டர்கண்டு புகழ்ந்திட்டாரே. (உ)

புகழ்ந்திட்டகைலாச சட்டைநாதர்
புதல் வருஞ்சுந்திரர் என்நூலைப்பார்த்து
இகழ்ந்திட்டார் நூல்களிலே மூலந்தன்னை
இப்படியும் வெளியாக்கலாகாதென்ன
நிகழ்ந்திட்ட இருவருக்குந்தர்க்கமாச்சு
நிமிஷத்தில் நூல்மறைத்தார் நின்றசித்தர்
புகழ்ந்திட்டேன் கோபத்தாலிந்தநூலைப்
பார்த்தவருமெனக்காகப் பயந்திட்டாரோ. (௬)

பயந்திட்டார் மூலவர்க்கச் சித்தரெல்லாம்
பகைபண்ணக்கூடாது இருபத்தைந்தும்
செயம்பெற்றநூலிதென்று வெளியில்விட்டார்
சித்தர் சொன்னநூல்களெல்லாமிதற்கீடல்ல
மயம்பெற்றவாதத்துக்காதி யென்றும்
வாசியென்ற யோகத்துக் காதியென்றும்
நயம்பெற்ற ஞானத்துக்காதியென்றும்
நலமான கற்பமுதற்குளிகை கேளே. (௭)

* * * * * *

ஒன்றான வங்கியென்ற வழலையுப்புக்
கொப்புமுண்டோ வென்றாலே யுரைக்கப்போமோ
குன்றானபூமியெல்லா மோடினாலும்
குருவழலை உப்பறியக்கூடாதையா
சென்றானப்பூமூலையாள் தன்னைப்பாரு
செங்கையிலே பூண்டகங்கணத்தைப்பாரு
நன்றான ரேக்கிருந்த பூமிபாரு
நல்லபச்சை மஞ்சள் நிறம் நாடிப்பாரே. (௭)

**End :**

வெளிவருமோ பரிபாஷை புதையல்தன்னை
விதியான வினையாளன் காண்பதல்லால்
தெளியாத மூடருக்கு நூன்மகத்துவம்
செப்புகின்ற உபமான தியானமெல்லாம்
வெளியோடே தெரியாது தங்கள் தங்கள்
மனதுக்குச் சரிப்போனபடியே பார்ப்பார்
அளியாத அங்கியுப்புமாதிவுப்பும்
அண்டமென்றும் பிண்டமென்றுமாசிப்பாரே. (உ௩)

ஆசிப்பார் வெள்ளிக்குமீனே யென்பார்
ஆத்துக்குள் பாஷணம் மீனே யென்பார்
வேசிப்பாங்கண்ணுக்குக் கடலேயென்பார்
வெங்கலத்தைக் கஞ்சமென்று விள்ளுவார்கள்
பாசையாய்ச்சொன்னாலு மறிவாரென்று
பழங்கதைபோல் சொல்லெடுத்துப்பாடிப்போட்டார்
தோசிகளா உங்களுக்கு இந்தப்பாஷை
தோய்வதெப்போசுகிருதவான் சோதிப்பானே. (உ௪)

சோதிப்பாயங்கியுப்பை வழலையென்றும்
சுண்ணமென்றும் பாலைதிலச்சுடராமெனவும்
நாதியானகேசரத்தின் ரோணநிட்டை
ஞானமென்று ம் யோகமென்று நல்லோர் காண்பார்
வேதிப்பான சாரணைக்குப்புடமாமென்றும்
பெரிதான கற்பமதேரசமாமென்றும்
சாதிப்பானிதற்கெல்லாமனமாமெனறுஞ்
சாத் ிரமு ம இருபத்து ஐந்துமுற்றே. (உரு)

(கு. - பு.)—

இந்நூல் இரஸவாத விஷயமாய் இருபத்தைந்து பாடல்களாகவமைந்துள்ளது. "அம்பிகாநந்தர்" என்னும் சித்தர்ப்பெரியாரால் இயற்றப்பெற்றதாகும். இப்பிரதியில இது முற்றும் உளது. நூலாரம்பத்தில் இந்நூலாசிரியர் தம்மைத் திருமூலருக்கு மூனறும்பேரன் என்றும், போகருக்கு நாலாம்பிள்ளையென்றும், தமக்குப் பெயர் "அம்பிகாநந்தன்" என்றும் இரஸவாத விஷயமாக எழுநூற்றுப்பத்துப்பாடல்களில் நூலொன்றும், வாசியோகவிஷயமாக முந்நூற்றிருபது பாடல்களில் நூலொன்றும், வைத்தியத்தில் ஆயிரம் பாடல்களில் அமைந்த நூலொன்றும் தாம் இயற்றியிருப்பதாகவும் இரண்டாம் பாடலிலேயுணர்த்தியிருக்கின்றார். எழுத்துப்பிழையுள.

---

## No. 2333, பதஞ்சலியார் வாதத்திறவுகோல் இருபது.
## PATAÑJALIYĀR VĀDATTIṞAVUKŌL IRUPADU.

Pages, 13. Lines, 5 on a page.

Begins on fol. 9-a of the M S described under No. D. 2332.

Complete,

A treatise on Alchemy. It is made out from the remarks in the beginning of this work that this is a summary of another work, consisting of two hundred verses, on the same subject by Patañjali, the author.

**Beginning :**

பதஞ்சலியார் சந்தப்பா இருநூற்றுக்குச் சுருக்கம் (உக) இருபத்தொன்று.

வாதத்திறவுகோல்.

பூமலியும் கணபதி தன்பாதம்போற்றிப்
புகழ்பெரிய வாதத்தின் திறவுகோலை
நாமுரைப்போ மைந்நான்கு பாடற்குள்ளே
நலமான வாதவித்தை ஞானமார்க்கம்
சோமனுற்ற வேணியனர் உபதேசத்தால்
துறையறியும் பதஞ்சலிதன் சூத்திரத்தில்
ஏமவித்தைக்காதியென்ற வத்துவுப்பு
இதையறியமாட்டாமல் ஏங்கினரே, (க)

ஏங்கினூர் வஸ்த்துவுப்பைக் கண்டாப்போமே
இத்தாலேயிருக்குமெதன்பார் எத்தாலென்றால்
பாங்கியர்கள் தீட்டமென்பார் விந்தாமென்பார்
பன்னிரண்டு பதினாறும் பருவமென்பார்
தாங்கிவளர்த்திட்ட தலைப்பிள்ளை யென்பார்
சமாதியிலே வைத்திருக்குந்தலையோடென்பார்
தூங்கையிலே சொப்பனத்தில் ஆயிவந்து
சொன்னதெனபார் பூடென்பார் சுத்தியென்பார். (உ)

சுகியென்பார் கோழி முட்டை கிளிஞ்சிரெண்டும்
சுத்தசலமாஞ்க்காற் தொழிலாமென்றும்
தகையென்ன செவிநஞ்சு கண்ணிரண்டும்
கோசமென்றும் பீசமென்றும் குருவென்டென்றும்
திகையாத கடத்தினில் ஐங்காய மென்றும்
சிகையென்றும் பூநாகத் தெளிவென்பாரே. (௩)

**End :**

கண்டுபார் பிராணயாம மாதிமார்க்கங்
காட்சிபெற்றூர் கற்பூரத்தேகமாகும்
பண்டு சொன்ன பரத்தினடி விசுத்திமூலம்
பராபரமாங்குருச் சொல்லப்பலிக்கும் மூலம்
கண்டமடித்துண்ணுக்கிற் கும்பகத்தால்
கால் நிறுததியுள்சடத்தைக் காணவேணும்
மண்டலத்தில் வஸ்த்து வுப்பைக்காணவென்றால்
பண்பார்த்துப்பண்பார்த்து வாழுவீரே. (உ௰)

வாளவே நடுவெழுத்துக்காதாரத்தை
மாட்டிவைக்கத் தலையெழுத்துப்பிரகாசிக்கும்
மீளவே கடையெழுத்து ஓடாதப்பா
விட்டெழுத்துந் தொட்டெழுத்தும் தலைகீழாச்சு
தாளவே வேண்டாங்காண் பிராணவாய்வு
சகசிரதளபானம் உண்ணச்சாவு போச்சு
கோளுமே வராது பரம் நீயாவாய்
கூறிய வாதத்தின் திறவுகோல்முற்றே. (உக)

(கு. - பு.)—

இந்நூல் இரஸவாத விஷயமானது. இருபது செய்யுட்களான் அமைந்துளது. இது, பதஞ்சலியார் தாம் சந்தப்பாவானியற்றியதோர் இருநூறு பாடல்களைக்கொண்ட நூலுக்குச் சுருக்கமாய் அமைத்ததென்று இதன் தலையிற்காணும் ஓர் தொடர்மொழியால் தெரிகின்றது. மற்று, “ கிடைக்குமிந்த நூலுக்கு முன்னூலைய்யா, கெட்டியாய்ப்புதைத்துவைத்தேன் அந்த நூலில், முடிக்கனலும் அடிப்புனலும் நடுக்கான்மூன்றும், மோசமின்றிப்பாடிவிட்டேன் இருநூறுசந்தம், கொடைக்கொருவன் என்பதுபோல் இந்த நூலிற் கூறுவேன் வஸ்த்துவுப்பின்குறிப்பொன்றைத் தான், உடைக்கவென்றால் முடிக்கனல் அக்கினிப்பூ உள்ளே யுற்றவிடம்

வஸ்த்து வுப்பென்றுரைக்கலாமே." (மக) என்று காணப்படும் பதினோராஞ்செய்யுளாலும் வலியுறுகின்றது. இப்பிரதியில் இருபத்தோரு பாடல்களுமிருக்கின்றன: எழுத்துப்பிழை மிகவாய்க் காணப்படுகின்றன.

---

## No. 2334, இராமதேவர் பட்சிணி ஐம்பது.
## IRĀMADĒVAR PAKṢIṆI AIMPADU.

Pages, 28. Lines, 6 on a page.

Begins on fol. 16-a of the M.S. described under No. D. 2332.

Complete.

Same work as that described under Nos. R. 201 (b), R. 275 (f) of the Triennial Catalogue of Tamil Manuscripts. Vol. II.

(கு. - பு.)—

இந்நூல் மூவருடக் காடலாக்கு 201 (b) 275 (f) ஆகிய இந்நம்பர்களில் வந்துள்ள நூலேயாகும். இப்பிரதியில் இந்நூலின் ஐம்பது செய்யுட்களும் இருக்கின்றன. ஷை பிரதிகளில் இறுதியிலே (51) ஆவது பாடலாகக்காணப்பெறும் "எட்டு மிரண்டுமறிந்தவர்க்கே யெய்துமெய்தும்" என்ற விப்பாடல் இப்பிரதியில் காணப்பெறவில்லை. எல்லாப் பாடல்களிலும் பிரதிபேதங்காணப்படுகின்றன. எழுத்துப்பிழை மிகவும் காணப்படுகின்றன. இது முடிந்த பின்னர் "கடாவிடை" என்ற தலையங்கத்தின்கீழ் ஒரு நூல் உக்திபிரத்யுக்தி ரூபமாய் அமைந்துள்ளது. அது ஞானவிஷயம்போலும்.

---

## No. 2335, ஞானக்கடாவிடை.
## JÑĀNAKKAḌĀVIḌAI.

Pages, 7. Lines, 6 on a page.

Begins on fol. 30 a of the M.S. described under No. D. 2332.

Incomplete.

Similar to the work described under No. D. 1942 of the Descriptive Catalogue of Tamil Manuscripts. Vol. V.

**Beginning :**

கேள்வி.

எண்டி கிழவி எங்கிருப்பாய்
எந்தத்தேசஞ் சொல்லாய்
என்னபாடு பட்டுப்போறாய்
எந்தனுக்குரை செய்வாய். (க)

உத்திரம்.

கொச்சிமலை கோவைமலை, பிச்சிமலையென் நாடு
மொச்சியிருக்கும் பெரியோர் உச்சிமலை யென் நாடு. (உ)

மொச்சியிருந்தமலையன்ன உச்சிமலையென்ன கிழவி
உள்ளசேதி சொல்லிவிடு உச்சிதமாய்க் கேட்பேன. (௩)

கைபார்க்கவேணுமானால் காட்டு கையைக் கண்ணே
காதலவன் தேடிடுவான் காணாமல் வந்தேன். (௪)

காதலவன் ஆர்கிழவி காணவேணும் ஆயாள்
துன்றுகிழவன் உந்தன்மீதில்தோணுமோ சொல்லாயாள். (௫)

அடிபோடி அம்மம்மா அவன்பேரைச் சொன்னால்
ஆருக்கப்பால் ஊருக்கப்பால் ஆரும் நாடார் சொன்னேன். (௬)

அண்டரென்றுந் தொண்டுசெய்யுமருளேபோற்றி
அத்தன் முனி அப்பனுக்கு அருளாய் போற்றி
விண்டவர்கள் கண்டவரே கணேசர் போற்றி
விடுபட்ட யானையுமாய் நினறாய் போற்றி
குண்டலியில் நின்றகுருபரனே போற்றி
குருவாக நின்றவுன்னைப்போற்றினேனே . . .
என்நாடு பொன்னாடு வெள்ளிமலைநாடு
வேடிக்கையாய் நான்வந்தேன் வீதிதனைப்பார்க்க
கஞ்சனூரெல்லையிலே கனத்திருந்த என்னை
கனத்திருந்த என்கணவன் பின்னேபோகச் சொல்லிக
காட்டுமென்றார் உன்னை . . . . . . .
தனியொருத்தி யிங்கிருந்தால் தாளுமோ சொல்பூமி
தவறாத வுன் விரதந்தாக்கிப்பிடிப்பாயே
பூர்த்தகிழம வெளுத்தகிழம் பழுத்தகிழம் அம்மே
பேரான வெள்ளியங்கிரி பேராளேன் கண்ணே. (எ)

**End :**

நில்லென்று சொன்னவரே நீயே யிதைச்சொல்லும் அய்ய
நீணிலத்திலுண்டோ தான் நின்றதெங்கே சொல்லும்
கல்லுமலை பொன்னுமலை வெள்ளியாமதுவொன்று
கருத்தளிந்து பார்த்தெடுத்தால் கனமெடுக்கலாமே
சின்னவளே பெரியவளே பொன்னுமாங்காய் காய்க்கும்[பெண்
[ணே
மின்னற்பூவும் சொர்னக்காயுமெத்த பூத்துப்பழுக்கும். (௧௩)
சுத்தமான செங்கல்லொன்று சார்ந்திருந்தால் பூர்க்கும்
புத்தமான வெங்கலத்திற் பொருந்திப்பார்த்தால் நீர்க்கும். (௧௪)
மேகமுண்டு நீரையள்ளிக்கெர்ப்பமானவாறுபோல்
நீரையுண்டு பூமி மீதில் நின்ற வாற்றைப்பாருமே. (௧௫)

(கு. - பு.)—

இச்சிறு நூல் சித்தர் நூல் வகையினைச் சார்ந்ததாய் யோகம் ஞானம் இரஸவாதம் என்னுமிவைகளையுணர்த்துவதென்று தெரிகிறது. இது இன்னரால் இயற்றப்பெற்றதென்றும் இத்துணைத்து என்றும் இன்ன பெயருடையது என்றும் இதிலிருந்து ஒருவாற்றானும் விளங்கவில்லை ; இடையில் இரண்டொரு இடங்களில் மகடூஉ முன்னிலையதாயும் " சிங்கி "

எனவிளித்துக கூறப்பெற்றதாயும் குறத்தி பேசும் முறையிலே ஒழிந்த சொற்களாகா அமையப்பெற்றதாயும கடாவிடையுருவமாயும் அமைந்து உள்ளது. இதன்கண் வந்துள்ள பல சொற்களின் பொருள்களும் சித்தர் நூல்களிலேயுள்ள பரிபாஷையிலே பெரிதும் பழகிப்போந்தவர்க்கே எளிதில் புலனுகும். "இரட்டுற மொழிதல்" (சிலேஷை) என்னும் தந்திர யுக்தியால் பொருள் கொள்ளவேண்டியதாயிருக்கிறது. "குறம்" என்ற பிரபந்த வகையிலே சார்ந்தது போல் தோன்றுகின்றது. எழுத்துப்பிழை மிகவும பொதிந்து கிடககின்றன. இங்கு முப்பத்தைந்து (35) கண்ணிகளே உள வாதலின் இந்நூல் முற்றுப்பெறவில்லை. மேலும் உள்ள பகுதியை பொதிவைக்க வெற்றேடுகளும் (2) கோககப்பட்டிருக்கின்றன.

---

## No. 2336. உபநிடதவாதம் (சுத்தவேதாந்தக்கட்டளை.)
## UPANIḌADAVĀDAM (ŚUDDHAVĒDĀNTAKKAṬṬAḶAI).

**Substance, palm-leaf. Size 8 × 1 inches, pages, 20. Lines, 8 and 9 on a page. Character, Tamil. Condition, injured. Appearance, old.**

Incomplete.

Similar to the work described under No. D. 1552 of the Descriptive Catalogue of Tamil Manuscripts. Vol. III.

**Beginning :**

உபநிடதவாதம்.

சுத்த வேதாந்தக்கட்டளை வருமாறு எதென்னில் ; மகா வாக்கியம சொல்லப்பட்ட ஞானமே ஞானம். அதை யல்லாமற் சொல்லப்பட்ட ஞானங்களெல்லாம் அறியுமிடத்தில் அஞ்ஞானமேயாம். ஆனபடியினுலே சுதத வேதாநதஞ் சொல்லப்பட்ட பரீச்சையை ஆசாரியர் சீடனுக்கு அனுக்கிரகம் பண்ணுகிருர். அதெப்படியென்னில் இருக்கு யஜுஸ் ஸாமம் அதர்வணம் என்கிற நாலுவேதமும் இரண்டு பிரகாரமாயிருக்கும். அதெப்படியென்னில், அற்பசுருதி வாக்கியமென்றும் பிரபலசுருதி வாக்கியம் என்றுஞ் சொல்லப்படும். இதில் அற்பசுருதி வாக்கியம் கன்ம காண்டத்தைச் சொல்லும், பிரபல சுருதி வாக்கியம் அத்தியாத்மகமாகிய ஞான காண்டத்தைச் சொல்லும். இது முப்பத்திரண்டு உபநிடத்தாயிருக்கும். இது நாலு வாக்கியங்களைப் பிரதிபாதிக்கும். அதேதென்னில் பிரஞ் ஞானம் பிரமம், அகப்பிரம்மாஸ்மி, தத்துவமசி, அயமாத்மா பிரம்மம் என்கிற நாலு வாக்கியமும் சீவபர ஐக்கியத்தைச் சொல்லும்.

**End :**

. . . . ஆதலால் இந்த மூன்று அவத்தையும் நீயல்ல. அதெப்படியென்னில் சாக்கிரமெழுபாதியுடனே கூடி விளங்குமென்றுஞ் சாக்கிரஞ் சொப்பனத்தில் அழியுமென்றும் இப்படியுன்ளுல் அறியப் படுகையினுல் அறியப்படுகையினுலே சாக்கிரமும் நீயல்ல. சொப்பனந் தான் நானே வென்னில் சொற்பனமு நீயல்ல. அதெப்படி நானல்லவெனில் சொப்பனம் சாக்கிரத்தின் வாதனையென்றுஞ் சொப்பனம் சுழுப்தியில் அழியுமென்றும் இப்படி உன்னுல் அறியப்படுகையினுலே சொப்பனமும் நீயல்ல. சுழுப்திதான் நானேவென்னில், சுழுப்தியும் நீயல்ல. அது எப்படி நான் அல்லவென்னில் பிராணனேயாகாரம் என்றும் ஒன்று ...

சுழுத்தியும் நீயலல. இனி நாலா யாரோவென்னில் இப்படி மூன்று வத்தையும் உணர்ந்து அவைகழன்று உணர்வாய நின்று விளங்குகிற துரியம் காரணம். நீயாகிற சொரூபத்தையாக்கும் மகாவாக்கியம் சுத்த த்வம் பதார்த்தம் சொல்லப்பட்டது. ? இனி, தத்பதார்த்தம் சொல்லு கிறோம். தத்பத முக்கியத்தை மனனம் செய் . அதெப்படியென்னில், ஸர்வஞ்ஞன். [சிறுவக்கினன்] ஸர்வ காரணன். ஸர்வாந்தர்யாமி. ஸர்வேசுவரன். ஸர்வ சிருட்டி ஸர்வஸ்திதி ஸாவஸம்ஹாரகாரகன். இதுதத்பதமு. . . .

(கு. · பு.)—

இந்நூல டிஸ்கிருப்டிவ் காட்லாக்கு 1552 ஆவது நம்பரில் வந்துள்ள தத்துவாமிருதக்கட்டளையென்ற நூல்போலே யிராநின்றது. இப்பிரதி யில் இது முற்றும் இல்லை. எழுத்துப்பிழை மிகவும் காணப்படுகின்றன. ஏடுகள் சிதலுற்றுச் சிதைந்திருக்கின்றன.

## No. 2337. வனமூலிகை பிரயோக வண்ணம்.

## VANAMŪLIKAI PIRAYŌGA VAṆṆAM.

Substance, palm-leaf. Size, $8\frac{3}{4} \times 1\frac{1}{16}$ inches. Pages, 9. Lines, 8 on a page. Character, Tamil. Condition, injured. Appearance, old.

Complete.

Explains how to use the various herbs, found in forests, as remedies for diseases.

**Beginning :—**

வனமூலிகை பிரயோகம் வண்ணம்.
சம்புடனே வேர் விரையை, யுண்பவர்க்கு
கிராணி மூலத், தென்புடனே தீருமென்று,
கும்பமுனி தானுரைத்தார்
சித்திரமூலத்தின் மூலம், மெத்தவலாய்க
கொணர்ந்து, சத்தாகிலுங் கிஷாயம்,
வைத்தாகிலுங் குடிக்கில்,
இரத்தமொடு சீதமும், பெருத்ததொரு
மேல்வயிறு, மத்திசுரதாபமுடன்
இத்தனை நோயேகிவிடும்
நிலவாகை பேருரைக்கில், மலைபோலும்
முதுவயிறு, குலைவாய்க்குலைநந்து வது,
நிலையாது போகும் நிசம்
தும்பையது தான்குடிக்கில்
அம்புவிதுவே கொடிய
பம்பரம்போலே சுழற்றும்
வேம்பு பித்தமே யகற்றும்
கரிசலாங்கண்ணில் மாதர், பிரியராவர்
வசியமுண்டு, தெரியாதணவிழுங்குந்,
தரியாது பாண்டுருமல் (ஐ)
ஆவாரை பிரமேகமகத்துமே .. (க)

யுங்கவதின் மேகமெல்லாம்
இங்கிதமாயேகுமென்றும்
மங்கைபாகர்தாமுரைத்தா
தழுதாழை வேர் சமூலம்
வழுகாமலே கொணாந்து
நழுவாமலே யரைத்து
விழுதோடவேயுணவே
சித்தமதில் வாதமெல்லாய
மெத்தவதி சூலைகளுய்
சத்து நிலாதே யோடும்
வித்தகமாய்ச் சூனிமூடக
கொத்தானும் வேர் சமூலம்
மெத்தாகவே யெடுத்து
வித்தாரமாயரைத்து
அத்தாவலாயுண்ணவே
கட்டுகள் மலத்தில் சீதம்
விட்டுவிடுமே யிடுப்பில்
குட்டுவலிதானுமோடுந்
திட்டமதாய்ச் செய்கலாகும்
மூக்கால் நல்வேளைதன்னைச்
சுக்காகவே யுணர்த்தித்
திக்காமலே யிடித்து
விக்காமலேயருந்த
வயிறூது பேதிகளும்
சுயமாகவே சுரங்கள்
தயவாகவே யடங்கும்
நயமாகுங் காயசித்தி (௫)
ஆதொண்டை தலைவலியை யாற்றுமே (௬)

**End :—**

குன்றிதனையே யுணவே
சன்னியுடன் வேர்வைமெத்த
நன்னய சுரோணிதமும்
விண்ணிலகன்றேடுஞ்சிறு
பீளைநீர் கட்டகலும்
வேளைவாதங்களுடன்
தாளையொம மூலையில்
மூளைநோய் தாளணகலும்
வட்டமெனும் பேய்மருட்டி
துட்டசுரம் போயகலும்
சுட்டியதிலான விஷம்
மட்டிலரும் வாந்தி சத்தி

வாய்ப்பாகவே யுணவே
போய்ப்பாயும் நஞ்சுவிஷம்
சாய்ப்பாகக் கட்டிவிடும்
புங்கதனில் மூலிகையில்
மங்குசொரி தேமல்களும்
பொங்கு அண்டவாத சன்னி
இங்கிதமா யோடும்புரை
மாக்கொளுந்தியினல் நசியம்
மூக்கதனிலே விடவே
தாக்குடனே கூடும் வலி
போக்கிவிடுமே தலையில்
ஆரறிவார் மூலிகை பிரயோகமே. (க)

திருச்சிற்றம்பலம்.

பிரமாதீசஞூ மார்கழிமீ ௰கஉ வேங்கடாசலம் எழுதி
முகிந்த மூலிகை பிரயோகம்

கு.பு.—

இந்நூல், வனமூலிகைகள் பலவற்றையும் இன்னின்ன விதமாகப் பிரயோகித்தால் இன்னின்ன நோய்கள் தீரும் எனனுமதைத் தெளிவாகத் தெரிவிக்கின்றது. இதில் சுமார் பத்துப்பாடல்களே யிருக்கின்றன. இது, இன்னரால் இயற்றப்பெற்றது என்று ஒரு சிறிதும் விளங்கவில்லை. ஏடுகள் ஒரு சிறிது சிதைந்திருக்கின்றன. எழுத்துப்பிழைகள் மிகுந்திருக்கின்றன.

---

## No. 2338. பொய்யாமொழீசர் குறவஞ்சி.
## POYYĀMOḺĪŚAR KUṚAVAÑJI.

Substance, palm-leaf. Size, 13 × $1\frac{1}{16}$ inches. Pages, 56. Lines, 8 on a page. Character, Tamil. Condition, injured. Appearance, old.

Complete.

A poem, in the *Kuṛavañci* style, in praise of God Poyyāmoḻīśa (Śiva) of Poygaippāhai. It has to be inferred from the last stanza that Cidambara Tattuvaliṅga Ayyan was the author of this poem.

**Beginning :—**

பொய்கைப்பாகை பொய்யா மொழீசுவரர்பேரில்
குறவஞ்சி பிரபந்தம் :—

தார்கொண்ட சடையர் மழுப்படைய ரொருவிடையர்
தையல் பார்வதிபாகர் **பொய்கைப்பாகையில் வாழ்**
சீர்கொண்ட பொய்யாத மொழிப்பரமர் மீது திற
மிஞ்சு குறவஞ்சிப் **பிரபந்தம்** பாடக்

சூடகொண்ட இளமருப்பன் வளர்பொருப்பனளித்த
குமரிசுதன கமலபதன் குஞ்சர நன்முகவன்
கார்கொண்ட மெய்யநமதய்யன் மதகும்ப கற்பகத்தைப்
பொற்பகத்திற் கருதுவன் காத்திடவே (௧)

தத்துவலிங்கந்துணை ஹேவிளம்பிஹூப் புரட்டாசிமீ 2-ந்தேதி துவாதசி திதியும் திருவோண நட்சத்திரமுங்கூடின சுபதினத்திலே பொய்கை பாக்கம் குப்புடையான பொய்யாத மொழி ஈசுவரர்பேரில் குறவஞ்சிப் பிரபந்தம் எழுதத்தொடங்கினது. தத்துவலிங்கம் துணை. பொய்யாத மொழி சுவரர் துணையாகவும். குருகடாட்சம் உண்டாகவும்.

பனிமதி நதிபொதி சடையுடையவர் பசு
பதிவன மிகுபொய்கைப் பாகையிலுறைதரு
மேகரநேகர் பராபர ரூபசிவன் மனதினில் நினைபவா
கதிபெற வுதவிசெய் வாகர **பொய்யாதவர்மேல்**
மதுரிதமிஞ்சிய செஞ்சொலின்ன **குறவஞ்சிதனைப்பாட**
**அனு**தினமியலிசை யறிபுலவர்களுள்
மறைதல மதிலுறை வெள்ளம்புசநாயகி
பங்கருமாமுகிலாகனுமாகனக
கனகிரி நிகரிரு தனவரை மகள்பல
கடவுளர் தவமுனிவோர்
கதிர்மதி திசையினரிவர்கள் தனிலகிய
கமலபதந்துணையே
நாட்டையத்தரு :—
பூகமுடனுக மிக மாகமடர் சொல்லதிகழ்
பொய்கைபாய்கையில் மருவு
மெய்யர் மழுக்கையர் ஆஆ
மேக நிகரான வரி காணளிய தானுமிசை
விந்தை **குறவஞ்சிப் பிரபந்தத் தமிழ்பாட** ஆஆ
நாகவிறை யோக சுதை நாகவு மாரிதரு
நாதரிருபாதருயர் ஞானகுருராயர் ஆஆ
சேகரமதாகுங்குற மாதையணை நீதரிசை
சீலவடி வேலரிரு காலமறவேன் ஆஆ

* * * * *

**End :**

தனி வழியாக நீ போன கொழுப்பேது
சங்கையில்லாமலே சிங்கி
எக்கச்சக்கம் பேசாதே உன்னுண்டைச்சியார்
சித்தஞ்சரிப் போனபடி போவேன் சிங்கா
எதுத்து நீ பேசினத்துக் குன்னைத்தாடையில்
எட்டி நான் அடித்தாலோ சிங்கி
இந்த எடாகூடங்கள் பேசாதே சண்ணப்போறேன்
ஏதிந்த வார்த்தைகள் சிங்கா,

சண்ணப்போறேனென்று தாண்டி தாண்டிவாராய்
சாதிக்கடுக்குமோடி சிங்கி,
சல்லித்தனமெல்லாம் பேசாதே போடா
உன்சளுக்கை நானறியேனோ சிங்கா
கள்ளைக்குடித்த மயக்கமோ பேசவும்
காரியமேதடி சிங்கி
அந்தக் கள்ளைக் குடிப்பதுங் காய்க்கப் பேச்சு முன்
காரணமல்லவோ சிங்கா

வசனம் :—

அம்மம்மா சிங்கம்மா கோவிச்சுக் கொள்ளாதே உன்காலுக்குக் கும்பிடு [கிறேனடி சிங்கம்மா

ஏதடா அம்மா என்கிறாய் அம்மக்கள்ளர் முறைமை கெட சிங்கா
அப்ப[ரி](டி)யுஞ் ? சொல்லப்போகாதோ
கோவிச்சுக்கொள்ளாதே சத்தே
பேசிக்கொளுவோம் வாடி சிங்கி

* * * * *

வாயெல்லாமிரத்தம் போற் சிகப்பாக
வழியுறதேதடி சிங்கி
எழில்வாய்ந்த மின்னார் தந்த தாம்பூலச் சாரத்தின்
வண்மை கண்டாயடா சிங்கா
பாரிலிந்தக்கோலமாமாலை யெல்லாமெங்கே
பண்ணிக்கொண்டு வந்தாய் சிங்கி
**பொய்கை பாகையிலீசுவரன் மோகினிதந்த**
பொற்பணிகள் கண்டாயடா சிங்கா
ஏதுக்கிங்[கை]கே நம்முடைக் குச்சியிற்போய்
இருப்போம்வா முன்போலே சிங்கி
**அதுக்கென்ன தடையாச்சு சுகமாகக்கூடி**
யிருப்போம் வாடாயடா சிங்கா

வாழி விருத்தம் :—

பகரறிய மறைவாழி வளஞ்சேர் பொய்கைப்
பாகையிறை வாழியவர் பரிவினாலே
சகமதனில் வருணமொரு நான்கும் வாழி
சந்ததமன்னவர் செங்கோல்தழைத்து வாழி
நகமருவு புயன் கங்கை குலத்துள்வந்த
நல்லண்ணன் சின்னண்ணனெந்தை நாளும் வாழி
மகிதலமேற் **சிதம்பர தத்துவலிங்கையன்**
மதுரகவியுந்தழைத்து வாழிதானே

பொய்கைப்பாக்கம் பொய்யாத மொழி ஈசுவரர்பேரில் குறவஞ்சி எழுதி நிறைந்தது முற்றும். சிவமயம். தத்துவலிங்கம் துணையாகவும். சிதம்பரேசுவரர் கிருபையுண்டாகவும்.

கு.பு.—இந்நூல் “ பொய்கைப்பாகை ” யென்னும் சிவஸ்தலத்தில் அமர்ந்துள்ள “ பொய்யாத மொழீசுவரர் ” என்னும் சிவபிரான் மீது இயற்றப் பெற்றதோர் “ குறவஞ்சி ” யென்னும் பிரபந்த விசேஷமாகும். **இது**

றப்பெற்றிருக்கலாமென்று இறுதிச்செய்யுளாம் வாழி விருத்தத்தால் ஊகிக்க இடனுண்டு. இப்பிரதியில் இந்நூல் முற்றும் உள்ளது.

---

## No. 2339. பொய்யாமொழீசர் குறவஞ்சி.
## POYYĀMŌḺIŚAR KUṞAVAÑCI.

Substance, palm-leaf. Size, 16 × 1⅜ inches. Pages, 44. Lines, 6 on a page. Character, Tamil. Condition, injured. Appearance, old.

Complete.

Same work as the above.

கு.பு.—இந்நூல் முன்பிரதியில் வந்துள்ளதே. இப்பிரதியில் முற்றுமிருக்கிறது. இந்தப்பிரதியிலே இந்நூல் தெளிவான வெழுத்துக்களால் எழுதப்பெற்றுள்ளது. ஏடுகள் அங்கங்கே ஒரு சிறிது சிதிலமாயிருக்கின்றன. இதிலே 19, 20 என்ற விவ்வேடுகள் காணப்பெறவில்லை.

---

## No. 2340. வாகடம்.
## VĀKAṬAM.

Pages, 244. Lines, 7 on a page.
Begins on fol. I-*a* of the Ms. described under No. D. 195, Vol. V.

Almost complete.

A work on Indian Medicine. Gives rules, in verse, for the feeling of the pulses; and these rules are explained in the prose passages following them. The remaining portion of this work is in verse. Here are found verses, presumably taken from other works on Indian Medicine.

**Beginning :—**

நாடிபரீட்சை :—

கரிமுகனடியை வாழ்த்திக் கைதனில் நாடிபற்றிப்
பெருவிரலங்குலத்திற் பிடித்துடன் நடுவே தொட்டால்
ஒரு விரலோடில் வாதமிரு விரலோடிற் பித்தம்
திரிவிரலோமூன்று மோடிற் சிலேட்டும நாடியாமே (௧)

ஆதியாங்கடவுளாணையடியிணை போற்றிசெய்து
தீதறுவியாதிதன்னைத் தெளிவுடனறிய வேண்டிக்
கோதிலா நல்லோர் பேசுங்குணமிகுபாடறன்னை
நீதிசேர்படியின் மீதே நெறியுடனுரைத்தார் மேலோர் (௨)

சொன்னதோர் குணங்கடன்னைத்தொகுத்து நீரறியவேண்டிப்
பின்னையுங் குணவாளுகிப் பேசிய குணத்தின் பாதி
வண்மையா மறிஞராகில் மறுபடி குணங்கள் செய்யு
மின்னமுங் குணங்கள் தன்னையிடம் படவறிந்து சொல்லே (௩)

வறியுங் குறைந்து நின்றுமிட்டதோர் குணங்கள் தன்னை
கூறிய குணம்பிராயங் குறைவிடாசசுகம் வறட்சி
பாறிடுஞ் சுரஙகள தனனைபபறறிடுஞ சுககிலததில்
வேறிடுங் குணங்கள் தனனை விதித்து நியாய்நது சொல்லே (ச)

எண்பது வாதந்தன்னை யிருவகைப்படுததுக் காணில்
நண்பெறு மரைக்குங கீழே நாற்பது வாதமாகும்
பண்பு சேரரைககு மேலே பகுத்த நாற்பதுவேயாகும்
வண்புசேர் குழலினுளே வாகடத்தியல்புதானே (ரு)

வாதந்தான காலிற் சேரும் வயிற்றிலே பித்தஞ் சேரும்
சேதமே செய்யுமையஞ்சித்தி கண்டஞ்சேரும்
நாதனுரருளினாலே நான் மூகததேவனபாரில்
வேதநூல் விதியீதென்று விரும்பியே விளமபினரே (எ)

* * * * *

நாடி பரீக்ஷை யறியும்படி :—

அனனமே கோழியாந்தை மயிலென நடக்கும் வாதம்
பின்னையோரட்டையாமை பெருத்திடிற் பித்தமாகுஞ்
சொன்னதேன மொழி நல்லாயே சுத்திய தவளை பாம்பு
முன்னமே கபமிதென்று மூதிய வருணைத்தவாறே (மக)

அன்னத்துடனே அட்டை கூடி நடந்ததேயானால் அது வாய்வுடனே கூடின பித்தமென்று அறிவது. ஆமையுடன கோழி நடந்ததேயானால் அது வாத பாண்டு ரோகம் என்றறிவது. ஆந்தையுடன் அட்டை கூடி நடந்ததேயானால் அது இரத்த பித்தமென்றறிவது. மயிலோடு ஆமை கூடி நடந்ததேயானால் அது அற்புதமென்றறிவது * * * * * ஆந்தையுடன் தவளை கூடினால் பொசிப்பது கசப்பென்றறியவும், மயிலோடு தவளை கூடினால் அனுபோகம் அதிகமென் றறியவும், முற்றும்.

**End :—**

காயகற்பம் :—

கையாந்தகரைக் காரெள்ளு கார்ப்போகவரிசி கருஞ்சீரகம்
மெய்யார் நீலத்திலாவரை வேர் மற்றும் நீலிவராகியுடன்
நெய்யோடதனை யொன்றித்து நெகிழாதுண்ணவல்லீராய்
மையார் குழலும் வெண்டாகும் வானுள் கோடியிருப்பீரே

வசனப்பூடு :—

வெண்குட்டங் கருங்குட்டம் விரிகுட்டமிவை மாறுங்
கண்கெட்டு இருந்தாற்கு நல்கண்ணுந் தருவிக்கும்
மண்கொண்ட தோட்டத்தில் மாரிகாலத்தில் மழை பெய்யாப் பல்
[லெனும் வசனப்பூட்டைப்
பண்கொண்டமென் மொழியா[ய்டு](யி)லைப்பறித்துத் தின்னப் பறுகட்டை
தலைக்கற்றைக் குழல் கட்டலாமே

எட்டிகசு நாவல் எழில் சுண்டில் தோன்றிக்கு
வட்டவில்த்தாமரையாமற்றுத்—திட்டமுடன்
*　　*　　*　　*　　*

இந்நூல் வைத்திய சாஸ்திரமாகும். இதில் முதலில் நாடிபரீக்ஷை யுணர்த்தும் பதினேரு பாடல்களிருக்கின்றன. அதன் பின்னர் அதுக்கு விளக்கமாக வசன நடையில் ஒரு சிறிய பகுதியுளது. பிறகு முற்றும் வசன நடையில் அமைந்துளது. இடையிடையே சிலசில விடங்களில் வெவ்வேறு நூல்களிலிருந்து திரட்டிய பாடல்கள் காணப்படுகின்றன. இது அனுபவ முறையாக வந்த வைத்திய முறையாகும். இதில் பல் வேறு நோய்களையும் நீக்குமுறை விளக்கமாகக் கூறப்பட்டிருக்கின்றன. இது இத்துணைத்தென்று விளங்கவில்லை. இறுதியில் அரைகுறையாக வெழுதி விடுக்கப்பெற்றுள்ளது. முதலில் ஒரு தனி யேட்டகத்தில் மேகங் கட்கான மருந்து முறை யெழுதியுளது. ஏடுகள் மிகவுஞ் சிதலுற்றிருக்கின் றன.

---

## No. 2341. நாடி நிதானம் (அகத்தியர்திரட்டு வாகடம்).
## NĀḌINIDĀNAM (AKATTIYARTIRAṬṬU VĀKAṬAM).

Pages, 12. Lines, 7 on a page.
Begins on fol. 136-a of the Ms. described under No. D. 1952, Vol. V.

Contains 58 stanzas.

Same work as that described under No. D. 2318.

இந்நூல் டிஸ்கிருப்டிவ் காடலாக்கு 2318 ஆவது நம்பரில் வந்துள்ளதே யாகும். இப்பிரதியில் 58 செய்யுட்களிருக்கின்றன. இது அகத்தியரது நூலிலிருந்து திரட்டப்பெற்றது என்று இதன் தலையிற் காணும் சொற் குறிப்பான் உணரக்கிடக்கிறது. இறுதியில் முற்றும் என்று ஒரு சொல் காணப்படுகிறது. பின்னர் " டக்கா வீராசாமி முறை " என்ற தலைப்பெயரின் கீழ்ச்சில அனுபவ வைத்திய முறைகள் (6) பக்கங்களில் எழுதப் பெற் றிருக்கின்றன. அந்த ஏட்டுக்குப் பக்க எண் குறிக்காமலே யிருக்கிறது. உள்ள ஏடுகள் பல சிதலுற்றிருக்கின்றன. எழுத்துப்பிழையுள.

---

## No. 2342. கம்பராமாயணம்.
## KAMBARĀMĀYAṆAM.

Substance, palm-leaf. Size, 16¾ × 1½ inches. Pages, 804. Lines, 8 on a page. Character, Tamil. Condition, injured. Appearance, old.

Contains Yuddhakāṇḍa and Uttarakāṇḍa.

Same work as that described under No. D. 516.

இந்நூல், டிஸ்கிருப்டிவ் காடலாக்கு 516-ஆவது நம்பரில் வந்துள்ள நூலின் பிற்பகுதியாகும். இது இரண்டு வால்யங்களாகக் கட்டப்பட்டிருக் கின்றனவாதலின் முதல் வால்யத்தில் 1–5 காண்டங்களும் இரண்டாம் வால்யமாகிய விதிலே யுத்தகாண்டம் உத்தரகாண்டம் ஆகிய இவ்

ஸ்ரீ (உயஅ)வ சுக்கிரவாரம் மிருகசீரிஷ நட்சத்திரம் திருதீயை இந்தச் சுபதினத்தில் நாராயண முதலியார் குமாரன் இராமசாமி படிக்கின்ற ஸ்ரீமத் ராமாயணம். புட்டுலூர் முனியப்பன எழுதின ஸ்ரீமத் ராமாயணம்" என்ற இவ்வாக்கியம் காணப்பெறுகின்றது. பிறகு இராமயணச் சிறப்புணர்த்தும் மூன்று செய்யுட்களிருக்கின்றன.

---

## No. 2343. பூசாவிதித்திரட்டு.
## PŪJĀVIDHITTIRAṬṬU.

Substance, palm-leaf. Size, 16 × $1\frac{5}{8}$ inches. Pages, 43. Lines, 7 on a page. Character, Tamil. Condition, much injured. Appearance, very old.

Begins on fol. 1-a. The other works herein are Koṅkaṇarnūl mudal kāṇḍam. 22-a. Do. Iraṇḍāṅkāṇḍm.

A treatise on the worship of Goddess Devi and Her various manifestations. The use of mystic diagrams in such worship is also explained. This treatise is a compilation from the works of Agattiyar, Tirumūlar, Koṅkaṇar and other such Siddhas.

**Beginning :**

நாற்பத்து முக்கோண சக்கிர விதிப்படி பூஜாவிதிக்கு விரைாம் :

ஆமப்பா பூஜைவிதி சக்கிரத்தைச் சொல்வேன்
யாருந்தான் சொல்லார்கள் அப்பாகேளு
ஓமப்பா தேவிக்கு ஆதிபீடம்
உத்தமனே நாற்பத்து மூன்றேகோணம்
காமப்பா வித்தையர்க் காதி வித்தை
காசினியிற் பூசை செய்வார் தசதீட்சை பெற்றோர்
நாமப்பாவிவளை முந்திப்பூசைபண்ணி
நலமாகச் சிவயோகத்திருந்திட்டேனே. (க)

இருந்திட்ட சக்கிரத்தினியல்புகேளு
இதமாக வளையம்போல் கீறிக்கொண்டு
அருந்திட்ட குருவருளால் ரேகைதானும்
ஆதித்தன் ரேகையொன்று திங்களொன்று
தெரிந்திட்ட செவ்வாயின் ரேகையொன்று
இயலான புதனுடைய ரேகையொன்று
பரிந்திட்டகுருவினுடை ரேகையொன்று
பாங்கான சுக்கிரன்றன் ரேகைதானே. (உ)

* * * * *

ஆமப்பா வெட்டுப்பே ரேவல் கேட்டு
அஷ்டாங்க யோகமுதல் அறுபத்துநாலும்
ஓமப்பா வாடலா மிவர்களெட்டு
முத்தமனே அஷ்டதளத்துள்ளே பூசிக்

காமப்பாலுண்ணு வப்பார் வண்ணமலறறுக
கருணையுடனீன்றெடுத்த ஞானசக்தி
சோமப்பால் கொண்டவர்க்குச் சட்டைபோகும்
சோதியாஞ் சிதம்பரத்தைச் சொல்லக்கேளே. (ம௭)

இந்தத் திருமுறைப்படிக்குச் சக்கிரத்தைத்தாபித்துப் பூசை செய்யவும். சித்தி முத்தி இரண்டும் உண்டாகும். சௌந்தரியலகரி (௱கூ) தியானம் பண்ணி, "அரியதாகுஞ் சிவசத்தி" என்ற பாடற் முறைப்படி மந்திரத் தியானம் பண்ணவும். சிவகாமிதுணை தாரணவருஷம் புரட்டாசிமீ ௰உ மூத்து முதலியார் நாற்பத்துமுக்கோண விதிமார்க்கம் எழுதி நிறை வேறிற்று. முற்றும். நாற்பத்துமுக்கோணம் கீறுகிறவயணம்.

* * * * *

கொங்கணர் தேவி பூஜாவிதி :—

பராபரத்தில் அடைந்துநின்ற மூலநாயன்
பதமிறைஞ்சி முக்காலுந்தொழுது போற்றி
நிராமயத்தில் உணர்ந்து நினற பெரியோர்பாதம்
நீங்காமல் தொழுதிறைஞ்சி நெஞ்சில்வைத்து
தராதரமா யெனையீன்ற போகர்பாதம்
சதநித்தம்தொழுதிறைஞ்சித் தாசனுகித
துராதுரச்சி சிவனுடைய பதமும் போற்றிச்
சொல்லுகிறேன் எழுலட்சஞ்சுருக்கித்தானே. (க)

தானென்ற துரைச்சியைத்தான் பூசைபண்ண
சங்கையுண்டோ சூரையுண்டோ சாங்கமுண்டோ
வானென்ற ஐவருந்தான் பூசைபண்ண
மாட்டாமல் பீடமென வழங்கினுர்கள்
வேனென்று பூசைபண்ண வென்னுற்கூடா
விட்டகுறையாற் றெடர்ந்தாள் வேதாந்தத்திப்
பானமென்ருல் வெகுப்பிரியமென்ருய்க் . . .
. . . . ப்பூசைபண்ணிப் பாருபாரே. (உ)

ஒளித்திடவே மனசுக்குமாயை போச்சு
ஒன்றுமில்லே கண்மயக்கு ஓகோபாரு
அளித்திடவே நினைவாலப்பா ரெல்லாம்போய்
ஆத்தாள்தான் ஆடுகிற விந்திரசாலங்
களித்திடவே மதுவையுண்டு சுழியிலோடிக்
கையாறு தலங்களெல்லாங்காணுங்காணும்
நெளித்திடவே யிடைபின்னும் ரெண்டும்போக்கில்
நிமிஷத்தில் நாலுக்குள் நேரலாமே. (௩௧)

நேராத பாவிக்கு வாதமேது
நிலையாத மனத்தோர்க்கு ஞானமேது
பாராத மூடருக்கு யோகமேது
பராபரையை யறியாற்குப்பலந்தானேது
காராத சீஷனுக்குக் கருத்தானேது
கைகாட்டாத் தொழின்முறைக்குக்கரைதானேது
தீராதகருமிக்கு அறிவங்கேது
செகச்சால மாடுதற் கிலவணங்கேளே. (௩௨)

கொங்கண நாயனூர் பூசாவிதி முற்றும். தேவி சகாயம்.

இந்நூல், அகத்தியர், திருமூலர், கொங்கணர் முதலான சித்தர் பெரியார்கள், அஷ்டகர்மம் முதலிய பலவிதமான சித்தியைப் பெறுவதற்காகத் தேவியைப் பூசித்து வழிபடுவதற்கு உறுகருவியாயிருந்த நாற்பத்து முக்கோணசக்கிரம், சிதம்பரசக்கிரம் முதலான சக்கிரங்கள் பலவும் இன்னின்ன வகையாகப் பொறிக்கப்பெற்றுத் தேவியை இன்ன விதமாகப் பூசிக்கவேண்டும் என்னு மாறறை யுரைத்துவது. இது பூஜாவிதி, தீட்சை விதி என்ற நூல்கள் பலவற்றுள்ளிலிருந்து சில சில பகுதிகளை மாத்திரம் ஒரு திரட்டாகத் திரட்டுவித்த நூலாகும். இதில் நாற்பத்து முக்கோணசக்கிரவிதி, அகத்தியர் பூஜைவிதி, பஞ்சதசாக்கரி திருமந்திரம், வாலைத்தியான விதி, திருமந்திரம், சிதம்பர வித்தை திருமந்திரம், அஷ்டகர்மங்கட்குரிய மந்திரங்கள், கொங்கணர் தேவி பூஜாவிதி என்ற விவைகள் திரட்டி வைக்கப்பெற்றிருக்கின்றன. கொங்கணர் பூஜைவிதி மாத்திரம் முப்பத்திரண்டு பாடல்களைக்கொண்டு ஒரு தனி நூலாக முற்றுமிருக்கிறது. அங்கங்கே ஏடுகள் பல சிதலுற்றுக் கிடக்கின்றன. கிரந்தபாதங்களுமிருக்கின்றன. எழுத்துப்பிழைகளுமுள.

---

## No. 2344. கொங்கணர் நூல் முதற்காண்டம் ஆயிரம்.
## KOṄKAṆAR NŪL MUDAṞKĀṆḌAM ĀYIRAM.

Pages, 274. Lines 9 on a page.
Begins on fol. 21-a of the Ms. described under No. D 2343.

Complete.

The first *Kāṇḍa* of Śrī Koṅkaṇar's work on Alchemy. Contains about a thousand verses. Herein the author refers to two other *Kāṇḍas* composed by him.

**Beginning :**

கொங்கணர்நூல் முதற்காண்டம்.

வையகம் வாழவென்று வாதகாவியமாம் நூலை
ஐயனன்றுரைக்க நந்தி யஞ்சலிபண்ணிக்கேட்க
மையுறுகுழலேஞானம் வளர்ந்திட வாழ்வுண்டாகக்
கையுளே கோட்டையேந்துங் கணபதிகாப்புத்தானே. (௧)

வரிசையாய்ப்பார்க்க வென்றில்
கோதறு குழலாள்சொன்ன
குருவுடன் கணேசனு கத்
தீதறப்பூசைபண்ணிச்
சிந்தையிற் செபங்கள்செய்ய
மாதகலாதே நிற்பள்
வளர்ந்திடும் ஞானமன்றே. (உ)

போதவே வாதநூலை பொலிவுறச் சொல்லும்போது
தீதறமூல மூர்த்திச்சீர்பதந் தொழுதுநிததங்
கோதையா மாயிபாதங்குறித்தொன்றிப் பூஜைபண்ணிப்
பேதைமையகற்றி வாதம் பிழையறச்சொன்னேன்காணே. (ங)

*    *    *    *    *

*    *    *    *    *

வேறு.

கண்டுடனே யெழுந்திருந்து அஞ்சலிபண்ணிக்
கவடகற்றி மனமொன்றாய்க் கருணைநீடி
ஒன்றுரைத்த குருபதத்தை யுணர்ந்தோர்வாழ்வார்
ஒன்பதிலுங்கோடிகொண்டோடும் வேதை
அன்றுரைத்த மொழிமறந்து அழிம்புசெய்து
அவனிவனென்றே நித்த மறைந்தானாகில்
மன்றியுறாவிகோடி நரகில்வீழ்ந்து
வகாரவழி காணாதே மருளுவாரே. (சு)

*    *    *    *    *

அறிவுபிறக்கு மருள்தோன்றும்
அடங்காக்கவணங்கொடுபோகு
மறிவுபிறக்கும் மனஞ்சயிக்கும்
மகத்தாம் போதந்தனிற் சேர்க்கும்
பிறிவுபிறக்கும் வெகுகோடி
பெருத்தவாத சித்தியுமாம்
நெறிவுபிறக்கு மாயிபதம்
நிலைக்கப்பூசிக் காப்புமுற்றே. (௰ங)

பாயிரம் முற்றும். தேவி சகாயம்.

*    *    *    *    *

உப்புக்கட்டு.

கேளப்பா படிகியொடு வெடியுப்புப்போடு
கெடியான கல்லுப்புக் காரத்தோடு
தாளப்பா சாரமொடு பண்ணைகண்டா
தனியேழு மேழுபலந்தானேதூக்கி

நெடியதொரு பாறையுப்புப் பலமீரேழு
கோளப்பா குழம்பினுள்ளே தோச்சுவாட்டு
கொழுகியதைத் தணலுக்குளடர்ந்துவாட்டே. (௩௧)

வாட்டயிலே யடுக்கடுக்காய் முதிரவாட்டு
மருவியந்த உப்பினுடைக் கோபம்போகும்
நீட்டயிலே படிகத்தின் பொரியைப்போட்டு
நினைவாக வறுத்திடுவாய் சாமமப்பா.
கேட்டயிலே யிதைவாங்கிப் பின்புகேளு
கெடியாகக்கட்டுதற்கு வழிசொல்வேன்யான்
மூட்டயிலே யமுரிவிட்டு வுப்பையாட்டி
மூதண்ட நாயுருவி சாம்பற்போடே. (௩௨)

போடந்த வுப்போடே சவுட்டுவில்லை
பொலிவாக உப்புக்குக் காலகாலப்பா
நீடந்தக்கலையததிற் பாதிவைத்து
நினைவாக வடுக்கடுக்காயுப்பைவைத்து
ஓடந்த மேலிட்டுச் சீலைசெய்து
ஒத்தாப்போலெரித்திட்டு உடைத்துவாங்கி
ஆடந்த மறுகாலிப்படியேவைத்து
அதட்டியொரு புடம்போடக்கட்டும்பாரே. (௩௩)

பாரப்பா வாட்டொன்று வறுப்பதொன்று
பரிவாக வெரிப்பதொன்று புடந்தாஞென்று
நேரப்பா வெகு பதனமாகச் செய்வாய்
நிலைக்கமட்டுங் கைமுறையாய் நினைவாய்ப்பண்ணு
ஆரப்பா வெதிருனக்கு வாதமாட
ஆகாகா சகலமெல்லா மடங்கித்துப்பிற்
பேரப்பாஉப் பென்பாரிதுவே சக்தி
பலத்தபின்பு சிவனுச்சு பெச்சொண்ணுதே. (௩௪)

* * * * *

**End :**

ஆச்சப்பா உப்புரசத்தை விரித்துச்சொல்லை
அன்னூ . . . . . . . . . . .
. . . . . . ஆயிரத்துச்சொச்சம்
**உத்தமனே யாயிரத்துச்சில்வான்வாதம்**
நீச்சப்பா வென்றுசொன்ன வேழுலட்சமெல்லாம்
நிலையாகச்சோதிச்சு விதிலேசொன்னேன்
பூச்சப்பா சகலநூலென்னூற் றங்கம்
புகழ்பெரியோர்க் கடிமையிட்டுப்புகட்டினேனே. (௬௬எ)

புகட்டினதோரென்னூலில் வாதம்பொய்யோ
    புரிசடையோனுரைத்திருந்த வாலம்பொய்யோ
பகட்டினதோருலகத்தில் ஞானம்பொய்யோ
    பராபரையைப்பூசித்த பருவம்பொய்யோ
அகட்டினதோர் அஷ்டாங்க யோகம்பொய்யோ
    அப்பனே கல்லுப்புக்கட்டுப்பொய்யோ
சகட்டினதோர் முதற்சொரூபம் பொய்யோ
    சாதித்ததோர் சுண்ணமும் பொய்யோபாரே. (௯௯௮)
பாரப்பா முதற்காண்டம் முகமுமாச்சு
    பரிவான நடுக்காண்டம் மார்புமாச்சு
நேரப்பா பிறகாண்டம் மழுதாந்தொடு
    உத்தமனே பாதமெய் யோகமுமாக்கும்
ஆரப்பா இம்முறையாய் நிறைந்தெனறால்
    கண்டிவெனிம்முறையாய் நிறைமார்க்கம்
நேரப்பா முறகாண்டமுற்றுஞ் சொன்னேன்
    நிலையான போகர்பதம் நிலைந்துபாரே. (௯௯௯)
கூடுவது எவ்வாறு வேதாந்தமார்க்கம
    குறிப்பான மூன்றெழுத்து உபதேசமுன்னே
நாடுவது நாலெழுத்து ரெண்டாந்தீட்சை
    நலமான அஞ்செழுத்து மூன்றாந்தீட்சை
வாடுவது ஆறெழுத்து நாலாந்தீட்சை
    உத்தமனே யெட்டெழுத்து அஞ்சாந்தீட்சை
ஆடுவது பத்தெழுத்து ஆறாந்தீட்சை
    அப்பனே பதினஞ்சு எழுமாச்சே. (௲)
ஆச்சப்பா பதினாறு எட்டாந்தீட்சை
    ஆச்சரியஞ் சத்தியுடை பிரசாதவித்தை
. . . ஒச்சப்பாவொன்பதுதான் பின்புகேளு
    உத்தமனே பரமானப்பிரசாத வித்தை
மாச்சப்பா பத்தாச்சு தீட்சைமார்க்கம்
    மருவியதோர் பதினொன்று . . தீட்சை
மூச்சப்பா ஆடாது எட்டிற்சேரும்
    மூதண்ட மனைதமெள்ள அறிவிற்சேரே. (௲௧)

**Colophon :**

பார்த்திபஞு சித்திரைமீ உ௰௨௨. கொங்கண நாயனார் முதற்காண்டம் முத்துவாத்தியார் எழுதி நிறைவேற்றினது. முற்றும்.

**கு.பு.**—இந்நூல், கொங்கண சித்தர் பெரியாரால் இயற்றப்பெற்றது. ஆயிரம் பாடல்களால் அமைந்துள்ளது. இரஸவாத விஷயமானது. இது, "முதற்காண்டம்" என்ற பெயரான் வழங்கப்படுகிறது. மற்றும் (இரண்டாங் காண்டம் மூன்றாங் காண்டம்) அல்லது "இடைக்காண்டம், கடைக்காண்டம்" என்ற பெயரால் இரண்டு நூல்களும் தாம் இயற்றியிருப்பதாக இதில் இந்நூலாசிரியர் குறிப்பிடுத்தியிருக்கின்றார். முற்றுமுளது; சில ஏடுகளில்லை. பல ஏடுகள் அடியோடு முறிந்து கிடக்கின்றன. கிரந்தபாதமுள, எழுத்துப்பிழையுண்டு.

**No. 2345.** கொங்கணார்நூல் இடைக்காண்டம் ஆயிரம்.
KOṄKAṆARNŪL IḌAIKKĀṆḌAM ĀYIRAM.

Pages, 166. Lines, 10 on a page.

Begins on fol. 158-a of the Ms. described under No. D. 2343.

This appears to be the Second or Middle *Kāṇḍa* referred to in the previous work, as a continuation thereof.

**Beginning :**

கொங்கண நாயனார் இரண்டாங் காண்டம் (இடைக்காண்டம்).
திரிவங்கச்சுண்ணம் இரசமெழுகு.

நடுக்காண்டம் பாடுகிறேன் பூரணமே காப்பு
நலமான சுண்ணும்புக் காடு காடு
அடுகமென்ற வங்கமொன்று நாகமொன்று
அடபனே யீயமொன்று உருகும்போது
நடுக்கென்ற சூதமொன்று அதிலேவிட்டு
தாளகமாஞ்சுண்ணமொன்று அதிலேதூவி
மூடுக்கென்ற வுப்பாலே பூச்சுண்ணம்
மூடியொரு இடையிட்டு வறுத்திடாயே. (க)

வறுத்து இதைக் கறண்டியிலே இண்ட தத்துளாம்
வாங்கியிதில் நாலிலொன்று வீரங்கூட்டி
நிறுத்து இதைக்கருவாலே வில்லைகட்டி
நேர்ப்பாக வூதப்பா சுண்ணும்பாகுங்
கறுத்து வது கண்டக்கால் வீரங்கூட்டிக்
கை முறையாய்க்கருவாலே வில்லைகட்டி
மறுத்து இது சுண்ணும்புக்குகையிலிட்டு
மாட்டிநன்றாயூதிடவே சுண்ணமாமே. (உ)

ஆமிந்தச் சுண்ணத்தை நிறுத்துக்கொண்டு
அந்திடைக்குச் சாரமிட்டு ஆட்டநீராம்
ஓமிந்த நீருக்குள் சூதம் வார்த்து
உத்தமனே யசைச்சாட்ட மெழுகுமாகுந்
தாமிந்தச் சுண்ணத்தையஞ்சு சுண்ணக்குகையிற்
றுக்கிவைத்துப் புடம்போடச்சுண்ணமாகும்
வேமிந்தச்சுண்ணத்தாலு பரசங்களாகும்
வேகிறதோர் விதமெல்லாம் விளம்புவேனே. (ங)

**End :**

நன்றென்ற மணியும் வாதம் ஞானிக்கேயீசனென்றார்
தன்றென்ற வாதங்கண்டு தனிப்பெண்ணும் மாளவேண்டாங்
கன்றென்ற ஞானத்துக்குக் கண்மணி குளிகையப்பா
அன்றென்றதெல்லாந்தள்ளி யகண்டத்திற்புக்குப்புக்கே. (தகஅ)

புக்கு முன்னாயிரத்திற் புகழ்தாது பிறப்பைச்சொன்னேன்
தக்குமிந்தாயிரத்திற் சகலமுமடக்கிப்போட்டேன்
மக்கும்பின்னாயிரத்தில் வழங்கிய வழக்கஞ்சொன்னேன்
அக்குமின்னடைவைப்பாரு ஆனந்தி பணிசெய்வாளே. (தகக)

பணிசெய்யுமாவதேது பாக்கிறேன் பாதத்தொன்று
அணிசெய்து நடுவே நின்று ஆடினபொருள்தானப்பா
தணிசெய்த திரிபடிக்குள் சகலமுந் தோற்றிமாளும்
மணிசெய்த செயலேதென்றில் மகத்துவங்காணுங்காணே. (௬௰)

காணிது தூ . . . காதத்தின் பொருளதல்ல
தாணிது அண்டாண்டங்கடந்து முன்னுடுதப்பா
காணிது மனத்தையூன்றிக்கலநது நீகூடிுக்கால்
காணிது வேறேயில்லை கரையில்லை கவிதான்முற்றே. (௬௰க)

கு.பு.—இந்நூல், முன்பிரதியில் வநதுளள நூலேயாகும். இதில் (இடைக் காண்டம்) இரண்டாங்காண்டம் ஆயிரம் என்ற பகுதியிருக்கிறது. முன் பிரதியில் வந்துள்ளது முதற்காண்டம் என்ற பகுதியாகும். இனி, கடைக்காண்டம் என்ற பகுதியும் (ஆயிரம் பாடல் கொண்டது) ஒன்று உண்டென்று தெரிகின்றது. இதில் இப்பகுதியின் ஆயிரத்துப்பதினொரு பாடல்களுமிருக்கின்றன. இடையிடையே சில எடுகள் இருபகுதியாக முறிந்து இருத்தலோடு பல எடுகள் புழுக்களாள் அரிக்கப்பெற்று இருக்கின்றன. ஆகவே பலவிடத்துக் கிரந்த பாதம் உண்டு. எழுத்துப் பிழை காணப் பெறுகின்றன.

---

## No. 2346. கருசாஸ்திரம்.
## KARUŚĀSTIRAM.

Substance, palm-leaf. Size, 8 × 1 and $8\frac{11}{16}$ × $1\frac{1}{4}$ inches. Pages, 62. Lines, 6 on a page. Character, Tamil. Condition, injured. Appearance, old.

Incomplete.

Similar to the work described under No. D. 2312.

**Beginning :**

கூகையின் வலது கண்மணியை யெடுத்துச் செப்புச்சிமிழில் அடைத்துக் கையிலாகுதல் வாயிலாகுதல் கிடக்கத் தன் மேல் அம்புபடாது. இதுக்குச் சோதனையில் மழையில் நிற்க மழை படாது.

கொடுவேலி வேருக்குச் சித்திரை நட்சத்திரத்தில் காப்புக்கட்டிச் [சோதி நட்சத்திரத்தில் காப்புக்கட்டிச்] சோதி நட்சத்திரத்திலே " அக்கினி ரூபி ஆதித்த ரூபி, ஆதிசுவாலினீ நம: " என்ற இந்த மந்திரம் சொல்லிப் பிடுங்கிப்பாலிலே கலந்து குடிக்கக் கண்டமாலை, மூல பவுத்திரம் புண் முதலான வியாதியெல்லாம் தீரும்

வேறு :—

மருதோன்றி மரத்தில் கிரகணம் தீண்டுகிறபோது காப்புக் கட்டி விடுகிறபோது மரத்தை வெட்டி விழத்தள்ளிக் கண்டங்கண்டமாக நறுக்கி உலர்த்தித் தைலமிறக்கி அந்தத் தைலத்துக்குத்தூபதீபங் கொடுத்து " ராசாமுந்திரி சுவாஹா உம்பட்டு " இந்த மந்திரம் பன்னீராயிரம் உருச்செபித்து முப்பலியுங்கொடுத்துச் சுத்தமான இடத்திலே வைத்துக் கொள்ளவும். யா(ரா)மொருவர் பேய்பிடித்துவந்தால் அவர்களுக்குப்

பாாக்கவேணும் என்றால் அந்தத் தைலத்தில் திலதமிட்டுக்கொண்டு அந்தப் பிசாசை எதிராகக் கூவிக்கொண்டு பார்க்க அப்பிசாசு போகிறேனா போகிறேனா என்று அபயமிட்டுக்கொண்டு ஓடிப்போம்.

*　　*　　*　　*　　*

ஆலம்விழுதை ஒருவெட்டிலே வெட்டிக் கீழே விழாமல் பிடித்துக் கொள்ளவும். பிடிக்கிறபோது "மாயா மோகினி மகா மோகினி செய செய மோகினி செய செய" வென்று இந்த மந்திரஞ் சொல்லிப் பிடித்துப் புதுச் சட்டியிற் கருக்கித் திலதமிட ராசமோகனம்.

**End :**

அழிஞ்சி விரை கொண்டுவந்து நல்லெண்ணெய் வார்த்து அரைத்து தமிக தட்டிலே வைத்து வெய்யிலிலே வைக்கத் தைலமிறங்கும். அந்தத் தைலத்தை யெடுத்து மாங்கொட்டையில் தடவிப் புதைக்கச் செடியாம்.

கு.பு —இந்நூல் கரு சாஸ்திரத்தைச் சார்ந்ததாய் உளளது. இதில் அஷ்ட கர்மங்களுக்குரிய கருக்களும். சில மாந்திரீகமுறைகளும் சில மருத்துவ முறைகளும் பிசாசுகள் ஓடுதற்குரிய முறைகளை சிலவும் எழுதப்பெற்றுள்ளன. ஏடுகள் ஒன்றோடொன்று தொடர்பில்லாமல் கோக்கப்பட்டிருக்கின்றன. எழுத்துப்பிழையுள. இதில் உள்ள ஏடுகள் இரண்டு பிரகாரமான அளவுகள் உள்ளனவாயிருக்கின்றன.

---

## No. 2347. அகத்தியர் பூரணசூத்திரம் இருநூற்றுப்பதினாறு.
## AKATTIYAR PŪRAṆASŪTTIRAM IRUNŪṞṞUPPADINĀṞU.

Substance, palm-leaf. Size, 9 × 1¼ and 6$\frac{1}{1}\frac{0}{0}$ × 1⅜ inches. Pages, 124. Lines, 7 on a page. Character, Tamil. Condition, injured. Appearance, old.

Begins on fol. 1-a. The other work herein is Akattiyar Ñānampanirandu 63-a.

Complete.

Same work as that described under No. R. 177.

கு பு.—இது மூவருடக் காட்லாக்கு 177-ஆம் நம்பரில் வந்துள்ளதே யாகும். இப்பிரதியில் இந்நூல் முற்றும் உள்ளது. அங்கங்கே சிற் சிலவிடங்களில் பாடபேதங்கள் காணப்படுகின்றன. எழுத்துப்பிழைகள் உள. 17-ஆம் ஏடில்லையாதலின் அதிலடக்கமான 61 முதல் 64 வரை யான பாடல்கள் இல்லை.

---

## No. 2348. அகத்தியர் ஞானம் பன்னிரண்டு.
## AKATTIYAR ÑĀNAM PANNIRAṆḌU.

Pages, 12. Lines, 6 on a page.

Begins on fol. 63-a of the Ms. described under No.D. 2347.

Complete.

Same work as that described under No. R. 280 (I).

கு.பு.—இந்நூல் மூவருடக் காடலாகக்கு 280 (1) நம்பர் பிரதியில் வந்துள்ள நூலேயாகும். இப்பிரதியில் இந்நூல் முற்றும் உளது. இறுதிப் பாடலின் இறுதியடி மாத்திரம் இல்லை. பின்னர் திருவேரகத்துச் சிவ சுப்பிரமணியக் கடவுளை விளித்தியற்றப் பெற்றதோர் தோத்திர நூலின் (க, ம) என்ற பாடல்கள் எழுதப்பெற்ற வேறு ஏடுகள் இத்துடன் கோக்கப் பட்டிருக்கின்றன. ஏடுகள் சிதைந்துள. எழுத்திப்பிழைகள் காணப்படு கின்றன.

---

## No. 2349. நாடி நிதானம்.
## NĀḌINIDĀNAM.

Substance, palm-leaf. Size, $8\frac{1}{4} \times 1\frac{2}{8}$ inches. Pages, 30. Lines, 4 on a page Character, Tamil. Condition, injured. Appearance, old.

Begins on fol. 1-a. The other works herein are Aivakaivalippu 16-a, Akattiyar sūttram (1,500) 23-a. Tirumūlar Vākaṭam 53-a.

Complete in 30 stanzas.

Similar to the work described under No. D. 2341.

கு.பு.—இந்நூல் டிஸ்கிருப்டிவ் காடலாக்கு 2341-ஆவது நம்பரில் வந்துள்ள நூல் போன்றதாகும். இதில் முப்பது செய்யுட்களிருக்கின்றன. இதிலிருந்து இது இன்னுரால் இயற்றப்பெற்றதென்று விளங்கவில்லை. ஏடுகள் சிறிது சிதைந்துள. இது முடிந்த பின்னர் சன்னியிற் சேர்ந்த குமர கண்டன் வலி, பிரமகண்டன் வலி, காக்கை வலி, முசலகண்டன் வலி என்னும் இவ்வைவகை வலியினியல் புணர்த்தும் சில செய்யுட்கள (16) பக்கங்களில் எழுதப்பெற்றிருக்கின்றன.

---

## No. 2350. ஐவகைவலிப்புக்குணம்.
## AIVAKAIVALIPPUKKUṆAM.

Pages, 16. Lines, 5 on a page.
Begins on fol. 16-a of the Ms. described under No. D. 2349.

Complete.

A work, in verse, on five kinds of *Sannipāta* and their symptoms. It is not known which work this is a part of, or who composed this.

**Beginning :**

சன்னி. குமரகண்டன் வலி—குமரகண்டன் வலி, நமரகண்டன் வலி, பிரமகண்டன் வலி, காகவலி, முசலகண்டன் வலி—

காணப்பா லோகத்தில் மானுடர்க்கெல்லாங்
கடினமடா வலியஞ்சு சன்னியாகும்
வீணப்பா குமரகண்டன் நமரகண்டன்
வீழ்ந்தழுக்கும் பிரமகண்டன் காகவலி யொன்றும்
ஆணப்பா முசலகண்டன் வலியஞ்சு நோய்க்கும்
அடங்காது பிரமகண்டன் அசாத்தியந்தான்
தோணப்பா கண்டறிய வேணுமப்பா
தொடுகுறிபோற் சொல்லுகிறேன் குணத்தைக்கேளே. (க)

குணமாங்குமர கண்டன்வலி
குறுக்கும் நாக்கு முகங்கோணும்
பணமாங்கழுத்துந தோள் விம்மிப்
பார்க்கப்பற்றி யிழுத்துவைக்கும்
சணமாமுகநோம் செவிகண்ணுஞ்
சாய்த்தே புறத்தில் வலித்து நிற்கும்
வணமாம் வாதபித்தமையம்
வருகுஞ்சன்னி குணமிதுவே. (உ)

இதுவே நமரகண்டன் வலி :—

இதுவே நமரகண்டன் வலி
எடுத்துக் கிடத்தும் மூர்ச்சைபோம்
அதுவே கைகால் மெய்யுறங்கும்
மடித்து ஒடித்தாற்போலுளேயும்
பொதுவே கண்டஞ்சிரசு முகம்
புதுவெள்ளம்போல் நீரொழுகும்
பதுவே நெஞ்சுந்தோள் முதுகும்
பத்திவலிக்கு முதிரமதே. (௩)

உதிரந்தன்னில் நாள் சென்றால
உத்துவலித்துச் சுரோணிதத்தைப்
பிதுரப்பிதுங்க வொட்டாமல்
பின்னுங் கெர்ப்ப வாய்வாகும்
குதிரக்குத்தி மாதசங்கை
குடிப்போஞ் சொன்னோம் சிலநாளில்
அதிரும் வாத பித்தமையம்
அடர்ந்த சன்னியிதுதானே. (௪)

சாகவலி சன்னி :—

அறியுங்காகவலி தானும்
அலறுங்கண்ணும் மேல் நோக்கி
பிறியும் மலமும் சலம்நீரும்
பெருக்காத்துடையு மடக்காமல்
செறியுந்தொண்டை நாவுலர்ந்து
சிலேற்பனமிஞ்சிச் சளியொழுகும்
குறியாம் வாதபித்தமையம்
கொண்டசன்னியிதுதானே. (௫)

**End :**

முசலகண்டன் வலி சன்னி :—

தானே முசலகன் வலிதானும்
தண்ணீர்த்தீயுஞ் சணப்போதில்
ஊனேயுடலில் வாய் வெழும்பி
உற்றுமுகத்தைத் தான்வலித்து

தேனே யொழுகும் வாய்தனில்
திரைபோல் நுரையுந்தள்ளிவைக்கும்
காணே கண்ணுங்கை காலுங்
கனத்து ஊளக்கும் முசலகண்டனிதே. (எ)

இதுதான் வலிகளஞ்சுக்கும்
எடுத்த குணத்தைத் தானுரைத்தேன்
அதுதான் குமரகண்டன்
அறியுங்காக முசலகண்டன் நமரகண்டன்
சதுராய் நாலுஞ் சாந்தமதாய்த்
தைலமொத்த மருந்து செய்தால்
பிதுராம்பிரமகண்டன்வலி
பிணந்தான் திரும்பிப் பேசாதே. (அ)

கு-பு —இச்சிறு நூல் சனனிவகையிற் சார்ந்த குமரகண்டன் வலி, நமரகண்டன வலி, பிரமகண்டன் வலி, காக்கை வலி, முசலகண்டன் வலியென்ற இவ் ஐவகை வலிப்பு நோய்களுடைய குணங்களை யெடுத்துணர்த்துவது. இது எட்டுச் செய்யுட்களாள் அமையப்பெற்றது. இதில் முற்றும் உள்ளது. இந்நூல இன்னாரால் இயற்றப்பெற்றதென்றும் இன்ன நூலைச்சார்ந்ததென்றும் தெரியவில்லை.

---

## No. 2351. அகத்தியர் வைத்தியசூத்திரம் ஆயிரத்தைந்நூறு.
## AKATTIYAR VAIDDIYASŪTTIRAM ĀYIRATTAINNŪṞU.

**Pages, 60. Lines, 4 on a page.**
**Begins on fol. 23-a of the Ms. described under No. D. 2349.**

Breaks off in the 60th stanza.

Same work as that described under No. D. 1895.

**கு-பு.**—இந்நூல் டிஸ்கிருப்டிவ் காடலாக்கு 1895-ஆவது நம்பரில் வந்துள்ளதேயாகும். இப்பிரதியில் இந்நூல் முதல் அறுபது செய்யுட்களோடு முடிவடைந்திருக்கிறது. அப்பிரதிக்கும் இப்பிரதிக்கும் செய்யுள் தோறும் பாடபேதங்கள் காணப்படுகின்றன. எழுத்துப்பிழை மிகவுள.

---

## No. 2352. திருமூலர் வாகடம்.
## TIRUMŪLAR VĀKAṬAM.

**Pages, 115. Lines, 4 on a page.**
**Begins on fol. 53-a of the Ms. described under No. D. 2349.**

Complete.

Same work as that described under No. 1952.

**கு-பு.**—இந்நூல் டிஸ்கிருப்டிவ் காடலாக்கு 1952-ஆம் நம்பரில் வருணித்துக் கூறப்பெற்றுள்ள நூலேயாகும். இப்பிரதியில் இந்நூல் முற்றும் உள்ளது. இறுதியிலே "சென்னைப்பட்டணம் மு. வி. ரா. சி. இ. சீ. பு. எல்லப்ப செட்டியார் எழுதி நிறைவேறினது" என்ற இத் தொடர்மொழி காணப்படுகின்றது. எழுத்துப்பிழைகள் காணப்படுகின்றன. அதற்கும் இதற்கும் மிகப் பாடபேதங்களிருக்கின்றன. ஏடுகள் ஒரு சிறிது சிதைந்துள.

## No. 2353. முருகன் தோத்திரம்.
## MURUKAN TŌTTIRAM.

Substance, palm-leaf. Size, $7\frac{1}{2} \times 1\frac{1}{16}$ inches. Pages, 68. Lines, 5 on a page. Character, Tamil. Condition, injured. Appearance, old.

Begins on fol. 1-a. The other works herein are Māṇikkap pavaḷakkōvai, 36 a. Āndaikkādal, 39 b.

Complete.

In praise of God Muruga (Śrī Subrahmaṇya).

**Beginning :**

கைவல்லியநவநீதம் பூருவபடலம்.

பொன்னில மாதராசை பொருந்தினர் பொருந்தாருள்ளந்
தன்னிலந் தரத்திற்சீவ சாட்சிமாத்திரமாய் நிற்கு
மென்னிலங்களினுமிக்க வெறுநிலமதனில் மேலாய்
நன்னிலமருவுமேக நாயகன் பதங்கள்போற்றி. (க)

கந்தரனுபூதிதனைக்கற்றுணர்ந்தோர் தங்களுக்கு
வந்தவினையத்தனையுமாயுமே—செந்தில்
திருத்தணியில் வாழ்முருகனை செங்கமலப் பொற்பாதங்
கருத்தணியில் வாழ்ந்திருப்பர் காண். (உ)

திருப்பரமுங் குன்றுமலிச் செந்திப்பதியு
மருப்பாவினங் குடியுமாலாய் —இருப்பாக
வரகங்குன்றுடனுடனயின் சோலை மாமலையும்
பார்புகழாம் வேலர்பதி. (ந)

மதவானையை யனுசரிக்க :—

ஆடும்பரி வேலணி சேவலனைப்
பாடும் பரிசே பணியாயருள்வாய்
தேடுங்கய மாமுகனைச் செருவிற்
சாடுந்தணி யானை சகோதரனே. (க)

பால்பழம் நைவேத்தியம் :

மனதின் வியாகூலம் போக்குதல் :—

எந்தாயுமெனக்குத் தந்தையு நீ
சிந்தாகுலமானது தீர்த்தெனையாள்
கந்தா கதிர்வேலவனே யுமையாள்
மைந்தா குமரா மயில் வாகனனே. (உ)

சர்க்கரை தாம்பூலம் நைவேத்தியம் :

வணங்காதபேரை தண்டிக்க :—

உல்லாச நிராகுலயோகவிதச்
சல்லாப விநோதனு நீயலவோ
எல்லாமற வென்னையிழந்த நிலஞ்
சொல்லாய் முருகா சுரர்பூபதியே. (ச)

பச்சையரிசி நல்ல வெல்லம் நைவேத்தியம்.

புருஷனைக்கூடாத பெண்களுக்கு :—

திணியான மனோசிலை மீதுணதா
ளணியாரரவிந்த மரும்புமதோ
பணியானவள்ளிபதம் பணியுந்
தணியாவதி மோக தயாபரனே. (௬)

பால், பொங்கல், சக்கரை, பழம், தேங்காய் நைவேத்தியம்.

**End** : சத்துராதிகளைச் சங்கரித்தல் :—

இரவும் பகலுந்துதி செய்திருநாள்
பரவும் பரிசே பணியாயருள்வாய்
கரவுண்டெழுசூர்களையக்கதிர்போல்
விரவுஞ்சுடர்வேல விடுசேவகனே. (ருஎ)

ஞானவானந்தம் பெறுதல் :—

ஞானந்தனினின்று நடித்தல் விடா
மோனந்தனை யென்று மொழிந்திடுமோ
வானந்த நடத்தனளித்தருளும்
வானந்தருவேள் மயில்வாகனனே. (ருஅ)

**விதியை** வெல்ல :—

நனவிற்படு நல்லுலகந்தனையுங்
கனவிற் பொருளாய்க் கருதாவெனை நீ
வினவிக்கொளு நாளுளதோ விதியே
சினவிற்சிறையிட்டருடேசிகனே. (ருகு)

உச்சாடனம் பண்ணுதல் :—

உனையே யலதோர் பரமுண்டெனவே
நினையேனிடவூழ்வினை நீடுமதோ
கனையேழ் கடல்போல் வருகாரணமா
முனையே தெறு சண்முக வேலவனே. (௬க)

இவன் சொல்வழிப்படி சுவாமி நடக்க :—

நசையன்பினர்பானய வாதொழியின்
வசையுண்டெனு மவ்வழி நின்றருள்வாய்
விசையும்புகல் சூர்வெருவப்பொருதெண்
டிசையும் புகழ்த்திகழ் வேலவனே.

பழவினை நீக்குதல் :—

பண்டே தொடர்பற்றெடு சுற்றமெனும்
வெண்டோரை மகிழ்ந்து விளிந்திடவோ
கண்டே குறமங்கைதனைக்களவிற்
கொண்டே கடிதேகிய கொற்றவனே. (௬ரு)

கன்னி மாயையற்ற கொள்ளைகொடுத்தக்கவலை தீர :—

வள்ளைக் குழைமங்கையர் சிங் . . . . . லே
கொள்ளைப்படுமென் குறை தீருமதோ
.ள்ளைத்தனிமால் விடைமன்புகழும் . . .
பிள்ளைப்பெருமாளெனும் பெற்றியனே. (சாசா)

* * *

* * *

கு-பு.—இந்நூல் முருகக் கடவுள் மீது துதிரூபமாய் அமைந்துள்ளது. இதில் உள்ள பாடல்களை எல்லாம் மந்திர ரூபமாகவுங் கொண்டு அவர் அவர் தத்தமது கோரிக்கைகளையும் பெறலாம் என்று ஒவ்வொரு பாடல் களின் தலைமுகத்திலும் எழுதிவைத்திருக்கும் தொடர்மொழிக் குறிப்பு களால் உணரக் கிடக்கின்றது. இது இன்னாரால் இயற்றப் பெற்றதென்றும் இத்துணைத்தென்றும் உணரவியலவில்லை. முதலில் முருகப் பெருமான் விஷயமான கைவல்லிய நவநீதப் பாட்டொனறும், கந்தரனுபூதி செய்யு ளொன்றும் எழுதிவைக்கப்பட்டுள. ஏடுகள் சிறிது சிதைந்திருக்கின்றன. எழுத்துப்பிழைகள் காணப்படுகின்றன. 28-ஆம் ஏடு காணப்பெறவில்லை. இதன் பின்னர் ஔவை பாடல் மூன்று உள.

---

## No. 2354. மாணிக்கப்பவழக்கோவை.
## MĀṆIKKAPPAVAḺAKKŌVAI.

Pages, 6. Lines, 4 on a page.
Begins on fol. 36-a of the Ms. described under No. D. 2353.

Contains 12 stanzas only.

In praise of God Śiva. The author asks at the end of each stanza "When shall (I) see Lord Śiva ?."

**Beginning :**

மாணிக்கப்பவழக்கோவை.

அஞ்செழுத்தாய் எட்டெழுத்தாய்
ஐம்பத்தோரட்சரமாய்
பிஞ்செழுத்தாய் நின்ற
பெருமானைக் காண்பதெப்போ. (க)

ஆதியாயந்தமுமாய்
ஆதாரப் பொருளுமாய்
நீதியாய் நின்ற நிம
லனைக்காண்பதெப்போ. (உ)

இறப்பிறப்பில்லாதார்
இன்பதுன்பமில்லாதார்
சிறப்பரிய வினையாளுஞ்
சிவபதத்தைக் காண்பதெப்போ. (ஙு)

உள்ளம் புறமு முயிராய்
உயிர்க்கலந்து
கல்லால் துணைநாதன்
கருத்துடன நான் காண்பதெப்போ. (ரு)

**End :**

ஐயனுமாயெவ்வுயிர்க்கும்
ஆதாரப்பொருளுமாய்
சைவனுமாய் நின்ற சதாசிவனைக்
காணபதெப்போ. (கூ)

அவ்வாகி உவ்வாகி
ஓங்காரத்துள்ளாகி
கவ்வாகி நின்ற கண
வனை நான காண்பதெப்போ. (சூ)

ஓரஞ்சு மஞ்சு முற்ற
பதினஞ்சுஞ்
சீரஞ்சாய் நின்ற சிவ
பதத்தைக்காண்பதெப்போ. (யக)

அக்கனமாய் எவ்வுயிர்க்கும்
ஆதாரப்பொருளுமாய்
சிக்கனமாய் நின்ற
திருவடியைக்காண்பதெப்போ. (யஉ)

**கு-பு.**—இந்நூல், "எக்காலக்கண்ணி" என்னும் நூலே போல "சிவ பிரானைக்காண்பதெப்போ" என்ற சொற்பொருள் ஒவ்வொரு பாடலின் ஈற்றிநுமமையுமாறு பாடப்பெற்றுள்ளது. இதில் பனிரண்டு செய்யுட்கள் இருக்கின்றன. இது இத்துணைத்து இன்னாரால் இயற்றப்பெற்றது என்னு மிவற்றில் ஒன்றும் இதிலிருந்து விளங்கவில்லை. எடுகள் ஒரு சிறிது சிதைந்திருக்கின்றன. எழுத்துப்பிழைகள் காணப்பெறுகின்றன. பிறகு சரஸ்வதி விஷயமான இரு செய்யுட்கள் உள.

---

## No. 2355. ஆந்தைக்காதல்.
## ĀNDAIKKĀDAL.

**Pages, 2. Lines, 5 on a page.**
**Begins on fol. 39-b of the Ms. described under No. D. 2353.**

Complete.
Similar to the work described under No. D. 2296.

**Beginning :**

ஒன்று பொல்லாது. இரண்டு நடை காட்டும். மூன்று பொரியரவம் தீண்டும். நாலு நல்லவர் வருவார். . . . . . . . எழு இலையுடன் பாக்கு . . .ஒன்பது ஓலை வரும்.

**End :**

பதிமூன்று தலைவன் படுவன. பதினாலு பத்திரம். பதினைந்து குதிரையோட்டம். பதினாறு வாழ்வு.

கு-பு.—இது, டிஸ்கிருப்டிவ் காடலாக்கு 2296-ஆவது நம்பரில் வந்துள்ள நூல்போன்றது. இதில் ஒன்று முதல் பதினாறு வரைக்கும் உள்ள எண் களுக்குப் பலம் கூறப்பட்டுள்ளது.

---

## No. 2356. அகத்தியர் பூரணசூத்திரம் இருநூறு.
## AKATTIYAR PŪRAṆASŪTTIRAM IRUNŪṞU.

Substance, palm-leaf. Size, 18 $\frac{10}{16}$ × 1$\frac{1}{16}$ inches. Pages. 72. Lines, 4 on a page. Character, Tamil. Condition, injured. Appearance, old.

Complete.

Same work as that described under No. R. 254 (j).

கு-பு —இந்நூல் மூவருடககாடலாக்கு 254 (j) நம்பர் பிரதியில் வந் துள்ள நூலேயாம். இப்பிரதியில் இந்நூல் முற்றுமிருக்கிறது. ஷை பிரதியில் முதலிற்காணும் "மேருவினிலுதித்தப் பூரணமதாகி" எனத்தொடங்கும் காப்புச் செய்யுள் இதில் காணப்பெறவில்லை. முடிந்தபின்னர் இதே இரஸவாத விஷயமான பாடல்கள் பதின்மூன்று அதிகமாகக் காணப்படு கின்றன. அவை எந்த நூலைச் சார்ந்தவையோ? ஏடுகள் பல முறிந்து கிடக்கின்றன. அப்பிரதிக்கும் இப்பிரதிக்கும் அநேக விடங்களில் பாட பேதங்கள் இருக்கின்றன. எழுத்துப்பிழையுள.

---

## No. 2357. அனுபவ வைத்தியம் வசனம்.
## ANUBHAVA VAIDDIYAM VACANAM.

Substance, palm-leaf. Size, 13$\frac{5}{16}$ × 1$\frac{6}{16}$ inches. Pages, 432. Lines, 5 on a page. Character, Tamil. Condition, injured. Appearance, old.

Similar to the work described under No. D. 1978.

**Beginning :**

. . . . . . . (க)

நாடியால் முன்னோர் சொன்ன
  நற்குறி குணங்களாலும்
நீடிய விழிதன்னாலும்
  நிலைபெறு முகத்தினாலுஞ்
சூடிய ரேகை சேட்டை
  சொல்லிடு நல்லோர் சொன்ன
தேடிய குருடன்கையிற்
  சித்திரம் போன்றதாமே.

*  *  *

சிறியா நங்கை யறியாதார் சிறியநாகம் பிடியாரே. இது குளிசமாடிக் கட்டப்பிடிக்கலாம். * * * கற்சேம்பு பலிகொடுத்துக் குளிசமாடி மந்தையிற் புதைக்கப் புலியாட்டை யெடாது. பாம்பு கடிததால் விழுதி யிலையை மென்று விழுங்க விஷம் ஏறுது. சேப்பு நெருஞ்சில் சுட்டுச் சாம்பலாக்கி முலைப்பாலில் கரைத்துப் பஞ்சிற் . . . . . . . . . . .

மேக ரணத்துக்கு :—ஆவாரை வேர் பட்டை பலம் இரண்டு (2) சீரகம் விராகன் எடை உ சாயங்காலத்துக்கு குறுணி தண்ணீர் வைத்துக் கிஷாய மாய்க் காய்ச்சி ஐ ஆக இறக்கிச் சீரகம் அரைச்சுக்கலந்துப் பசுவின் வெண்ணெய் எலுமிச்சங்காய் மதியாரி வெள்ளை சர்க்கரை ஒரு பலம் கூடப்போட்டுக் காலமே மூன்று நாள இந்தப்படிக்குக் கொடுக்கவும்.

**End :**

நீரிழிவிக்கும் தாகத்துக்கும்.

நீரிழிவுக்குச் சாமை அரிசி உப்புப்போடாமல் பொங்கி இதைப் பொட்டண மாகக் கட்டித் தண்ணி தெளித்துப் பிழிந்துபோட்டு இந்தத்திப்பியை உலர்த் திச் சூரணம்பண்ணி மூன்று விரற்கொண்டது எண்ணெயிற் கொள்ளவும். நீரிழிவு நிற்கும். இதனாலே தாகமெடுத்தால் சோறு கொதிக்கச்செய்தே தண்ணியை யிறுத்துக்கொண்டு இதில் தாழை விழுதும் குளிர்தாமரை யிலையும் கரைத்து முன்பொடியுங்கலந்து பனைவெல்லமும் இட்டுக்கொள்ள வும். தாகம் நிற்கும்.

நீரிழிவுக்குக் கோரைக்கிழங்குந் துளசியும் அரைத்து . . . குழப் பிக்கொள்ளவும். தீரும். இன்னும் ஒருவிதம்: ஆவாரையைச் சமூலம் உலர்த்தி உட்கட்டைதவிர இடித்துச் சூரணம்பண்ணி இதிற் பாதி நெல்லிப் பருப்பு, இதிற் பாதி மரமஞ்சள் கூட்டி வஸ்திரகாயம் பண்ணி இதிற் சக்கரையும் தேனுங்கலந்து உள்ளங்கையிற் கொள்ளவும். நீரிழிவு நிற் கும்.

கரப்பானுக்கு :—வெப்பாலை அரிசி, கார்போக அரிசி . . . வாய் விளங்கம், கண்டுபாரங்கி, நாட்டுமூலம், ஈசைக்கொட்டை, ஈசுரவேர், விஷ புத்தி, காட்டுச்சீரகம், எலுமிச்சம்பழம், கஸ்த்தூரி மஞ்சள், கருஞ்சீரகம், கடுக்காய், வசம்பு, வெங்காவளி, முக்காவேளை, தூதுவளை, வெண்காரம், படிக்காரம், பால்துத்தம், மயில்துத்தம், குங்கிலியம், ஆடுதின்னாப்பாளை, எள்ளு, காசுகட்டி இவையெல்லாம் பொடி பண்ணிக் கூட இலுப்பெண் ணெய், புங்கவெண்ணெய் விளக்கெண்ணெய், வேப்பெண்ணெய், நல் லெண்ணெய் இந்த அஞ்சு எண்ணெயும் காயவைத்து ஈசைக் [கொட்டு வுரை ?] கொட்டை விரையைச் சுட்டுப் பொடிபண்ணி இறக்குகிற சமயத்திலே போட்டு எல்லாம் அரைத்து எண்ணெயிலே கலந்துவைக்க வகைக்கு வராக னெடை (க) எண்ணெய் வகைக்குச் சேர் (வ).

கு-பு.—இந்நூல் டிஸ்கிருப்டிவ் காடலாக்கு 1978-ஆவது நம்பரில் வந் துள்ள நூல் போன்று இருக்கிறது. இதிலே அநேகவித நோய்களைத் தீர்த்தற் குரிய நன்மருந்துகளின் முறை விளக்கமாக வெழுதப்பட்டிருக்கின்றன. விஷங்களுக்கும் மருந்துகள் கூறப்பட்டுள. முதலிலும் இடையிலும் சில செய்யுட்கள் விரவி யெழுதப்பட்டுள. ஏடுகள் சிதைந்துள. எழுத்துப் பிழைகள் மிகவும் பொதிந்து உள. இடையில் 26 to 88, 234, 235, 275 என்ற இவ்வேடுகள் காணப்பெறவில்லை.

## No. 2358. முருகன்தோத்திரப்பாடற்றிரட்டு.
## MURUKANTŌTTIRAPPĀḌAṞṞIRAṬṬU.

Pages, 130. Lines, 4 on a page.
Begins on fol. 30-a of the Ms. described under No. D. 1074.

Contains 116 stanzas only.

Similar to the work described under No. D. 2353.

**Beginning :**

*சூதாடும் வித்தை தொழில்விட்டுப் பொய்விட்டு துக்கம்விட்டு
வாதாடு தர்க்கத்தின் சாஸ்திரம்விட்டு மலர்சிறந்த
காதாடு குண்டல மாறுமுகமுங் கருத்துள் வைத்நால்
ஒதாடும் வேலுமயிலொடும எட்டெட்டு மாடிடுமே.* (க)

*இறங்கி யிறங்கி யிருந்து நடந்து எழுந்திருந்து
உறங்கி விழித்துத் தெளிந்து தெளிந்து மெய்யுன்னியுன்னி
பறங்கிரி வேலென்ற சத்தமுன் சோததிரத்திற்பாயலேயோ
அறங்கிளே வாழ்கவுந்துஷ்டர் மனேக்கனலிட்டவனே
(சுப்பிரமணியர்).* (ட)

*தளைத்துக்கிளைத்துத் துளுத்திருந்தாக்கால் சகலருண்டு
இளைத்துக்களைத்து விழுந்துவிட்டால் எனக்காருதுணை
விளைத்துப்போர்செய்த சூருடனமரார வெட்டி மண்டை
துளைத்துப்புறப்பட்ட வேலா பழனிமலை துரையே.
(வேலாயுதம்).* (ச)

*புத்தியும் வித்தையுஞ் சித்தாந்த வேதப்புனலறிவும்
பத்தியும் பத்தி பதினுன்கு வேதப்பலகலையும்
சித்தியுஞ் சித்திக்கு வேதாந்த ஞானத்திண் செய்கை தரும்
சத்தியஞ் சத்தியம் வேல்மணி மந்திரம் சடாட்சரமே.
(கடம்பன்).* (கூ)

*இணையொத்தமேனியும் ஆறுமுகமும் ஈராறுகையோன்
பணையொத்த தோளும் பருமுத்து மார்பும் பகருஞ்சர
அணையொத்தகால் விசைமுன்னுன்குருபு மெய்யன்புங்கொண்டு
துணையத்த வேழைமுன் வேல்மயில் நித்தந்துணைவரவே.
(சண்முகன்).* (ഥ)

*நால்வகை யோனி யெழுவகை தோற்றத்தில் நல்கிவந்தோர்
மாலயன் ருத்திரன் மயேசன் சதாசிவன் மற்றும்முள்ள
ஆலடித் தேவரிஷி முனிசித்தர்கள் அஷ்டசத்தி
வேலவன் வேலைத்துதிப்பார் உனைநித்தம் வேண்டுவரே.
(சூரசங்காரன்).* (ഥட)

அண்டர்க்கிறைவனை யீராறுசமயத்தகந்தெளிந்த
தொண்டர்க்கெளியனை மாணிக்க முத்து சுயமணியைக்
கொண்டக் கடுவிடங்கொண்டான் புதல்வனைக் கொற்றவனைத்
துண்டக் குடோரியே சண்முகா நித்தந் துதிசெய்வனே. (௰௪)
(குழந்தை வடிவேலன்).

கண்டுமிருந்தென்ன காணுத போதுங்களரியிலும்
மிண்டுகள் பேசிய சண்டாளர் மூர்க்கர்தம் வீம்படங்கத்
துண்டுத்தொழுவிற்றடைதது அதட்டிச சுருங்கும்படி
தண்டினை செய்திடும் வேலாதிருச்செந்தூர்ச் சேவகனே. (உ௰)

முருகாவென்றுனை யிருகரங்கூப்பி முடியில் வைததால்
இருகாலம் பொய்த்த வினைவருமோ வெளியேன் பிழையே
தருகாமல் காப்பது உன் கடன்காண் சைலமேகவர்ணன்
மருகா குறப்பெண் மணுளா திருத்தணிமலைக் கந்தனே. (க)
(சரவணபவன்).

**End :**

அய்யன் பழனிப்பதி சுப்பிரமணியனு மாறுமுகம்
மெய்யன் திருச்செந்தூர் வேலாயுதமும் மெய்ப்பொருளும்
செய்ய கொண்டாக்கும் குமரய்யர் தான் குலதெய்வமென்று
வெய்யதுணங்க வ [று] (ரு) வாய்வெலாரி மலைக் கந்தனே. ( )

எட்டுக்காலோட விருகாலத்தலை மூன்றும்
வட்டமுடன் கொம்பிரண்டு வாய்நாலுந்—திட்டமுடன்
சொக்கனுக்கஞ்சுதலை சுமந்தாருக் காறுதலை
இக்கணக்கே கண்டேனினி. ( )

ஆத்தாள் குறத்தி யப்பன் குறவன் அரனெனக்குப்
பாத்தா லொருமுறை பாட்டனுமாம் பதினுலுலகம்
காத்தாளென்பாட்டி காமனென்மாமன் கருணையுடன்
பெற்ரு பிழைக்க வல்லார் பிள்ளையா ரெங்கள் பெரியப்பனே.

**கு-பு.**—இந்நூல் டிஸ்கிருப்டிவ் காடலாக்கு 2353-ஆவது நம்பரில் வந்துள்ள நூல் போன்றுள்ளது. இதிலே முருகன் விஷயமான தோத்திரப் பாடல்கள் பல திரட்டி வைக்கப்பெற்றிருக்கின்றன. இடையே சில அகப்பொருள் விஷயமான பாடல்களும் எழுதப்பெற்றுள. இதில் உள்ள பாடல்கள் முற்றும் சில கலித்துறையும் சில வெண்பாக்களும் சில பதங்களுமாக விருக்கின்றன. உள்ள ஏடுகளில் சில சிதைந்திருக்கின்றன. எழுத்துப் பிழைகளிருக்கின்றன. சில பாடல்களுக்கு மாத்திரம் எண்கள் குறிக்கப்பட்டிருக்கின்றனவேயன்றிப் பல பாடல்களுக்குக் குறிக்காமலே விடுக்கப் பெற்றிருக்கின்றன.

## No. 2359. அருணகிரிசுவரர் தேவாரம்.
## ARUṆAGIRĪŚVARAR TĒVĀRAM.

Pages, 6. Lines, 7 on a page.
Begins on fol. 108-a of the Ms. described under No. D. 1074.

Contains 10 stanzas only.

Verses in praise of God Śrī Aruṇagirīśa of Tiruvaṇṇāmalai.

கு.பு.—இது அருணசலத்திற் கோயில்கொண்டு இருக்கும் அருணசலேசுவரர் சுவாமிமீது இயற்றப்பெற்ற தேவாரமாகும். இதில் "கமலாசனனும் நெடுமாலும், ஒத்தைப்புனல்களைந்து, கன்ரூர்முனியும் பதஞ்சலியும், பொருப்பாங்கைலைதனை நினைந்து" என்று இம்மாதிரியாகத் தொடங்கும் பத்துப் பாடல்களே இருக்கின்றன. ஏடுகள் எல்லாம் பாதி முறிந்து விழுந்து கிடக்கின்றனவாதலின பாட்டுக்கள் எல்லாமே அரைகுறையாகச் சில ஒரு அடியினவாயும் சில பாதி அடியினவாயுமிருக்கின்றன. ஆசிரியர் இன்னரென்று தெரியவில்லை. இதுக்குப பினனா "சிவகாமியம்மை விருத்தம்" என்ற பெயரால் ஒரு பாடல் உளது.

---

## No. 2360. திருத்தணிகைக்குமாரக்கடவுள் பதிகம்.
## TIRUTTAṆIKAIKKUMĀRAKKAḌAVUḶ PADIKAM.

Pages, 17. Lines, 5 on a page.
Begins on fol. 131-a of the Ms. described under No. D. 1074.

Incomplete.

Similar to the work described under No. D. 1648.

கு-பு.—இந்நூல் டிஸ்கிருப்டிவ் காடலாக்கு 1648-ஆவது நம்பரில் வந்துள்ள நூல் போன்றுள்ளது. இதில் பத்துப் பாடல்களிருக்கின்றன. "திருப்பணி செழித்தருள் குறக்கனிதனைப் புணர்த்திரு த்தணிமலைக்கடவுளே" என்றதை மகுடமாக வைத்துப் பாடப்பெற்றுள்ளது. நடுவில் ஓரேடு முறிந்து போயுளது. மிகப்பிழையுடன் உளது. இதன் பிறகு "சுப்பிரம்மணியர் திருவனந்தல்" என்ற தலைப்பெயருடன் 2 பாடலும், "சிவலிங்க மாலை" என்ற நூலினது 2 பாடலும் எழுதப்பெற்றிருக்கின்றன.

---

## No. 2361. அருணசலேசுவரர் விருத்தம்.
## ARUṆĀCALĒŚVARAR VIRUTTAM.

Pages, 9. Lines, 6 on a page.
Begins on fol. 146 of the Ms. described under No. D. 1074.

Incomplete.

Similar to the work described under No. D. 1676.

கு-பு.—இது டிஸ்கிருப்டிவ் காடலாக்கு 1676-ஆவது நம்பர் பிரதியில் வந்துள்ள நூல் போன்று உள்ளது. இங்கு எழு பாடல்களேயுள. இந்நூல் இன்னாரால் இயற்றப்பெற்றதென்பது இதிலிருந்து விளங்கவில்லை. ஒவ்வொரு பாடலினும் "அரகராமயேசனே பரமகுருவீசனே யருணாசலவாசனே" என்ற சொற்றொடரை மகுடமாக வைக்கப்பெற்றுள்ளது. எழுத்துப்பிழைகள் மிகுந்திருக்கின்றன.

## No. 2362. பலபாடற்றிரட்டு.
## PALAPĀḌAṞṞIRAṬṬU.

Substance, palm-leaf. Size, $9\frac{9}{16} \times 1$ inches. Pages, 60. Lines, 4 and 5 on a page. Character, Tamil. Condition, injured. Appearance, old.

A varied collection of verses.

கு-பு —இது, பல விஷயமான பாடல்களையும் ஒரு திரட்டாகத் திரட்டுவித்தது. இதில் "ஞானவிருத்தம்" என்ற தலைப்பேருடன ஞான விஷயமான பாடல்கள்சிலவும், "சதுஷ்கோணமாலைபத்து" என்றதும், சில தோத்திரப்பாடல்களும், சில கீர்த்தனங்களும் சில பதங்களும் ஆக இவைகளே திரட்டி எழுதிவைக்கப்பெற்றிருக்கின்றன. ஏடுகள் மிகவும் சிதலுற்றிருக்கின்றன. எழுத்துப்பிழைகள் பொதிந்துகிடக்கின்றன.

## No. 2363. தண்டலையார்சதகம் (பழமொழி விளக்கம்).
## TAṆḌALAIYĀRŚATAKAM (PAḶAMOḶI VIḶAKKAM).

Substance, palm-leaf. Size, $15\frac{1}{16} \times 1$ inches. Pages, 36. Lines, 5 on a page. Character, Tamil. Condition, much injured. Appearance. old.

Begins on fol. 1-a. The other work herein is Sarasvati antādi 24-a.

Complete.

A well-known didactic poem by Śrī Paḍikkāśuppulavar.

**Beginning :**

தண்டலையார் சதகம்.

காப்பு.

சீர்கொண்ட கற்பகத்தை வாதா விநாயகனைத் தில்லை வாழுங்
கார்கொண்ட கரிமுகனை விகடசக்கிர கணபதியைக் கருத்துள்வைப்பாம்
பேர்கொண்ட ஞானநாயகி பாகர் [நிழ] (நீணெறி) யெம்பெருமான் [மீதில்
ஏர் கொண்ட நவகண்டமிசைந்த பழமொழி விளக்கமியம்பத்தானே.

நூல்.

வரமளிக்குந் தண்டலையார் திருக்கோவினுட்புகுந்து வலமாய் வந்தே
ஒரு விளக்காகினும் பசுவின் நெய்யுடன் றுமரை நூலிலொளிர வைத் [தால்
கருவிளக்கும் பிறப்புமில்லை யிறப்புமில்லை கைலாசங் காணியாகும்
திருவிளக்கிட்டார்தமையே தெய்வமறிந்திடும் வினையுந் தீருந்தானே.

கூன்செய்த பிறையணியுந் தண்டலையார் கருணைசெய்து கோடிகோடி
யான் செய்த வினையகற்றி நனமைசெய்தாலுபகாரமென்றுலுண்டோ
ஊன்செய்த வுயிர்வளர்த்தல் தவந்தானம் நடந்தேற வுதவிசெய்து
வான்செய்யும் நனறிக்கு வையகமெனசெய்யுமதை மறந்திடாதே. (உ)

**End :**

ஆழியெல்லாம் பாலாகி யவனியெல்லா மன்னமய மானுலென்ன
சூழவருமிரவலர்க்குப் பசிதீர வுண்டிருக்குஞ் சுகந்தானுண்டோ
ஏழுலகும் பணியவருந் தண்டலை நீ[ழநெ](ணெ)றியாரே யெந்தநாளும்
நாழி நெல்லுக்கொரு புடவை விற்றுலும் நிருவாணம் நாய்க்குத்
தானே (கூகூ)

நித்தமெழுநூறு நன்றிசெய்தாலு மொரு தீது நேரேவந்தால்
அத்தனையுந் தீதென்பார் பழிகருமக் கயவர் குணமகற்றலாமோ
வித்தகஞ்சேர் தண்டலையார் வளநாட்டிற் சாம்பலிட்டு விளக்கினுலும்
எத்தனை செய்தாலுமெனன பித்தளைகுத தன்றுற்ற மியற்கையாமே
(ᛖ)

கு-பு.—இந்நூல், பொனவிளைந்தகளத்தூரிலே செங்குநதர் மரபிலே யவதரித்துச் சிவாநுக்கிரகததால் தமிழ்க்கலை முழுதும் பயின்று "படிக்காசுப்புலவர்" என்று சிறப்புப்பெயர் பெற்றிருந்த பெரும் புலவரால் இயற்றப்பெற்றதாகும். இது "தண்டலை நீணெறி" யென்னும் சிவஸ்தலத்தில் அமர்ந்திருக்கும் பரமசிவனுர்மீது துதி ரூபமாயும் ஒவ்வொரு பாட்டின் ஈற்றடியிலும் ஒவ்வொரு பழமொழியையும் அணியாக வைத்து அதன் அதன் பொருளையெல்லாம் மிகுதியான அடிகளிலே விளக்குவித்து நீதிரூபமாயும் அமைந்ததொரு அரிய பெரிய நூலாகும். இது ஒரு குறிப்புரையுடனும், தனித்தும் நூலாசிரியரின் சரித்திரக் குறிப்புடன் அச்சிடப்பெற்றுள்ளது. இதற்குப் "பழமொழி விளக்கம்" என்று மற்றெரு பெயரும் உண்டு. இதிலே நூறு பாட்டுக்களுமுள. பாடபேதம் உண்டு. இதில் உள்ள பாடல்களெல்லாம் பெரும்பான்மையாக அச்சுப் பிரதியிற் கண்ட முறைபோலல்லாமல் முன்னவை பின்னவைகளாகக் காணப் பெறுகின்றன. எழுத்துப்பிழையுள.

---

## No. 2364. சரசுவதியந்தாதி.

## SARASVATIYANTĀDI.

**Pages, 10. Lines, 5 on a page.**
**Begins on fol. 24-a of the Ms. described under No. D. 2363.**

Contains 20 stanzas only.

An eulogy, in thirty stanzas, on Goddess Sarasvati. By the Great Kambar.

**Beginning :**

சரசுவதி துதி.

ஓத வினையகலும் ஓங்குபுகழ் பெருகும்
காதற் பொருளனைத்துங் கைகூடுஞ்—சீதப்
பனிக்கோட்டு மால் பிரமர்க . . மாபாரதப்போர் தீட்டுந்
தனிக்கோட்டு வாரணத்தின்றாள். ( )

படிக நிறமும் பவளச் செவ்வாயுங்
கடிகமழ் செந்தாமரை போற்கையும்—துடியிடையும்
அல்லும் பகலுமனவரதமுந் தொழுதால்
கல்லுஞ் சொல்லாதோ கவி. (க)

ஆயகலைகளறுபத்து நான்கினையும்
ஏய வுணர்விக்குமென்னம்மை—தூய
உருப்பளிங்குபோல் வாளென்னுள்ளத்தினுள்ளே
இருப்பளிங்கு வாராதிடர் (உ)

நூல்

சீர்தந்த வெள்ளிதழ்ப் பூங்கமலாசனத் தேவி செஞ்சொற்
றார்தந்த வெனமனத்தாமரையாட்டி சரோருகமேற்
பார் தந்த நாதனிசை தந்த வாணி நற்பங்கயத்தாள்
வார் தந்த சோதியம் போருகத்தாளை வணங்குதுமே. (க)

வணங்கு சிலைநுதலுந் திருத்தோளும் வனமுலைமேற்
சுணங்கும் புதிய நிலாவொளிர் மேனியுந் தோட்டுடேன
பிணங்குங் கருத்தடங் கண்களுநோக்கிப் பிரமனன்பா
லுணங்குந் திருமுன்றிலாள் மறை நான்குமுரைப்பவளே. (உ)

உரைப்பாருரைக்குங் கலைகளெல்லாமெண்ணிலுன்னையனறித்
தரைப்பாலொருவர் தரவல்லரோ தண்டரளமுலை
வரைப்பாலமுது தந்திங்கென்னை வாழ்வித்த மாமயிலே
விரைப்பாசடைமுடி வெண்டாமரைப் பதிமெல்லியலே. (ந)

இயலானதுகொண்டு நின்றிரு நாமங்களேத்துதற்கு
முயலாமையாற்றடுமாறுகின்றேனிந்த மூவுலகுஞ்
செயலாலமைத்த கலைமகளே நின்றிருவருளுக்
கயலாய் விடாம லடியேனையுமு வந்தாண்டருளே. (ச)

**End :**

தொழுவார் வலம் வருவார் துதிப்பார் தந்தொழின் மறந்து
விழுவாருமறை மெய் தெரிவாரின்ப மெய்புளகித்
தழுவாரினுங் கண்கணீர் மல்குவாரிங்கனுவதென்ன
வழுவாத செஞ்சொற் கலைமங்கைபா லன்பு வைத்தவரே. (உரு)

கு-பு.—இந்நூல், மகாகவியாகிய கம்பர் அருளிச்செய்த அந்தாதியாக வமைந்ததொரு நூலாகும். சரசுவதியின் துதி ரூபமானது. முப்பது பாடல்களால் அமைந்துளது. இப்பிரதியில் (உரு) பாடல்வரையுமே இருக்கிறது. இடையில் 11 to 15 ஆகிய பாடல்கள் எழுதப்பெற்ற ஏடு காணப்பெறவில்லை

இது, "தோத்திரப் பிரபந்தத்திரட்டு" என்றதிற் சேர்த்து அச்சிடப் பெற்றுளது. இதனைத் தமிழுலகில் சரஸ்வதி தேவியின் அருள்பெறுவான விழைந்தார் யாவருமே மனப்பாடஞ்செய்து போற்றி வருகின்றனர். இப் பிரதி மிக வெழுத்துப் பிழையுடன உளது. உள்ள ஏடுகளும் நுனியில் முறிந்து உள.

---

## No. 2365. வைத்தியமுறையும் மந்திரமும்.
## VAIDDIYAMUṚAI AND MANTRA.

Substance, palm-leaf. Size, $8\frac{1}{2} \times 1\frac{3}{8}$ inches. Pages, 176. Lines, 8 on a page. Character, Tamil. Condition, much injured. Appearance, old.

Similar to the work described under No. 190.

கு.பு.—இந்நூல் மூவருடக் காடலாக்கு 190-ஆவது நம்பரில் வந்துள்ள நூல் போன்றிருக்கிறது. இதில அநேக வியாதிகளுக்கு மருந்து முறையும் மந்திர முறையும் வசன நடையில் எழுதப்பெறறிருக்கின்றன. சில மந்திர முறைகள் சக்கிரங்களில் அமைத்துப பொறிககப் பெற்றிருக்கின் றன. ஏடுகள் மிக்வுஞ் சிதைந்துள. இது இத்துணைத் தெனறும் இன்னு ரால் எழுதப்பெற்றதென்றும் தெரியவில்லை. உள்ள ஏடுகளும் தொடர்ந்த எண் குறிக்கப் பெருமலே இருக்கின்றன. மொத்தம் (அஅ) ஏடுகள் உள. எழுததுப்பிழைகள் மிகவுள.

உடுசு

---

உ௩௬௬
## No. 2366. கோகுலசதகம்.
## GŌKULAŚATAKAM.

Substance, palm-leaf. Size, $16\frac{1}{16} \times 1\frac{1}{4}$ inches. Pages, 52. Lines, 4 on a page. Character, Tamil. Condition, much injured. Appearance, old.

Complete.

A centum of verses in praise of Śrī Gōkulam, the scene of the early life and divine sports of Lord Śrī Kṛṣṇa.

Printed.

**Beginning :**

கோகுலசதகம்.

திருமேவும் பாடியில் வாழ்வோர்கண் மீதிற் சிறக்கவுமே
உருமேவு கோகுல மேன்மைச் சதக முறைத் தமிழ்க்குப்
பருமேவு முல்லை . . . யும் பிராணண்டை வைப்பையெல்லாங்
கருமேவு முந்தியிற் காத்தான் கண்ணனடி காப்பதுவே.

காப்பு முற்றும்.

மணங்கொண்ட வேதன் முகத்திற் புயத்தில் வளர் குறங்கிற்
கணங்கொண்ட பாதத்திற்றேன்றிய நான்மறைக்கனம் பெறவே
பணங்கொண்ட பாம்பணையானமிர்தூறு மிப்பார் தழைக்க

**End :**

தரங்கமெறியுந்திருப்பாற் கடலிவர் தன் மனைபோல்
அரங்கநதுயிலும பிரானருளால் அனபர் கோத்திரத்தோர்
வரங்கள் பெறுகின்ற கோகுலப்பாவை மகிழ்ந்துகொண்டே
உரங்கொள் பெரும்புகழ்கொணடால் திருவருளோங்கவுமே. (கக)

சங்கத்தை வென்றவர் மாங்காயுதிரத தமிழுரைத்தோர்
துங்கக்கயேந்திர மோட்சமு மாயிரஞ் சொன்னவல்லோர்
எங்கட்கிறை மகிழ் பாகவதமு மேழாயிரமாய்க்
கொங்குற்ற வாணி கடாட்சத்திற் செய்தவர் கோகுலரே. (ா)

கு-பு.—இந்நூல், கோகுலத்தைப்பற்றிச் சிறப்பாகக் கூறுவதோர் "சதகம்" என்ற பிரபந்த விசேடமாகும். இது "பாலூர் அமிருத கவிராயர்" என்ற பெரும் புலவரால் இயற்றப்பெற்றதென்று தெரிகிறது. நூலிலிருந்து இதுக்கு விளக்கமாகத் தக்க சான்று தெரிந்திற்றிலது. இந்நூல் "சதகத்திரட்டு" என்றதிற் சேர்த்து அச்சிடப்பெற்றிருக்கிறது. அச்சுப் பிரதிக்கும் இதற்கும் முழுமையும் பாட பேதங்களிருத்தலோடு பல செய்யுட்கள் முன் பின்னுகவும் இருக்கின்றன. எடுகள் மிகச் சிதிலம். எழுத்துப்பிழையுள. முடிந்த பினனர் "மண்டல புருடர் நிகண்டிலிருந்து" என்ற தலையங்கப் பெயருடன் (25 to 27), 68, 69 என்ற எண்களிட்ட சூத்திரங்கள் உள.

---

## No. 2367. சுப்பிரமணியர் சுத்தஞானம் நூறு.
## SUPPIRAMAṆIYAR SUDDHAÑĀNAM NŪṚU.

Substance, sritalam. Size, $9\frac{6}{16} \times 1\frac{14}{16}$ inches. Pages, 51. Lines, 10 on a page. Character, Tamil. Condition, slightly injured. Appearance, old.

Complete.

Same work as that described under No. R. 170 (*b*).

கு-பு.—இந்நூல் மூவருடக் காடலாக்கு 170 (*b*) நம்பர் பிரதியில் வருணித்துக் கூறப்பெற்றுள்ள "சுப்பிரமணியர் ஞானசூத்திரம் நூறு" என்ற நூலேயாகும். இப்பிரதியில் இந்நூல் முற்றும் உளது. சிற்சிலவிடங்களில் பாடபேதங்கள் காணப்படுகின்றன. எடுகள் ஒரு சிறிது சிதலுற்றுள. எழுத்துப்பிழைகள் உள. (5 & 25) ஆகிய இவ்வேடுகள் மாறிக் கோக்கப்பட்டுள.

---

## No. 2368. கணக்கதிகாரம் உரையுடன்.
## KAṆAKKADHIKĀRAM WITH COMMENTARY.

Substance, palm-leaf. Size, $15\frac{3}{4} \times 1\frac{2}{8}$ inches. Pages, 38. Lines, 6 on a page. Character, Tamil. Condition, injured. Appearance, old.

Incomplete.

Same work as that described under No. 199-C. and with slight *difference* in Text and Commentary.

கு.பு.—இந்நூல் மூவருடக் காடலாக்கு 199-C நம்பர் பிரதியில் வந்துள்ள நூலேயாகும். மூலத்திலும் உரையிலும் ஒரு சிறிது பேதம் காணப் படுகிறது. இப்பிரதியில் முதலிலிருந்து ஒரு சிறிய பகுதியேயுளது. ஏடு கள் ஒரு சிறிது சிதைந்துள. எழுத்துப்பிழைகள் உள. "விடுகதை" என்ற பெயரின் கீழ் "விரையில்லா நீர் பாய்ந்து முளை முளைக்கும், மேவியே நிலம் படரும் விரை விழாது, விரியுமது வண்டுமுண்ணு பூவே பூக்கும், மெல்லியர்கள் கையிலெடுத்துத் தலையிற் சூடார், பாரறிய ஐயாறு நாளைக்குள்ளே பயிரிட்டு அறுத்துப்படுப்பார், தரையில் ஆரொருவர் இக்கதையை யறிந்து சொன்னால் அவரை நாம் பெரியோரென்றறிய லாமே". "உப்பு" என்று ஓர் புதர் எழுதியுளது.

---

## No. 2369. கொங்கணர் பிரம்மானந்த நூல்.
## KOṄKAṆAR BIRAMMĀNANDANŪL.

Substance, palm-leaf. Size, 10 × $1\frac{5}{16}$ inches. Pages, 60. Lines, 8 on a page. Character, Tamil. Condition, injured. Appearance. old.

Complete.

Same work as that described under No. R. 250-b.

கு.பு.—இந்நூல் மூவருடக் காடலாக்கு 250-b நம்பரில் வந்துள்ள "கொங்கணர் தத்துவநூல்" என்ற நூலேயாகும். இங்குக் "கைலாச கொங்கணர் பிரம்மானந்த நூல்" என்றதாக இதற்கு மற்றொரு குறி குறிக்கப்பட்டுளது. இதில் இந்நூல் முற்றும் உளது. (௱அ) பாடல்களால் அமைந்துளது. அதற்கு மிதற்கும் பாட்டுக்கள்தோறும் சில பாடபேதங் கள் காணப்படுகின்றன. எழுத்துப்பிழையுள. ஏடுகள் ஒரு சிறிது சிதை வுற்று இருக்கின்றன.

---

## No. 2370. அகத்தியர்பூரண சூத்திரம் இருநூறு.
## AKATTIYAR PŪRAṆASŪTTIRAM IRUNŪṞU.

Substance, palm-leaf. Size, $11\frac{1}{2}$ × $1\frac{1}{4}$ inches. Pages, 40. Lines, 9 on a page. Character, Tamil. Condition, much injured. Appearance, old.

Begins on fol. 1-a. The other work herein is Gōrakkarsūttiram, 21-a.

Complete.

Same work as that described under No. R. 254(j).

கு.பு.—இந்நூல் மூவருடக் காடலாக்கு 254(j) நம்பர் பிரதியில் வந் துள்ளதேயாகும். இப்பிரதியில் இந்நூல் முற்றும் உள்ளது. ஏடுகள் முறிந்து கிடக்கின்றன. சிற்சிலவிடங்களில் பாடபேதங்கள் காணப்படு கின்றன.

## No. 2371. கோரக்கநாயனுர் சூத்திரம்.

### KŌRAKKANĀYANĀR SŪTTIRAM.

Begins on fol. 21-a of the Ms. described under No. D. 2370.
Pages, 15. Lines, 8 on a page.

Complete.

Explains the medicinal and such other properties of various herbs and plants.

**Beginning :**

கோரக்க நாயனுர் அருளிச்செய்த சூத்திரம் :—

உலகமெய்க்கு மொரு பெருங்கருணைப்
பலகலைசெய்புகழ்ப் பாவைப்புதல்வனை
அலகில் மெஞ்ஞானமாகிய வானைத்
தலையில் வைத்ததிசயஞ்சாற்றுகின்றேனே. (க)

சாற்று மதிசயந்தான் எண்விதமாகும்
கூத்தம்பலவாய்க்கூறிடும் வேதங்கள்
போத்துந்தகமே பூரணமூலியே. (உ)

பூரண மூலி பெருந்தத்துவமாகுஞ்
சாரணைதாட்டிச் சர்ப்பங்கள்போலவே
பாரிறபதினெண் முழத்திற்றேன்றிடும்
பேரணிகாட்டிற் பிசாசுகள் கூட்டமே. (ங)

*　　　　*　　　　*

கறைக்கும் பிரமிகையிலகப்படில்
மறைக்கும் பதினுயிரம் பேர்வந்தாலும்
நிற்கவுமாட்டார் நேருசமூலி
வற்கம் பிணக்கமயக்க மதாமே. (ω)

மயக்கப்படுத்து மதன சந்தோஷணி
நயத்திலொருபெண்ணை ராவுமருவிடில்
தியக்கமதாகித்திரும்பவறிந்திடாள்
சமித்திய மூலிகை தன்றெழிற்சொல்லுமே. (ωக)

சாக்கிய மூலிகைதன்கையகப்படில்
நோக்கிய கோட்டை நொறுங்கியுடைந்திடும்
பாக்கிய மூலிகை படைகள் தெறித்திடும்
வாக்கிய வேதத்தில் வள்ளல் சொன்னுரே. (ωச)

ஊமையுரைபேசு யோகிகள் மூலிகை
காமன்றன் மூலிகை கையிலகப்படில்
பூமியில் வாணம் புருடர்கை வைக்க
சாமீக மூல சாத்திடத் தங்கமே. (ωரு)

**End :**

ஆகுமவன்தாயெனவே பாதம்போற்றி
அர்ச்சித்துத் தொழுதிறைஞ்சியன்பாயெண்ணி
பாக்கிலேயுஞ்சுருள்கொடுத்துப்பணியே செய்து
பாணிவட்டம் ஊமைவட்டம் பண்ணி மேலே
வாகுபெற வறுகோணம் வரைந்து கொள்ள
வாலையுடையுயிரெழுத்து வாங்கு வாங்கு. (சுசு)

பூசனை செய்யுங்கையில் புராதனைப் பொசிப்பீராகில்
யோசனை தூரம் போவார் உமையொருபாகர்தானும்
ஆசையாமதுவையுண்டால் அதில்ரெட்டிதூரம்போவார்
ஈசனுராணைதிண்ணமிடைவிடாதிருக்க முற்றே. (சுஎ)

கு.பு.—இதனால் இன்னின்ன மூலிகைகள் இரசவாதம் முதலிய இன்னின்ன தொழிலுக்கு ஆம் என்றும், அஷ்டகர்மங்களில் இன்னின்னதற்கு இன்னின்ன மூலிகைகளாம் என்றும், இன்னும் இன்னோரன்ன பல வித்தைகட்கும் உரித்தான கருக்களையும எடுத்து உணர்த்துகின்றது. கோரக்கர் இயற்றியதாகத் தலையங்கததிறகுறிக்கப் பெற்றுளளது. " கொள்வது **அன்பதில் குறிப்பு உரைத்திட்டோம்**, கள்ளருக்காகக்காட்டார்கள யோகிகள், பிள்ளையென்றுன்னைப் பிரியத்துடன் சொல்வ, துள்ளமடக்கித் துணுக்கிடும்பாதாளம் " என்ற (ருசு) ஆம் பாடலால் இந்நூலாசிரியர் ஐம்பது பாடல்களைக்கொண்டதொரு நூலும் இயற்றியுள்ளார் என்பது தெற்றென விளங்குகின்றது. மற்று, " வழுத்தினர் இந்த நூல் மகிமையெல்லாம் மக்களே லோகர்க்குவுரைக்கலாகாக், கொளுத்திய தீபம்போல் விளக்கமாகும் **கோரக்கர் வெளி விட்டாரென்று பேராம்**, அழுத்தமனத் தோர்களாகவேணும் அவர்களுக்கு வழலை முறையறைந்திட்டோமே ". என்ற ஐம்பதாவது பாடலால் ஆசிரியர் " **கோரக்கர்** " ஆவார் என்றும் தெளிவாகிறது. இதில் (சுஎ) பாடல்களிருக்கின்றன. முற்றுப்பெற்றதென்றே தோற்றுகிறது. எடுகள் மிகவும் சிதைவுற்றிருக்கின்றன. எழுத்துப்பிழையுள. சில சில பாடல்களில் இரண்டொரு அடிகளில்லை.

---

## No. 2372. சிவப்பிரகாசவெண்பா.
## ŚIVAPPIRAKĀŚAVEṆPĀ.

Substance, palm-leaf. Size, 14½ × 1¾ inches. Pages, 7. Lines, 9 on a page. Character, Tamil. Condition, much injured. Appearance, old.

Wants 47 to 80 Foll. in the middle. By Tattuvadēśikanāyanār. Complete.

Begins on fol. 1-a. The other works herein are. Tattuvāmirtam, 4-a. Tiruttālāṭṭu, 17-a. Sorūpanandarpiḷḷaittamiḻ, 18-b. Sorūpānandar Veṇpāvantādi, 31-a. Sorupānandarkalitturaiyantādi, 38-a. Ñānavinōdankalampakam, 47-a. Sorupānandarñānavulā, 49-a. Sorupānandar Silīḍaiyulā, 62-b. Soṛupānandar Neñjuviḍutūdu, 75-b. Soṛūpānandaṛ Kalimadal, 81-a. Mōhavadhaipparaṇi, 88-a.

Same work as that described under No. D. 1499.

கு.பு.—இந்நூல் டிஸ்கிருப்டிவ் கேடலாக்கு 1499 ஆவது நம்பரில் வந்துள்ள நூலேயாகும். இந்தப் பிரதியில் முற்றும் உள்ளது. ஏடுகள் சிதலுற்றுச் சிதைந்துள.

---

## No. 2373. தத்துவாமிருதம்.
## TATTUVĀMIRUTAM.

Pages, 26. Lines, 9 on a page.
Begins on fol. 4-a of the Ms. described under No. D. 2372.

Complete.
Same work as that described under No. D. 1553.

கு.பு.—இந்நூல் டிஸ்கிருப்டிவ் கேடலாக்கு 1553 ஆவது நம்பரில் வந்துள்ளதேயாகும். இப்பிரதியில் இந்நூல முற்றும் உள்ளது. இது தத்துவ தேசிக நாயனுரால் இயற்றப்பெற்றது. அதற்கும் இதற்கும் பல விடங்களிலே பாடபேதங்கள் காணப்படுகின்றன.

---

## No. 2374. திருத்தாலாட்டு.
## TIRUTTĀLĀṬṬU.

Pages, 4. Lines, 10 on a page.
Begins on fol. 17-a of the Ms. described under No. D. 2372.

Complete.
Same work as that described under No. D. 1558.

கு.பு.—இந்நூல் டிஸ்கிருப்டிவ் கேடலாக் 1558 ஆவது நம்பரில் வந்துள்ள நூலேயாகும். இப்பிரதியில் இந்நூல் முற்றும் உளது. ஏடுகள் மிகவுஞ் சிதலுற்று இருக்கின்றன. எழுத்துப்பிழை காணப்படுகின்றன.

---

## No. 2375. சொரூபானந்தர் பிள்ளைத்தமிழ்.
## SORŪPĀNANDAR PIḶḶAITTAMIḺ.

Pages, 25. Lines, 10 on a page.
Begins on fol. 18-b of the Ms. described under No. D. 2372.

Complete.
Same work as that described under No. D. 325.

கு.பு.—இந்நூல் டிஸ்கிருப்டிவ் கேடலாக்கு 325 ஆவது நம்பரில் வந்துள்ள நூலேயாகும். இப்பிரதியில் இந்நூல் முற்றும் உள்ளது. ஏடுகள் மிகவும் சிதலுற்றுச் சிதைந்திருக்கின்றன. எழுத்துப்பிழையுள.

## No. 2376. சொரூபானந்தர் வெண்பாவந்தாதி.

### SORŪPĀNANDAR VEṆPĀVANTĀDI.

Pages, 14. Lines, 9 on a page.
Begins on fol. 31-a of the Ms. described under No. D. 2372.

Complete.

Same work as that described under No. D. 1514.

*கு.பு.—இந்நூல் டிஸ்கிருப்டிவ் கேடலாக்கு 1514 ஆவது நம்பரில் வந்துள்ள நூலேயாகும். இந்தப் பிரதியில் இந்நூலின் (100) நூறு பாட்டுக்களுமிருக்கின்றன. ஏடுகள் மிகவுஞ் சிதலுறறிருக்கின்றன.*

---

## No. 2377. சொரூபானந்தர் கலித்துறையந்தாதி.

### SORŪPĀNANDAR KALITTUṚAIYANTĀDI.

Pages, 18. Lines, 9 on a page.
Begins on fol. 38-a of the Ms. described under No. D. 2372.

Wants Two Stanzas in the end.

Same work as that described under No. D. 1508.

*கு.பு.—இந்நூல் டிஸ்கிருப்டிவ் கேடலாக்கு 1508 ஆவது நம்பரில் வந்துள்ள நூலேயாகும். இப்பிரதியில் இந்நூல் இறுதியில் இரண்டு செய்யுட்கள் ஒழிந்து முற்றும் உள்ளது. ஏடுகள் சிதலுற்றிருக்கின்றன. எழுத்துப் பிழைகள் இருக்கின்றன.*

---

## No. 2378. ஞானவிநோதன் கலம்பகம்.

### ÑĀNAVINŌDAN KALAMBAKAM.

Pages, 5. Lines, 9 on a page.
Begins on fol. 81-a of the Ms. described under No. D. 2372.

Contains 78 to 100 Stanzas only.

Same work as that described under No. D. 1531.

*கு.பு.—இந்நூல் டிஸ்கிருப்டிவ் கேடலாக்கு 1531 ஆம் நம்பரில் வந்துள்ள நூலேயாகும். இப்பிரதியிலே 47 முதல் 80 வரை ஆன ஏடுகள் காணப்பெற வில்லையாதலின் (78 முதல் 100) வரை ஆன செய்யுட்களே யிருக்கின்றன. உள்ள ஏடுகளும் மிகவுஞ் சிதலுற்றிருக்கின்றன. எழுத்துப் பிழைகள் உள.*

## No. 2379. சொரூபானந்தர் நெஞ்சுவிடுதூது.

## SORŪPĀNANDAR NEÑJUVIḌUTŪDU.

Pages, 11. Lines, 10 on a page.
Begins on fol. 76-a of the Ms. described under No. D. 2372.

Complete.

Same work as that described under No. 1511.

கு.பு.—இந்நூல் டிஸ்கிருப்டிவ் கேடலாக்கு 1511 ஆவது நம்பரில் வந்துள்ள நூலேயாகும். இபபிரதியில் இந்நூல் முற்றுமிருக்கிறது. ஏடுகள் மிகவும் புழுக்களால் அரிக்கப்பெற்றிருக்கின்றன.

---

## No. 2380. சொரூபானந்தர் ஞானவுலா.

## SORŪPANANDAR ÑĀNAVULĀ.

Pages, 26. Lines, 10 on a page.
Begins on fol. 83-b of the Ms. described under No. D. 2372.

Complete.

Same work as that described under No. 1538.

கு.பு.—இந்நூல் டிஸ்கிருப்டிவ் காடலாக்கு 1538 ஆவது நம்பரில் வந்துள்ள நூலேயாகும். இப்பிரதியில் இந்நூல் முற்றும் உள்ளது. ஏடுகள் மிகவும் சிதலுற்றுச் சிதைந்து கிடக்கின்றன.

---

## No. 2381. சொரூபானந்தர் சிலேடையுலா.

## SORŪPĀNANDAR ŚILĒḌAIYULĀ.

Pages, 26. Lines, 9–11 on a a page.
Begins on fol. 63-b of the Ms. described under No. D. 2372.

Complete.

Same work as that described under No. D. 1494.

கு.பு.—இந்நூல் டிஸ்கிருப்டிவ் காடலாக்கு 1494 ஆவது நம்பரில் வந்துள்ள நூலேயாகும். இப்பிரதியில் இந்நூல் முற்றுமிருக்கிறது. நூலாரம்பத்தில் " பதின்மூன்றுவது சிலேடையுலா தத்துவ வாக்கியம் " என்ற தலைப்பெயர் காணப்படுகிறது. அப்பிரதியில் (12 ஆவது) என்றிருக்கிறது. அன்றியும், அப்பிரதியில் " தந்தையாவானும் " " ஓங்குமுயிர்களொருகாலும் " என்றதாய்த்தொடங்கும் இரண்டு பாடல்களும் இப்பிரதியில் காணப்பெறவில்லை.

## No. 2382. சொரூபானந்தர் கலிமடல்.
## SORŪPĀNANDAR KALIMAḌAL.

Pages, 13. Lines, 9 on a page.
Begins on fol. 115-a of the Ms. described under No. D. 2372.

Complete.

Same work as that described under No. 1473.

கு.பு.—இந்நூல் டிஸ்கிருப்டிவ் காடலாக்கு 1473 ஆவது நம்பரில் வந்துள்ள நூலேயாகும். இப்பிரதியில் இந்நூல் முற்றும் உள்ளது. ஏடுகள் மிகவும் புழுக்களால் அரிக்கப்பெற்றிருக்கின்றன.

---

## No. 2383. மோகவதைப்பரணி.
## MŌHAVADHAIPPARAṆI.

Pages, 92. Lines, 8–10 on a page.
Begins on fol. 122-a of the Ms. described under No. D. 2372.

Complete.

Same work as that described under No. D. 1595.

கு.பு.—இந்நூல் டிஸ்கிருப்டிவ் காடலாக்கு 1595 ஆவது நம்பரில் வந்துள்ள நூலேயாகும். இப்பிரதியில் இந்நூல் முற்றும் உளது. ஏடுகள் எல்லாம் மிகவுஞ் சிதலுற்றுச் சிதைந்து கிடக்கின்றன. சில ஏடுகள் இரு பகுதிகளாக முறிந்து கிடக்கின்றன. அப்பிரதிக்கும் இப்பிரதிக்கும் பாடபேதங்கள் காணப்படுகின்றன. இது முடிந்த பின்னர் சில வெற்றேடுகள் இருக்கின்றன.

---

## No. 2384. கைமுறை வைத்தியம்.
## KAIMUṞAI VAIDDIYAM.

Substance, palm-leaf. Size, 19 × 1½, 16⅝ × 1¼ and 17¼ × 1¼ inches. Pages, 122. Lines, 8 on a page. Character, Tamil. Condition, much injured. Appearance, old.

Similar to the work described under No. 1978.

கு.பு—இந்நூல் டிஸ்கிருப்டிவ் காடலாக்கு 1978 ஆவது நம்பரில் வந்துள்ள நூல்போன்று வசன நடையில் அமைந்து கை முறையாகச் செய்து வரும் வைத்திய முறையை விளக்குகின்றது. இது இத்துணைத்தென்றும் இன்னுர் எழுதியது என்றும் ஒன்றுந் தெரியவில்லை. ஏடுகள் முற்றும் மிகவும் சிதைந்து கிடக்கின்றன. சில ஏடுகள் முறிந்து உள. இறுதியில் 'ரசபூபதி' மாத்திரையின் விவரம் உணர்த்தும் சில் பாடல்கள் உள. ஏடுகளுக்குத் தொடர்ந்த எண் குறிக்கப்பெருமலேயிருக்கிறது. எழுத்துப் பிழையுளது. பல வளவுள்ள ஏடுகளாகக் கோக்கப்பட்டுள்ளது.

## No. 2385. இராமதேவர் பூஜாவிதி சிவயோகம் இருநூறு.
## IRĀMADĒVAR PŪJĀVIDHI ŚIVAYŌGAM IRUNŪṞU.

Substance, palm-leaf. Size, 16½ × 1¼ inches. Pages, 70. Lines, 6, 7 on a page. Character, Tamil. Condition, much injured. Appearance, old.

Begins on fol. 1-a. The other works herein are Akattiyar Saumyasāgarasūttiram 36-a, Akattiyar Saumyasāgarasūttiram Nūṟṟaimpadu 45-a.

Complete.

Same work as that described under No. 947-a

கு.பு.—இந்நூல் மூவருடக் காடலாக்கு 947-(a) நம்பரில் வந்துள்ள நூலே யாகும். இப்பிரதியில இந்நூல் முற்றும் உளது. ஏடுகள சிதலுற்று க்கிடக்கின்றன. எழுத்துப் பிழைகள் உள.

---

## No. 2386. அகத்தியர் சௌமியசாகரச்சுருக்கம் ஐம்பது.
## AKATTIYAR SAUMIYASĀGARACCURUKKAM AIMPADU.

Pages, 18. Lines, 7 on a page.
Begins on fol. 36-a of the Ms. described under No. D. 2385.

Complete.
Seems to be a summary of the work described under R. 199.

**Beginning :**

அகத்தியர் சௌமியசாகரம் சூத்திர ருப்.

பூரணமான சோதி பூமலர் கமலம் பீடம்
நேர்சுழி கலையாநித்தம் நிராமயத்தருளே போற்றி
காரண மான தந்தை கரிகச முகவன்பாதம்
கூரவி . . . . த . . . . . . . வாமக்குண்டலி கமலம் [போற்றி
வாரணமான கந்தன் மலரடி குருவின் பாதம்
சேல்விழி வள்ளி பங்கன் சேவடி விளக்கம் போற்றி
தோரணக்கவி வேதாந்தத் தட்சணப்புலவோர் சொல்லும்
சீரருளமூர்தமான செந்தமிழ் காப்பதாமே (க)

**End :**

சார்வான சுகசன்னி வந்ததானல்
சந்த . . . . . . . . . . . . இன் வீதமாகில்
ஆர்வான இரண்டு மத்தித்துக் கண்ணிற் போட்டால்
அலறிவிடுஞ் சுகசன்னி தோஷம் போகும்
நார்வான வேதாளம் முதல் பூதம்போகும்
. . . . . களெல்லாம் அலறியோடும்
பார்வான இந்த நூல் அன்பதுக்குள்
பாடி விட்டோங் காண்போர்க்குப் பகலாமுற்றே. (ருஉ)

கு.பு.—இந்நூல் மூவருடக் காடலாக்கு 199 (a) நம்பர் பிரதியிற் வந்துள்ள "சௌமிய சாகரம்" என்ற நூலுக்குச் சுருக்கமாய அமைந்திருககலாமெனறு தோற்றுகிறது. இது ஐமபது பாடல்களால் அமைந்ததென்று இந்நூலின் கடைசியில் காணும பாடலாலேயே அறியக் கிடக்கிறது. இப்பிரதியில் இது முற்றும் உளது. எடுகள் மிகவும் புழுக்களான் அறிக்கப்பெற்றும் ஒடியப் பெற்றுமிருத்தலால் கிரந்தபாதமுள்ளது. எழுததுப் பிழைகள் இருக்கின்றன. இதுவும் அகததியரால் புலத்தியருக்கு உபதேசிக்கப்பெற்றதெனக் காணப்படுகிறது.

---

## No. 2387. அகத்தியர் சௌமியசாகரச்சுருக்கம் நூற்றைம்பது.

## AKATTIYAR SAUMIYASĀGARACCURUKKAM NŪṞṞAIMPADU.

Pages, 4. Lines, 7 on a page.

Begins on fol. 45-a of the Ms. described under No. D. 2385.

Incomplete.

Contains 1 to 14 Stanzas only.

Similar to the work described under the Number above.

**Beginning :**

அகத்தியர் சௌமியசாகரசூததிரம நூற்றைம்பது

அண்டமெனுங்குண்டலித்தாய் பாதம்போற்றி
அருள்பெருகுங்கசமுகவன அருளே போற்றி
குண்டமெனு மாதியந்தங் குருவே போற்றி
கும்பமெனுஞ் செந்தமிழன் . . . . . .
கண்டமெனுங் கருக்குருவின் கமலம் போற்றி
கமலவிதழாயிரத்தெண்பீடம் போற்றி
மண்டலங்கள் நிறைஞ்சுநின்ற வாலை மாது
சவுந்தரியனுடை . . . . . . . (க)

**End :**

சேரப்பா புலத்தியனே மகாராச யோகி
. . . . . . . வராதிது உண்மை சிதருதய்யா
ஆரப்பா அறிவார்கள் . . . லரிசிகால் பலந்தான்
அதைப்பொடித்து இனத்தோடே யடைவாய்ச்சேரு
பாரப்பா விதுவகைகள் சர்வமெல்லாம் மைந்தா
. . . கரமது வால்பிசைந்து அதை யையா
நேரப்பா விதுபாகங்கூட்டி மத்திரவியில்
நேர்மைபெற ஒருநாள் முழுதும் வைத்திடரே ? (௰௩)
வைத்திடவே புளிபோலா மதனைக்கொண்டு
. . . போம் பணங்கற்கண்டு இரண்டு பலம் வாங்கி
ஐத்திடவே யதைப் பொடித்துப் பொடியை யதிற்சேர்த்து
அருள் பெறவே கிளறிநீ நாதவிந்துதானும்
மூத்திடவே மூன்று . . . . . . . . . . .

* * * * * *

* * * * * *

கு-பு.—இந்நூல் முன் பிரதியில் வந்துள்ள நூலே போன்று நூற்று ஐம்பது பாடல்களால் அமைந்துளது. இப்பிரதியில் முதலிலிருந்து பதினைாவது செய்யுள் வரையிலுமே உளது. ஏடுகள் மிகவும் சிதலுற்றும் முறிந்துங்கிடக்கின்றன வாதலின உள்ள பாடல்களும் மிகவும் கிரந்த வீழச்சியுடன் உள. எழுத்துப்பிழை மிகவாகக் காணப்படுகிறது. இதுவும் புலத்தியருக்கு அகத்தியர் உபதேசித்தது என்று தெரிகிறது.

---

## No. 2388. இடைக்காடர் சூத்திரம்.
## IḌAIKKĀḌAR SŪTTIRAM.

Substance, palm-leaf. Size, 16 × $1\frac{1}{4}$ and $17\frac{1}{2}$ × $1\frac{5}{16}$ inches. Pages, 12. Lines, 7 and 8 on a page. Character, Tamil. Condition, much injured. Appearance, old.

Begins on fol. 1-a. The other works herein are Akattiyar Vaittiyam Mūppūvaimpadu 7-a, Akattiyarñānam Muppadu 15-a, Koṅkaṇanāyanār praṇavavutpatti 22-a, Koṅkaṇanāyanārsūttiram Nūṟu 25-a, Irāmadēvar Parañānakēśarivinōdam 40.

Complete.

A treatise on Alchemy.

**Beginning :**

இடைக்காட்டார் சூத்திரம்

காருலாவுமேக நற்கங்கை சத்தியோ சிவம்
பாரில் வாளவிட்டுப் புசுத்திப்பண்புவர்ப்பூவாக நீர்
சீருலாவு கங்கையாற்றெளிந்து வெள்ளையுப்பிலே
நீர்கவர்ந்தபோது தணல் நீடுலாவு சுன்னமே. (க)

சுண்ணமென்ன வுப்படா விக்குறிப்பறிந்தோன்வாதியாம்
எண்ணமா மறுவகையாமிச் சரக்கு முக்குரு
வண்ணமான வண்டுன்மின்வண்டு சுத்தியாவர்காண்
அண்ணலே யறுவகை சரக்கு நீர்விட்டாடியே (உ)

கார்ப்பதோர் சரக்குக் கெல்லாங்கட்டிடுஞ் செய்நீர் சொல்வேன்
ஏர்ப்பதோர் பஞ்சபூத மெழுவகைப் பிறப்புங்கூட்டிக்
கூர்ப்புடன் பாரு செய்நீர் குருவென மொழியவேண்டி
யார்க்குமே பிழைக்குஞ்செய்தி யன்புடன் சொல்லக்கேளே (ருசு)

சொல்லக்கேள் உப்பு மூன்றுந்துடிய தாய்ச்சுண்ணம்பண்ணி
நல்லதோர் சுண்ணமொன்று நாலாகும் வெடியுப்புத்தான்
அல்லக்கேளிந்துப்பொன்று வப்பனே சூடனென்று
வல்லொத்த புளிதானுலு வடிவுள சீனமொன்றே (சுய)

ஒன்றுதானின்னுங்கேளுவுரைப்பனுன் திரைநுரையை
நன்றியாய்ச் சுண்ணம்பண்ணி நயமுடன் ஒன்றுங்கூட்டிக்
க[ண்டி](ன்றி)டுங்கோழி வெள்ளைக்கருவதைத் தண்ணீராக்கச்
சென்றிடுமெருக்கம்பாலே சேர்த்திடத்

நீரதைவிட்டிரண்டு சாமமேயரைத்துக்கொண்டு
நீரது வுலரவில்லை நேயமாய் அனலில் வாட்டிச்
சீருளபுடத்திற்போடு சென்றிடுஞ் சுன்னம்பாரு
தாருவான் சுன்னம்பாதி சாரத்தைப்பொடித்துவைய்யே (௬௰௨)

வைத்திடு பீங்கானிற்றான் வளமிருபது நாட்குள்ளேதான்
வுற்றதோர் தண்ணீர்காணும் உற்பன சலத்திலேதான்
சுத்தியாம் வீரம்பூரம் உரமொடு சுருக்காமொன்றாய்ப்
பத்திற்கு மொன்றிற் பாதி பண்புடன பொடித்துப்போடே (௬௰௩)

போடப்பா செய்நீரெனன புகழ்பெற்ற சரக்கையெல்லாம்
சாடுவாய்க் கொன்றுபோடுந்தாரமும் முறுகியாடும்
ஆடிய சூதங்கட்டு மப்பனே கருக்குள்ளெல்லாம்
ஓடிடும் வேதை கோடியுயிர்கொளும்பணிசெய்வாமே (௬௰௪)

செய்யப்பா செய்நீர் போக்குத்திற முடனுருஞ் சொல்லார்
மெய்யப்பா விந்தச் செய்நீர் வேதையே சரக்கின் வேதை
பொய்யல்ல வுமைதன்னாணை போக்கி நீர்க்கவர்கள் கோடி
வையப்பா மகத்தாஞ் செய் நீராமம்பல மாடுந்தானே (௬௫)

தானவனுகச் சொல்வேன் தண்ணீரிற் சூதங்கட்டி
ஏனமாயுருக்கிக்கொண்டு குகை தனிலிருக்கவேதான்
வானமும் மண்ணு மொன்றாய் வளர்ந்தவரிவர்தாமென்பார்
ஆனதோர் குளிகை வாயிலடக்கவே யதிகசித்தன் (௬௰௬)

சித்தனுங் கவன சித்தி தேகங்கள் வச்சிரகாயம்
முத்தியாயறிந்து வாதம் முன்னிற்க சிதம்பரத்தைப்
புத்தியாற் பூசை செய்தாற் புகட்டுவார் மதுவின்றாப்போல்
உத்தமர் தமக்கே வாத மூவரடி முடியுமுற்றே (௬௰௭)

கு.பு.—இந்நூல் இரசவாததனதைச் சார்ந்ததாயுள்ளது. அறுபத்தேழு பாடல்களான் முற்றியுள்ளது. நூலாரம்பத்துத்தலையில் “இடைக்காட்டார் சூத்திரம்” என்றதாகக் காணப்படுகிறது. இஃதன்றி செய்யுட்களிலிருந்து ஆசிரியர் பேர் விளங்கவில்லை. ஏடுகள் புழுவரிக்கப்பெற்று உள.

---

## No. 2389. அகத்தியர் முப்பூவைம்பது.
### AKATTIYAR MUPPŪVAIMPADU.

Pages, 16. Lines, 7 on a page.
Begins on fol. 7-a of the Ms. described under No. D. 2388.

Complete.

Same work as that described under No. R. 249-k.

கு.பு.—இந்நூல் மூவருடக்காடலாக்கு 249 (K) நம்பர் பிரதியில் வந்துளள நூலேயாகும். இப்பிரதியில் இந்நூல முற்றும் உளது. எடுகள் சிறிது சிதைந்திருக்கின்றன. அதற்கும் இதற்கும் சில சில விடஙகளில் பாட பேதங்கள காணப்படுகின்றன. எழுத்துப்பிழைகள இருக்கின்றன. ஆதியிலும் இறுதியிலும் அகத்தியர் வைத்தியம் முப்பூவைம்பது என்பதாக இதன பெயர் குறிக்கப்பெற்றுளது.

---

## No. 2390. அகத்தியர்சூத்திரம் முப்பது.
## AKATTIYAR SŪTTIRAM MUPPADU.

Pages, 14. Lines, 4 on a page.
Begins on fol. 15-a of the Ms. described under No. D. 2388.

Complete.
On the *Jñānam* of the *Siddhas*.

**Beginning :**

அகத்தியர் சூத்திரம் முப்பது.

பூரணமாய் மும்மூர்த்தி வந்தவாறும்
பூமியென்றுந்திகிரியென்றும் படைத்தவாறும்
காரணமாய்த் தேவியெங்கு நிறைந்தவாறும்
கற்பமுண்டு ரிஷிகள் சிதர் . . . . . . வாறும்
வாரணமாய் பறவையொடு நாற்கால் சென்மம்
மானிடர்கள் கூறுகினற குலத்தின் [வா](று)றும்
பாரதமாய் நால் வேதம் வகுத்தவாறும்
பாடினேன் முப்பதுக்குள் பார்க்கத்தானே. (க)

பாரப்பா பூர்ணத்திலவத்தை யொட்டிப்
பரபிரம்ம நாதமது சிவத்திற் சேர்ந்து
தேரப்பா சத்தியையுஞ் சாம்பலாக்கிச்
சிவ சிவா வென்ற பொருள் கைக்குள்ளாக்கிப்
பேரப்பா நால்வேத மயக்கமாக்கிப்
பூமியிலே மானிடரை யலைச்சலாக்கி
வேரப்பா சித்தர்களும் புராணமாக்கி
வேடிக்கைபோலக் காட்டிவிடுத்தார் தானே. (உ)

**End :**

மூச்சுடரு முண்டாமப்பா மூர்த்தியல்லா
மூவருமே யாளுருவிலுரு வென்றுகும்
அச்சுதனு மிவர்களுமே ஆண்பெண்ணல்ல
அய்யர் மணிலிங்கமல்ல அனுதியான
சச்சுதானந்தனையே வணக்கஞ்செய்து
சற்குருவைத் தெரிசித்துச் சாம்பற் பூசி
எச்சு விருகைக்கொண்டு நடப்பாயப்பா
[யென்] எம் ஆமென்ற மந்திரமுஞ் சொல்லே. (உ௯)

சொல்லியே கிழித்திடுவாய் முக்கோண சக்கிரம்
சிகரமது நால மூலை கோணமாகக்
கலலியே சூலமிருபக்கஞ் சேர்ததுக்
கடையெழுத்துநதலை யெழுநது நடுவே வைதது
அல்லியே போலவொரு பூவுஞ்செய்து
அதன் மேலே சிஙகக்கா சஞ்சு எத்தி
மெல்லியேதும்பைமல . . . . . . . . . . . . . . .
. . . . டுத்துப் பார்வை குண்டமோடுநதானே.

(உகூ)

ஓடுகின்ற வகைகள் எல்லா முரைத்துப்போட்டேன
உலகமது மார்க்கமெல்லாஞ் சொல்லி விட்டேன்.
தேடுகின்ற புராண மெலலாம் பொய்யே யென்றேன்
சிவன் பிரம்மா விஷணுவின் பெயர்களெனறேன்
ஆடுகின்ற திர்த்தமெல்லாம் அசுத்தமென்றேன
. . . . . . . . . பண்ணுகினற அகநதை சொன்னேன
பாடுகினறேன முபபதுககுள் முடிததுப்போட்டேன்
ஈமசிவன சொறபடிககுப பாடினேனே.

(௩௰)

கு.பு.—இந்நூல் ஞான விஷயமானதென்று தோற்றுகிறது. முப்பது பாடல்களான் அமைந்துளது. ஏடுகள் பல நுனிகளில் முறிந்தும் புழு வரித்துங் இடக்கின்றனவாதலின் அநேக விடங்களில் கிரநத பாதங்கள் உள. எழுத்துப்பிழைகள் இருக்கின்றன. அகததியர் இயற்றியதெனறு குறித்துள்ளது.

---

## No. 2391. கொங்கணநாயனார் பிரணவோத்பத்தி இருபது.
## KOṄKAṆANĀYANĀR PIRAṆAVŌTPATTI IRUPADU.

Pages, 6. Lines, 8 on a page.
Begins on fol. 22-a of the Ms. described under No. D. 2388.

Complete.

A treatise on the *Yōgam, Jñānam,* etc., of the *Siddhas*. Koṅgaṇar, the author of this treatise, refers, in the last verse, to another work composed by him under the title *Mūnṟu Kāṇḍam*.

**Beginning :**

கொங்கண நாயனார் பிரணவோத்பத்தி.

ஒன்றான கைலாச பரம்பரையாய் வந்த
உற்றசிவ மூலகுரு பதத்தைப் போற்றி
நன்றான மாலரங்கரெழுவர்பதம் போற்றி
நலம் பெரிய போகருடைப்பதத்தைப் போற்றி
கன்றான செடஞ்சனித்த வுற்பனத்தைச் சொல்வேன்
கருதிக்கேள் கருத்திற்கொள் காரணனந்தர்
பன்றான பிருதிவி யென்ற நாதத்துள்ளே
பரிவான சுக்கிலந்தான் சலந்தான் கேளே. (க)

கேளப்பா மனமான வாயுக்கூடிக்
கெடியான சித்தமென்ற வாகாசம் பொங்கி
வேளப்பா ஆங்கார சிகாரமிஞ்சி
மேவுதற்குப் பெண்மேலே மோகமாகும்
நாளப்பா வஞ்சுக்குப்பலமே தென்றால்
நலம்பெறவே சொல்லுகிறேன் நன்றாய்க்கேளு.
தாளப்பா மனசோடே பிராணன் கூடும்
தாயான நாதத்தில் அபானந்தானே. (உ)

தானென்ற விநதுவிலே சமானன் கூடந்
தனியான சிதத்தில் வியானன் கூடும்
கானென்ற ஆங்காரங் கர்ச்சிப்போடே
கலந்து நிற்கு முதானனப்பாகண்டு கொள்ளு
வேனென்ற பத்துமொன்றாய் மனதிற் கூடி
மேவியவன கலந்து விந்து விடுகும்போது
மானென்ற மவுனமென்றும் பரவசமேயாவன்
மருவிய தோர்பெண்ணுக்கு மிம்முறைதான காணே. (ரு)

முறையாகப் பெண்ணும் மவுனமொற்றால்
மோசமில்லை கர்ப்பமங்கே தரிக்கும்பாரு
நிறையாக வலத்தோடில் ஆணேயாகும்
நேராக விடத்தோடில் பெண்ணேயாகும்
முறையாகச் சுக்கிலந்தான் கர்ப்பத்திலப்பால்
உத்தமனே சுரோணிதந்தானுண்டு கொள்ளுங்
கறையாகப் பரந்தவளித மருப்போலக்
கழக்கோடிக்காய் போற்றிரண்டு சிரசுமாமே. (சு)

**End :**

தானென்ற சற்குருவாம் போகநாயன்
சாதகமாயப்பொருளுக்கு உப்பேயென்றார்
கோனென்று அதைத்தொட்டு மூன்று காண்டஞ் சொன்னேன்
கூறுகிற மெஞ்ஞான மவுனமென்று சொன்னார்.
வானென்ற ததுகடந்து சிலம்பொலியிற்புக்கு
மயங்கியங்கே மாறி வந்தேன் மக்காள் மக்காள்
பானென்ற ரவிகோடி காந்தியானேன்
பரமகுரு மூலர்பதம் பணிந்தேன் முற்றே. (உ௰க)

கொங்கணநாயனார் திருவடிகளே சரணம்.

**கு-பு.**—இந்நூல் யோகம் ஞானம் இன்னுமிவைகளை நுவல்வதெனத் தோற்றுகிறது. இது இருபத்தோரு பாடல்களால் அமைந்துளது. இப்பிரதியில் இந்நூல் முற்றும் உளது. முதலில் கருப்பத்தில் கரு உற்பத்தியாகி விருத்தியாகுந்திறனைப்பற்றித் தெளிவாகக்கூறப்பெற்றுள்ளது. கொங்கணரால் இயற்றப்பெற்றதென்று தெரிகிறது. ஏடுகள் மிகவும் புழுக்களான் அரிக்

கப்பெற்றுச்சிதைந்திருக்கின்றன. எழுத்துப்பிழைகள் காணப்படுகின்றன. இந்நூலின இறுதிச் செய்யுளில் இந்நூலாசிரியா தாம் "மூன்று காண்டம்" என்றதாய் மற்றொரு நூலும் இயற்றியிருப்பதை யெடுத்துணர்த்தி யிருப்பது இங்கு நம்மால் குறிக்கொள்ளததக்கது.

---

## No. 2392. கொங்கணநாயனார் சூத்திரம் நூறு.
## KOṄKAṆANĀYANĀR SŪTTIRAM NŪṞU.

Pages, 29. Lines, 7 on a page.
Begins on fol. 25-a of the Ms. described under No. D. 2388.

Complete.

Same work as that described under No. 255-c.

கு-பு.—இந்நூல மூவருடக் காடலாக்கு 255 (c) நம்பர் பிரதியில் வந்துள்ள நூலேயாகும். இப்பிரதியில் இந்நூல முற்றும் உளளது. இறுதி ஏடு முறிந்து கிடக்கின்றதாதலின கிரநதபாதம் உளது. அந்தப் பிரதிக்கும் இப்பிரதிக்கும் அங்கங்கே பாட பேதங்கள் காணப்படுகினறன. எழுத்துப் பிழைகள் காணப்படுகின்றன.

---

## No. 2393. இராமதேவர் பரஞானகேசரிவிநோதம் நூறு.
## IRĀMADĒVAR PARAÑĀNAKĒSARIVINŌDAM NŪṞU.

Pages, 13. Lines, 5 on a page.
Begins on fol. 40-a of the Ms. described under No. D. 2388.

Incomplete.

Same work as that described under No. 947-b.

கு-பு.—இந்நூல் மூவருடக் காடலாக்கு 947 (b) நம்பர் பிரதியில் வந்துள்ள நூலேயாகும். இப்பிரதியில் இந்நூலின் முதல் முப்பத்தைந்து செய்யுட்களேயிருக்கினறன. ஏடுகள் பல முறிந்தும் சிதலுற்றுமிருக்கின்றன. எழுத்துப்பிழைகள் காணப்படுகின்றன.

---

## No. 2394. அகத்தியர்சூத்திரம் இருநூறு.
## AKATTIYAR SŪTTIRAM IRUNŪṞU.

Substance, palm-leaf. Size, 9¾ × 1¼ inches. Pages, 139. Lines, 6 on a page. Character, Tamil. Condition, much injured. Appearance, old.

Complete.

Begins on fol. 1-a. The other work herein is Akattiyar Pūraṇasūttiram (200), 72-a.

Same work as that described under No. 8-b.

கு-பு.—இந்நூல் மூவருடக் காடலாக்கு 8 (b) நம்பர் பிரதியில் வந்துள்ள நூலேயாகும். இப்பிரதியில் முதலேடு இல்லாமையால் முதல் இரண்டு பாடல்களும், (5) ஆம் ஏடு இல்லாமையால் (11—13) பாடல்களும் இல்லை. ஏடுகள் மிகவுஞ் சிதலுற்று முறிந்துகிடக்கின்றன. எழுத்துப்பிழைகள் காணப்படுகின்றன.

---

## No. 2395. அகத்தியர் பூரணசூத்திரம் இருநூறு. AKATTIYAR PŪRAṆASŪTTIRAM IRUNŪṞU.

Pages, 50. Lines, 8 on a page.
Begins on fol. 72 of the Ms. described under No. D. 2394.

Contains 1 to 186 Stanzas only.
Same work as that described under No. 254-(j).

கு-பு.—இந்நூல் மூவருடக் காடலாக்கு 254 (j) நம்பர் பிரதியில் வந்துள்ள தேயாம். இப்பிரதியில 1 முதல் 186 பாடல்களே உள. அப்பிரதிக்கும் இப்பிரதிக்கும் சில சில இடங்களில் பாட பேதங்கள் காணப்படுகின்றன. ஏடுகள் சிதலுற்றுள. எழுத்துப்பிழைகள் இருக்கின்றன.

---

## No. 2396. அநுபவவைத்தியமுறை வசனம். ANUBHAVA VAIDDIYA MUṞAI VACANAM.

Substance, palm-leaf. Size, $9\frac{1}{2} \times 1\frac{3}{8}$ inches. Pages, 64. Lines, 6 on a page. Character, Tamil. Condition, injured. Appearance, old.

Begins on fol. 1-a. The other works herein are Sundarānandarsūttiram—Irupattaindu 33-a, Akattiyar Muppūvaipadu 38-a, Anubhava Vaittiyamuṟai 47-a.

Seems to be complete.

Similar to the work described under No. 1906 of the Descriptive Catalogue of Tamil Manuscripts, Vol. V.

**Beginning :**

பௌத்திரத்துக்கு.

ஆசனபவுத்திரத்துக்கு கஞ்சா இலே கட்டி அடுப்பில் புகைத்து கட்டவும். தீரும். புனலியிலே கொண்டு வந்து விளக்கெண்ணெய் விட்டு வதக்கிக்கட்டத் தீரும். எந்தக் காயம் பட்டாலும் பிரண்டையிலே கோவையிலே நருக்கி வதக்கி கட்டத்தீரும்.

நீர்ச்சுருக்குக்கு : அப்பிரகச் செந்தூரம் :—

ஈயம் விராகனெடை ௭, பசுவின் கோமயத்தில் பிரண்டையிடித்துப் போட்டுப் பிசைந்து பிழிந்து அதில் இரண்டு தரம் உருக்கிச் சாய்த்துக் கொண்டு அதில் ரசம் விராகனெடை ௯. தொந்தித்துக்கொண்டு பவழம் விராகனெடை ௯. சாதிலிங்கம் விராகனெடை ௯. கூடப்போட்டு நெல்லிக்காயை இடித்துக்கொண்டு கோமயம் விட்டுப் பிழிந்துகொண்டு

அதில் விட்டுச் சாமம் அரைத்து வில்லை தடடிக்காயவைதது . . . . டிம் மணற்போடடு அடுப்பிலவைதது மேலே வைத்து மணற் சுட வெடுத்து நீர்ச்சுருக்குப பெரும்பாண்டுகருக்குப்பவெடை செந்தூரம் தேனிற் கொடுக்கவும்.

நேதத்ப வைத்நிய முறை :—

*    *    *

*    *    *    (௫உ)

காதார குழலார் கைவளையும்
  க பாலத்தோடு கடுகு நெல்லி
மாதைப்பிரியாதான்றியொடு
  மதியாயெஃ.று கால்கொண்டு
பூதிருந்தமஞ்சாடி, பூர முருக்கம்பழச்சாற்றிற்
  காதிக்கபிலாய் வெள்ளெழுத்துக்
  கண்ணுக்குரியது கண்டாயே.    (௫௩)

மஞ்சட் பொடியுங் கந்தகமும்
  மருவுங்குங்கிலியங் கூட்டி
யுஞ்சப்பொடிகளது செய்து
  உருகுதணலிற் புகைகாட்ட
மிஞ்சக் குடையுங் கண்ணோவும்
  விளையு நீருமது மாறிக
கெஞ்சிக்கெடியிற் புகுதுமெனை
  அறியச்சொன்னோங் கண்டீரே.    (௫௪)

தெள்ளுவிற் செங்கற்காய்ச்சி
  செம்பு வெங்கலத்திலிட்டு
ஒள்ளிய முலைப்பாற்றுவி
  யுகந்ததோர் புகையுங்காட்ட
நள்ளவே நயன நோவும்
  நற்றலை நோவுந்திரும்
வள்ளலும் வாகடத்தில்
  மகிழ்ந்துடன் உரைத்ததாமே.    (௫௫)

எள்ளுடனுவந்து வேம்பின்
  இலையொடு கடுகுங்கூட்டித்
தெள்ளிய பொடிகள் செய்து
  சிறக்கவே புகையுங்காட்டி
உள்ளது சொன்னோமென்று
  உகந்து நீ செய்வையாகில்
மெள்ளவே கண்சிவப்பும்
  விலகு நற்கண்ணோயன்றே.    (௫௬)

*　　　　*　　　　*

துத்தந்துரிசு அரிதாரம்
　துய்ய இரதங்கந்தகமும்
மற்றுஞ் சிலையும் நேர்வாளம்
　வடிவாம்வெள்ளை யுடன் கூட்டி
மெத்து நொச்சிச் சாறதனில்
　மேவியரைத்து உண்டை செய்து
கொத்திக்கட்டுங் கண்ணோய்கள்
　குலைந்தேபோகுங் கண்டீரே. (கூரு)

*　　　　*　　　　*

கனத்ததோர் நயன முள்ளோ
　தழலெழவெரிந்துவெம்பிப்
பிந்தமாய் விழிபுடைத்து
　உலையினில் மெழுகுபோலே
கந்தியே கண்சிவந்து கலங்கி
　நீரருவி பாய்ந்தால்
அந்தமாமன்ன கோபம்
　அறிந்து செய்மருந்து தானே. (ஈஉ)

மாதளம் பூவில் தாதில்
　மதித்த கற்பூரங் கூட்டித்
தீதற முலைப்பால் வார்த்துத்
　திகழவே நருக்கிக் கொண்டு
போதவே பிழிந்து கண்ணில்
　புகையனல் காட்ட நன்று
ஈதினிற் குழம்பையிட்ட
　பின் எண்ணெய் செய் சே ? (ஈஉயக)

உள்ளிய முலைப்பால் நாழி
　உகந்து நல்லெண்ணெய் நாழி
தெள்ளிய மாஞ்சிற் கோட்டஞ்
　செண்பகப்பூவே ரேலம்
மள்ளிய மதுர முத்த
　மடைவிலாமிச்ச மாயில்
மெள்ளவே காய்ச்சித் தேய்க்கில்
　விலகிடுமன்ன கோபம். (ஈ௩ய)

ஆகத்திருவிருத்தம்　　　　கூஈசுய

நயனவைத்திய முறைமுற்றும்.

சித்திரை வல்லாதி :—சித்திரமூலம் வெள்ளறுகு
சிவனார்வேம்பு சங்கம்வேர் சங்கங்குப்பிவேர்
கருடக் கிழங்கு வெள்ளெருக்கு　*　*　*
குன்றிவேர் நிலக்கடம்பவேர் செங்கத்தாரி
அமுக்கிரு பூதகரப்பான் வாதகரப்பான் வண்டு
கடிப்பட்டை விரப்பங்கிழங்கு மிளகரணை

*　　　　*　　　　*　　　　*

*　　*　　*　　*　　*

பனைவெல்லம் சேர் ௩, ரசம் பலம் ௧, எள்ளு பலம் ௪, நிமிவேர் பலம் ௧, செங்கொட்டை தூக்கு ௧.

இலகுவில்வாதி மேகத்துக்கு.

செங்கொட்டை பலம் ௰௬, பனைவெல்லம் ௰௬, சீரகம் பலம் ௰௬, பறங்கிப்பட்டைப் பலம் ௰௬, சுக்குப் பலம் ௨, மிளகு பலம் ௨, ஓமம் பலம் ௨, கொத்தமல்லி பலம் ௨, சாதிக்காய் பலம் ௧, சாதிப்பத்திரி பலம் ௧, சன்ன லவங்கப்பட்டைப் பலம் ௧, அதிமதுரம் பலம் ௧, கோஷ்டம் பலம் ௧, வால்மிளகு பலம் ௧, கருஞ்சீரகம் பலம் ௧, கற்கண்டு பலம் ௧, கசகசா பலம் ௨, கிராம்பு பலம் ௧, எள்ளு படி ௨, கொப்பரை தேங்காய் ௧, ஏலம் பலம் ௲ (அரைக்கால்), நீரடிமுத்து பலம் ௲, நெய் படி ௧. நெய்யில் சேராங்கொட்டையை வெட்டிப்போட்டுக் காய்ச்சித் தைலம் வாங்கித் தைலத்தில் வெல்லத்தை உதிர்த்து உருகு மட்டும் பார்த்துச் சூரணந்தூவிக் கிளறிப் பழம்பாண்டத்திலே வைக்கவும். கழற்சி மாதிரியாய் உள்ளுக்கு அரை மண்டலங் கொள்ளவும். புளிப்பு கைப்பு விடவும்.

மேகத்தெண்ணெய்.

ஏரண்டத்தைலம் படி ௧, வாளப்பருப்பு பலம் ௰, கஸ்தூரிமஞ்சள் பொடி பலம் ௧, பாதிப்பொடியும் பருப்பும் தேய்க்கச் சுத்தியாம். பொடியை உலர்த்திப்போட்டுப் பருப்பும் பாதிப்பொடியும் ஒரு வராகனெடை ரசகற்பூரமுஞ் சேர்த்துப் பொடிசெய்துத் தைலத்தில் கலந்துச் சித்திரமூல வேர்ப்பட்டை வராகனெடை ௨ கூட நருக்கிப்போட்டு ஊறவைக்கவும். வீசம் வீசம் படியாய் மூன்று நாள் கொடுக்கவும். ஆறுநாள் பத்தியம். ஏழுநாள் தலைக்கி வார்க்கவும். தாங்குகிற மட்டும் எண்ணெய் கொடுக்கவும். மறுபத்தியம் உப்பு சேர்த்துக்கொள்ளவும். இன்னும் எண்ணெய் சாப்பிடவேண்டினால் பத்தியம் உப்பு சேர்த்துக்கொள்ளலாம். இதுக்குத் தீரும் வியாதி அரையாப்புக்கட்டி, புண், விரணம், கையில் கருப்பு ஆணி, வெள்ளை விழுகிறது இவையெல்லாம் தீரும்.

(கு - பு.)—

இந்நூல் டிஸ்கிருப்டிவ் காடலாக்கு 1906-ஆம் நம்பரில் வந்துள்ள நூல் போன்றுள்ளது. இதில் பல்வேறு வகையான வியாதிகளையுணரு மாற்றையும் அவைகட்குரிய சிகிச்சை முறையையும் பற்றிக் கூறப்பெற்றுள் ளது. நடுவில் (12-a) ஆம் ஏட்டிலிருந்து 29-ஆம் ஏடுகள் வரைக்கும் நேத்திர ரோகங்களையுணருமாறும், அவைகட்குரிய பல சிகிச்சை முறைகளும் கூறப்பெற்றுள்ளன. அப்பகுதி மாத்திரம் செய்யுள் உருவமாகவுள்ளது. அது ஒரு பெரும் நூலின் பகுதியாயிருக்கலாமெனத் தோற்றுகிறது. இன்ன நூலைச் சார்ந்தது என்பதும் ஆசிரியர் இன்னாரென்றும் ஒரு சிறிதும் விளங்கவில்லை. அப்பகுதியில் அடங்கிய பாக்கள் ருஉ to ௱௩௰ (52 to 130) ஆன பாக்களாகும். மிகுதியான பகுதி முற்றும் வசன நடையினாலேயே யமைந்துளது. ஏடுகள் சிதைந்துள. எழுத்துப் பிழை கள் உள.

## No. 2397. சுந்தரானந்தர் சூத்திரம் இருபத்தைந்து.
### SUNDARĀNANDAR SŪTTIRAM IRUPATTAINDU.

Pages, 10. Lines, 6 and 7 on a page.
Begins on fol. 33-a of the Ms. described under No. 2396

Complete.

Same work as that described under No. 8-c.

(கு - பு.)—

இந்நூல் முதல்வருட காட்லாக்கு 8-c நம்பர் பிரதியில் வந்துள்ள நூலேயாகும். இப்பிரதியில் இந்நூலின் இருபத்தைந்து பாடல்களுமிருக்கின்றன. அப்பிரதிக்கும் இப்பிரதிக்கும் பாடபேதங்களிருக்கின்றன. ஏடுகள் மிகவுஞ் சிதறலுற்று உள. எழுத்துப்பிழைகள் காணப்படுகின்றன.

---

## No. 2398. அகத்தியர் முப்பூவைம்பது.
### AKATTIYAR MUPPŪVAIMPADU.

Pages, 18. Lines, 7 on a page.
Begins on fol. 38-a of the Ms. described under No. 2396

Incomplete.

Contains 1 to 27 Stanzas only.

Same work as that described under No. 172.

(கு - பு.)—

இந்நூல் முதல்வருட காட்லாக்கு 172ஆம் நம்பரில் வந்துள்ள நூலே யாகும். இப்பிரதியில் முதலிலிருந்து இருபத்தேழு பாடல்களே யிருக்கின்றன. பாடபேதம் உள. ஏடுகள் சிதலுற்றிருக்கின்றன. பிழைகள் உள.

---

## No. 2399. அனுபவ வைத்தியம்.
### ANUBHAVA VAIDDIYAM.

Pages, 22. Lines, 6 on a page.
Begins on fol. 47-a of the Ms. described under No. 2396

Seems to be complete.

Similar to the work described under the Number above.

**Beginning :—**

க்ஷயம், ஈளை, இருமல், சுவாச காசம் இவைகட்கு மருந்து :—

சுக்கு, மிளகு, திப்பிலி, கடுகுரோகணி, கற்கடகச்சிங்கி, செவியம், தானிக்காய் வகைக்குப் பலம் (வ) (கால்), பனைவெல்லம் பலம் (உ), அறத்தை, அக்கிராகாரம், கோஷ்டம், ஏலம், அதிமதுரம், சிறுதேக்கு, வாய்விளங்கம், இலவங்கப்பத்திரி இவை வகைக்குப் பலம் ஆ (அரைக்கால்), கிராம்பு பலம் ஆ, தேத்தாங்கொட்டை பலம் ஆ இவையெல்லாமிடித்துச் சூரணம் பண்ணி வஸ்திரகாயம்பண்ணி . . . . . . ஆடாதோடை வேர், தூதுவளை வேர் . . . . . . . . . . . . . . [illegible] சேர்த்திடுக

கொறவும். இந்த லேகியம் கழஞ்சி மதுவாரி வேளைக்குக் கொள்ளவும். பத்தியம்—கைப்பு, புளிப்பு தவிரவும். இதுக்குத் தீரும் வியாதி, சயம், சுவாசம், ஈளை, இருமல், காசம் இவையெல்லாம் தீரும்.

**End :—**

இரத்தமூலத்துக்கு.

கழுதைத்தும்பையிலை ஒரு பலம், ஈர வெங்காயம் ஒரு பலம், வேறே வேறே யரைத்து மாசிக்காய் (க) (வராகனெடை) அரைத்துப் பசுவின் வெண்ணெயிற் கூட்டிக்கொடுக்கவும். இன்னும் ஒரு விதம் :—காட்டுக்கருணை ஒரு பலம் பன்னி நெய்யில் வறுத்துக்கொண்டு கழுதைத தும்பை ஒரு பலம், தேஙகாய்த் துருவல் ஒரு பலம் வறுத்துக்கொண்டு ஈரவெங்காயம் ஒரு பலம், வாகரிசி மாவு ஒரு பலம், இசுப்புக்கோல்விரை ஒரு பலம் வெவ்வேறே யரைத்துப் பசுவின் நெய்யில் ஒன்றாய்ப் பிசைந்து அடைசுட்டுத் தின்னவும். இது கைகண்டது.

(கு-பு.)

இந்நூல் முன் நம்பர் பிரதியில் வந்துள்ள நூலபோன்று. பல்வேறு நோய்கட்கும் உரிய பலமுறைகளையும் வசனத்தில் அமைந்து நுவலகின்றது. ஏடுகள் சிதலுற்றிருக்கின்றன. எழுத்துப்பிழைகள் காணப்படுகின்றன. இது முடிந்த பின்னர் நான்கு ஏடுகளில் "அகத்தியர் கருப்பக்கோள்" என்ற பெயருடன் பதினொரு பாடலில் அமைந்த வொரு சிறு நூற்பகுதி காணப்படுகின்றது. இது அகத்தியர் இயற்றியதான ஒரு நூலின் ஒரு சிறிய பகுதியெனத் தோற்றுகிறது. இது வொரு தனித்த நூல் அன்று.

---

## No. 2400. அகத்தியர் கருப்பக்கோள்.
## AKATTIYAR GARUPPAKKŌḶ.

**Pages, 8. Lines, 6 on a page.**
**Begins on fol. 58-a of the Ms. described under No. 2396**

Contains 1 to 11 Stanzas.

Seems to be a portion of a work on medicine by Akattiyar.

**Beginning :—**

அகத்தியர் கருப்பக்கோள்.

பாரப்பா பெண்மலடாங் கருப்பக்கோளின்
பக்குவத்தைச் சொல்லுகிறேன் பண்பாய்க்கேளு
ஆரப்பா பெண்மலட யார்க்குமல்லால்
அப்பனே யாண்மலடு ஆருமில்லை
நேரப்பா தவசிருந்தும் பொருளையீந்தும்
நேரான திவ்லையருஞ் சூலையாலே
வேரப்பா தேவதையா லேழாங்கர்ப்பம்
விரிந்து நன்றாய்ப்புகலுகின்றேன் விரும்பிக்கேளே. (க)
புகலுகிறேன் முத்தாந்தன் மலடேயென்றால்
பூவையர்க்குக் கருக்குழிதான் விளக்கமற்று
அகலுகிறேன் என்றாலுங் கல்மஷந்தான்
அடைந்திருந்தால் விந்துவங்கே யகலாதப்பா

நிகலுகிறேன் மருதாந்தன் கருக்குழியில்வாய்வு
நிறைந்திருந்தால் விந்துவங்கே நேர்ப்படாது
தகலுகிறேன் பின்னுமங்கே கருக்குழியில்மூடித்
தசைவளர்ந்தால் விந்துவங்கே தான்செல்லாதே. (உ)

செல்லாது நாலாவதப்பா கேளு
ஸ்திரீகளுக்குக் கருக்குழியிற் புழுவுஞ்சேரில்
செல்லாது அஞ்சாவதப்பா கேளு
செத்தங்கே கருக்குழியிற் சோசைகட்டிற்
செல்லாது ஆறுவதப்பா கேளு
செப்புகிறேன் கருக்குழிதான் மதித்திருந்தால்
செல்லாது இவையாறும் வியாதியாகும்
சென்ற பின்புப்பேய்விரோத மேழாங்காணே. (ங)

காணப்பா விவைவிவரம் பிரித்துச்சொல்வேன்
கன்னியர்க்குப் புணர்வேளைதலைதா ளெந்தால்
தோணப்பா கருக்குழியிற் பாசம்பற்றித்
தோன்றுதென்று தானிதற்குச்சாந்திசெய்யப்
பூணப்பா கோழியுட பிச்சுத்தானும்
புகழான பருத்திவிரை பருப்புத்தானும்
தோணப்பா வவள் குளித்தநாளைதொட்டுச்
சுகமாக மூன்றுநாள் அரைத்துக்கேளே. (ச)

* * * *

* * * *

**End :—**

கொடுத்திடவே பிள்ளையுண்டாங் குறைவேயில்லை
கூறுகின்றேன் யோனிக்குள் மருந்தைக்கேளு
நடுக்கிடவே குங்குமப்பூ அதிமதுரந்தாவம்
நற்சீரகமத்துடனே மூன்றுங் கூட்டியாட்டிப்
படுத்திடவே யோனிக்குட்பூசிக்கொண்டு
பாயலையும் புணர்ந்திடவே பிள்ளையுண்டாம்
எடுத்திடவே ஆறுவதப்பா கேளு
எப்பமிட்டால் மதத்திருந்த தென்றே. (கூ)

* * * *

தானென்ற பத்தியத்தைச் சூட்சுமத்திற்சொல்வேன்
சாதகமுங் கடியதொரு பாகமாகும்
வேனென்று புளியாரை சீய்க்காய்கொழுந்து
மேலான நெல்லிக்காய் அரிநெல்லிக்காய்
நானென்ற வெள்ளாடு முசல் ஆமையாகும்
நிறமாகும் ஊக்குருவி காடைமானும்
தூதுவளை துவரை பொன்னுங்காணியாகும்
சொல்லுகிறேன் குளிர்ந்த சலங் கிட்டலாகா
மைந்தனே சுடுதண்ணீர் சேர்த்துக்கொள்ளே. (மக)

கு.பு. :—இந்நூல் ஸ்திரீகளுக்குண்டாம் எழுவகை மலட்டின் தன்மையினையும் அவைகளை நீக்கற்காம் மருந்து முறையினையும் எடுத்துணர்த்துவது. பதினொரு பாடல்களால் அமைந்துளது. இது அகத்தியர் இயற்றிய ஒரு நூலின் பகுதியாக விருக்கலாமென்று தோற்றுகிறது. இஃதன்றி இன்ன நூலின் பகுதியாகுமென்று தெற்றெனப் விதிலிருந்து விளங்கவில்லை. எழுத்துப் பிழைகள் காணப்படுகின்றன. ஏடுகள் ஒரு சிறிது சிதைநதுள.

---

## No. 2401. கொங்கணர் கற்பம் நூற்றுப்பத்து.
## KOṄKAṆAR KAṞPAM NŪṞṞUPPATTU.

Substance, palm-leaf. Size, 13½ × 1 inches. Pages, 46. Lines, 5 on a page. Character, Tamil. Condition, much injured. Appearance, old.

Complete.

A treatise belonging to the *Siddha* school of Indian Medicine.

**Beginning :—**

கொங்கணர் வாக்கியம் (ஈ0).
காயகற்பத்துக்கு முந்தின கற்பம்.

போகா விருப்பதற்குக் கற்பஞ் சொல்வேன்
போக்கோடே உன்கையிலே நேர்மைகேளு
வாகான புளிப்புப்பு எண்ணெய்சுண்ணம்
மருவியதோர் மாங்கிஷங்கள் மோருமாகா
தாகாத கடுகுள்ளி காயமாகா
சஞ்சாரஞ் செய்யுகிற பெண்ணுமாகா
பாசான நித்திரையுஞ் சோம்பலாகா
பலசிந்தை விட்டுவிட்டு மூலம்பாரே. (க)

பார்க்கையிலே உங்கிறதோர் பத்தியத்தைக்கேளு
பாலாகும் நெய்யாகும் பழமுமாகும்
காார்க்கையிலே மிளகாகுந் தேனுமாகுங்
கைமுறையாய் வெல்லமுமாங்கஞ்சாவாகும்
சேர்க்கையிலே பயருகுங் பொன்னுங்கண்ணி
செப்பினேன் சிறுகீரை தின்னலாகும்
தோர்க்கையிலே தூதுவளை யிலைகாயாகும்
சுகமாக வுண்டு கற்பஞ்சேரப்பண்ணே (உ)

காணப்பா விதுகடந்தால் கரிசாலையுண்ணு
கைமுறையாய் மண்டலந்தான் கறுக்குங்காயம்
பூணப்பா விதுகடந்து சரக்கையிரண்டு
பொற்றலையும் வல்லாறை யறிஞ்சு . . . .
தோணப்பா சமனுகப்பாக்களவு பாலில்
சுகமாக மண்டலந்தான் உண்ணு . . . .
ஆணப்பா காயத்தில் நறைதான்போகும்
அழகான மன்மதன் போலவாய்தானே, (ஙு)

**End :—**

தானென்ற மூலமதை யறியவேணும்
சத்திசிவ மிரண்டையுமே காணவேணும்
. . . . . . . . ம்பிக . . . . றியவேணும்
தருவான அண்டவித்தை செய்யவேணும்
தானென்ற கற்பமதை யுண்ணவேணும்
சமதத்தாக . . . . . தனைத யிருக்கவேணும்
தானென்ற நூலெல்லாம் பார்க்கவேணும்
சாத்திரந்தா னொருநூற்றுப்பத்து முற்றே. (ராய)

கு.பு. :—இந்நூல் சித்தர் நூலைச் சார்ந்ததாய் உளது. இதில் பலவித கல்பங்களும் நுவலப்பட்டுள. நூற்றுப்பத்துப் பாடல்களால் அமைந்திருக்கின்றது. இதில் 10 to 12. 25, 26 ஆன ஏடுகள் காணப்பெறவில்லையாதலின் அவையிற்றில் அடங்கிய பாக்கள் நீங்கலாக மிகுதியான பகுதி முற்றும் உளது. ஏடுகள் மிகவும் சிதலுற்று முறிந்து கிடக்கின்றன. இது முடிந்த பின்னர் பன்னிரண்டு பக்கங்களில் சில வைத்தியமுறை முதலியனவும் சுந்தரானந்தர் சூத்திரம் என்ற பெயருடன் சில பாடல்களும் எழுதப் பெற்றுள்ளன. எழுத்துப்பிழைகள் மிகவுள.

---

## No. 2402. போகர் பச்சிலைமூலிகை வைத்தியம்.
## BHŌGAR PACCILAI MŪLIKAI VAIDDIYAM.

Substance, palm-leaf. Size, 9 × $1\frac{2}{8}$ inches. Pages, 44. Lines, 6 on a page. Character, Tamil. Condition, much injured. Appearance, old.

Complete.

On the treatment of diseases with herbal remedies.

**Beginning :—**

போகநாதர் அருளிய பச்சிலை மூலிகை வைத்தியம் :—
திறந்திட்ட சீந்திலுக்குத்தேகஞ்சித்தி
. . . . . . . . . . . . . க்கு விரணம்போகும்
திறந்திட்ட காஞ்சோறி கபத்தைச்சாடும்
கடியபெரு ங்காஞ்சோறி சிலேத்துமம்போக்கும்
துறந்திட்ட ஆடாதோடை சுரத்தைப்போக்கும்
சுயமான கருங்காலி குஷ்டம் போக்கும்
திறந்திட்ட வெண்கருங்காலிக்கு நாகமது
கட்டியே மணிபோலாமே. (க)

*    *    *    *

சுவாசமொடு காசம்போம் சிறுவழுதலைக்குச்
செப்பரிய வழுதலைக்குச் சிலேத்துமம் போகும்
திவாசமாம் நெருஞ்சிக்கு மூத்திரக்கிரச்சிரபோம்
நேரான வில்வமது சத்திபோகு
மவாசமாம் முன்னைக்கு மேகம்போகும்
மூர்க்கமாங்கழற் கோடிக்கு விரைவாதம்போம்
விவாசமாவெண் கழல்கோடிக்குக் குன்மம்போகும
மிக்கொட்டை கறந்தைக்கு வாக்குண்டாமே. (உ)

**End :**

அழுத்தமாம் அவல் தானக்கு ஆண்மையுமாகும்
 அதிகமாம் வரவுக்கு ஆண்மை குன்றும்
தழுத்தமாம் தினைதனக்குச் சிரணமாகும்
 செழு மொச்சை பயறுக்கு வாதமுண்டாம்
பழுத்தமாம் பனிப்பயறு பித்தம்போக்கும்
 பெருங்கறுப்புக் கடலைக்குக் காயசித்தியாகும
பழுத்த அனுமுழுத்துவரை பாங்காம்மேனி
 பலபடவே சித்தியாம் உப்பைக்கட்டே. (டுக)

முற்றும்.

கு.பு. :—இந்நூல் பச்சிலை மூலிகை முதலிய சரக்குகள் இன்னின்ன வியாதிகளைப்போக்கும் என்னும் செய்தியை விளக்குகின்றது. இது (டுக) பாடல்களால் அமைந்திருக்கின்றது. போகர் இயற்றியதாகத் தலையேட்டின் நுனியிலே குறிக்கப்பெற்றுள்ளதேயன்றி நூலில் உள்ள பாடல்களிலிருந்து ஆசிரியர் பெயர் விளங்கவில்லை. ஏடுகள் மிகவும் சிதலுற்று கிடக்கின்றன. பிழையுளது.

---

## No. 2403. அனுபவ வைத்திய முறை.
## ANUBHAVA VAIDDIYAMUṚAI.

Substance, palm-leaf. Size, $8\frac{1}{2} \times 1\frac{1}{4}$; $9 \times 1$ and $9\frac{1}{2} \times 1$ inches. Pages, 58 Lines, 4 on a page. Character, Tamil. Condition, much injured. Appearance, old.

Begins on fol. 1-a. The other works herein are Kuḻandaivaithyam 64-a. Vaittiyanūl 90, Vaittiyamuṛai Vacanam 111-a. Padārthaguṇacintāmaṇi 115-a.

Complete.

A treatise, in prose, on Indian Medicine.

**Beginning :**

வைத்திய முறைகள்.

ஒரு தலைநோவுக்கு, நாம்புச்சிலந்திக்கு :—வேளை வேரும் கத்தரிப்பழுப்பும் ஒருகொட்டைப்பூண்டும் . . . . . . கூட்டி நருக்கிச் சிறுநீரில் ஒருபாரிசம் நசியம்விடத் தீரும். இது கைகண்டது. விடத்தாறிலையைப் பறித்துத் தண்ணிபடாமல் அரைத்து. . . வறுத்து ஊற்றின விளக்கெண்ணெயிற் குழப்பி உண்டைபண்ணி விழுங்கவும். புழுங்கல் அரிசி கஞ்சி காய்ச்சி முன்னே குடித்துப் பின்பு . . . ன்னீரும் சோறும் உண்ணவும். இப்படி மூன்றுமுறை தின்னவும் குணமாம்.

வேறு : காட்டவாைமிலையைப் பறித்துவந்து அரிசியிலிடித்துக் களிகிளறி நல்லெண்ணெய் கருப்புக்கட்டி கூட்டி இப்படி மூன்று ஞாயறு தின்னவும் நரம்புச்சிலந்தி தீரும்.

* * * *

மண்டைக்கறப்பானுக்கு எண்ணெய் :—நல்லெண்ணெய் உரி—பட்டியில் வார்த்து இதுக்கு மருந்து ஆடு தீண்டாப்பாளை, ஊமத்தையிலை இவைகளைச் சமன்கூட்டியரைத்து நார்த்தங்காயளவு எடுத்து எண்ணெயிற் கரைத்துக் காய்ச்சும்போது மிளகு பலம் உ (அரை), வெள்ளுள்ளி பலம் உ (அரை) இவைகளை முழுசோடே போட்டுக் காய்ச்சி வெள்ளுள்ளி சிவந்துவரும்போது வடித்துவைத்துக்கொண்டு இந்த எண்ணெயை நசியம்பண்ணி உள்ளுக்கும் ஒரு காசிடை கொடுத்து வரவும். எட்டுநாளைக்கொருமுறை தலைக்குத் தேய்த்து முழுகிவரவும். இதுக்கு மண்டைக்கறப்பான், மூக்குப்புண் இவைகள் தீரும். இந்த எண்ணெயை வெட்டுக்குத்து விரணங்கள் மேலே தடவி வர விரணங்களும் ஆறிப்போம்.

பல வியாதிக்கு உண்டை :—இரஸம், நாவி, பொரிக்காரம், கெந்தகம், திரிபலை, திரிகடுகம், இருவி பொன்னரிதாரம் இந்தச் சரக்குகளைச் சமன் கொண்டு ஒரு நிறையும் சுத்தியான நேர்வாளம் ஒரு நிறையும் கையாந்த கரைச்சாற்றில் அரைத்துக் குன்றிமணி பிரமாணம் உண்டைபண்ணி நிழலி லுலர்த்தி வைத்துக்கொண்டு இதுக்கு அனுபானம் புளியிலைச்சாற்றில் மூன்று உண்டையிட அக்கினிமந்தம் வாய்வு தீரும். திரிபலை ஊறவிட்டு அந்த நீரில் ஒரு உண்டையிட உதரவாயுவு தீரும். பசுமூத்திரத்திலே இடப் பல வியாதியும் தீரும். பழைய நலலெண்ணெயிலிடக் கண்ணிற் படலமறுக்கும். செஞ்சந்தணத்தில் எட்டுநாளிட நீர்ச்சுறப்பு மாறும். சாதிக்காய்ப் பொடியில் இரண்டுநாள் இரண்டு உண்டையிட மூலவியாதி மாறும். நெல்லிக்காய்ப் பொடியிலிரண்டுநாளிட இருமல் மாறும். மாசிக்காய்ச் சாற்றினில் (ரு) உண்டையிட (ரு) நாள் தின்னக் காய்ச்சல் மாறும். தென்னைமரத்தோல் சாற்றிலும் எலுமிச்சம் புளிப்பிலுங்கூட்டி ஒரு உண்டை (௰க) நாளிடச் செங்கமாறி மாறும். பசுகோமயத்திலிப்பேய்விடும். கடுகு இலைச்சாற்றில் உரைத்துக்கண்ணிற் பிரைவளையமாகப் பூசத் தலைவலி மாறும். எலுமிச் சம் புளியில் உரைத்துக் கண்ணிலிடப் பல வியாதியும் தீரும். நொச்சியிலைச் சாற்றிலும் கையாந்தகரைச்சாற்றிலும் உண்டையிடப் பலவாயுவும் தீரும். கருப்புக்கட்டியிலிடப் பலவாய்வும்தீரும். பூசக்காய்ச்சாற்றில் இரண்டு உண்டை யிட அசீரணம் தீரும். வல்லாரைச்சாற்றில் ஒரு உண்டையிட விசாரமுண் டாம். நார்த்தங்காய்ப் புளிப்பில் உரைத்துப் பல்லில்பூசப் பல்பலக்கும். கொட்டை பாக்குசீவி நீரிலிட்டு மறுநாள் நீரில் உரைத்திட மாலைக்கண் மாறும். விளக்கெண்ணெயில் நாலு உண்டையிட வயிறு கழியும். உச்சி யில் உரைத்திட நண்டுவாக்காலி விஷம் மாறும். பொன்னுவாரைதோலும் இலையும் சாற்றிலுமிட அசீர்ணம்மா . . . . .

* * * *

**End :**

தேள் விஷத்துக்கு நசியம். பாம்புக்குங்கூட :—நாய்வேளையிலைச் சாறு காதில் பிழியவும். கற்கோவைக் கிழங்கு கொண்டுவந்து முள் ளிலே குத்தி எருக்கம் பாலிலே ஊறப்போட்டு உலர்த்தி எருக்கம் பாலிலே உரைத்து நாக்கிலேயும் கடிவாயிலேயும் தடவவும். அபினி, பெருங்காயம், கழற்சிக்காய் விதை, விளக்குச்சுடல் மண்ணு இந்த நாலு வகையும் எருக்கம்பாலில் அரைத்து உண்டைபண்ணி வைத்துக்

கொண்டு எருக்கம்பாலில் உரைத்துக் கடிவாயிற் பூசவும். தேள் விஷம் தீரும். பெருங்காயமும் வசம்பும் இந்த இரண்டும் சதுரக்கள்ளிப்பாலில் விட்டரைத்து உண்டைபண்ணி வைத்துக்கொண்டு அந்த உண்டையைக கையில் தடவிக்கொண்டு பாம்புக்குடத்திலே கையிடப் பாம்பு கடியாது. இதுக்குச்சோதனை. இந்த மருந்தை எலிக்குத்தடவி விட்டுப் பாற்கவும். விலங்கு முறிய நாய் [பி (பு) புணையலாயிருக்கிற பொழுது எருக்கங்கோல் பச்சைக்கோலாலே அந்தப் புணையல் மேலே யடிக்கவும். அடித்து முறிந்த கோலை யெடுத்து எருக்கம் பழுப்பும் ஆமை யோட்டிலே போட்டுக் கட்டிச் சுட்டு அந்த நீற்றைப்பறணியிலே வைத்துக் கொண்டு வேண்டிய போது அந்த நீற்றைக் கதவிலே வைக்கத் தாள் திறக்கும். விலங்கில் வைக்க விலங்கு முறியும்.

கன்று பாராத மாட்டுக்கு :—புலி தடிக்கி வேரைச்சிறு நீரில் அரைத்து மூக்கில் நசியமிடவும். சுண்டை விரை அரைத்து நசியம் இடவும்.

தேளுக்கு மருந்து :—கழற்சிக்காய் உள விதை யெடுத்து காஞ்சிரங்காம்பு கொண்டு அடைத்துத் தூபதீபங்கொடுத்து அநதக் கழற்சிக்காயைத் தேள் கொட்டினபேர் கையில் கொடுக்கவும். அதைத் திரும்பவும் வாங்கி வேறு ஒருவர் கையிலே கொடுக்க விஷமங்கே பாயும். நேர்வாள விரையொன்று சுண்ணும்பிற் கொடுக்க விஷம் மீளும். கைகண்டது.

வேறு :—சாதிக்காயும் அபினும் சமன் கூட்டியரைத்து உண்டை பண்ணிக் கொடுக்கத்தீரும். வேறு— ஈரவெங்காயம் முலைப்பால் வார்த்து நசுக்கி உச்சியில் மத்திக்கத்தீரும்.

கு.பு. :—இந்நூல் மூவருடக்காடலாக்கு 556-ஆவது நம்பரில் வந்துள்ள நூல் போன்றதாய்ப்பல வகையான வியாதிகளுக்கும் விஷங்களுக்கும் உரிய சிகித்ஸை முறைகளை விரிவாக வசன நடையில் அமைந்து உணர்த்துகின்றது. இதில் அநேக விதமான அரிய பெரிய முறைகள் இருக்கின்றன. 47-வது ஏடு காணப்பெறவில்லை. சில ஏடுகள் சிதலுற்றிருக்கின்றன. எழுத்துப் பிழைகள் உள. இதில் உள்ள ஏடுகள் எல்லாம் மூன்று வகையான அளவு உள்ளவைகளாயிருக்கின்றன.

---

## No. 2404. குழந்தை வைத்திய முறை.
### KULANDAIVAIDDIYA MURAI.

**Pages, 54. Lines, 6 on a page.**

**Begins on fol. 64-a of the Ms. described under No. D. 2404.**

**Incomplete.**

**On the treatment of the diseases of children.**

**Beginning :**

குழந்தைகளுக்குச் சகல நோவுக்கும் பால சஞ்சீவி யாத்திரை :—

சிருலவு கலமதம் கல்னுர் இராம்புடன்
திப்பிலி யதிவிடயமும்
செய்யதாளிசமுடன் கடுகு ரோகணி
இருசீரகம் ஓமமுடனே
காருலவு மக்கார சாதிக்காய் பத்திரி
கத்திநாயகனுடன்
காவலர்கள் புகழ் பஞ்ச திரவியந்துன்னுடன்
கற்கடக சிங்கி குரோசாணியுடனே
பெருலவு தருஞ்சத்துருவுடன் கற்பூரம்,
கஸ்தூரியுடனே கோரோசனை பெருகவே ?

இவைகள் சமமதாய்க் கூட்டியே பேணியரை உண்டையளவாய் அடைவான கையாந்தகரை கஞ்சாங்கோரை ஆனவெண்ணெச்சில் உடனே அன்பானநா [ற] (ர்) ந்தை மறத்தை மறளிஞ்சிமுசுறுடன் அழகான ஆவின் பாலிலும் உடனிடத்தே இறையெண்ணெய் நெய் பண்ணியே ஒரு போத ருந்தியிடவே ஓது கருவுக்காம் வெள்ள .. .. ..ரம் குண்டி அக்காரம் கெண மாந்தமும் நடனமிடுவகுறு கழிச்சலோடு நாடுந்தி ...... தோஷ முதலாய் நாலுவகைப்பிணி பட்சி தோஷங்களும் நவி பால் இரிச்சிரம் எல் லாம் திடமாய் அகத்திடும் பாலசஞ்சீவியைத் தேசத்தில் உள்ளோர்கள் செப்பமாய் அறியும்படிக் கும்பமுனி சொல்லிடுந்திகழ் வாகடத்தின் விதி யை யடைவு படவே செய்யவல்லவர்கள் இப்புவியில் ஆய்த்திடு பதத்தினுட னே அன்பதாய்க் குளிகையெண்ணெய் நெய்யருந்திடவே அகலுமாறுருணா களே.

சீர்கொண்ட வெண்காரம் கோரோசனை திகழவரைக்
கொரு கழஞ்சிக் குமலம் விடுகடுகு ரோகணியும்
முக்கழஞ்சொக்கவே சேர்த்திடித்து
வேர்கொண்ட நல்லகத்தியிலை ரசம் விட்டு
மெள்ள வொரு சாமம் நன்றாய்
விசைகொண்டிமுத்தரைத்துச் சீரிய பயறளவு
மென்மை பெற வுண்டை செய்தே
வார்கொண்ட பெண்முலைப்பாலினிலிடுவதிது
வாலபிணியக்கரம் வயிறிழிவு பிரமலொடு
மாந்தங்கண மதத்துவும்
வாராதினிய பாலசஞ்சீவி யிதுவே

இப்படிக் கொடுக்கக்குணமாம்.

பிள்ளை பிறந்த பத்துநாள் மட்டும் அப்பால் பனிரண்டு வருஷமட்டும் அந்தந்த நாளிலே தீண்டுகிற தேவதை பேர்களும் அது செய்கிற குணங் களும் குழந்தைகளிருக்கிற விகாரங்களும் சாத்தியம் அசாத்தியமும் அவை களுக்குப்பலியும் மந்திரயந்திரமும் மேலுக்கும்பமும் ? தூபமும் தோஷ சாந்தியும் மூலிகாப்பிரயோகமும் ஔஷதங்களும் இதற்குக் கங்கி

உபாயமும் சர்வ பததிரயுகமாய்ச் சொல்லுகிறேன என்று வாறு. இந்தப் பிரகாரம் தபபிதமில்லாமல செய்தாருகில் சகல தோஷமும் சகல வியாதியும் குணமாம எனறவாறு.

*         *         *         *         *         *

**End :**

*         *         *         *         *         *

(சசு)

வேறு—

சாதிககாய் சாதிபததிரி வல் அரிசி இப்பு அதிவிடயம கோஷடம் சேணை பகமொட்டு சீரகம் ஓமம கோரோசனை திப்பிலி சுக்கு மிளகு வட்டத்திருப்பி பெருங்கிழங்கு மாதளங்காய் சடைக்கஞ்சா நெல்லிபபருப்பு வில்வவேர் இவை வகைக்குக் காசு இடை, இவை வகைகள் வரையிட்டு வஸ்திரகாயம் பண்ணி வைத்துக கொண்டு இளவெந்நீரில் கொடுக்க கழிச்சல் நிற்கும். நில்லாவிட்டால் மாதளங்காய் வில்வபத்திரி கோரைக் கிழங்கு பெருமரப் பட்டை காரைவேர் வற்பூலாவேர் இவை கூட்டி இரு நாழி நீர்விட்டுக் கஷாயம் காய்ச்சிக் கஷாயத்தில் சூரணம் போட்டுக் கொடுக்கப் பிரமல் கழிச்சல் நிற்கும் (சசு)

கருஞ்சீரகம் கம்பிப்பிசின் கஸ்தூரிமஞ்சள் பூதகரபபான் பட்டை திப்பிலி கார்ப்போகவரிசி கோரோசனை வாலுழுவை வெள்ளுள்ளி வசம்பு பெருங்காயம் கல்ஞர் சுக்கு மிளகு ஒவ்வொன்றும் கழஞ்சு. சிறு குறிஞ்சா மிளகரணை பெருமருந்து சத்திக்சாரணை கொஞ்சி கண்டங்கத்திரி சிறுகுறட்டை சடைச்சி ஆகாச ௳. . . . .

**கு.பு.** :—இது, பெரும்பான்மையாகக் குழந்தைகட்காம் வைத்திய முறையை யெடுத்து உணர்த்துவது. சில முறைகள் மாத்திரம் செய்யுளில் அமைந்திருக்கின்றன. மற்றைய பகுதி முழுமையும் வசனத்திலேயே யமைந்திருக்கின்றது. இதில், குழந்தைகட்குச் சகல நோவுக்கும் ஆம் பால சஞ்சீவி மாத்திரை யொன்றும், வியாதிகள் வரும்வகை, சன்னிவகை, பார்வை தோஷம், அந்திப்புள்ளின் தோஷம், மாந்த சுரத்தின் குணம், சுழிக்கணம், மூக்குக்கணம், திரிதோஷ சுர குணம், மாந்தத்துக்குக் குடிநீர், ஆமத்துக்கு மருந்து, மாந்த சஞ்சீவி யெண்ணெய், நீர்க்கணமாந்த எண்ணெய், கணத்தின் குணம், அட்சரம், குணடி அட்சரம், காமாலைக் குணம், ஆமசுரம், சகல வியாதிக்கும் உரிய எண்ணெய், சூலைக்கு எண்ணெய் என்னும் இன்னோரன்னநன் மருந்துகளின் முறைகள் பலவும் இவைகள் விரிவாக எடுத்து உணர்த்தப்பெற்று இருக்கின்றன. இறுதியில் அரை குறையாகவிடுக்கப்பெற்றுளது. முற்றுப்பெறவில்லை. எழுத்துப் பிழைகள் மிகவும் அதிகமாகக் காணப்படுகின்றன. ஏடுகள் ஒரு சிறிது நுனியில் முறிந்தும் சில விடங்களில் புழுக்களால் அரிக்கப்பெற்று மிருக்கின்றன. இது அகத்தியர் வாகடத்தைப் பின்பற்றியிருக்கலாமென ஊகிக்க இடனுளது. பாட்டும் உரையுமாக வெழுதப்பெற்றுளது.

## No. 2405. வைத்திய நூல்.
## VAIDDIYANŪL.

Pages, 42. Lines, 6 on a page.
Begins on fol. 90-a of the Ms. described under No. D. 2403
Wants Stanzas 57 to 75 in the middle.
Similar to the work described under No. D. 1977.

**Beginning :**

வைத்திய நூல்.

சாம்பிராணி துருசுதுத்தம் சாற்றுங்கறுத்த குங்கிலியம்
விதித்தவகைகள் தான்க[ள](ழ)ஞ்சு விளங்கும் பச்சை வெட்டடனே
அழுந்தவல் . . . . மதாஞென்று அறிவாய்க்கலுவமீதிலிட்டு
சதிருங்காய்ச்சியெள்ளெண்ணெய் திதிமாயரைத்துத்தண்ணிவிடே (க)

* * * *

மானேலிங்கங்கழஞ்சொன்று மதிக்குந்துருசு இருகழஞ்சு
தேனே [மிறு] (யரி) தார மரைக்கழஞ்சு திதமாமிரதங்குங்கிலியம்
ஊனே பலமு மூனாருக வுரைத்த வெள்ளிலெண்ணெய்யுடன்
தானே யரைத்துத் தண்ணி விழல் தறுகா தெடுத்து வழித்திடுமே (உ)

* * * *

சீத சுரக்கிஷாயம்

பாதிரியின் பெருங்குமிழும் முன்னைமுத்தப்
பற்படகஞ்சிறு தேக்குக் கண்டங்காலி
யோதரிய சித்தமல்லி கடுக்காய் சுக்கு
வோங்கு தாமரை வளையம் பேர் மல்லி
நீதி சிறுவழுதலையும் வில்வவேரும்
நெருஞ்சிவேர் சமனுகக் காய்ச்சிக் கொள்ளச்
சீத சுர வாத சன்னி போமென்றீசன்
தெளிந்த நூலுரைத்ததிதுதிண்ணந்தானே (எசு)

* * * *

**End :**

இருமலுக்குக் கிஷாயம்

ஆடாதோடை தேள் கொடுக்குத்தூதளை
வாடா சுக்குடன் வல்லிதன் கொண்டைவேர்
நாடாத்திப்பிலி நீர் பொடியிட்டிட
ஓடாதாகிலும் ஓடுமிருமலே (கூஉ)

அண்டவாயுவு அரோசகங்களுக்கு

கண்டசுக்குக் கடுகுடன் பேய்ப்புடல்
விண்டதேக்கும்மிகு கொத்தமல்லியும்
கொண்டநீரைக் குறுகிக் குடித்திட

சிறுகாஞ்சோறி நன்னாரி தெய்வப்பெண்டீரருடனே
குறுகாதரைத்து உண்டை பண்ணிக் கொடிய சுரத்துக்கடுவிராய்
மறுகால்வராது வாத மொடு வயிறு நோவுகுன்மமுடனே
றுகாதளவும் விழி மடவீர் தரணி(யோரு)க்குரைஙேரா (கூஅ)

துத்தந்துருசு பாஷாணம்
மெத்திய கெந்தி மிகுரசவகையும்
பத்திய பாகற் சாற்றிலரைத்து
தித்திய மிளகளவுண்டைகள் செய்யே (ῶ)

சீதாங்க சுரம்

சீதாங்க சுரஞ் செப்பக்கேள்
ஓதிய கெந்தியுயரசவாளங்
கோதறு திரிகடு கடுகொடு சிவதை
மாதறு பாலில் மாத்திரை செய்யே (ῶக)

கு - பு—இது வைத்திய விஷயமானதொரு நூலாகும். இது நூறு பாட்டுக்களான் அமைந்துளது. இயற்றியவர் இன்னாரென்று தெரியவில்லை. நூற் பெயரும் இன்னதென்று ஓரிடத்திலும் விளக்கப்பெறவில்லை. இதில் அநேக விதமான நோய்களையும் நீக்கறகுரிய பல்வகை நன் மருந்துகளுடைய முறைகளும், பல கிஷாயங்களும், தைலங்களும், காரச்சீலைகள், பொடிவகை, மஞ்சட்காரம், பச்சைக்காரம், குடிநீர் வகைகள், அதிசார பித்தக் கழிச்சலுக்கு மருந்து முறை, அண்டவாய்வ ரோசகங்கட்கு மருந்து முறை என்னுமிவைகளும் நன்கு விளக்கமாகக் கூறப் பெற்றிருக்கின்றன. ஏடுகள் முறிந்து கிடக்கின்றன. நடுவில் 15 to 23 ஆன ஏடுகளில்லையாதலின் அவையிற்றில் அடங்கிய 57 to 75 ஆன பாடல்கள் காணப் பெறவில்லை.

---

## No. 2406. வைத்திய முறை வசனம்.
## VAIDDIYAMUṞAI VĀCANAM.

**Pages, 8. Lines, 6 on a page.**
**Begins on fol. 111-a of the Ms. described under No. D 2403**

**A treatise, in prose, on Indian Medicine.**

**Similar to the work described under No. D 2403.**

**Beginning :**

நீரிற் சிவப்புக்குறி குணத்துக்கு நவநீதம் (வெண்ணெய்).

கருநொச்சியிலைச்சாறு படி (க) எலுமிச்சசைச்சாறு படி (க), பசுவின் பால் படி (க) நல்லெண்ணெய் படி (க) இந்நாலையுங்கலக்கி அடுப்பேற்றி மெழுகுபதத்தில் வெள்ளைக்குங்கிலியம் (பூ ங) பலம் மூன்று, கற்பூர சிலாசத்து (ῤ உ) கல்நார் (பூ உ) இவை மூன்றும் பொடி செய்து அதிற் போட்டு ஒரு கொதி கொதித்தவுடனே ஒரு பெரிய புதுச்சட்டியிலே நல்ல சலம் நாலுபடி விட்டு எண்ணெயை அச்சட்டியிற் கவிழ்த்து இலை

சலம் விட்டுக் கடையவும். கடைநதுப் பிங்கானில் வழித்துக் கொண்டு புன்னைக் காயளவு இரண்டு வேளையாகச் சாப்பிடவும். இதுக்குத் தீரும் வியாதி கர்ப்பத்தில் விரணத்தை யாற்றும், மேக வாயுவைக் கேட்கும், மேகம் நிற்கும். நீர்த்தாரையிலே உதிரம் விழுகிறது நிற்கும். மது மேகத்தைக் கேட்கும. சூதக வாயுவைக் கேட்கும். இதுக்குப் பத்தியம் பஞ்சாயம் ஆகாது. சலபுஷ்பம் ஆகாது. உடம்பு அதிரலாகாது.

**End.**

கபாலத்தில் சூலைக்கு : கண்டத்தில் தலையிசுவுக்குத் தைலம்.

நல்லெண்ணெய் படி (க) வெங்காயச்சாறு படி (௨) அரை, குத்துக காசமுட்டிப் பட்டை யரைத்த விழுது (௰) பலம் பத்து இந்த மூன்றுங் கலக்கி யடுப்பேற்றித் தைலம் இறக்குகிற பதத்தில் சிறு பாலடையிலை (௫) பலம் ஐந்து. எண்ணெயில் போட்டு எரிதது வடித்துக் கொள்ளவும். நூலே முழுகின தினம் பத்தியம். சலபுஷ்பம் (உப்பு) புளி யாகாது.

**கு-பு**—இது, D-2403 நம்பர் பிரதி போன்று அநேக விதமான வியாதிகளையும் நீக்கற்குரிய பல நன் மருந்து முறைகளையும் வசனத்திலே யமைந்து விளக்குகின்றது. எடுகள் ஒரு சிறிது நுனியில் முறிந்துள. எழுத்துப் பிழைகள் காணப்படுகின்றன.

---

## No. 2407. பதார்த்தகுண சிந்தாமணி.
## PADĀRTHAGUṆACINTĀMAṆI.

Pages, 34. Lines, 4 on a page.
Begins on fol. 115-a of the Ms. described under No. D. 2403

Same work as that described under No. D. 1958.

**Beginning :**

நெருப்பு வெண்பா

கண்டங் காணேவு வலிவாதம் போங்காய்ந்தத்தஞ்சல்
விண்டே பல பிணிகள் விட்டேகும்—அண்டர்
பொருப்பணைய மாமுலே தோய்ப்பூவையரே யிந்த
நெருப்பின் குணமறிய நீ (௧)

காற்று வெண்பா

மேகக்கடுப்பு மிகவுண்டாம் மெய்யெங்குந்
தாகந்தனி விளைப்புச்சாந்தமாம்—போகத்தின்
புண்ணேய்க்கும் பொல்லாது பூவையரே காற்று
கண்ணேய்க்கு மாகாது காண் (௨)

ஆகாய வெண்பா

தாதுமதின் வழியே சாரும் பொசிப்பருந்து
மோதும் வெறிக்கு முரி தாகும்—நீதி முத
லெல்லா நினைக்குமிவையாகாயச் செயலே
நல்லாயுலகறிய நாட்டு (௩)

தண்ணீர் வகை யெட்டின் துணை வெண்பா.

கூவறநடுமேறி கோதிற் சுனையருவி
யாவறருமோடை நீராற்று—சேவிக்கு
மட்டுற்ற கூந்தன் மயிலே கேள் வந்தநீ
ரெட்டுவகை யெனறியம்பு (கூ)

**End :**

கொடிக்கள்ளிப்பால வெண்பா.

வாதங்குடல் சூலை வந்த சய ரோகமெல்லாங்
காதமெனவோடிக்கடியுமே—மாதே
யடிக்கடிசேர்குணமவலி யததனையுந்தீருங்
கொடிககளளிப்பாலின் குணம் (எ0)

இலைக்கள்ளிப்பால் வெண்பா.

குணமங்குடல்வாதங் கொடிய வாய்வுததிரட்சி
சென்மம் விட்டோடிச் சிதறுமே—வன்முலையிா
சீதஞ் சொறி சிரங்கு சேராதிலைக்கள்ளி
மாதே யிதன் பாலைவை (எக)

கு.பு.—இந்நூல் டிஸ்கிருப்டிவ் காடலாக்கு 1958-வது நம்பரில் வந்துள்ள நூலேயாகும். இப்பிரதியில் 1—71 செய்யுட்களேயிருக்கின்றன. இதில் உள்ள பாடல்கள் எல்லாம் அச்சுப்பிரதி பாடல்கட்கும் மற்றும் உள்ள பிரதிகளின் பாடல்கட்கும் ஒவ்வொரு அடிதோறும் மிகப்பாடபேதங்களுடன் காணப்படுகின்றன. பல ஏடுகள் முறிந்து விழுந்துள்ளன. எழுத்து பிழைகள் மிகவுள.

---

## No. 2408. நாடித்திரட்டு.

### NĀḌITTIRAṬṬU.

Substance, palm-leaf. Size, 9¾ × 1½ inches. Pages, 16. Lines, 8 on a page. Character, Tamil. Condition, much injured. Appearance, old.

Begins on fol. 2-a. The other works herein are Maccamuni Eṇṇūṟu 1-a, Vaittiya Muṟaivacanam 8-b.

Incomplete.

Same work as that described under No. D. 2318.

இந்நூல் டிஸ்கிருப்டிவ் காடலாக்கு 2318-ம் நம்பரில் வந்துள்ள நூலேயாகும். இப்பிரதியில் இந்நூலின் ஐம்பத்தெட்டு செய்யுட்களும் இருக்கின்றன. இருக்கிற ஏடுகள் மிகவும் முறிந்தும் சிதலுற்றுமிருக்கின்றன. அப்பிரதிக்கும் இப்பிரதிக்கும் மிகப்பாட பேதங்கள் காணப்படுகின்றன.

## No. 2409. மச்சமுனிபெருநூல் எண்ணூறு.
## MACCAMUNI PERUNŪL EṆṆŪṚU.

Pages, 2. Lines, 8 on a page.
Begins on fol. 1-a of the Ms. described under No. D. 2408.

Incomplete.

Contains 1 to 6 Stanzas only.

Same work as that described under No. D. 1967.

இந்நூல் டிஸ்கிருப்டிவ் காடலாக்கு 1967-வது நம்பரில் வந்துள்ள நூலே யாகும். இப்பிரதியில் ஒன்று முதல் ஆறுவது செய்யுள் வரை யான பாடல்களே யிருக்கின்றனவாதலின் முற்றும் இல்லை. உள்ள ஏடு புழுக்களால் அரிக்கப்பெற்றிருக்கிறது. எழுத்துப் பிழைகளிருக்கின்றன. பாட பேதங்கள் காணப்படுகின்றன.

---

## No. 2410. வைத்தியமுறை.
## VAIDDIYAMUṚAI.

Pages, 18. Lines, 8 on a page.
Begins on fol. 8-b of the Ms. described under No. D. 2408.

Similar to the work described under No. D. 1978.

Deals with the preparation of various kinds of medicinal ghee, pills, powders, etc.

**Beginning :**

இராமபாண நெய்.

சிறுவழுதலை நன்னாரி சிறந்த திருப்பு நெருஞ்சிலை வே
ருறுமே யிவை யோரோரு பல மாயுகந்த பேராமுட்டி நூறு பல
மறவே கசாயமதுவாக்கி மகிழுங்கற்கவகைகேளீ
சிறுமே கத்தாழுஞ்சாறுடனே யிதுவே தண்ணீர் மிட்டாலும் (க)

இளநீருடனே கற்றாழை யிவையாமூன்று முக்குறுணி
யளவே முந்தின கஷாயத்திலதுவெங்கூட்டிக் கறகங்கேள்
உளவே யேலம் பச்சிலையும் உகந்த சந்தனத்திரிகடுகம்
மிளகுங்கற்பூர மிலவங்க . . . ன்னுப முடவாட்டு க்கல்லுடனே (உ)

இந்துமதுர முள்ளி விரையிலகு மட்டி சர்க்கரையும்
சந்து மிலாமிச்சம் ஞ . . . த்தானே முத்தங்காய்ப்புல்லு
முந்து நன்னாரி முத்தமுடன் முசியாதோரொன்றே . . . ய்
வந்த பதக்குப்பால் கூட்டி வாரீர் குறுணி நெய்யுமதே (ங)

வடித்துக்காய்ச்சி மெழுகு . . . ருந்தி நாளுங்கழஞ்சி கொள்ள
இடித்த மிரத்த முடனென்றுங்காச மீளைபல . . . .
வொடித்த நெஞ்சு நரிகுரலு மோடும்பாண்டு சோகை பல (ச)

## பூசனி நெய்.

ஆவின் நெய்யுமிள நீருமடுத்த பூசனி சதாவேரி
மேவும் பசுவின் பாலதுதான் வெவ்வேறிதுவுமிருநாழி
தாவுங்கோஷ்டகஞ்சந்தணமுந்தக்க பச்சிலை கச்சோலம்
பாவுமேல மிலவங்கம் பத்திரி இரும்பு சாதிக்காய் (ரு)

ஓதுங்கடுகுவிளலரிசிசுக்கு வுலருந்திப்பிலி மாங்கொட்டை
கோவுமரத்தின குருவுடனே கூறுங்கூவளை தன் பிசினும
மேவியிதனைய ரைத்ததனைவெந்து பதத்தில் வடித்துக்கொள்ளுத
தாவுஞ்சுரமும் மேல் வலியுந்தப்பும் வெப்பு முட்சுரமுங்
கோவிந்தாவெனவே கொளப்பூசனி நெய்தானே (சு)

சீந்தில் நெய் .. .. .. ..

பவழவைப்பு:—சங்கு பற்பம் (பூக) பலம் ஒன்று.

சாதிலிங்கம் பூரு-விளாப்பிசின தணணியில் மூன்று நாள் அரைததுப் பவழம் போல் பண்ணிக்காயவைத்து மிடைவை மீன் வயிற்றைப் பிளந்து வைத்துப் பாண்டத்தில் கால்வாசி போட்டு மீன் வயிற்றை அதிலே வைத்து மேலுங் கால்வாசி சுண்ணும்பு போட்டு நாலுபடி தண்ணீர் விட்டு அடுப்பில் வைத்துத் தண்ணியெல்லாம் வற்றக்காய்ச்சியெடுத்து நல்ல தண்ணீரில் கழுவிப்போட்டு எடுத்துப்பார்த்தால் பவளம் போல் இருக்கும்.

முத்து வைப்பு:—கழிபட்ட முத்து ஆனாலும் முத்து சிப்பியானாலும் உவர் மண்ணும் சுண்ணும்பும் சமஞ்சேர்த்து ஒன்றுக்கு சு-படி தண்ணீர் விட்டு வற்றக்காய்ச்சித் தண்ணீர் சுண்டிய பின் கழுவிப் போட்டு உலர்த்திப் பொடி பண்ணிக் கனத்த சீலை வடி கட்டிக் கொண்டு முத்து உரிக்குஞ் செஷ்ச்சாத்தாலே முழுங்கரைத்து ? மிளகு போல் உண்டை பண்ணிச் சூரிய காந்தத்தினலே சிமிழ் போலே பண்ணி உண்டைவைத்து மேலே மூடி மாஷத்தாலே சீலை செய்து வெய்யிலில் வைத்து ஏழாநாள் திறந்து பார்த்தால் முத்துப் போல் பளிச்சு என்றிருக்கும்.

## மகா கோடா சூடிக்குளிகை.

நாபி இருவி இரதம் கந்தகம் தாரம் வெண்காரம் இந்த ஆறு மருந்துந்தம்மிலொக்கக்கூட்டி சுக்கு மிளகு திப்பிலி கடுக்காய் தான்றிக் காய், நெல்லிக்காய் இந்த ஆறும் சமனகவும், வாளம் நாலு பங்கு மூன்று வகையுஞ்சமனகக் கூட்டி நொச்சிச்சாறு ஒரு நாள் அரைப்பு முருக்கிலைச் சாறு குப்பைமேனிச்சாறு கையாந்தகரைச்சாறு ஆடாதோடைச் சாறு இந்த அஞ்சு வகைக்கும் ஒரு நாள் அரைப்பாக அஞ்சு நாள் அரைத்து மிளகுப் பிரமாணம் உண்டைபண்ணி நிழலில் உலர்த்தி வைத்துக் கொண்டு கபால சூலைக்கு எலி ஆலம்பாலில் கரைத்து உள்ளுக்குங்கொடுத்து மேலுக்கும் பூசவும். மண்டைக் கரப்பானுக்கு மேனிச் சாற்றிற் பூசவும். மண்டை வியாதிக்குச் செருப்படைச்சாற்றிலிடவும்.

**End :**

பக்கசூலைக்குக் கொடம்பாம்புச் சாற்றில் இடவும். சந்து விப்புருதிக்கு ஆட்டு [க்கோமயத்தால்] (மூத்திரத்தில்) இடவும் காப்ப விப்புருதிக்குப் பழங்கஞ்சியி லிடவும். பூதக் கரப்பானுக்கு எலுமிச்சம்பழச்சாற்றிலிடவும். மாடுக்குத் தண்ணீரிலிடவும். தம்பனைக்கு அத்திப்பாலில் இடவும். யோனி கட்டு பிரண்டைச்சாற்றில் இடவும். ஆண்கட்டு முருங்கைச்சாற்றில் இடவும். மகோ தரத்துக்கு அரப்பொடியில் இடவும். பிரநீககோவைக்கு எலுமிச்சம்பழச் சாற்றில் இடவும். பித்தபாண்டுக்குச் சங்கிலைச்சாற்றில் இடவும். சோகை க்குச் சீரகத்தில் இடவும். காமாலைக்கு வல்லாரிசியிலிடவும். வறட்காமாலைக் குக் கடுக்காய்ச் சாற்றில் இடவும்.

கண்ணுக்குமை.

வெள்ளெருக்கம் பஞ்சும் வேர் வாடக்கே போன வேலம்பட்டிடுஞ்சிவந்து எரி நெருப்பில் இளம்பதமாய்க் கருக்கிக் கத்தியினாலே சீவிக் கொண்டு அத் தூள் பலம் (க) மயிற்றுத்தம பலம் (உ) பாற்றுத்தம பலம் (௩) இந்த மூன்றையும் கங்காளத்தைக் கவிழ்த்து அதின் பேரில் வைத்துக் கொங்கிலங்கு இலைச்சாறு துட்[டிவைட்டு] டெடைவிட்டு வெண்ணெய் பஞ்சும் எலுமிச்சங்கா யளவு எடுத்துக்கொண்டு சங்கிலுலே எட்டு நாள் இந்த வெண்ணெயை விட்டு அரைத்து எடுத்து எருமைக் கொம்பு பரணியிலே வைத்துக்கொண்டு கண் வியாதிகளுக்குப் போடவும். கண்ணிலொளி. சாலேசரம். கண் மத்தியமம், கண்ணிற் பூவிழுந்தாலும் மல்லாவெற்றையும் எடுக்கும். இது அனுபோகத் துக்குச்சரியாக விருந்தது.

வெள்ளைக்கு.—சவுக்காரம் பலம் அரை, மிளகு பலம் அரை, உரித்த பூண்டு பலம் அரை, இந்த மூன்றையும் நெகவரைத்து (௩) மூன்று பங்காக்கி உழக்குத்தயிரில் ஒரு பங்கு சேர்த்து ஒரு வேளைக்கு கொடுக்கவும். இப் படி ௩. மூன்றுநாளைக்குக் கொடுக்க வெள்ளை மாறும். உப்புவில்லாத பத்தியம். பத்தியமில்லாமல் சாப்பிட்டால் ருசு வேளை சாப்பிடவும். தீரும்.

---

## No. 2411. உரோமருஷி சூத்திரம் ஐந்நூறு.

### URŌMARUṢI SŪTTIRAM AINNŪṚU.

Substance, palm-leaf. Size, $11\frac{1}{2} \times 1\frac{6}{16}$ inches. Pages, 104. Lines, 9 on a page. Character, Tamil. Condition, injured. Appearance, old.

Begins on fol. 1-a. The other work herein is Irāmadōvarpadinen paribhāṣai 54-a.

Complete.

Similar to the work described under No. 258-b.

**Beginning :**

உரோமருஷி சூத்திரம் ஐந்நூறு.

வெளிச்சூத்திரம் ஏகாம முடிவு.

அறிவான போதம் அறிவிப்போம் **ஐம்பதில்**
**குறியாக நூற்றிற்** தனைமெல்லாங் காட்டினேம்
வெறியாயலையாமல் மெதினியோர்கள்
குறியாக **வைந்நூற்றிற்** கூறினேம் பாருமே. (௧)

பாருமிந்நூல்போல பகராது மற்ற நூல்
வெதனையில்லை வெளிவிட்டேன வாதிகாள
ஆதியிற் சொன்னேன் ஆயிரமிரண்டுதான
நீக்கியாயிந நூல் பாடினேன ஐந்நூறே. (௨)

ஐந்நூறு மூன்று அருளிய போதகம்
ஐந்நூறு மூன காணடமதில் வைத மோதினேம்
ஐந்நூறு ஞானமும் அருளினேமொன்றில
ஐந்நூறு மிந்த நூல் அடங்கியபோதமே. (௩)

போத மிதெனறு புகலக்கேள் முற்குரு
சோதனை யாகச்சொல்லுமே னிந நூலில
வைதமும் ஞானமும் மேலான முப்பூவும்
வாதிகளே நீவிர் மகிழும் பொருளிதே. (௪)

பொருளென்ன ரோமர் புகட்டிய காவியம்
அருளென்ன வென்று அலைவார் சிலவாதி
மருளெனன சொல்வீர் மாட்டிய முப்பூ
திருவெ[ணடு](ன்று)சொல்லும் சகதத்திற் பெரியோரே. (௫)

பெரியோர்கள் முன்னுரைதத நூல்கட்கெல்லாம்
பூட்டிவைத்த கருக்குருவும் புகலுந்திட்சை
மருவிய தோர்பூசைமுதல் கணேசனபூசை
மயமான வயிரவர்தன் வாலை பூசை.

கருதியதோர் முப்பத்திரண்டு திட்சை
கட்டான சமாதியொடு கற்மம் எட்டும்
பருதிபோல் ஒளிவெளியும் ஆதியந்தம்
கைமுறையுஞ் செய்முறையுங்கருதுவோமே. (௬)

கருத்தறிய வேணுமென்றாற் கற்பஞ்சொல்வோம்
காயசித்தி வேணுமென்றால் ஞானஞ்சொல்வோம்
பரித்திதனிற்றீப்பிடித்த வாறுபோலப்
பகர்ந்திட்டோம் ஆதிமுதல் அந்தந்தோறும்.

இருத்திய தோர் பொருள்களெல்லா மிந்நூறன்னில்
இசைத்து வைத்தோம் உரோமருஷி யைந்நூறென்றால்
ஒருத்தருடன் பேசார்கள் பொய்சொல்லார்கள்
இந்நூலை யீயார்கள் பொருள் சொல்லாரே. (௭)

**End :**

தேகமிருந்தல்லோ சித்தெல்லாமாடலாம்
தேகத்திற் சேர்க்கலாஞ் செப்பியபூரணம்
தேகமிருந்து செய்தொழிற் செய்யலாம்
தேகத்துக்கித்தொழில் செய்முறைகாணுமே. (சகூ௩)

நந்தியெனக்கு நவின்ற முறைப்படி
அந்தியுஞ் சந்தியுமகலாமல் தீட்சை செய்
முந்தி முறையெல்லாமொழிந்தபடிக்கு
வந்தது காணும் வராதுமில்லையே. (சகூ௫)

எல்லைப்படியில் இராது வீடு
தொல்லைப்பதியிற் சுழலும் வகைகண்டு
தில்லைப்பதியிற் செண்டாடுங் கூற்றை
அல்லும் பகலும் அறிவாலறியுமே. (சகூசு)

பார்ப்பதுக்கு நாளென்று வேணுமோதான்
பாழிலே யலையாதே பாழ்செய்யாதே.
சேர்ப்பதற்குக் கைபாகந்தப்பிடாதே
திருடாதே பொருவர் கைப்பொருளோராதே
கூர்ப்பது வேமனமடங்கிப் போதம்பண்ணிப்
புகழான பூசையெல்லாம் முடித்துக்கொண்டு
வாய்ப்பகட்டுப்பேசாமல் மனமடங்கி
மகத்தான வேதைகண்டு மகிழுவாயே. (சகூஅ)

மகிழவே குகைதனிலே திருமூலர்தானும்
வாங்கிவைத்த நூல்வழியே வருவதாக்கு
எகிழவே யவர்களுடன் தர்க்கமிட்டு
என்தொழில்கள் மேலாகி யெனக்குத்தந்து
பருவமுடன் செய்வதற்குத் தனக்கறிந்த
பண்புகளுமிந்நூலிற் பதித்து வைத்து
மவுனமாயிருந்தபின்பு என்முன் நீண்டு
வாங்கி யிந்தநூல்வெளியே வகுத்தேன் பாரே. (சகூகூ)

பாரிந்த வஞ்ஞூறும் பொருளொன்றாகப்
பாடிவைத்தேன் நவசித்தர்பாதம்பெற்று
வீணிந்த நூலென்று வெளிவிடாமல்
வேதாந்தி கெட்டிபண்ணுவித்த நூலே
வணிந்த நூல் வெளியாகவிட்டேனென்று
எல்லோருங் கோபித்தார் சிவனைக்கேட்டு
நானிந்தப்படிவிட்டேன் வெளியிலேதான்
நாட்டினேன் ரோமர் அஞ்ஞூறு முற்றே. (௫௱)

இந்நூல் மூவருடக் காடலாக்கு 258 பி நம்பர் பிரதியில் வந்துள்ள நூலினும் வேறுகவுள்ளது. இதுவும் ஐந்நூறு பாடல்களாகியது. இன்னும் **ஐந்நூறு பாடல்கொண்ட மற்றொரு நூலும்** இயற்றியிருப்பதாகத் தெரிவிக்கின்றார் இந்நூலாசிரியர். அதை இந்நூலின் மூன்றாஞ் செய்யுளால் உணர்க.

## No. 2412. இராமதேவர் பதினெண் பரிபாஷை.

### IRĀMADĒVAR PADINEṆ PARIBHĀṢAI.

Pages, 11. Lines, 10 on a page.

Begins on fol. 54-a of the Ms. described under No. D. 2411.

Complete.

Same work as that described under No. 197-d.

கு.பு.—இந்நூல் மூலவருடைக் காட்லாக்கு 197-d நம்பர் பிரதியில் வந்துள்ள நூலேயாம். இப்பிரதியில் இந்நூல் முற்றுமுள்ளது. அதற்கும் இதற்கும் பாடபேதங்கள் காணப்படுகின்றன.

---

## No. 2413. இரஸவாதத்திரட்டு.

### IRASAVĀDATTIRAṬṬU.

Substance, palm-leaf. Size, $7\frac{1}{2} \times 1\frac{3}{8}$ and $8 \times 1\frac{3}{8}$ inches. Pages, 100. Lines, 7 and 8 on a page. Character, Tamil. Condition, much injured. Appearance, very old.

Complete.

A compilation of verses from various works on Alchemy.

**Beginning :**

கொங்கணர் மூவாயிரத்தில்

சிகாரம் மு . . . . ர.

வாதமாங் குணங்கள் மூன்றும்
வரிசையாய்ப் பார்க்கவேண்டில்
கோதறு குழலாள் சொன்ன
குருவுடன் கணைசன் உட்கத்
தீதறப்பூசைபண்ணிச்
சிந்தையிற் சிவங்கள் செய்ய
மாதகளொதே நின்ற
வளர்ந்திடுஞ்ஞானமே . . . (க)

*    *    *    *

உறைத்து மணமொன்றுகி யுற்றுப்பார்த்தால்
ஒன்றும் பொய்போகாது உமையாள் சொல்லுள்
விறைத்த மணம் பொய்மெய்யோ வென்று வெண்ணை
வேதமய்யார் வார்த்தை யெல்லாம் விழலாய்ப் போகும்
மூச்சி யென்னும் சிறுபிள்ளை பாரி பாதம்
மறவாதே பூசை பண்ணு வருங்காண் ஞானம்
இறச்சியென்ன மதுவென்ன வென்றுசொன்னல்
எழுபிறப்பும் நாய்ச்சென்மம் எடுப்பா . . . (ib.)

*    *    *    *

பாரிருவர்நேர்ந்தவிடம் நிராகாரந்தானை
பளிச்சென்றவிடமெல்லாம் மாயி மாயி
சேரிருவர் வெட்டவெளியப்பன் அப்பன்
சித்த சித்திரண்டிதுதான் சேர்ந்து தாண்டி
ஊரிருவர்தாமங்கே யொன்றாய்ப் போக
ஓகோ கோ உருவுமில்லை அருவுமில்லை
ஆரிருவர் என்றுக்கால் அசைவாயப்பா
அத்து நின்ற ந . . . க்குள அடர்ந்து கூடே. (பச)

வெருவாமலக்கரை யேறவேணுமென்றால்
வேதாந்த வந்தமெனறது வாதசத்தைப்பாரு
அருவானதிதுமக்கான் கூடாயோகம்
அம்மாம்மா கேசரியால் அறியவேணும்

குருவான தேசிகனை றுன்சொன்னுற் காணும்
குருவிட்டால் ஏதுமில்லை குருடாய்ப்போச்சு
திருவானவுப்பைவிட்டால் வாதம்போச்சு
செப்பினேனை . . . (பரு)

**End :**

க்ஷாரக்கட்டு :

நவச்சாரம் ஒரு பலத்துக்கு வெண்காரம் ஒரு பலம் பொடிபண்ணி நாயுருவிச்சாற்றில் கொதிக்கவைத்துச் சாரக்கட்டி . . . சம் கட்டி காய வைத்து ஒரு சேர் இந்துபபு வளையல் உப்பு நல்லுப்பு பொட்டிலுப்பு குறிச்சியுப்பு இவையும் வகைக்குச் சேர் (க) ஒன்று. பருக்கு குமரியில் போட்டுக்காய்ச்சி மெழுகுபோல் அரைத்து ஒரு கலையத்தில் கீழ் பே லிட்டு முன்சாரக்கட்டி கவசத்துடனே நடுவே வைத்து ஒரு மூடி சீலை மண் செய்து நாலுச்சாமம் சீராய் எரிக்கக்கட்டும்.

**கு.பு.**—இந்நூல் இரஸவாத விஷமான பலநூல்களிலிருந்து அங்கங்கே நுவலப்பெறும் இரஸவாத விஷயமான பாடல்கள் பலவற்றையும் ஒரு திரட்டாகத் திரட்டுவித்ததென வறியக்கிடக்கிறது. இதில் திரட்டுவித்த நூல்க ளாவன: கொங்கணர் மூவாயிரம், திருமூலர் திருமந்திரம், சட்டைமுனி நூல், கொங்கணர் நூல் என்னுமிவைகளாம். இறுதியிலே வசனநடை யிலும் ஒரு சிறிய பகுதியெழுதப்பெற்றுள்ளது. ஏடுகள் எல்லாம் மிகவும் சிதலுற்றுக்கிடக்கின்றன. சில ஏடுகள் முறிந்துங்கிடக்கின்றன. எழுத்துப் பிழைகள் உள. உள்ள ஏட்டுக்களுடைய எண்ணிக்கை தொடர்பில்லாம லிருக்கின்றன.

---

## No. 2414. கொங்கணர் கற்பம் நூறு.
## KONKANAR KARPAM NŪṞU.

Substance, palm-leaf. Size, 14¾ × 1 inches. Pages, 42. Lines, 4 and 5 on a page. Character, Tamil. Condition, injured. Appearance, old.

Incomplete.

Contains 1 to 88 Stanzas only.

Same work as that described under No, 1922,

கு.பு.—இந்நூல் டிஸ்கிரிப்டிவ் காடலாகு 1922-ஆம் நம்பரில் வந்துள்ள நூலேயாகும். அப்பிரதியில் 9 to 25 வரை பாடல்களேயிருக்கின்றன. இப்பிரதியிலோ முகதலைப்பில்லையாதலின் அதிலடங்கிய நான்கு பாடல்களை நீக்கலாக ஐந்தாவது பாடல் முதற்கொண்டு எண்பத்தெட்டாவது பாடல்வரை யுமேயிருக்கின்றன. உள்ள ஏடுகளில் பல பிளவுபட முறிந்து கிடக்கின்றன. புழுவரிக்கப்பெற்றும் இருக்கின்றன. பாடபேதங்கள் உள.

---

## No. 2415. போகர் நாலாங்காண்டம்.
## BHŌGAR NĀLĀṄKĀṆḌAM.

Substance, palm-leaf. Size, $16\frac{4}{8} \times 1\frac{2}{8}$ inches. Pages, 82. Lines, 5 on a page. Character, Tamil. Condition, injured. Appearance, old.

Incomplete.

Breaks off in 206th Stanza.

Same work as that described under No. 268-(f).

With different readings.

கு.பு.— இந்நூல் மேற்படிக் காடலாக்கு 268 (f) நம்பரில் வந்துள்ள நூலேயாகும். இப்பிரதியில் இந்நூல் இருநூற்றைந்து பாடல்களோடு முடிவடைந்து இருநூற்றாறாவது பாடல் தொடக்கத்தோடு காணப்படுகிறது. அப்பிரதிக்கும் இப்பிரதிக்கும் மிகப்பல பேதங்கள் காணப்படுகின்றன. எழுத்துப்பிழைகள் உள. ஏடுகள் மிகச்சிதைந்திருக்கின்றன.

---

## No. 2416. ஆரூடநவநீதம் (கிரகாரூடம்).
## ĀRŪḌANAVANĪTAM (GIRAHĀRŪḌAM).

Substace, palm-leaf. Size, $9 \times 1$ inches. Pages, 104. Lines, 4 and 5 on a Page. Character, Tamil. Condition, much injured. Appearance, very old.

Contains Grahārūḍam only.

Same work as that described under No. 2300.

**Beginning :**

இரகாரூடம்.

ஆதித்தனைம் புவியங்காரகன் புகனையார் குரு
வாதித்த சுக்கிரன் சனி ராகு கேது விம்மாதவர்கள்
பாருத்தில் அன்பு பரிந்தே யமைந்தாரூடநவ
நீதத்திலே இரக வாரூடந்தானிது நிச்சயமே.
நூற்றெட்டுற்றணிவதாக நூவன்றிடு மிலக்கந்தன்னை
நூற்றிரெண்பான் ரேகையை வைத்து நின்றனைநட்பின்னுமீந்து
பாற்றிடு மிச்சந்தன்னைப் பகுத்தந்தப்படியே யீந்தால்
வாய்த்த மேவிலக்கத்துக்கும் வரும் பலன் பார்த்துச்சொல்வோம்.

இதன் விபரம் : (௱அ) நூற்றெட்டு அலகை வைத்து மூன்றாய்ப் பகுந்து மூனறு தானங்களிலிருக்கிற அலகையை ஒன்பதிற் கழிக்க மூன்று தானத்திலும் மிச்சம் நின்றது பலமாம். அல்லது, மூன்றின்றுரை (௱அ)ல் குறையக்கேட்டுச் சொன்ன தொகையை (௯)ல் கழிக்கத்தானம் (க) சொன்ன தொகையை நீக்கி மீதியிலும் குறையக்கேட்டு அத்தொகையை ஒன்பதிற் கழிக்கத்தானம் (க) அத்தொகையிற் சொன்ன தொகையை நீக்கி மிச்சத் தொகையும் ஒன்பதிற் கழிக்கத்தானம் (க) தானம் மூன்றிலும் நின்ற இலக்கம் பலமாம். ஆருடச்சுருக்கத்துக்கும் இவ்விதமாக மூனறிற் கழித்த துப்பலமாம்.

*　　　*　　　*　　　*　　　*

சிங்க ஆருட அட்டவணை முற்றிற்று.

சிங்காருடம் :

ஆதித்தனறிசையிற்றுனேயவன் புத்திரனிலே மந்தன்
தீதுற்ற காலமாகிற் சேர்ந்திடும் பொருள் நட்டங்கள்
வாதுற்ற வழக்குந் தீரா மன்னவர் பகையுஞ் சேரும்
காதுற்ற கண்ணாய் சொன்னேன் காரியஞ் சிதையுமன்றே. (க)

சூரியன் றிசையிற் சோமன் தொடர்ந்துண்ணப்புகர் காலத்தில்
வீரிய மிகவுமுண்டு வேந்தர்களுறவு சேரும்
பாரினில் மழையும் பெய்யும் பாலனை பெறுவாள் பேதை
நாரியர் மணம்பலிக்கும் நன்மைகள் மிகுதியாமே. (உ)

இரவியின்றிசையிற் சேயோன் தொடர்ந்துண்ணக்குரு காலத்தில்
வருபிணி தீரும் வெல்லா வழக்குகள் வெல்லும் பூமி
பாவிய மழைகளுண்டு பார்த்திபர் சகாயமாவர்
விரவினிற் களவுங்காணும் விசேடமாம் பனைமுமுண்டே. (௩)

**End :**

விடவார்த்திசையில் மந்தன் மிகுந்துண்ண மதியின் காலம்
திடமிகு செல்வமுண்டாஞ் சேயிழை மணமும் நேரும்
படு மிகு வியாதி தீரும் பார்த்திபர் சகாயமாகும்
கடுமை சேர் களவுங் காணும் காசினி விளைவுண்டாமே. (௭௧)

செஞ்சர்ப்பத்திசையில் ராகு சேர்ந்துண்ண ரவியின் காலம்
வஞ்சிக்குச் சுரங்கள் காணும் வந்திடும் கலகந்தானும்
மிஞ்சிய வலைச்சலுண்டு வீணில்லை பொருளுஞ்சேரும்
அஞ்சிய நட்பு நீக்கி யாண்மைகள் மிகவுண்டாமே. (அ௰)

செம்பணி திசையிற் கேது தெரிந்துண்ணவவர்காலத்தில்
வம்புகள் மிகவுண்டாகி வலுத்திடுஞ் சண்டையாகும்
கெம்பிய பிணியுமுண்டாங் கெடுதி தான் காணகிறதில்லை
பின்பு நற்றெய்வத்தாலே பேரருள் மிகவுண்டாமே. (அக)

இக்கவி யெண்பதநொன்று மின்பமாயுணர்ந்துமோர்கள்
துக்கநோர் சுபாசுபங்கள் தாமறிந்துலைகத்தோர்க்கு
மிக்கவே நன்மை தீமை விளங்கிடவெடுத்துக்காட்டித்
திக்கெலாங்கீர்த்தியுண்டாய்த்திருவருள் பெற்று வாழ்வார் (க)

சத்திய ஞானனைந்த தத்துவ பதமுணர்ந்த
வித்தகர் பதத்தில் அன்பு விலகாத நியமம் பூண்ட
பத்திமையுடையோர் பாதம் பற்றி மெய்யருமை பூண்
சுத்த நற்பொய்கைநல்லூர் சுப்பையன சொன்ன நூலே. (உ)

சூரியன் சோமனை செவ்வாய் சொற்புதன் வியாழன் வெள்ளி
காரியுமி ராகு கேது கடவுளென்பதுபேர்கும்மைப
பாரினிற் சோதிடத்திற் பார்த்தெடுத்துலைகத்தார்க்கு
நேரிதாய்ச் செய்த நூலின் நிர்ணயமறிந்து பாரோ. (ந)

ஆகச்செய்யுள் (அசு) கிரகாரூடம் முற்றிற்று.

கு.பு.—இந்நூல் டிஸ்கிருப்டிவ் காடலாக்கு 2300 ஆம் நம்பர் பிரதியில் வருணிக்கப்பெற்றுள்ள நூலேயாகும். இப்பிரதியில் அப்பிரதியிலே காணப் பெறுததாயும் "கிரகாரூடம்" என்ற பெயர் வாய்ந்ததுமான பகுதி மாத் திரமே காணப்பெறுகிறது. இப்பகுதி எண்பத்தோரு பாடல்களால் அமைந்துள்ளது. பின்னர் இந்நூலினது பயனையும் ஆசிரியரது பெயர் முதலியனவற்றையும் உரைத்தும் மூன்று செய்யுட்கள் தனித்தனியே கள் கொடுக்கப்பெற்றுக் காணப்படுகின்றன. அதன் பின்னர் எட்டு ஏடு களிலே "நாமநட்சத்திரம்" என்ற தலைப்பெயருடனே ஒரு பகுதி எழுதப் பெற்றுள்ளது. இதன் ஏடுகள் முற்றும் புழுக்களால் மிகவும் அரிக்கப் பெற்றும் சிறு சிறு துண்டுகளாகவும் முறிந்தும் விழுந்து கிடக்கின்றன வாதலின் உள்ள பகுதி படித்தற்கியலாவண்ணமாயிருக்கிறது. எழுத்துப் பிழைகள் மிகவும் காணப்பெறுகின்றன. இது சோதிட நூலாராய்ச்சி யாளர்க்கு மிகவும் இயன்றியமையாததாகும்.

---

## No. 2417. செயங்கொண்டமாமுனி வளமடல்.
## JEYAṄKOṆḌAMĀMUNI VAḶAMAḌAL.

Substance, palm-leaf. Size, 14 × 1¼ inches. Pages, 54. Lines, 5 and 6 on a page. Character, Tamil. Condition, injured. Appearance, old.

Begins on fol. 1-a. The other work herein is Vaḷaiyalūr Naraśiṅgappaiya-rājan Vaḷamaḍal 28-a.

Complete.

A work, in the *Vaḷamaḍal* style, with Ādinātha of Madura for its hero.

By Jeyaṅkoṇḍamāmuni.

யானுமதனையே மேற்கொண்டு
மாதரார் செய்திட்ட வல்லபத்தைத்திடமாக
மேதத்தை விட்டுக் கிழியின்மேற்கே சாதி
பாதத்தையெல்லாமெழுதினேன் பண்டேநான்
றூதபபறக்கு முடற்குப் பொடிட பெருகச்
சாதபபடவெண்பாந்தேடி வைத்தவப்பொடியை
பேர்தப் பொலியத்தடவலாம்பூ ளையுமென்
கோதை புதுமலருங் கோததுடைய வெள்ளெருக்கும்
சோதிகக வைத்தானே தோழமெருமாவிரதி
காதுக்குங் கைக்குங் கழுத்துக்குங் கட்டுவன்
வேதித்தவனை சொனனை வெளளெலும்பிருப்பவை
போதித்தபோதே பெறலாம் மதுரை நகர்
காதற் புறஞ்சூழ் கரும்பெண்ணை மாமடலை
போதக்கொணர்ந்து புரவியாய்ச் சேர்த்ததனை
சாதி புரவியிது வென்னத்தாரணியோ
ரிதுக்கிவனுமினி நகுலனென்றுரைப்பக்
காதனோய் செய்தாரைக் காமத்திற் காண்பனவும்
யாதனுவேடமிது வென்ன வித்தெருவே
வீதிவாயெறிவேள் கண்டலூர்தொறு
மாதியாயூர்வேன்மடல்.
ஏறுவேன் நானே யிவன் நகுலனெனவே
பாறிலாச்சீர் கருணைமானபரன்—சிறி
யதிரப்பொரும் யானைபாதிநாதன்றன்
மதுரைப்புறஞ்சூழ்மடல்.

வளமடல் முற்றும்.

கு.பு.—இந்நூல் மதுரையிலிருந்த ஆதிநாதன் என்பவரைப் பாட்டுடைத் தலைவனாகக்கொண்டு இயற்றப்பெற்றதொரு "வளமடல்" என்னும் பிரபந்த விசேடமாகும். இதில் வந்துள்ள 'மடலேறல்' ஆனது ஓர் பெண்ணின்மேல் காமுற்ற ஆண் மகனால் ஏறப்பெறுவதாகும். இப்பிரதியில் இந்நூல் முற்றுமுளது. தலையேட்டிற் குறிக்கப்பெற்றிருக்கும் "செயங்கொண்ட மாமுனி வளமடல்" என்னும் இவ்வாக்கியத்தால் நூலாசிரியர் செயங்கொண்ட மாமுனியாவர் என்று தெரிகின்றது. ஏடுகள் அங்கங்கே ஒரு சிறிது சிதைந்துள.

---

## No. 2418. வளையலூர் நரசிங்கப்பையராசன் வளமடல்.
## VAḶAIYALŪR NARAŚIṄGAPPAIYARĀJAN VAḶAMAḌAL.

Pages, 54. Lines, 6 on a page.

Begins on fol. 28-a of the Ms. described under No. D. 2417.

Complete.

A work, in the *Vaḷamaḍal* style, with Vaḷaiyalūr Naraśiṅgappayyarājan for its hero.

திரை வசதியால கல்வி செய்திடலாளநதம்
பரவசமாமதத்தலையும பார்த்து விடுமின்றே.

*                    *                    *                    *                    *

விரையும் பசுந்தமிழும் வெளைசங்குஞ் செநதேலா
திரையு நிறைதரு தென் கன்னி வேந்தனை
கருணீ படைப்போர் செய கருதலரில்லாமற்
**பரணி யொழித் தெல்லாப் பிரபந்தமுங் கொண்டோன்.**
அரிவையர்வேளாகும **அப்பையதீரன்.**

*                    *                    *                    *                    *

நரசிங்கராசனெனா நாணிலங் கொண்டாட
வரிசை பெருகி வளர்ந்த பெயரான்

*                    *                    *                    *                    *

பரசிய கோதைப்பதி வளர்த்திரு
நரசிங்கமூர்த்தியை நாளும்பணிவோம்

*                    *                    *                    *                    *

குருககத்த மென்பூவ கொடியின் மறைத்தார்
விருக்கிட்டு மூர்ச்சித்து வீழ்ந்து கிடந்தேனை
தெரிக்கு மகஞ் செய்து தேவேந்திரபட்டந்
தரிக்கு மகுடந்தவறு பட்டதாமென்ன
சுரிமுக வாவி சூழ் சோலையில் நாணபட்ட
பருவாலை யார்க்குபடாக்ர்வேன் மதனனை.

*                    *                    *                    *                    *

**End :**

இருந்தைதபோல் கருக்கு யிந்த மையனுகு
அரிந்த பனைமடலேயாதியென்று கண்டேன்
அருந்தா தொழுகும் மலர்மாதவியிற் புக்க
திருந்திழை யென்களை வழியே சென்று மனத்துள்ளே
இருந்தமையால் அவ்வடிவையெல்லா மெடுத்து
தெரிந்தமயன் மின்னுட்டிலோத்தமையைச் செய்தோன்
அருந்தமையனுக வவன்றம்பிநானுகப்
பரிந்து கிழிமெற் பழுதகலத்திட்டிப்
பொருந்தமயானத்தெத்னும்பும் போதாமலேபடிக்
காந்தை யணிவாரிடத்துங் கைக்கடனுய் வாங்கி

*                    *                    *                    *                    *

கருக்கே கலனையாய்க்கட்டுப் பரியேறி
உருகு களிப்பாலே யுடல் பிளந்த புண்வாய்
திருகுகளிப்பாமோ போற்றிந்திவயப் ?
பெருமிதஞ் சேர்நாரசிங்கன் பிரியமுறுங் கோதைந்

தெருவுதொறும் மன்றுதொறுஞ் சென்று யானந்த
வரிவளையாலூர் வேண்மடல்.

முற்றும்

விக்கிரமஹு பங்குனிமீ 2உ வளமடல் எழுதி நிறைவேறியது.

(கு. - பு.)—

இந்நூல் வலையலூர் "நரசிங்கப்பையயாசன்", என்பவர்மீது இயற்றப்பெற்றதொரு "வளமடல்," என்னும் பிரபந்த விசேடமாகும். இது இன்னாரால் இயற்றப்பெற்றதென்று ஒரிடத்தும் குறிக்கப்பெறவில்லை. இப் பிரதியில் இந்நூல் முற்றும் உள்ளது. இதில் ஒவ்வொரு சாத்திரக்காரர் களையும் விளித்து உலகில் காமவின்பமே மிக்க சிறப்புற்றதாகும் என்று விளக்கிக்கூறப்பெற்றுளது. இதில் உள்ள மடலேறல் ஆண்மகனாலே றப்படுவதாகும். இந்நூலின் பாட்டுடைத்தலைவனைப் "படைப்போர் செய் கருதலரில்லாமற், பரணி யொழிந்தெல்லாப் பிரபந்தமுங்கொண் டோன்," "பாசிய கோதைப்பதி வளர்த்திரு நரசிங்க மூர்த்தியை நாளும் பணிவோம்," என்றதாகச் சிறப்பித்துக் கூறப்பெற்றிருத்தலால் அவன் மிகவும் பிரதாபம் வாய்ந்தவன் என்றும், நரசிங்கமூர்த்திக் கடவுளை வழிபடுகடவுளாகக்கொண்டவன் என்றும் விளங்குகிறது.

---

## No. 2419. அகத்தியர் வைத்தியச்செந்தூரம் முந்நூறு.
## AKATTIYAR VAIDDIYACCENDŪRAM MUNNŪṚU.

Substance, palm-leaf. Size, 15¾ × 1¼ inches. Pages, 87. Lines, 7 on a page. Character, Tamil. Condition, injured. Appearance, old.

Begins on fol. 1-a. The other works herein are Akattiyar Vaiddiyam aṛunūṛu 45-a, Vāiddiyacintamaṇi Veṇpā Nālāyiram. Dhātunidānam 125-a, Akattiyar Vaiddiyam nūṟṟumuppadu· 289-a, Irasavargam Padārthaguṇacintāmaṇi 293-a.

Complete.

Same work as that described under No. R. 149-c.

இந்நூல் மூவருடக்காடலாக்கு 149-c நம்பர் பிரதியில் வந்துள்ள நூலேயாகும். இப்பிரதியில் இந்நூல் முற்றும் உளது. பாடபேதம் உள. எழுதின முறை தெளிவாக விருக்கிறது. பிழையுள. ஏடுகள் சிதைந் துள. தலையேட்டில் "வைத்திய சிரோமணி," என்று ஒரு பெயர் குறிக்கப்பெற்றுளது.

---

## No. 2420. அகத்தியர் குருநூல்வைத்தியம் அறுநூறு.
## AKATTIYAR GURUNŪL VAIDDIYAM AṚUNŪṚU.

Pages, 160. Lines, 6 on a page.

Begins on fol. 45-a of the Ms. described under No. D. 2419.

Almost complete.

Same work as that described under No. R. 948-a.

இந்நூல் மூவருடக காடலாக்கு 948-a நமபர் பிரதியில் வந்துளள நூலேயாகும். இப்பிரதியில இந்நூலின் 1 to 531 பாடல்கஃளயிருக்கின றன. அப்பிரதிக்கும் இப்பிரதிக்கும் அநேக விடங்களில் பாடபேதங்கள் காணப்படுகின்றன. ஏடுகள் எல்லாம் புழுககளால் மிக வரிககப்பெற்றுச் சிதைநதிருககின்றன. எழுத்துப்பிழைகள உள.

---

## No. 2421. வைத்தியசிந்தாமணிவெண்பா நாலாயிரம்.

## VAIDDIYA CINTĀMAṆI VEṆPĀ NĀLĀYIRAM.

Pages, 320. Lines, 6 and 7 on a page.

Begins on fol. 125-a of the Ms. described under No. D 2419.

Incomplete.

Same work as that described under No. 948-d.

**End :**

**கர்ப்பவாலக்கிரிகை.**

கருப்பம் மாதம் முதற்றிங்களில் வயிறு நொந்தால தாமரைப்பூவில் தாதுவும் அல்லிப்பூவில் தாதுவும் நீரில் அரைத்துப் பாலிற் குடிக்கத் தீரும். இரண்டாந்திங்கள வயிறு நொந்தால் காலுங்கையும் நொந்து மிடறு நொந்திருக்கும். இதுக்குச் செங்கழுநீர்க்கிழங்கு நீரிலரைத்துப்பா லில் குடிக்கத்தீரும்.

*　　　*　　　*　　　*

ஏழாந்திங்கள் வயிறு நொந்தால் இதுக்கு மிளகு கண்டு சர்க்கரையும் நெல் பொரியும் நீரில் அரைத்துப் பாலிற் குடிக்கத்தீரும். எட்டாந்திங்கள் நொந்தால் காலுங்கையும் நொந்து மேல் நோக்கி இருக்கும். இதுக்கு மிளகுந்தாமரைப் பூவின்தாதுவும் திப்பிலியும் நீரில் அரைத்துப் பாலில் குடிக்கத்தீரும். ஒன்பதாந்திங்கள் வயிறு நொந்தால் பூரசம்பாலும் அதி ன். . . . . . . .

*　　　*　　　*　　　*

(கு. - பு.)—

இந்நூல் மூவருடக்காடலாக்கு 948-d நம்பர் பிரதியில் வந்துள்ள நூலேயாகும். இப்பிரதியில் ஷை பிரதியில் இல்லாத பகுதியுங் காணப் படுகிறது. ஆயினும் இறுதியில் அரைகுறையாகவே விடுக்கப்பெற்றிருத் தலின் இப்பிரதியிலும் இந்நூல் முற்றுப்பெறவில்லை. சில சில விடங் களில் உரையுங் கலந்து எழுதப்பெற்றுள்ளது. இதில் பல்வேறு வகையான நோய்களுக்கும் சிகிச்சை செய்யு மாறு நன்கு விளக்கப்பெற்றுளது. அங்கங்கே சில சில பகுதிக்குரிய பாடல்களின் எண்கள் சில விடத்துத் தொடர்ந்தும் தொடராமல் தனித்துங்கொடுத்து எழுதப்பெற்றிருக்கின் றன. நூல் முற்றும் உள்ள பிரதி எங்குளதோ. எழுத்துப் பிழைக ளிருக்கின்றன. ஏடுகள் சிதைந்துள.

## No. 2422. அகத்தியர் வைத்திய சூத்திரம் நூற்றுமுப்பது.
## AKATTIYAR VAIDDIYASŪTTIRAM NŪṞṞUMUPPADU.

Pages, 7. Lines, 7 on a page.
Begins on fol. 289-a of the Ms. described under No. D 2419.

Incomplete.

Contains 1 to 39 Stanzas only.

A Tamil metrical rendering of the Sanskrit work on Medicine by Śrī Vāgbhaṭa.

**Beginning :**

அகத்தியசுவாமியருளிச் செய்த வைத்தியம் நூற்றுமுப்பது.

ஆக்கிராணம் : தலைவலிக்கு : வாதத்துக்கு : எரிவாதத்துக்கு :

ஆரியமாம் வாகடத்தினுட்பொருளையாராய்ந்து
சீரியதாஞ் செந்தமிழாற் செப்பவே—கூறியதா
யுள்ள நிதான மதை யோதவருள் பெருகும்
வள்ளலே யென் மனத்து வா. (க)

வாவென சேத்துமத்தின் வந்த கிரந்திகளும்
போவெனவே நாவிலிடப்போகுமே—பாவனையாய்
வாக்கான பீனிசமு மற்றுஞ் சளிதீர
ஆக்கிராணம் பண்ணுமரத்தை. (உ)

அரத்தை சதகுப்பி சுக்கான நொச்சிச்சாற்றில்
அரைத்திழையக் காய்ச்சி யருந்த—வருத்தத்
தலைவலியும் நீரேற்றந் தன்னுடனே வாதங்
குலை குலைந்து போகுமெனக்கூறு. (ந)

* * * *

காணும் புனல் முருங்கை கழற்சிக் கோடிப்பருப்பு
பூணுங் கொத்தானுடனே போந்த சுக்கும்—வேணுமென்றே
தண்ணீர்க் கிஷாயம் பருகீர் பருகியபின்
விண்ணிலண்டவாதம் போம் விட்டு. (௪)

* * * *

**End :**

விஷத்துக்கு.

மனமே கையாந்தகரைச்சாறு மகிழ் நசியங்
கனமாய் விஷந்தீருங்காண்—சினமாக
வுப்பரைத்து வெந்நீருடனிடவே வாந்திபண்ணிற்
தப்பா விஷங்கள் சமிக்கும். (௩௯)

இந்நூல் வடமொழியிலிருக்கும் வாகடத்தைத் தமிழின் மொழிபெயர்த்ததென நூலாரம்பத்து முதற் செய்யுளால் அறியக்கிடக்கிறது. வெண்பாவால் அமைந்துளது. அகத்தியர் இயற்றியதாகக்குறித்துளது. இந்நாலின் நூற்றுமுப்பது செய்யுட்களில இப்பிரதியில 1 to 39 செய்யுட்களேயிருக்கின்றன. புழுவரிக்கப்பெற்றிருக்கிறது.

---

## No. 2423. இரஸவர்க்கம் : பதார்த்தகுண சிந்தாமணி.
## IRASAVARGAM : PADĀRTHA GUṆA CINTĀMAṆI.

Pages, 27. Lines, 7 on a page.
Begins on fol. 293-a of the Ms. described under No. D 2419.

Incomplete.

Contains 1 to 152 Stanzas only.

Same work as that described under No. 1958.

இந்நூல் டிஸ்கிருப்டிவ் காடலாக்கு 1958-வது நம்பரில் வந்துள்ள நூலேயாகும். இப்பிரதியில் 1 to 152 பாடல்களே இருக்கின்றன. ஏடுகள் சிதைந்துள. எழுத்துப்பிழைகள் காணப்படுகின்றன. பின்னர் 5 பக்கங்களில் சுக்கு லேகியம் முதலாய் மேகசஞ்சீவி யெண்ணெய் இறுவாகச் சில வைத்திய முறைகள் எழுதப்பட்டுள. அதற்குப் பிறகு சில வெற்றேடுகள் கோக்கப்பட்டுள.

---

## No. 2424. அகத்தியர் வாகடம் வசனம்.
## AKATTIYAR VĀKAṬAM PROSE.

Substance, palm-leaf. Size, 15 × 1½ inches. Pages, 638. Lines, 7 on a page
Character, Tamil. Condition, very much injured. Appearance, old.

Begins on fol. 1-a. The other work herein is Anubhava Vaiddiyamuṛai 320-a.

Complete.

Seems to be a prose rendering of a metrical work on Medicine by Akattiyar.

**Beginning :**

வீரப்ப முதலியார் வாகடம்.
அகத்தியர் அருளிய வாகடம்.

காச விஷமுட்டித்தைலம். விஷமுட்டித்தைலம். கோவிந்தன் எழுதினது :—

எட்டிப்பழஞ்சாறு ச வ எருக்கன் சமூலஞ் சாறு ச வ. எலுமிச்சம் பழச்சாறு ச வ. எருக்கம்பட்டைச்சாறு ச வ. அமுக்கிரா இலைச்சாறு ச வ. ஆமணக்கிலைச்சாறு ச வ. நொச்சியிலைச்சாறு ச வ. இலைக்கள்ளிச்சாறு ச வ. நல்லெண்ணெய் ந வ. பசுவின்பால் ந. வெள்ளுள்ளித்தைலம் ச வ. இவையெல்லாம் ஏகமாய்க் கூட்டிப் பெரிய சாலில் வார்த்துக் காய்ச்சி

நீரெல்லாஞ் சுண்டப்விடடு. இது கற்க மருந்து. தேவதாரம் அதிமதுரம் செஙகலவக கோஷ்டம் சைநதவ லவணம் இலவங்கம் இவைகள வகைக் குப்பலம் (உ) கொண்டு வந்து இடித்துச் சூரணம் பண்ணிக்காய்நத தைலத் திற்போட்டுக் இளறிக்காய்ச்சிப் பதத்திலிறக்கி வடித்துவைத்துக்கொண்டு இந்தத் தைலம் மேலுக்கிட்டுப் பிடிப்பித்துவர வாதரோகம் (அ௰சு) எண்பதது நாலு வகையும் சர்வ ரோகங்களும் தீரும்.

*　　　*　　　*　　　*

**End :**

உத்தாமணி முசுமுசுக்கை முடக்கற்றான் செம்முள்ளி கருசலாங்கண்ணி பொன்னாங்கண்ணி சிறுகீரை தழுதாழை ஆடாதோடை சங்கஇலை சஙகங் குப்பியிலை தகரையிலை செருப்படை சிலததிருயகம் கொட்டைக்கரந்தை கோழியவரை துளசி மணத்தக்காளி . . . . . . . . . . . . . . தண்ணீர்விட்டான கிழங்கு புளியறணைக்கிழங்கு வகைக்குப் பலம் அரை (உ) முள்கருணைவேர் செங்கத்தாரிவேர் சித்திரைமூலம் கிரைவேர் வகைக்கு பலம் (வ) கால். கடை மருந்து—சீரகம், கருஞ்சீரகம், சுக்கு, திப்பிலி மூலம், மிளகு, கண்ட திப்பிலி, வெந்தயம், செவியம், ஏமம், நெல்லிமுள்ளி, கடுக்காய் (௰உ) பணிரண்டு. வெள்ளைப்பூண்டு (பூ ந) பலம் மூன்று மற்றவை வகைக்குப் பலம் வ. . . . . . . . . . . . .

அகத்தியர் முன்னூறு.

பூதலத்தில் தென்பொதிகை தன்னில் வாழும்
　　பூரணமேயென் குருவே சிவனேயையா
மாதவத்தால் அஷ்டசித்தியெட்டும் பெற்ற
　　வரிசையினல் வைத்திய நூல்வகையாய்ச் சொல்வேன்
போதகத்தின் முகத்தானை கடைக்கோட்டானைப்
　　புழுக்குழியில் வீழ்ந்தானைப் புதல்வன்றன்னைச்
சாதகமாய் மனமடக்கி யறிவிற் கூட்டித்
　　தற்பரமாய் நின்ற கணபதி காப்பாமே　　(க)

கணபதியின் பதத்தாலே கீழ்முக்கோணம்
　　கரையடங்காப்பிறப்பான கடவுளாரைமாக்
கணபதியைக் குண்டலியிற் கண்டு தேறிக்
　　கனலெழுந்து வாயு பந்த புரியட்டத்தார்
கணபதியே பிறப்பிறப்பு ஆண்பெண்ணுகிக்
　　கரை கொள்ளாநாதமொடு விந்துவாகிக்
கணபதியைப் பெற்றெடுத்த விந்து வாசல்
　　கலங்குகின்ற விடு குறியுங் காணுங்காணே.　　(உ)

*　　　*　　　*　　　*

போச்சப்பா மேகமென்றதெல்லாம் போகும்
　　பூண்டதொரு நீரிறக்கம் தீருந் தீரும்
ஆச்சப்பா சீந்தியுடை சக்கரையினலே
　　ஆச்சரியம் அத்திசுரதோஷம் போகும்

போச்சப்பா நாடிநனிற் றேஷமில்லை
பிரபலமாய்ந் தேகத்தைக் குளிர்ச்சிபண்ணும்
வாச்சப்பா வைத்தியத்தின சக்கரைஎயச் சொல்வார்
வாய்ப்பேச்சே வைததியந்தான் வணங்கிக்கேளே.
பருத்தித்தோட்டம் சுப்பராயலு கையெழுத்து.
அட்டவணை—சங்கதிராவகம் கஅகூ ஆம் ஏடு.

*   •   *   *   *

வில்வாதி லேகியம் விலவாதி ரஸாயனம் கஅசுஎ ஏடு.

இந்நூல் அகத்தியர் வாகட நூலின் வசனமென்று தோன்றுகின்றது. இதில் அநேக விதமான நோய்களையும் நீக்கற்குரிய பல்வேறு வகையான மருந்துகளுடைய ஆக்கும் முறைமையினையும் பிரயோக முறைமையினையும் நன்கு எடுத்து உணர்த்துவது. இறுதியில் "அகத்தியர் முந்நூறு" என்றதான ஒரு தலைப்பெயருடன் சில பாடல்கள எழுதப்பெற்றுள. மிகுதியான பகுதி முற்றும் வசன நடையிலேயேயமைந்துளது. ஏடுகள் மிகவும் சிதலுற்றும் முறிந்தும் கிடக்கின்றன. எழுத்துப்பிழை சொற்பிழைகள் மிகுதியாகவிருக்கின்றன. இறுதியில் இந்நூலில் வந்துளள மருந்துகளுடைய முறை இன்னின்ன ஏடுகளில் வந்துள என்று அறிவிக்கும் ஒரு அட்டவணையும் எழுதப்பெற்றுக்கோக்கப்பெற்றிருக்கிறது. இடையில் 116 to 118, 162 to 170 ஆன ஏடுகள் இல்லை.

---

## No. 2425. அனுபவவைத்தியமுறை வசனம். ANUBHAVA VAIDDIYAMUṞAI PROSE.

Pages, 52. Lines, 5 on a page.

Begins on fol. 320-a of the Ms. described under No. D 2424.

Complete.

Similar to the work described under No. R. 566.

**Beginning :**

கணபதி யென்றிடக்கலங்கும் வல்வினை
கணபதி யென்றிடக் காலனுங் கைதொழும்
கணபதியென்றிடக்கருமமாதலால்
கணபதி யென்றிடக் கருமமில்லையே.

வாதம் (அடக்கு) எண்பதுக்கும் எண்ணெய் :—

கழற்சிக்காயிலைச்சாறு படி (க) வெங்காயச்சாறு படி (க) எண்ணெய் படி (க) ரஸகற்பூரம் வி. வராகனெடை 2. நேர்வாளம் சுத்திபண்ணினது பலம் இ. (மெழு)கு பதமாகக் காய்ச்சிக் கறண்டி எண்ணெய் கொடுக்கச் சகல வாயுவும் அண்டவாமுதம் தீரும். பத்தியம் இச்சாபத்தியம்.

பீனிசத்துக்குப் பாதம் எண்ணெய் :—பாதங்கொட்டை ஒரு சிராங்காய் உடைத்துப்பருப்பெடுத்து இராத்திரி ஊறப்போட்டு விடியகாலம் எடுத்து ஊறினபருப்பின் மேலிருக்கிற தோலை [நல்லா] நன்றாய்ச் சொரண்டி போட்டு வெந்நீர்விட்டுப் பஞ்சு போல் பருப்பைத்தட்டி வெள்ளைத்துணியில் வைத்துப் பால்பிழிந்துகொண்டு அப்பாலைக் கறண்டியிலூற்றிக் காய்ச்சத் தண்ணீர் நன்றாய்ச் சுண்டி எண்ணெய்பதத்தில் எடுத்து ஆற்றிச் சீசா வில் வைத்துக்கொண்டு இரண்டு வேளையும் ௩ துளி மூக்கில் விடத்தீரும். பத்தியமில்லை. ௩ நாள் விடவும்.

**End :**

வீரகன்னியென்னும் பேயின்குணம் :— [ஒணர்த்தும்] (உலர்த்தும்) வயிறு கழியும்—சீறியழும். உடம்பு கனத்திருக்கும். துணக்கென வலிக் கும். மயல் விகாரம் பண்ணும். இதுக்குப்பலி : வெறுஞ்சோறும் மீனும் இறைச்சியும் கொள்ளட்டையும் நெய்யும் பெட்டைக்குஞ்சும வேஷ்டியும் பாக்கு வெற்றிலையும் புதுச்சட்டியிலிட்டு நூலை சுற்றிச்சுடலைக்கரையில் வைப் பது. ஈசுவரன் கோவிலுக்கு நெய் விளக்கு வைக்கவும் இதுக்கு யந்திரம்.

* * * *

(கு. - பு.)—

இந்நூல், பலவகை நோய்களை நீக்கற்காம் மருந்துகளுடைய முறை யினையும், பேய்கள் பிடித்துத் துன்புறுவார்க்கு மந்திரிக்கும் முறைமை யினையும், இன்னும் தேள் விஷம் முதலான விஷங்கடகும் மந்திரிக்கு மாற்றின் முறைமையினையும் நன்கு எடுத்து உணர்த்துகின்றது. இறுதி யில் நாடி பரீட்சையையுணர்த்தும் எட்டுப்பாடல்கள் எழுதப்பெற்றிருக்கின் றன. ஏடுகள் சிதைந்திருக்கின்றன. பிழைகள உள.

---

## No. 2426. வைத்தியநூல்.
## VAIDDIYANŪL.

Substance, palm-leaf. Size, $15\frac{1}{4} \times 1\frac{1}{4}$ inches. Pages, 40. Lines, 7 on a page Character, Tamil. Condition, very much injured. Appearance, old.

Begins on fol. 1-a. The other work herein is Padārthaguṇacintāmaṇi of Teraiyar· 23-a.

Incomplete.

Similar to the work described under No. D. 1976.

**Beginning :**

வைத்திய சாத்திரம்.

நாடி பரீக்ஷையறியும் விதம்:—

நாடியமூலெ நூலை . . . . . யறிவுடன் கேட்கச் செப்புவன்யானே
வாதநாடி வகுப்பைச் சொல்லின் மோதுதலின்றி முயன்ற நடையாம்
பித்தநாடி பிசகற நேர்ந்து வொத்தநீரட்டைபோலோடி நிற்கும்
ஐயநாடிய தனடைகேட்கிற்றுய்யதவளை போறறெங்கிக்குதிக்கும்
வாதநாடி வலுப்பேறி நிற்கிலூதைய நோவு முலாவி நிற்கும்
பித்தநாடி பெருத்து நிற்கில் மெத்தவும் வேட்கை மேதை செய்யும்
ஐயநாடியது பெறநிற்கிலுய்யா ரென்றே யுகந்தறிவீரே (க)

சுரமே நச்சுநாடி துடிப்பு நாடி . . . கரமேலேறியககரத்துககேண்மோ
மூளையிற் சுரங்கள் முயன்று குதித்திடில் நாளிலு நாடி நவின்ற பித்தமாம்
அத்தியிற் சுரஙகளமர்ந்து நிற்கிலு மெத்தவு நாடியோங்கிப்பதறிடும்
தசையிற் சுரங்கள் தானேயுழன்றிடில் கையில் நாடியழன்று பித்தமாம்
நாடியேங் . . . கு . . லோடியாடி யுகந்த பித்தமாம்
தோலில் வெதுப்புத தொங்கி நின்றிடில் காலநாடிகனமிகுபித்தமாம்.

(உ)

சுரமே தணியாத தொகுத்த நாடிகேள்
உரமிலே மெத்தென வோடி நின்றதே
கைபிடிநாடி காண்கையின்னம்
மெய்குணமாதே விளம்புவன் கேண்மோ.
அனில நாடி யதுங்கி யியங்கிடில்
எனிலோர் பிணிகளியக்புடன்மீளும்
ஊதையும் பித்துமொக்க நடக்கில்
மேதை செய்யும் விளங்கிய நோதல்
ஐயும்பித்து மதுவேயியங்கிடில்
மெய்யே யெட்டில் விளங்கத்தீரும்.

* * * *

**End :**

எந்தவித குளிர் காய்ச்சலுக்கு மருந்து :—

வெள்ளைப்பாஷாணம் அவரைக்கொட்டைகனமாகச் சில கொண்டு எலுமிச்சம் பழத்தை இரண்டாக வகிர்ந்து விதையை நீக்கிப் பாஷாணத்தைச் செருகி இரண்டு வகிரும் ஒன்றுக மூடிச் சீலைமண் செய்து உலர்ந்தபின் குக்குடபுடம் போட்டு எடுத்துப் பிறகு வேப்பீர்க்கும் சிறு கீரை வேரும் பற்பாடகமும் குடி நீரிட்டு வெள்ளைப்பாஷாணம் வி. வராகனெடை (க) கற்காவிக்கல் வி. வராகனெடை (உ) இவ்விரண்டையுங் கஷாய நீர் விட்டரைத்து உழுந்து பிரமாணம் குளிகை செய்து நிழலில் உலர்த்தி இதிலொரு குளிகையை வேப்பீர்க்குச் சாற்றிலே சீரகம் கூட இடடரைத்துக் கொடுக்கத் தீரும். இரண்டு நாள் கொடுக்க எந்த வித குளிர் காய்ச்சலானாலும் நாலாமுறை முதலாகத் தீரும். சத்துவமில்லாதவனுக்காகாது. . . . வசுரமான பின் கொடுக்கவும். இதனுல் வீக்கம் பிறவாது. கழற்சிக்காயத்தூளை வெல்லத்தில் மூன்று துளி கள்ளிப்பால் விட்டுக் கொடுக்கக் குளிர் காய்ச்சல் விடும். குளிர் வந்த வேளையில் கொடுக்கவும். தீரும். நாள் மூன்று கொடுக்கவும்.

நாராயண தைலம் :—முன்னைமலே கலக்கி பாதிரிவேர் வேப்பம்வேர் முதியான் கூந்தல் அமுக்கிரு சிறு வழுதியிலே கண்டங்கத்திரி நெருஞ்சில் சிற்றுமுட்டிவேர் முட்டி குதிரை வாலி சாரடை வேர் ஓரொன்று பலம்(ய) பத்து இடித்து எட்டு மரக்கால் தண்ணீர் வார்த்து நாலொன்றுய்க் காய்ச்சி வடித்துச் சதகுப்பை தேவதாரம் சடாமாங்கிசி சைலேயம் சிற்றுமுட்டி.

சந்தணம், தகரம், கோட்டம் சஞ்சாசம் ஏலம் இலவங்கம் இலவங்கபத்திரி நாகப்பூ சிற்றரத்தை அமுக்கிரு . . . . இந்துப்பு ஒரொனறு ஒரு பலம் பசுவின் பால ஒரு தண்ணீர் விட்டான் சாறு சஉ நல்லெண்ணெய் 2உ விளக்கெண்ணெய் 2உ புங்கெண்ணெய் 2உ வேப்பெண்ணெய் 2உ இலுப்பெண்ணெய் 2உ எல்லாங்கலந்து காய்ச்சிப்பததத்தில் வடிததுக் கொள்ளவும். இதற்கு கசவாதம் சர்ப்பவாதம் . . . . .

(கு. - பு.)—

இந்நூல் பல வகையான வியாதிகளையும் விஷங்களையும் நீக்கற்குறிய அநேக வகையான நன்மருந்துகளையும் எடுத்துணர்த்துவது. முதலில் கையில் நாடிகளைக்கொண்டு வியாதிகளைப் பரீக்ஷிக்குமாற்றை விளக்கும் சில பாடல்களும் உரையில் அவற்றின் விளக்கமும் எழுதப்பெற்றிருக்கின்றன. அப்பாடல்கள் இன்னூரியற்றியதென்று நன்கு புலப்படவில்லை. ஏடுகள் பல மிகவுஞ் சிதலுற்றும் ஓடிநதும் கிரந்தபாதங்களுடனும் காணப்படுகின்றன. படித்தற்கியலாவண்ணமாயுளது. எழுத்துப் பிழைகள் உள. இறுதியில் சில வெற்றேடுகள் கோக்கப்பெற்றிருக்கின்றன. நூல் இத்துணைத்தென்று விளங்கவில்லை. அரைகுறையாக விடுக்கப்பெற்றுள்ளது

---

## No. 2427. தேரையர்பதார்த்தகுண சிந்தாமணி.
## TĒRAIYAR PADĀRTHAGUṆA CINTĀMAṆI.

Pages, 240. Lines, 7 on a page.
Begins on fol. 23-a of the Ms. described under No. D. 2426.

Incomplete.

Contains 1 to 1051 Stanzas.

Same work as that described under D. No. 1957.

**Beginning :**

தேரையர் அருளிச்செய்த இரஸ வர்க்கத்திரட்டு :
பதார்த்தகுண சிந்தாமணி
காப்பு.

பாரில் மனிதர்க்குப் பதார்த்தமுடன் மூலிகையும்
நீருலவு செந்நெறி கழ்ந்திடவே—சீரிலகு
செந்தமிழால யானுரைக்கச் செல்வ விநாயகனுங்
கந்தனு மேயென்நாவிற் காப்பு.
காப்புகலை வாணி கயிலாச பார்பதியும்
சேப்புந் திருமகளாஞ் செல்வதியு—மூப்பி
லாதி . . . . . மாதியுமை நாயகியும்
நீதி யாமெந்தன் வாய்நின்று. (உ)

* * * * *

தீத்த வெல்லாந்திரண்டவை யந்தேனொழிய
கைத்த வெல்லாம்பித்தம் புடொலொழிய—ஒத்த
புளிப்பெல்லாம் வாதம் பொய்யல்ல மெய்யாம்
ஒளி திகழு நெல்லி யொழிய. (உ)

குறிஞ்சிநிலம் :

*　　　*　　　*　　　*

தருவினிற் செடிகள் கேசரங்கள் பூக்கொழுந்திவ்வெலாம்
அரிவையே தின்றபோது . . . . . . ஞ் சாமந்தன்னில்
மருவுமாயுருவேத நல்வேதம் வகுத்திடும்படி யீதென்று
குருபரனடியைப் போற்றுங் குறு முனியுரைத்ததாமே. (௰௧)

பஞ்சபூதத்திரட்டு மண்குணம் :

*　　　*　　　*　　　*

(௭)

*　　　*　　　*　　　*

*　　　*　　　*　　　*　　　* (௬௪௰௧)

**End :**

செவ்வகத்தி : கல்லத்தி : கருங்காலி :
பொருமிய மேகச்சூடும் பொங்கிய மூலந்தீரும்
செருமிய செவ்வகத்தி திடந்தரு கல்லத்திக்கு
முருமிய கருங்காலிக்கு முலர்த்திய மேகந்தீரும்
தருமிது பன்னீருக்குத் தாகமும் வெட்டைபோமே. (௬௰)

நறுவிவெள்வேல் மூசிலை வெட்டைபோம் நறுவிலிக்கு
வெறித்திடும் பெரும்பாடெல்லாஞ் சட்டைபோங் குருதிவெள்வேல்
தணித்திருங்கிராணி மூலந்தெட்டையாம் புவியிற் பித்தந்
தெற்றிடுமதூரமாகும் பட்டையாம் மூசிலைமூலம் பலபலவியாதி
போமே. (௬௰௧)

(கு. - பு.)—

இந்நூல் டிஸ்கிருப்டிவ் கார்டலாக்கு 1957-ஆம் நம்பர் பிரதியில் வந்துள்ள நூலேயாகும். இப்பிரதியில், அப்பிரதியிலும் அச்சுப்பிரதியிலும் காணப்பெருத சில பாடல்கள் விசேடமாகக் காணப்படுகின்றன. பாடபேதங்கள் உள. இப்பிரதியிலே இந்நூலாசிரியர் குறு முனியை யெடுத்துச் சொல்லியிருக்கின்றார். அன்றியும் இதிலிருந்து இதனை வடமொழியிலிருந்து செந்தமிழின் மொழி பெயர்த்துக் கூறிய வரலாறும் புலப்படுகின்றது. “தேரையர் அருளிச்செய்த இரஸவர்க்கத்திரட்டு : பதார்த்த குண சிந்தாமணி” என்றவித் தொடர் மொழிகள் நூலேயேட்டிற் காணப் படுகின்றனவாதலின் இதனைத் தேரையர் இயற்றிப் போந்திருக்கலாமென்று தோன்றுகிறது. இப்பிரதியில் 1 முதல் 1051 பாடல்கள் காணப் படுகின்றன. இப்பிரதி வைத்திய நூலாராய்ச்சியாளர்க்கு மிகவும் இன்றியமையாததொன்ருகும். ஏடுகள் பல அடியோடு சிதலுற்றும் முறிந்தும் கிடக்கின்றன. படித்தற்கியலாவண்ணமாய் அத்துணை சிதைந்துள்ளது. எழுத்துப் பிழைகள் மிகக் காணப்படுகின்றன. கிரந்தபாதமுள,

## No. 2428. சீவகசிந்தாமணி உரையுடன்.
## JĪVAKACINTĀMAṆI (WITH COMMENTARY).

Substance, palm-leaf. Size, 13¾ × 1¼ inches. Pages, 736. Lines, 8 and 9 on a page. Character, Tamil. Condition, injured. Appearance, old.

Incomplete.

Contains 1 to 5 Ilambakas only.

Same work as that described under No. D 102.

(கு. - பு.)—

இந்நூல் டிஸ்கிருப்டிவ் காடலாக்கு 102-ஆவது நம்பர் பிரதியில் வந்துள்ளதேயாகும். இப்பிரதியில் இந்நூல் உரையுடன் ஆதியிலம்பகம் முதல் ஐந்தாவதான பதுமையாரிலம்பகத்தின் 244-ஆம் பாடல் வரையுளது. ஆறாவதான கேமசரியார் இலம்பகத்தில் 142—145 ஆகிய இந் நான்கு பாடல்கள் மாத்திரம் உள. எழுத்துக்கள் தெளிவாக வெழுதப்பெற்றிருக்கின்றன. ஏடுகள் முற்றும் புழுக்களால் அரிக்கப் பெற்றும் முறிந்துஞ் சிதைந்துங் கிடக்கின்றன. இப்பிரதி முத்துக்குமாரசாமியார் என்றவர்க்கு உரியதாயிருந்தது என்று மேலெழுதி வைத்திருக்கும் குறிப்பு ஏட்டுத்துண்டால் அறியக்கிடக்கிறது.

---

## No. 2429. நீலகண்ட வித்தியை.
## NĪLAKAṆṬHA VIDDIYAI.

Substance, palm-leaf. Size, 8¾ × 1¼ inches. Pages, 160. Lines, 5 and 6 on a page. Character, Tamil and Grantha. Condition, injured. Appearance, very old.

Begins on fol. 1-a. The other works herein are Uḍalarivilakkam 83-a, Śaṭṭaimunivākkiyam 109-a.

Complete.

Explains, in detail, how by worshipping God Śrī Nīlakaṇṭha, by repeating the spells sacred to him, etc., certain diseases can be cured, and magical powers can be acquired.

**Beginning :**

நாதமுங் கீதமும் வெளிபராநேசமும்
நாளு மைந்து பூதமும்
தாதுவு மாய்ப்புக ளீர்புகள்
வாரணமும் வேதமும்
போத மெய்ஞ்ஞான சாரமு
மேவிநின்ற பாதமு
மேதுமில வான உச்சிப்
பூரணையைப் பணிகுவனே. (க)

பூதலத்தின் தென்பொதிகை தன்னில் வாழும்
பூரணமே யெனகுருவே சிவமே அய்யா
மாதவத் தாலட்ட சித்தி யெட்டும் பெற்ற
வரிசையினால் வைத்தியநூல் வகையாய்ச் சொல்வேன்
. . . கத்தின் முகத்தானை . . கடைகெட்டானை
புழுக்குழியில் விழுந்தானைப் புதல்வன் றன்னை
சாதகமாய் மனமடங்கி அதுவிற் கூடித்
தாபரமாய் நின்ற கணபதியே காப்பே. (உ)

கணபதியின் பதத்தாலே கீழ் முக்கோணம்
கரைய . . . ங் காப்பிறப்பிறப்புங் கடவுளாற் பரம்
கணபதியை க்குண்டலிக்குள் கண்டு தேறி
கனலெழுந்த வாயுவந்தப் புரியட்டத்தால்
ணபதியே பிறப்பிறப்பு மாண் பெண்ணாகிக்
கரைகொள்ளா விந்துவொடு நாதமாகிக்
ணபதியைப் பெற்றெடுத்த விந்து வாசல்
காலாகி நின்றகுறி காணுங் காணே. (௩)

* * * *
* * * *

நகாரத்தி லொன்றே லக்கம்
நலம்பெறு மகார மெட்டு
சிகாரமே நாலாஞ் செம்மை
சிறந்திடு வகாரமஞ்சு
யகாரம் முப்பதோடு மூன்றும்பத்தே
. . . காரம் எழுத்துமாம்
உற்ற வீடன் பத்தொன்றே. (௪)

ஈராறு மஞ்சு மிருமூன்று நாமூன்றும்
சீராக மூவாறுஞ்செ . . . . . . முடன்—வாரேந்து
வட்டமுலை மாதே மதியுடனே
யிட்டழைக்கத் திரிகோணமாம். (௫)

நீலகண்ட வித்தை :

சுரத்துக்குப் பால்வண்ணமாய் நீலகண்டமாய்ச் சதுர்ப்புஜமாய் நூறுரு தியானம்பண்ணி விபூதி தரிக்கச் சுரம் நிவாரணமாம். சந்திர மண்டலத்தின் நடுவேயிருக்கிற பாவனையாய் இரண்டு கையுடையவராய் அமிர்த சந்திரனைச் சடையிலே தரித்தவராய்ப் பாவனைபண்ணி நூற்றெட்டு உரு செபிக்கத் தக்கன் கார்க்கோடகன் முதலான விடமெல்லாம் போம். அமிருத நிறத்தராய்க் காளகண்டராய் உமைஸஹிதராய்ப் பாவித்து நூற்றெட்டு உரு தியானம் பண்ணிக் கண்ணினாலே பார்க்க விஷ நாசனம்.

சந்திர மண்டலத்தின் மத்தியிலே யிருக்கிறவராய் அமிருத சந்திரனைத் தரித்தவராய்ப் பாவித்துக்கொண்டு கையிலே சலத்தை வாங்கி நூறு உருத்தியானம் பண்ணிச் சிரசிலே சலத்தை புரோட்சணம் பண்ணினால்

விஷம் பட்டு மூர்ச்சித்துக் கிடக்கிறவன் எழுநதிருப்பான. பின்னையும் முன சொன்னபடி தியானம் பண்ணிச் சலத்தைப் புரோக்ஷணம் பண்ண ஆஸந[த] (ந) விஷமும்? எழுநதிருக்கும். அமிருத சந்திரனுக்கு நடுவேயிருக்கிறவராய் அமிருதகும்பத்தை கையிலே வைத்துக்கொண்டு இருக்கிறவராய்த தியானம் பண்ணி நூற்றெட்டு உரு செபித்துச சலத்தைப புரோக்ஷிக்க விஷ அமமாம். விஷமாக்கிரகித்து மூர்ச்சித்து அசந்து கிடக்கிறவனைக் கோடி வஸ்திரததிலுலே மூடிப் பாதாதி சிரசுமட்டும் அமிருத கும்பத்திலுலே வாங்குகிற பாவனையாய்ப் பாலித்துச் சலத்தைவிட்டுச் சிரசிலேயிருந்து கால்மட்டும் அநத வஸ்திரத்தைக் கிழித்துப் போடவும். இதற்கு நூற்றெட்டுரு செபிக்க நித்திரை கொண்டாப் போலே யெழுந்திருப்பான்.

* * * *

**End :**

𑌅𑌸𑍍𑌯 𑌶𑍍𑌰𑍀 𑌨𑍀𑌲𑌕𑌣𑍍𑌠𑌰𑍁𑌦𑍍𑌰 𑌮𑌹𑌾𑌮𑌨𑍍𑌤𑍍𑌰𑌸𑍍𑌯 𑌕𑌾𑌣𑍍𑌵𑌋𑌷𑌿𑌃 | 𑌅𑌨𑍁𑌷𑍍𑌟𑍁𑌪𑍍𑌛𑌨𑍍𑌦𑌃 | 𑌨𑍀𑌲𑌕𑌣𑍍𑌠 𑌮𑌹𑌾𑌰𑍁𑌦𑍍𑌰𑍋 𑌦𑍇𑌵𑌤𑌾 | 𑌪𑍍𑌰𑍋𑌂 𑌬𑍀𑌜𑌂 𑌶𑌕𑍍𑌤𑌿𑌃 | 𑌠𑌂 𑌕𑍀𑌲𑌕𑌂 | 𑌨𑍀𑌲𑌕𑌣𑍍𑌠 𑌪𑍍𑌰𑌸𑌾𑌦𑌸𑌿𑌦𑍍𑌧𑍍𑌯𑌰𑍍𑌥𑍇 𑌜𑌪𑍇 𑌵𑌿𑌨𑌿𑌯𑍋𑌗𑌃 | [illegible] 𑌓𑌂 𑌨𑌮𑍋 𑌭𑌗𑌵𑌤𑍇 [illegible] 𑌨𑌮𑌃 | 𑌨𑍀𑌲𑌕𑌣𑍍𑌠𑌾𑌯 𑌶𑌿𑌵𑌾𑌯 𑌸𑍍𑌵𑌾𑌹𑌾 | 𑌮𑌹𑌾𑌰𑍁𑌦𑍍𑌰𑌾𑌯 𑌶𑌿𑌵𑌾𑌯 𑌵𑌷𑌟𑍍 | 𑌕𑌾𑌲𑌕𑍂𑌟 𑌵𑌿𑌷𑌭𑌕𑍍𑌷𑌣𑌾𑌯 𑌕𑌵𑌚𑌾𑌯 𑌹𑍁𑌂 | 𑌠𑌂 𑌨𑍇𑌤𑍍𑌰𑌤𑍍𑌰𑌯𑌾𑌯 𑌵𑍌𑌷𑌟𑍍 | 𑌸𑍍𑌵𑌾𑌹𑌾 𑌅𑌸𑍍𑌤𑍍𑌰𑌾𑌯 𑌫𑌟𑍍 𑌇𑌤𑌿 𑌦𑌿𑌗𑍍𑌬𑌨𑍍𑌧𑌃 | 𑌧𑍍𑌯𑌾𑌨𑌂 | [illegible] . . [illegible] 𑌶𑍍𑌰𑍀𑌨𑍀𑌲𑌕𑌣𑍍𑌠𑌂 [illegible] | 𑌓𑌂 𑌇𑌤𑌿 𑌨𑌮𑍋 𑌭𑌗𑌵𑌤𑍇 𑌨𑍀𑌲𑌕𑌣𑍍𑌠𑌾𑌯 [illegible] [𑌨𑌨𑌾] (𑌰𑌯𑌾) [illegible] 𑌨𑍀𑌲𑌕𑌣𑍍𑌠 [illegible] 𑌶𑌿[𑌤𑍇] (𑌷𑍁) | 𑌮𑌨𑍍𑌤𑍍𑌰𑌃 :—𑌪𑍍𑌰𑍋𑌂 𑌠𑌂𑌠𑌂.

* * * *

(கு-பு).—

இந்நூல் மந்திர சாஸ்திரத்தைச் சார்ந்ததாய் " நிலகண்டருத்திரன் " என்னும் திவ்விய மஹா மூர்த்தி விஷயகமான மந்திரத்தைச் செபித்துச் சித்திபெற்று அதுகொண்டு இயற்றும் பல விஷ வைத்தியம் முதலான வைத்திய முறையையும், மந்திரிக்கு மாற்றையும், வசியம் முதலாய் மாரணம் வரையில் ஆன அஷ்ட கருமங்களைச் செய்யுமாற்றையும் நன்கு வசனநடையில் விளக்குகின்றது. எழுத்துப் பிழைகள் சொற் பிழைகள் மிகவாகக் காணப்படுகின்றன. ஏடுகள் ஒரு சிறிது சிதைந்துள. ஈற்றிற் சில மந்திரமடைத்தெழுதிய சக்கிரங்களும் பொறிக்கப்பட்டிருக்கின்றன. முதலிலே மந்திர விஷயமான சில பாடல் காணப்படுகின்றன.

## No. 2430. உடலறிவிளக்கம்.
## UḌALAṞIVIḶAKKAM.

Pages, 52. Lines, 5 and 6 on a page.

Begins on fol. 83-a of the Ms. described under No. 2429.

Contains Stanzas 52 to 100 only.

Same work as that described under No. 142.

(Seems) with different readings.

(கு-பு).—

இந்நூல் மூவருடக் காடலாக்கு 142-ஆம் நம்பர் பிரதியில் வந்துள்ள நூலேயாகும். இபபிரதியில் இந்நூல் 52-ஆஞ் செய்யுளிலிருந்து (ா) நூருவது செய்யுள் வரையிலுமே இருக்கிறது. அப்பிரதிக்கும் இப்பிரதிக்கும் மிகவும் பாடபேதங்கள் காணப்படுகின்றன. ஏடுகள் ஒரு சிறிது புழு வரிக்கப்பெற்றிருக்கின்றன. எழுத்துப் பிழை மிகவாகக் காணப்படுகின்றது.

---

## No. 2431. சட்டைமுனியார் வாக்கியம்.
## ŚAṬṬAIMUNIYĀR VĀKKIYAM.

Pages, 186. Lines, 6 on a page.

Begins on fol. 109-a of the Ms. described under No. 2429.

Contains 1 to 195 Stanzas.

A treatise on Alchemy.

**Beginning :**

சட்டைமுனி வாக்கியம்.

நிர்க்குணமாய் நிர்மலமாய் நிரஞ்சன முமாகி
நேரான பூரணமாய் மனமெட்டாத
சற்குணமாய்ச் சமரசமாய்த் தானுந்தாண்டிச்
சச்சுதானந்த வெளிக்கப்பால் நின்ற
சற்குணமா யெனையாண்ட சின்மயத்தைப்போற்றி
சமரசமாம் வேதாந்த வாதஞ்சொல்வோம்
நற்குணமாய்ச் சனகாதிரிஷிகள் பாதம்
நலம்பெறவே நாவில்வைத்துப் பாடுறேனே. (க)

பாடுறேன் பராபரமெய்ய கண்டவித்துப்
பண்பாக வதுக்கடுத்தப்பரையினு டவெளிதான்
நீடுறேனிதுக்கடுத்து ஆகாச வெளிதான்
நேராகவதின் கீழே வாயுவாச்சு
நாடுறேன திங்கீழேவன்னி வன்னி
நலமான வதின்கீழே சலமுமாச்சு
ஊடுறேன திங்கீழே பூமியாச்சு
ஓகோகோ சீவனெல்லா முதித்தவாறே (உ)

வாருன சனங்களுக்கு மைந்துபூதம்
மருவியதோர் தேவதைக்கு மஞ்சுபூதம்
நாருன வசண்டமெல்லாம் ஐந்துபூதம
சதாசிவமாய் நின்றதுவு மைந்துபூதம்
கூருன யோனியெல்லாம் ஐநதுபூதம்
குறும்பரே ஐந்திரு லெல்லாமாச்சு
நீருன வேடமிட்டு உபதேசித்து
நிலையெல்லா மைநதெழுதது நிலையுமாச்சே. (ரு)

**End :**

தெரியவே குருவோடு வீரங்கூட்டிச்
சிறப்பாக வெண்குருவை வார்த்துஒன்றாய்ப்
பரியவே புறகொத்தான் மேலேபூசிப்
பங்கான வெழுசுனனக் குகையில்வைத்து
நெரியவே சீலைசெய்து புடதலைதப்போடு
நிலைமலம்போற் குருவாகுந தூரிசிநானு
மரியவேகு ருவாலே யாகுமட்டு
மறிநதமட்டுஞ் சொல்லுகிறேன நன்றாயக்கேளே. (ாகூச)

நன்றான குருப்பட்டாற் சூதங்கட்டும்
நலமான சாக்கெல்லாம் . . . . . . . .
. . . ன்றான ஒவ்வொனறின் வேதைகோடி
ஓகோகோ வெகுதூரந்து ரிசின்வேதை
வொனறுன தூரிசிஞற் றங்கம்நீறும்
காட்டுமுன்னே நாதமதுமணி போலொடுந்
தன்றுன குளிகையுமாந்தம் பனமுமாகும்
தாக்கிஞலு ருக்கின மாந்தாக்குதாக்யே. (ாகூரு)

(கு-பு.)—

இந்நூல் இரஸவாத விஷயமாய் அதற்குரிய பலவகை முறைகளையும் நன்கு விளக்குகின்றது. இதன் நூலை யேட்டிலே "சட்டை முனி வாக்கியம்" எனறதாசக் குறிக்கப்பட்டிருத்தலின் இந்நூலாசிரியர் சட்டை முனி யாவார் என்று தெரிகிறது. இநநூல் இத்துணைத்தென்று தெரியவில்லை. இப்பிரதியில் 1 முதல் 195-ஆன செய்யுட்களேயிருக்கின்றன. எழுத்துப் பிழைகள் காணப்படுகின்றன. ஏடுகள் அங்கங்கே புழுக்களால் அரிக்க பெற்றும் சில விடத்து நுனியில் முறியப்பெற்றும் இருத்தலால் கிரந்த பாதங்கள் இருக்கின்றன. இந்நூல் முடிவுற்ற பின்னர் ஒன்பது ஏடுகளில் சில மந்திர முறைகள் சக்கிரங்களுடன் எழுதப்பெற்றிருக்கின்றன. அவை யிற்றின் ஏடுகளும் மிகச் சிதைந்திருக்கின்றன.

---

## No. 2432. வைத்திய சாத்திரம்.
## VAIDDIYAŚĀTTIRAM.

Substance, palm-leaf. Size, $16\frac{1}{4} \times 1\frac{1}{2}$ inches. Pages, 580. Lines, 7 to 10 on a page. Character, Tamil. Condition, much injured. Appearance, very old. Incomplete.

Similar to the work described under No. 2410.

(கு-பு.)—

இந்நூல் டிஸ்கிருப்டிவ் காட்லாக்கு 2140. -ஆவது நம்பரில் வந்துள்ள நூலேபோன்று கண்ணோய்கள் முதலான பல்வேறு வகையான வியாதிகள் உண்டாகுமாற்றையும் அவைகளைப் போக்கற்குரிய நன்மருந்துகளைப் பிரயோகிக்கு முறையினையும் நன்கு விளக்குவது. ஏடுகள் பல மிகவுஞ் சிதலுற்றும் முறிந்துங் கிடக்கின்றன. முதலில் ஒரு சிறிய பகுதி பாடல் உருவமாகவும் மிகுதியான பகுதி பெரும்பாலும் வசன ரூபமாகவும் எழுதப்பெற்றிருக்கின்றன. இறுதியில் பல வகை வசியங்கட்கு முரிய மந்திர முறையும் எழுதப்பெற்றுள்ளது.

---

## No. 2433. சூடாமணிநிகண்டு—பதினோராவதுநிகண்டு பத உரையுடன்.

## CŪḌĀMAṆI NIKHAṆḌU—PADINŌRĀVADU NIKHAṆḌU (WITH PADAVURAI).

Substance, palm-leaf. Size, $16\frac{6}{16} \times 1\frac{1}{2}$ inches. Pages, 312. Lines, 4 to 7 on a page. Character, Tamil. Condition, injured. Appearance, old.

Complete.

Same work as that described under No. D 15.

(கு-பு.)—

இந்நூல் டிஸ்கிருப்டிவ் காட்லாக்கு 15-ஆம் நம்பரில் வந்துள்ள நூலேயாகும். இப்பிரதியில் பதினோராவது தொகுதியாகிய ஒரு சொற் பல பொருட்டொகுதி மாத்திரம் பத உரையுடன் உளது. ஏடுகள் மிகவுஞ் சிதைந்துள. எழுத்துப் பிழைகள் காணப்படுகின்றன.

---

## No. 2434. சைவானுஷ்டானவிதி.

## ŚAIVĀNUṢṬĀNA VIDHI.

Substance, palm-leaf. Size, $9\frac{1}{2} \times 1\frac{1}{4}$ inches. Pages, 9. Lines, 6 to 8 on a page. Character, Tamil. Condition, injured. Appearance, old.

Complete.

Similar to the work described under No. 1339.

**Beginning :**

அனுஷ்டான அட்டவணை.

விடிய அஞ்சு நாழிகை யென்ன எழுந்திருந்து யதா யோக்கியமாய்ச் சரீரம் சுத்திபண்ணிக்கொண்டு விபூதி தரித்துக்கொண்டு கரநியாசம் பண்ணிக் குரு உபதேசித்தப்படி சிவத்தியானம் செபஸ்தோத்ரம்பண்ணி விதித்த இடங்களிலே ஈசான திக்கில்லாமல் மற்றத் திக்குகளிலே போய் பஹிர் பூமிக்குப் போய் சௌசம்பண்ணித் தந்த சுத்தி பண்ணிக்கொண்டு ஸ்நாநம் பண்ணும்படி.

**End :**

பின்புகரசுத்தி, சரசுவதி தியானம் :—பாலேயாய் [செ] (சி) வந்த வஸ்திரமாய் நந்தியாபரணமுமாய் இப்படிப் பாவித்துச் சலத்துக்குத் தேனு முத்திரை கொடுத்துக்கையில சலம் எடுத்துக்கொண்டு சிவ அஞ்சு மந்திரத் தால் புரோக்ஷித்துக்கொள்ளவும். அஞ்சு மந்திரத்தால் (ஆசமனம்) [ணம் பண்ணவும். கையில் சலமெடுத்துக்கொண்டு சிவ சூரியனைப்பார்த்து மூல மந்திரத்தால் சலம் விடவும். ஆசமனம். தொடுமிடம் கரசுத்தி. அங்க நியாஸம் ஈணபதயெநம : என்று குட்டிக்கொண்டு பஞ்சாட்சரம் .
* * * * . . . . . . . . .

இப்படிக்குப் பிரதக்ஷிணம்பண்ணி நமஸ்காரம் பண்ணவும். சபம் பண் ணினவிடத்திலே சலம் புரோக்ஷித்துத் தொட்டு மார்பிடந் தொடவும்.

உண்டாலுடனே . . நீ . . . . முலக நீதியவனழகைக்
கண்டாலுடனே . . . . . கமலமு . . ஙகண் மூன்றும்
[மிடறும்
. . ண்டாய் நிறைந்த பொற்சடையும் வெள்ளைமதியுங்கரு
வண்டார்குழலி யிடப்பாலும் மானுமழுவு மாய்நின்றான்.

(கு-பு.)—

இந்நூல் டிஸ்கிருப்டிவ் காட்லாக்கு 1339-ஆம் நம்பர் பிரதியில் வந் துள்ள நூலே போன்று சைவர்கள் காலை யெழுந்திருந்து அவர்கள் செய்ய வேண்டிய அநுஷ்டான முறைமையினையும் அதன் முகமாய்ச் சிவார்ச் சனைசெய்யு மாற்றினையும் நன்கு விளக்குவது. உள்ள ஏடுகள் எல்லாம் மிகவும் புழுவரிக்கப்பெற்று முறிந்து கிடக்கின்றன. இதற்கு முன்னர் (8) எட்டு ஏடுகளில் சில நீதி விஷயமான சுலோகங்களும் சிவஸ்தோத்ர மான ஏழு (7) சுலோகங்களும், பின்னர் ஆறு ஏடுகளிலே சிவார்ச்சனைக் குரிய 'சிவநாமாவளியும்,' பின்னர் ஓரேட்டில் 'நட்சத்திரவடையாளம்' என்றதலைப் பெயருடன் நட்சத்திரங்களுடைய வடிவம் உணர்த்தும் ஒரு பகுதியும், அடுத்த எட்டில் மனையடி சாஸ்திர விஷயமாய் வீடுகளையடி யளந்து கட்டி அவர்கள்பெறும் ஊதியம் உணர்த்தும் ஒரு பகுதியும் எழுதப் பெற்றிருக்கின்றன. எழுத்துப் பிழைகள் மிகவாகக் காணப்படுகின்றன.

---

## No. 2435. வைத்தியநூல் வசனம்.
## VAIDDIYANŪL VACANAM.

Substance, palm-leaf. Size, $14\frac{9}{16} \times 1\frac{1}{4}$ inches. Pages, 104. Lines, 7 on a page. Character, Tamil. Condition, injured. Appearance, old.

Complete.

Similar to the work described under No. 1978.

**Beginning :**

வைத்திய நூல்.

முன்னே பாம்பு போலே பின்னே தவளை போலே நடந்தால் பைத்திய சிலேஷ்மம் என்றறியவும். பிறகு கட்டுக்குள்ளே மூஞ்சூறு போலே நடந்

தாலும் குடிலமாய் நாடி கலைந்திருந்தாலும் கொஞ்சமாய் நடந்தாலும் மெள்ள நடநதாலும் சவலைப் பிளைபோல் நடந்தாலும் இப்படி நடந்தால் சன்னிபாதம் என றறியவும்.

சாத்தியமாகாத நாடிலக்ஷணம்.

காலிபடம் போலவும், மேளமடிக்கிறுப் போலவும் பைத்திய நாடி குணம் . . . . . . . . . உ . . . . கதியாகவும் வாதநாடி மந்த மாகவும் சிலெட்டும நாடி . . ம்பு போலவும் தீவிரமாகியும் இப்படி நடந்தால் அசாத்தியமென்று அறியவும். * *

**End :**

சன்னிவாத சுரத்துக்குக் கலிக்கம்.

முந்திரிப்பழம், பேரீச்சம்பழம், திரிபலை, திரிகடுகு, கோஷ்டம், அதி மதுரம் . . . வேர், இலுப்பைப்பூவுங்கூட்டிக் கருபபஞ் சாற்றிலே அரை த்துத் தூதுவிளங்காய்ப் பிரமாணம் உண்டை பண்ணி முலைப்பாலில் ஓர் உண்டையிடச் சன்னிசுரம் தீரும். சன்னி மீறினல் முசுமுசுக்கையை முலைப் பாலிற் பிசைந்து ஓர் உண்டையிட மீளும்.

கலிக்கம்.

சாரணைவேர், முந்திரிப்பழம், . . . ஞ்சுண்டான பழத்தின் மேலே யிருக்கிற பிசின், சுக்கு, மிளகு, திப்பிலி, பச்சை துத்தம் இவையெல்லாம் சமன் கொண்டு பொடிசெய்து . . . கலுவத்திலிட்டு எலுமிச்சம்பழச் சாற்றிலாவது குப்பைமேனிச்சாற்றிலாவது உரைத்துக் கண்ணிலிட முயல கன் பிசாசு . . . எல்லாம் போம்.

* * * *
* * * *

(கு-பு.)—

இந்நூல் டிஸ்கிருப்டிவ் காடலாக்கு 1978 ஆவது நம்பர் பிரதியில் வந்துள்ள நூல் போன்றது. இது, சன்னி சுராதி அநேகவகையான வியாதிகளுக்கும் பிசாசாதிகளுக்கும் உரிய பல்வேறுவகையான மருந்து களையும் கலிக்க வகைகளையும் அந்தந்த வியாதிகளையும் நன்கு தெரிந்து கோடற்குரித்தான அவ்வோவிலக்ஷணத்தையும் குணத்தையும் எடுத்து உணர்த்துவது. முதலில் ஏரேடில்லை. நூலாரம்பத்து நாடிகளைக்கொண்டு அவ்வோவியாதிகளைப் பரீக்ஷத்துணருமாற்றையும் நன்கு விளக்குகின்றது. நடுவில் ஏடுகள் சிதைந்திருக்கின்றன. 5 பக்கங்களிலே வியாதிகளுடைய பெயர்களுக்கும் அவைகட்குரிய மருந்துகளுடைய பெயர்களுக்கும் ஒரு அட்டவணையும் எழுதப்பெற்றுளது.

---

## No. 2436. கந்தபுராணம்.
## KANDAPURĀṆAM.

Substance, palm-leaf. Size, 19 × 1½ inches. Pages, 890. Lines, 10 on a page. Character, Tamil. Condition, much injured. Appearance, old.

**Complete.**

**Same work as that described under No. 540.**

**Colophon :**

ஸ்வஸ்தி ஸ்ரீ விசயாப்புதைய கலியுக சகாப்தம் ௪௲௮௱ . . . சாலிவாகன சகாப்தம் ௬௱௬௰௬ க்குமேல் செல்லாநின்ற துன்முகிவரு புரட்டாசிமீ ௨௰௩௨ வெள்ளிக்கிழமையும் அபரபட்ச சதுர்த்தசி நாழிகை ௨௰௬ அஸ்த நட்சத்திரம் நாழி ௬௰ மாகேந்திர நாம யோகம் . . . உதிச்சு நாழிகை ௰௫ அளவில் தட்டைய நாடு புலியூரிலிருக்கும் காணியாளர் புல்லங்கை கோத்திரம் சின்னதம்பிக் கவுண்டர் மகன் பெரியதம்பிக் கவுண்டன் அவன் மகன் சின்னகுமார கவுண்டன் அவர் மகன் பழனிக் கவுண்டர் அவர் மகன் குமாரசுவாமிக் கவுண்டனுக்கு பாண்டிநாட்டினில் வாசுகிதேவநல்லூரிக்கும் காரைககாத்த வேளாளர் வகையில் பரி லேறும்பெருமாள் பிள்ளை மகன் சொக்கநாத பிள்ளை அவர் மகன் சிந்தாமணியர் பிள்ளை அவர் மகன் திருஞானசம்பந்தம் பிள்ளை அவர் மகன் சங்கரசி . . . ணியா பிள்ளை கோயம்புத்தூர் சீமையிற்புலி குத்திக் கொப்பண மன்ருடியார் சீமைகிணத்துக் கடவுக் கிராமம் சித்தூரில் கந்தபுராணம் எழுதி நிறைந்தது. சம்பூர்ணம்.

*    *    *    *

(கு-பு.)—

இந்நூல் டிஸ்கிருப்டிவ் காடலாக்கு 540 ஆவது நம்பரில் வந்துள்ள நூலேயாகும். இப்பிரதியில் இந்நூல் முற்றும் உளது. ஏடுகள் எல்லாம் புழுக்களாலே மிகவும் அரிக்கப்பெற்றும் முறிந்துங் கிடக்கின்றன. இறுதியிலே இப்பிரதியானது இன்ன காலத்தில் எழுதப்பெற்றது என்றதைக் குறிக்கும் ஒரு குறிப்பும் எழுதப் பெற்றிருக்கிறது. அநேகவிடங்களில் கிரந்த பாதங்கள் காணப்படுகின்றன. எழுத்துப்பிழைகள் உள.

---

## No. 2437. திருவரங்கத்தந்தாதி (யமகவந்தாதி.)

### (TIRUVARAṄGATTANTĀDI (YAMAKAVANTĀDI.)

Substance, palm-leaf. Size, $14\frac{3}{8} \times 1\frac{1}{4}$ inches. Pages, 106. Lines, 4 on a page. Character, Tamil. Condition, injured. Appearance, old.

Begins on fol. 1-a. The other works herein are Tirukkaruvaikkalitturaiyantādi 54-a, Tirukkaruvai Veṇpāvantādi 104-a, Śivaśivaveṇpā 131-a, Poṉvaṇṇattantādi 168-a.

Complete.

Same work as that described under No. D. 256. Text only.

(கு-பு.)—

இந்நூல், டிஸ்கிருப்டிவ் காடலாக்கு 256-ஆம் நம்பர் பிரதியில் வந்துள்ள நூலேயாகும். இப்பிரதியில் மூலமாத்திரம் முற்றும் உளது. எழுத்துத் தெளிவாக வெழுதப்பெற்றுள்ளது. "இவை முனிசாமி கையெழுத்து", என்றதான இத்தொடர்மொழி முதலேட்டிற் காணப் படுகிறது.

## No. 2438. திருக்கருவைக் கலித்துறையந்தாதி.
## TIRUKKARUVAIK KALITTUṚAIYANTĀDI.

Pages, 101. Lines, 4 on a page.
Begins on fol. 54-a of the Ms. described under No. D. 2437.

Complete.

Same work as that described under No. D. 245.

(கு-பு.)—

இந்நூல் டிஸ்கிருப்டிவ் காடலாக்கு 245—ஆம் நம்பர் பிரதியில் வந்துள்ள நூலேயாம். இப்பிரதியில் இந்நூல் முற்றும் உள்ளது. இறுதி யேட்டில் "தி. விசாகப்பெருமாளையரது கல்வி விளக்க வச்சுக்கூடத்தில் அச்சிற் பதிப்பிக்கப்பெற்றது" என்றவித்தொடர் மொழி காணப்படு கிறது. ஏடுகள் அங்கங்கே ஒரு சிறிது புழுக்களான் அரிக்கப்பெற்றிருக்கின் றன. எழுத்துக்கள் தெளிவாகவே எழுதப்பெற்றுள.

---

## No. 2439. திருக்கருவைவெண்பாவந்தாதி.
## TIRUKKARUVAI VEṆPĀVANTĀDI.

Pages, 52. Lines, 4 on a page.
Begins on fol. 104-a of the Ms. described under No. D. 2437.

Complete.

Same work as that described under No. D. 248.

(கு-பு.)—

இந்நூல், டிஸ்கிருப்டிவ் காடலாக்கு 248—ஆம் நம்பர் பிரதியில் வந்துள்ள நூலேயாகும். இப்பிரதியில் இந்நூல் முற்றும் உள்ளது. ஏடுகள் ஒரு சிறிது சிதைந்துள. எழுத்துக்கள் தெளிவாக வெழுதப் பெற்றிருக்கின்றன. 130—ஆம் ஏடு வெற்றேடாகவுளது. அச்சிடப்பெற்றது.

---

## No. 2440. சிவசிவவெண்பா.
## ŚIVAŚIVAVEṆPĀ.

Pages, 72. Lines, 5 on a page.
Begins on fol. 131-a of the Ms. described under No. D. 2437.

Complete.

A didactic poem, in the *Veṇpā* style, with the refrain *Śiva Śiva*. Every stanza embodies a quotation from the *Tirukkuṛaḷ*.

**Beginning :**

சிவசிவ வெண்பா.

காப்பு.

தெள்ளுலக நீதி சிவசிவா வென்று திரு
வள்ளுவர் வெண்பாவால் வழுத்துறவெற்—குள்ளதுணை
கந்தனி லீராறு கை மேவிய கருணைத்
தந்திமுகன் செம்பதுமத்தாள்.

(க)

அவையடக்கம்.

சிவசிவாவெண்பாரிச் செய்யுட்டிறந்தேர்ந்
தெவர்களு மென்றஞ்சாதிசைத்தேன்—கவிஞரியற்
பண்பாலுரைத்த பழமொழிமுன்னீதுமொரு
வெண்பா நூலாய் விளங்கவே. (உ)

கடவுள் வாழ்த்து.

விற்பிரம்பாலுற்ற வடுமேவ வுலகெங்குநிறை
சிற்பரனே தெய்வஞ் சிவசிவா—சொற் சிறந்த
வகர முதல வெழுத்தெல்லாமாதி
பகவன் முதற்றே யுலகு. (க)

(இப்பாட்டிற்குப் பிரமாணம்) (நூலாசிரியர் பாடல்).
இந்திரனை மௌலிதுகள்படவடித்தான் வழுதிமுன்னுளிறையோனீன்ற
கந்தனயனை குட்டுவெளிப்பட வடித்தான் றொடர்ந்தோடிக் கண்ணன்றன்னை
நந்தன் மனையடித்துளிவ் வடிகளெல்லா மெவ[ | ](னு)ற்றநாதன்மீதே
இந்துகுல மன்னரடியிருதிறமு மெவ்வுலகுமெய்திற்றன்றே. (?)

பாரதம்.

விண்ணிலுறை வானவரிலியாரடி படாதவர்
விரிஞ்சன் முதலோருததி சூழ்
மண்ணிலுறை மண்பதையிலியாரடிபடாதவர்
மனுக்கண் முதலோர்களகலாக
கண்ணிலுறை நாகர்களிலியாரடி படாதவர்கள்
கட்செவி மகிபர் முதலா
வெண்ணில் பலயோனியிலியாரடி படாதவர்
இருந்துழி யிருந்துழியரோ. (?)

திருவாரூர்ப் புராணம்.

தார்மேனின்றிலங்கு புயவழுதிமேலுந்
நன் மனை மங்கையர்மேலு மமைச்சர்மேலும்
யார்மேலுஞ் சென்று பெருஞ்சேனைமேலும்
அயன்மேலு மரன்மேலு மறவோர்மேலும்
தேர்மேலொண்பகன்மேலும் மதியின்மேலும்
சிறந்துள விந்திரன்மேலுந் தேவர்மேலும்
பார்மேலுங் கன்மேலு மரங்கண்மேலும்
பட்டதரன் மெய்யிலடிபட்டபோதே.

(இப்படியே மற்றைப் பாட்டுக்களின் பிரமாணங்களை இதனுரைப் பாடத்திற் காண்க.)

வான் சிறப்பு.

பூமலர் கோனேரியற்கும் பூவையர்க்கும் பூமழைசெய்
தீமை நலங்கண்டோஞ் சிவசிவா—பூமுற
கெடுப்பதூஉங் கெட்டார்க்குச் சார்வாய் மற்றாங்கே

நீத்தார் பெருமை.
நல்ல சுகருக்கன்றி நாணுவதென் வேதமுனி
செல்லமடவார் சிவசிவா—சொல்லி
னூரனெனனுந தோட்டியானோரைந்துங்காப்பான
வரனென்னும் வைப்புக்கோர் வித்து.

**End :**

புலவி.
சத்தியபாமை மலர் நந்திலனொறுட னுடன்
சித்தம் மகிழ்வித்தான் சிவசிவா—நித்தமுணற்
குப்பமைந்தற்றாற் புலவியது சிறிது
மிக்கற்றா னீவிடல். (௱௩௰௧)

புலவி நுணுக்கம்.
இப்பிறபபிலே பிரியேனொறை நளனோடேல்
செப்பவரிதன்றே சிவசிவா—வப்படியே
இம்மைப் பிறப்பிற் பிரியலமென்றேனக்
கண்ணிறை நீர் கொண்டனள். (௱௩௰௨)

ஊடலுவகை.
மான் மகள் பாலூடி மாமானை மழகளிற்றின்
றேனையாள் காந்தன் சிவசிவா—வேனெனிலங்
கூடுதற் காமத்திற்கின்ப மதற்கினபங்
கூடி முயங்கப்பெறின். (௱௩௰௩)

**Colophon :**

சிவசிவ வெண்பா முற்றிற்று (முற்றும்).
ஆயிரத்தறு நூற்றொன்பது பத்தா
மாண்டு சொல் சகாத்த நாளதனில்
மாயிரு ஞாலத்ததிக **மாந்தில்லைமன்றில்**
**வாழ் சென்னமல்லையர்**
பாயிருடரத்தும் பரிதிபோற்
பாவப்படரகற்றிடுஞ் **சிவ வெண்பாத்**
தீயவைபோக்கிப் பரகதிசேரச்
செப்பினன் றெளிதவத்தவர்க்கே.

**(கு-பு.)**—

இந்நூல், நீதி நூற்களைச் சார்ந்ததாய் ஒவ்வொரு பாடலிலும் "சிவ சிவா" என்பதனையும், இறுதியிரண்டடிகளிலும் திருவள்ளுவனாரது ஒவ்வொரு குறள் வெண்பாக்களையும் மகுடமாகவைத்து நூற்று முப்பத்து மூன்று பாக்களான் "தில்லைவாழ் சென்னமல்லையர்" என்னும் பெரும் புலவரால் இயற்றப்பெற்றதோர் அரிய நூலாகும். இப்பிரதியில் இந்நூல் முற்றுமுளது. இது, அச்சிடப்பெற்றிருக்கிறது. இதற்கு ஒரு உரை நூலும் உண்டு என்று கடவுள் வாழ்த்துச் செய்யுட்குப் பின்னர் காணப்பெறும் ஒரு குறிப்பால் உணரக்கிடக்கிறது. உரையாசிரியர் பெயர் இன்னதென்று குறிக்கப்பெறவில்லை. இந்நூல் சகாத்தம் ஆயிரத்தறுநூற்றுப் பத்தொன்பதா

மாண்டில் இயற்றப்பெற்றதாகும் என்பது இறுதியிற் காணப்படும் "ஆயி ரத்தறுநூற்றெருணபது பததாமாணடு சொல் சகாத்த நாளதனில்" என்ற செய்யுளால் நன்கு விளங்குகிறது. ஏடுகள் ஒரு சிறிது சிதைந்துள. இறுதியில் ஒரு வெறுமேடு உளது.

---

## No. 2441. பொன்வண்ணத்தந்தாதி.
## PONVAṆṆATTANTĀDI.

Pages, 102. Lines, 4 on a page.
Begins on fol. 168-a of the Ms. described under No. 2437,

Complete.

A poem, in the *Antādi* style, in praise of God Śiva, and beginning with the words *Pon Vaṇṇam.*

By Cēramānperumāḷ Nāyanār.

**Beginning :**

பொன்வண்ணததந்தாதி.

பொன்வண்ண மெவ்வண்ண மவ்வண்ண மேனி பொலிந்திலங்கு
மின்வண்ண மெவ்வண்ண மவ்வண்ணம் வீழ்சடை வெள்ளிக்குன்றந்
தன்வண்ண மெவ்வண்ண மவ்வண்ணமால் விடைதன்னைக்கண்ட
வென்வண்ண மெவ்வண்ண மவ்வண்ணமாகிய வீரனுக்கே. (க)

ஈசனைக் காணப்பலிகொடுசெல்ல வெற்றே யிவளோர்
பேயனைக் காமுறு பிச்சிகொலாமென்று பேதையர்முன
ருயெனை யீர்ப்பத்தமியேன்றவர வத்தாழ் சடையோன்
வாவெனைப்புல்லவா வென்றுனிமை விண்டனவாட்கண்களே. (உ)

கண்களங்கஞ்செய்யக் கைவளை சோரக்கலையுஞ்செல்ல
வொண்களங்கண்ணுநல் வேர்ப்பவொண் கொன்றையந்தாருருவவ்
பெண்களங்கம்மிவள் பேதுறு மென்பதோர் பேதை நெஞ்சம்
பண்களங்கம்மிசைப்பாட நின்றுடும் பரமனையே. (ங)

* * * *

தவனே யுலகுக்குத்தானே முதருண்படைத்தவெல்லாஞ்
சிவனே முழுதுமென்பார் சிவலோகம் பெறுவர்செய்ய
வவனே யடல்விடையூர்தி கடலிடை நஞ்சமுண்ட
பவனே யெனச்சொல்லுவாரும் பெறுவரிப்பாரிடமே. (ரு)

* * * *

உலகாளுவீர் தொழுமின் விண்ணுள் வீர்பணியின் நித்தம்
பலகாமுறுவீர் நினைமின் பரமனோ டொன்றலுற்றீர்
நலகாமல ராலருச்சியுமி ஞணரகத்து நிற்கு ?
மலகாவுறு வீரனடியாரை யடைமின்களே. (மச)

* * * *

தீவினையேனை நின்றைறவ ரிராப்பகற செத்தித்தினன
மேவின வாழ்க்கை வெறுத்தேன் வெறுததுவிட்டேன் வினையு
மோவினதுள்ளத் தெளிந்தது கள்ளங் கடிந்தடைந்தேன்
பாவின செஞ்சடை முக்கணா ரணனை பாதுங்களே. (மஅ)

* * * *

**End :**

பொய்யா நரகம் புகினுந்துறக்கினும்போந்து புக்கிங
குய்யா வுடம்பினெடுேவ நடப்ப பறப்பவென்று
நையாவிளியினும நாணிலமாளினு நாலமறைசேர்
மையார் மிடற்றுனடி மறவாவரம் வேண்டுவனே. (கூஅ)

வேண்டிய நாள்களிற் பாதியுங் கங்குண்மிகவவற்று
ளீண்டிய வெந்நோய் முதலது பிள்ளைமை மேலதுமூப்
பாண்டின வச்சம் வெகுளி யவா வழுக்காறிங்ஙனே
மாண்டன சேர்தும் வளர்புன்சடைமுக்கண மாயனையே. (கூகூ)

மாயனன் மாமணிகண்டன் வளர் சடையாற்கடிமை
யாயின தொண்டர் துறக்கும் பெறுவது சொல்லுடைத்தே
காய்சின வானைவளருங் கனகமலையருகே
போயின காக்கையுமன்றே படைத்தது பொனவ ண்ணமே. (ஈ)

பொன்வண்ணத்தந்தாதி முற்றுப்பெற்றது.

**Colophon :**

வரலாறு.

அன்று வெள்ளானையின் மீதிமையோர் சுற்றணுகுறச்செல
வன்றொண்டர் பின் பரிமேற்கொண்டு வெள்ளிமலையாண்முன்
சென்றெழிலாதி யுலாவரங்கேற்றிய சேரர்பிரான்
மன்றிடையோது பொன் வண்ணத்தந்தாதி வழங்கிதுவே.

பிரமாதீச வருஷம் ஐப்பிசிமீ உகூஉ திருவேட்டிசுவரன்பேட்டையி லிருக்கும் தாண்டவராய செட்டி குமாரன் அருணசல செட்டி குமாரன் வீரணமுடைய மகாருஷி கோத்திரம் குமாரசாமி படிக்கின்ற திருவரங் கத்தந்தாதி. திருக்கருவைக்கலித்துறையந்தாதி, திருக்கருவை வெண்பா வந்தாதி, சிவ சிவ வெண்பா, பொன்வண்ணத்தந்தாதி.

(கு-பு.) —

இந்நூல், "கழறிற்றறிவார், சேரமான் மாவெண்கோ", என்றுநிய பல் பெயர் பூண்டவரும், சுந்தரமூர்த்திநாயனாரோடு தோழமைபூண்டு திருக்கைலாயத்துக்குக் குதிரைமேலேறிச்சென்று அவண் நந்தி தேவரோடே தடையுண்டு "ஆதியுலா", வென்னும் பிரபந்தத்தைப் பாடிப் பூத் கணங்களில் தாமும் ஒருவராய் அமர்ந்திருந்து சிவ வழிபாடு செய்துகொண் டிருக்கும் பெருமைவாய்ந்தவருமான "சேரமான்பெருமாள் நாயனார்", என்னும் பெரும் புலவர் பத்தரால் சிதம்பரத்திலே இயற்றப்பெற்றது என்று இந்நூலின் இறுதியிலே காணப்பெறும் "அன்று வெள்ளானையின் மீதி மையோர்" என்ற பாடலால் அறியக்கிடக்கின்றது. இந்நூற் பெயர், மூதற் குறிப்பான் பெற்றபெயராகும். இப்பிரதியில் இந்நூல் முற்றும் உள்ளது. இதில் உள்ள பாடல்கள் எல்லாம் சில அகப்பொருட் சுவையினையுட்கொண் டனவாயும் சில பேரின்பச் சுவையினையுட்கொண்டனவாயமிருக்கின்றன.

## No. 2442. வில்லிபுத்தூரார் பாரதம் உரையுடன்.
## VILLIPUTTŪRĀR BHĀRATAM WITH COMMENTARY.

Substance, palm-leaf. Size, $15\frac{1}{2} \times 1\frac{1}{16}$ inches. Pages, 432. Lines, 7 on a page. Character, Tamil. Condition, much injured. Appearance, old.

Wants 30 pages in the Beginning.

Breaks off in Stanza 56th of Draupadimālaiyiṭṭaccarukkam.

Same work as that described under No. D. 527.

**Beginning :**

ஆதிபர்வம்.

கலியுக வியாதன் சொலக் கணபதி யெழுதும் பாடல்
பொலி . . . மிழிலாறுயிரமெனும் விருத்தம் போற்றி
சலிவறு வில்லிபுத்தூரிறைவனஞ்சாமையொளமன்
ஞெலிகெழு மறையோர் கோமானுயர்ந்தவருபபச் சொன்னான்.

உரை.—மகாவிஷ்ணுவானவர் தம்முடைய சுவரூபம் நீக்கி கலியுகத்தில் வேத சுவரூபமே வேத வியாஸராய் உதயமித்த தவராச மஹாமுனி சொல்ல விக்கினேசுவரரானவர் எழுதாநின்ற பாடலை விளங்குந் தமிழி னாலே ஆறாயிரம் விருத்தமாகப் போத்துதல் செய்து பொருள் தேடிப் பாடும் தன்மையிற் சலிப்பில்லாத வில்லிபுத்தூராழ்வார் என்னும் கவி ராச . . . ஒன்றுங் குறைவில்லாதிருக்கப்படாநின்ற கீர்த்தி பொருந் திய வைதிக பிராம்மணர்களுக்கெல்லாம் இராசாவானவர். வித்தையினா லும் கேள்வியினாலும் உயர்ச்சியை அடைந்தபேர்கள் மனது களிகூரப் பாடல் சொன்னாரென்றவாறு. (க)

**End :**

அரவநெடுங்கொடி யுயர்த்தோன் முதலாவுள்ள
வவனிபருங் கொருதனுவுக்காற்றாராகி
யுரவு மெலிந்தொழிந் மாழ்கிச் செயல்வேறின்றி
யுள்ள மழிந்திருந்ததற்பின் வானுறு மேறன்னக்
கரவுடைமாந்தணர் நாப்பணிருந்த கொற்றக்
கருமுகில் வாகனன் புதல்வன் கரியமேனி
யிரவி குலச்சிறுவனைப்போலெழுந்து மன்ற
விளங்கொடிதன் முனை நோக்கி யியம்பினானே. (ருஎ)

என்பது, கர்வமுள்ள வீற்றிருந்தவரே சர்ப்பக்கொடியுடைய துரியோதனன் முத லான ராச ராசாக்கள் எல்லாரும் அவ்விடத்திலே ஒரு வில்லுக்குத் தோற்று நின்றவர்களாய்ப் பலமுங் குறைந்து அழகு போய் ஒரு செயலு மில்லாதவர்களாய் மனதழிந்து கலங்கி நின்றபின்பு ஒளிவாகப் பிராம் மண சபை நடுவேயிருந்த வெற்றியான கரிய மேக வாகனனாகிய தேவேந் திரன் புதல்வனான அர்ச்சுனன் கறுத்த சரீரமுடைய சூரிய குலத்து ராசகுமாரனை இராமபத்திரனைப் போலே எழுந்து நின்று கலியாணத்

துரோபதைக்குத் தமையனான திருஷ்டத்யும்னனைப் பார்த்து ஆணிடிபோல வாய்த்திறந்து . . . . . . . . . .

. . . . . . . . . . . . . .

(கு-பு.) |

இந்நூல், டிஸ்கிருப்டிவ் காடலாக்கு 527 ஆம் நம்பர் பிரதியில் வந்துள்ள நூலேயாகும். இப்பிரதியில் இந்நூல் ஆதிபர்வம் த்ரௌபதி மாலையிட்டச் சருக்கம் முப்பத்தேழாவது பாடல் வரைக்கும் உளது. மூலமும் உரையுமாக விருக்கிறது. உரை இன்னாருடையதென்று விளங்கவில்லை. மிகப்பிழையுடனுள்ளது. நூலாரம்பத்து அப்பிரதியில் இல்லாத சில பாடல்கள் உள. இப்பிரதியிலிருந்து இந்நூலின்றொகை ஆறாயிரம் என்று முதற்செய்யுளாலும் அதன் உரைப் பகுதியாலும் விளங்குகிறது. ஏடுகள் பல மிகவும் முறிந்து கிடக்கின்றன. முதலில் 2–16 ஆன ஏடுகளில்லையாதலின் அதிலடங்கிய பகுதி நீங்கலாகவிருக்கிறது.

---

## No. 2443. பிங்கலநிகண்டு.

### PIṄGAḶANIKHANṬHU.

Substance, palm-leaf. Size, 16 × 1¾ inches. Pages, 136. Lines, 10 on a page. Character, Tamil. Condition, much injured. Appearance, very old.

Incomplete.

Contains 1 to 9 " Vakais "

Same work as that described under No. D. 33.

(கு-பு.)—

இந்நூல், டிஸ்கிருப்டிவ் காடலாக்கு 33 ஆம் நம்பர் பிரதியில் வந்துள்ள நூலேயாகும். இப்பிரதியில் இந்நூல் முதலிலிருந்து ஒன்பதாவது வகையான (கூ) மாப்பெயர்வகை என்ற பகுதியின் (ாரு) நூற்றைந்தாவது சூத்திரம் வரையில் இருக்கிறது. ஏடுகள் பல மிகவுஞ் சிதிலமாய் முறிந்து கிடக்கின்றன.

---

## No. 2444. இசைப்பாடற்கொத்து.

### IŚAIPPĀḌAṚKOTTU.

Substance, palm-leaf. Size, 15 3/16 × 1¾ inches. Pages, 174. Lines, 4 and 5 on a page. Character, Tamil. Condition, injured. Appearance, old.

Complete.

A collection of devotional verses in praise of God Viṣṇu, worshipped at Tirukkaṇṇaṅguḍi and other Deities.

By Bālakavi Kṛṣṇan.

**Beginning :**

இப்புத்தகம் முழுவதும் பாட்டு.

மங்களம்.

ஜயமங்களம் நித்திய சுப மங்களம் உ
மங்களம் அரவிந்தவல்லி மணவாளருக்கு
மங்களம் கிருஷ்ணாரணிய வாஸருக்கு
மங்களம் உபரிசரவஸு பணிந்த பாதருக்கு
மங்களம் லோகநாத மாயவர்க்கு ஜய மங்களம். (௧)
விண்ணவர்கள் புகழுந் திருக்கண்ணங்குடி நின்றவர்க்கு
மண்ணுலகையளந்த மணிவண்ணருக்கு ||
நண்ணுபுகழ்த் தாமோதரன் நாராயணன் புகழும்
எண்ணரிய மகிழுருவாயிருந்தவர்க்கு ஜயமங்களம். (௨)
காயிலாவகுளமுங் கண்ணுறங்காப் புளியும்
ஓய்விலாவழக்கு மூறாதகிணறும்
ஆயிருக்கவே சபித்த ஆலிநாடன்புகழும்
நேயமுத்து ரங்கராய் நின்றவர்க்கு
ஜயமங்களம் நித்திய சுபமங்களம். (௩)

**End :**

சுருவித் தொடர்ந்தலைந்தே கனதனமாதரைத்தழுவித்
தவமுற்றிடு பரிசுத்தர்கள் தமையுற்றிட நழுவி
மருவிற பல மலமாருனதடி பெற்றிட வெருவி
மனதற்றதி சூழல்மதத்திடர் கெடநற்கதி தருவீர்
பருவத்தின மடவார் துகிற்பறிக்கும் பெருமானே
பாடியுண்டிடு களவெண்டனைப்பருகும் பெருமானே
கருவிற் கிடந்தழுந்தா தருள்காட்டும் பெருமானே.
கண்ணங்குடிதனில் நின்றருள்கருணைப்பெருமானே.

**(கு-பு).—**

இது, திருக்கண்ணங்குடிப் பெருமான்மீது பாடப்பெற்ற பாடல்கள் பலவும் ஊஞ்சல் மங்களம் நாயகன் ஏசல் முதலியனவற்றையுங்கொண்டுள்ளது. 'பாலகவி கிருஷ்ணன்' என்பவரால் பாடப்பெற்றதென்று தெரிகிறது. நடுவில் ஓரேட்டில் கள்ளத்திருநாதர் விஷயமான எச்சரிக்கையொன்றும் மங்களம் ஒன்றும் எழுதப்பெற்றுள. பின்னர் திருக்கண்ணங்குடி ஞானப்பூங்கோதையார் ஊஞ்சல், திருக்கண்ணங்குடி எச்சரிக்கை, பெருமாள் தாலாட்டு, அம்மன் எச்சரிக்கை, ராமர் முத்திரை முதலியவைகளும் எழுதப்பட்டிருக்கின்றன. ஏடுகள் மிகச் சிதிலம். சில ஏடுகள் மாறிக் கோக்கப்பெற்றிருக்கின்றன.

---

## No. 2445. எம்பெருமானார் உபதேசம்.
## EMPERUMĀNĀR UPADĒŚAM.

Pages, 2. Lines, 6 on a page.
Begins on fol. 76-a of the Ms. described under No. D. 823.
Complete.

"Instructions of Śrī Emperumānār (Śrī Rāmānuja)," a *rahasya*

**Beginning :**

எம்பெருமானார் வடுகநம்பிகளுக்குப் பிரசாதித்தருளின பிரகாரம்.

பிரபத்திக்கு விரோதங்கள் எல்லாம் த்யாஜ்யம். அஃதேதென்னில் கர்மஜ்ஞான பக்திகள். அதெங்ஙனேயென்னில : கர்மங்கள் அஸாத்தியங் கள். ஸம்ஸாரிகள் அனுஷ்டிக்கிறத்துக்கு அளவுபடாது. காலலோப மந்திர லோப தந்திரலோப அர்த்தலோபங்களுமாயிருக்கும். அதிவிளம்பனமாகை யாலே ஸம்ஸாரிகள் அநுவர்த்தியாமல கர்மம் அநுஸந்திக்கிற பேர்களுக்கு விடம் ஸ்வர்கபர்யந்தமே. ஸ்வாக்கததிலே அல்பகாலமும் . . . . . கெடாமையாலே உத்பத்தி ஸ்திதி லயங்களுக்கே வரவேண்டும். வேறே வழியாகிலும் மந்த்ரோச்சாரணம் தப்பினாலும் நரகஹேது. கர்மாசரணம் நரகஹேதுவாகையாலே ஸமதி ஸாத⁴நமன்று. **கர்மமேதென்னில்** யஜ்ஞதா³ந தபோத்⁴யாந ஸந்த்⁴யாவந்த³ந பஞ்சமஹாயஜ்ஞாக்³நிஹோத்ர தீர்த்த²யாத்ரா ப்ரவேஶாத³ வாஸ க்ருச்ச்²ர சாந்த்³ராயண கவுமுதி வ்ரதோபவாஸ யாமுநாந . . . . . . .

* * * * *

நைமித்திக கர்மங்களும், ஸந்த்⁴யாவந்த³ந ஸாவித்ரீ ஜப தீர்த்²த²ஸ்நா ஸந ப்³ரஹ்மவிஶேஷவந்த³நாதி³ நித்யகர்மங்களும் ப்ரபத்திவிரோதி⁴ங் கள். **ஜ்ஞாநவைராக்³யமேதென்னில் :—** ஶாஸ்த்ர ஜ்ஞாநவைராக்³யங் களிலே ஸந்தே³ஹநிவ்ருத்தியில்லை. அவித்³யாதி³களாகையாலே. . . . . . . . . அஹங்கார மமகாரங்களாயிருக்கை யாலே ஸாத⁴மதி ஸாத⁴ந மன்று. ஆகையாலே ஜ்ஞாநம் வ்யர்த்த²ம். . ஸாத⁴மதி ஸாத⁴நமன்றென்று ஸவாஸநத்தோடே விட்டு ஆசார்யர் கள் அருளிச்செய்த அர்த்த விசேஷங்களிலே குழிப்பட்டுக் கடத் தேறி . . . . . . . . த்³வயாநுஸந்தி⁴த்து . . . . . என்கிறபடியே யாவதா³யிகாரிளாய் ஸதா³பஶ்யந்தி அநுபவிப்பார்கள்.

எம்பெருமானார் திருவடிகளே சரணம்.

(கு-பு.)—

இந்நூல் வைஷ்ணவ மதத்திலே தென்கலை ஸம்பிரதாயத்தினர்க்குரிய தொரு ரஹஸ்ய விசேஷமாகும். இதனை உடையவர் தமது பிரிய ஶிஷ்ய ரான வடுக நம்பிகளுக்கு உபதேசித்துப் போந்ததாகக் குறிப்பிட்டுளது. எழுத்துப்பிழையுடன் காணப்படுகிறது. உள்ள ஓரேடும் செல்லரிக்கப்பெற் றிருக்கிறது.

---

## No. 2446. ரஹஸ்யத்ரயப்ரகரணப்ரயோஜனம்.

## RAHASYATRAYAPRAKARAṆAPRAYŌJANAM.

Pages, 3. Lines, 6 on a page.

Begins on fol. 68-a of the Ms. described under No. D. 823.

Complete.

A religious treatise of the *Tenkalai Śrīvaiṣṇavas.*

**Beginning :**

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:। ஆழ்வார் திருவடிகளே சரணம். முமுக்ஷுவான சேதநனுக்கு மோக்ஷத்திலே இச்சையுண்டாம் போது ரஹஸ்யத்ரயம் அறியவேணும். ரஹஸ்யத்ரயமாவது:— திருமந்திரமும் த்வயமும் சரமஸ்லோகமும். இவற்றுக்கு ப்ரகரணமென்றும் ப்ரயோஜநமென்றும இரண்டாயிருக்கும். அதில் ப்ரகரணம் அறிகையாவது ரஹஸ்யத்ரயத்தில் உண்டான அர்த்த விசேஷங்களைப் பதந்தோறும் ஸூக்ஷ்மமாகவறிகை. ப்ரயோஜந மறிகையாவது தாத்பர்ய மறிகை. அதாவது, திருமந்திரத்துக்கு நாராயண பதமும் த்வயத்துக்கு சரண பதமும் சரமஸ்லோகத்துக்கு ஏக பதமும் இந்தப் பதத்ரயத்திலும் உண்டான பரமார்த்தங்களை யதார்த்தமாக வறியவேணும். . . .

* * * * *

**End :**

சரமஸ்லோகத்திலே 'மாம்' என்று தன்னைத் தொட்டுக் காட்டி 'ஏகம்', என்று கையும் ஞாநமுத்ரையுமாக ரூவாய பதத்தை யெறிட்டு இருக்கிற என்னை ஒருவனையுமே உபாயமாகப் பற்ற வேண்டும். ஆழ்வாரைப் பற்றும் போது திருவடிகளைப் பற்ற வேண்டுகையாலே எம்பெருமானாரோட்டை ஸம்பந்தமே இவ்வாத்மாவுக்கு ஜீவநம். இதுக்குப் பிரமாணமாகக் கண்ணிநுண் சிறுத்தாம்பும், நூற்றந்தாதியும் ஆம். இவ்வர்த்தம் அறியாதவனுக்கு யாவதாத்மபாவியாய் ஸம்ஸாரம் அநுவர்த்திக்கும். இவ்வர்த்த நிஷ்ணனான அதிகாரிக்கு ஆழ்வார் ப்ரபத்தியும் உடையவர் ப்ரபத்தியும் நித்யாநுஸந்தாநமாகக் கடவது.

லோகாசார்யாய நம:. ஆழ்வார் திருவடிகளே சரணம்.

குறிப்பு:—இந்நூல் வைஷ்ணவ ஸம்பிரதாயத்தைச் சார்ந்ததாக வுள்ளது. இது முமுக்ஷுவானவன் திருமந்திரம் த்வயம் சரமஸ்லோகம் என்றவைகளில் உள்ள ப்ரகரணம் ப்ரயோஜநம் என்ற இவ்வர்த்தங்களை நன்குணர்ந்து பிரபந்நனாய் அவன் வாழ்ந்திருக்குமாற்றை யெடுத்து உணர்த்துகின்றது. ஆகவே இக்குறி காரணக்குறி. இதனை இயற்றியவர் இன்னாரென்று ஓரிடத்திலும் குறிக்கப்பெறவில்லை யாயினும் இறுதியிற் காணும் ஓர் "லோகாசார்யாய நம:" என்ற சொல்லால் இதன் ஆசிரியர் பிள்ளை லோகாசார்யரா யிருக்கலாமென ஊகிக்க இடமுண்டு. சிதைந்

## No. 2447. திருவாய்மொழி ஸாராம்ச ரஹஸ்யம்.
## TIRUVĀYMOḶISĀRĀMŚARAHASYAM.

Pages, 5. Lines, 6 on a page.

Begins on fol. 69-a of the Ms. described under No. D. 823.

Complete.

Explains the true purport of the *Tiruvāymoḷi* of Śrī Nammāḻvār.

**Beginning :**

திருவாய்மொழி ஸாராம்ஸம்.
எம்பார் திருவடிகளே சரணம்.
ஆழ்வார் திருவடிகளே சரணம்.

அகில ஜகத் காரண பாவநமான வேதத்திலும் வேதோப ப்ரும்ஹணங்களாக ப்ரவ்ருத்தங்களான ஸ்ம்ருதீதிஹாஸ புராணங்களிலும் அவிசேஷமாக ப்ரஸித்தமாய் ஸர்வேச்வரனுடைய ஸர்வஸ்வம் ஆய் ஸர்வாத்மாக்களுக்கும் அவஜ்ஞநமாக விருந்துள்ள உபாதேயங்களைப் பிரதிபாதிக்கையாலே த்வயமென்று திருநாமத்தை யுடையதாய் யிருந்துள்ள வாக்யத்வயமும் பதார்த்தையும் பிரதிபாதிக்கிறது. அதாவது;—

ஸ்ரீய꞉ பதித்வமும், நாராயணத்வமும் நாராயணனுடைய ஸர்வலோக சரணமான சரணாரவிந்த யுகளமும், அதனுடைய ப்ராபகத்வமும், தத்ப்ராப்யமாய் வேதநமகமாயிருந்துள்ள ப்ராப்த்யநுகூல விஸ்ரம்பமும், ஸ்ரீமந்நாராயணனுடைய நித்யகைங்கர்ய ப்ரார்த்தநா ரூபமான நித்யஸூத்ரமும், கைங்கர்ய ப்ரதிஸம்பந்தியான ஸர்வஸ்வாமியுடைய நிரதிசயபோக்யதையும், ஸர்வஸ்வாமித்வமும், நித்யகைங்கர்யமும், கைங்கர்ய ப்ரதிபந்தக நிவ்ருத்தி ப்ரார்த்தநமும், ஆக இப்பதிநொரு விசேஷங்கள். ஸம்க்ஷேபமாயுள்ள விசேஷ ப்ரகாசகமான த்வய விசேஷத்திநுடைய விவரண ரூபமாய் ஸஹஸ்ர சாகோபநிஷத்தாயிருந்துள்ள திருவாய்மொழியின பத்துப் பத்தாலும் இப்பதார்த்தையும் நம் பூர்வாசார்யர்கள் அடைவே சேர்த்து அநுஸந்தித்துக்கொண்டு போருவர்கள். இதில் முதற்பத்தால் மலர் மகள் விரும்பும் நமரும் பெறலடிகள்,' என்றும், 'மலராள் . . னன்,' என்றும், 'திருமகளார் தனிக்கேள்வன்,' என்றும், 'திருவின் மணாளனென்னுடைச் சூழலுளான்,' என்றும், 'மாமகளார் தனிக்கேள்வன்,' என்றும், 'மயிந்நன மலராள் மணாளனை,' யென்றும் 'ஸ்ரீய꞉ பதித்வம் ' ப்ரதிபாதித மாயிற்று. இரண்டாம் பத்தால் 'எம்பெருமான் நாரணற்கென்றும்,' 'எம்பிரானெம்மான் நாராயணனாலே' என்றும், 'நாரணன் முழுவேழுலகுக்கும் நாதன்,' என்றும், நாராயணத்வம் ப்ரதிபாதிக மாயிற்று.

*　*　*　*　*

**End :**

பத்தாம்பத்தால் 'துயர்கெடுங் கடிதே,' என்றும், 'கெடுமிடராயவெல்லாம் கேசவா,' என்றும், 'எழுமையு மேதஞ் சாரா,' என்றும், 'பிணியொன்றுஞ் சாரா,' வென்றும், 'பிறவித்துயர் கெடுந்தோறும்,' என்றும், 'பண்டே யொழிந்த வினையாயினவெல்லாம்,' என்றும் "அமரா வினைகளே," என்றும், "கடுநரகம் புகலொழிந்த" என்றும், 'தானே தடுமாற்ற வினைகள்தவிர்த்தான்,' என்றும், 'பிறவிகெடுத்தேன்,' என்றும், 'அந்தி தொழுஞ் சொல்லுப்பெற்றேன்,' என்றும், 'அவாவற்று வீடுபெற்ற,' என்றும்; கைங்கர்ய ப்ரதிபந்தக நிவ்ருத்தி நிவர்த்தகத்வம் ப்ரதிபாதிதமாயிற்று. இப்படி ஸ்ரீய:பதித்வாதிகளாய் கைங்கர்ய ப்ரதிபந்தக நிவ்ருத்தி பர்யந்தங்களா யிருந்துள்ள உபாதேயார்த்தங்களை ப்ரதிபாதிக்கக் கடவதா யிருந்துள்ள வாக்யத்வயமும், திருவாய் மொழியும் ஸமஸ்தாத்மாக்களாய் ப்ரபந்ந பராயணாயிருக்கும் அதிகாரிகளுக்கு காலக்ஷேப போகமாயும் ஸம்ஸார வீர்ண நாசனமாகவும் யாவஜ்ஜீவமாக அநுஸந்தேயம்.||

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

குறிப்பு :—இந்நூல் "த்வயம்" என்ற திருமந்திரத்தில் கூறப்பெற்றுள்ள ஸ்ரீய: பதித்வம், முதலாய், கைங்கர்ய ப்ரதிபந்தக நிவ்ருத்தி நிவர்த்தகத்வம் இறுவாகக் கிடந்த பத்து அர்த்தங்களும் மேற்படி த்வயார்த்த பிரகாசகமான திருவாய்மொழியிலேயுள்ள பத்துப் பத்துக்களிலேயும் இன்னின்னவிடங்களிலே யமைந்திருக்கின்றன என்பதை யெடுத்துக்காட்டான் எடுத்து உணர்த்தி, ஆகவே அத்வயமும் திருவாய்மொழியும் பிரபந்நாதிகாரிகளுக்கு எப்போதும் அநுஸந்தேயங்களாம் என்னுமிதை யுணர்த்துகின்றது. இதனை யியற்றியவர் இன்னாரென்று விளங்கவில்லை. இது ஒரு 'ரஹஸ்ய விசேஷம்' என்று தோற்றுகிறது. முற்றுமிருக்கிறது. ஏடு சிதிலமாயுளது.

---

## No. 2448. அகத்தியர் கருக்குரு ஆயிரம்.
## AKATTIYAR KARUKKURU ĀYIRAM.

Substance, palm-leaf. Size, 12 × $1\frac{6}{8}$ inches. Pages, 312. Lines, 6, 8 and 9 on a page. Character, Tamil. Condition, injured. Appearance, old.

Incomplete.

Begins on fol. 1-a. The other work herein is Akattiyarkaruma (Vaiddiya) Sūttiram Nūṟṟaimpadu, 160-a.

**Beginning :**

. . . . . . . . மெஞ்ஞானச் சோதிபதஞ்
செப்பரிய கணேசனொடு கந்தன் காப்பு
அருவுருவாமாதியந்த வெளியுந்தாண்டி
யகண்டு நின்ற சின்மயத்தின்பாதம் போற்றிப்
பரிவுடைய பூரணத்தில் சூட்சா சூட்சப்
பதியிருந்த மனோன்மணித்தாய்ப் பாதம்போற்றிக்
குருவருளால நாதாக்கள் பாதம்போற்றிக்
கூ . . . . . வைத்திய சூத்திரந்தான் பாரே. (க)

பாரப்பா பெருநூல் தானெட்டு காண்டம்
. . . . னதைக்குறுக்கி யெண்ணூறு சொன்னேன்
சேரப்பா வாதமொடு ஞானமார்க்கம்
. . . . வைத்திய மூமட்ட கர்மம்
ஆரப்பா வகை விபரமாகச் சொன்னேன்
அறியாத பசங்களு . . . . கந்நானே
சீரப்பா கருக்குருவுந்திறந்து சொன்னேன்
செப்பியதோர் நூல்களுக்குத் திறவு கோலே. (உ)

. . . . லாகவே பாடிவைத்தேன்
செப்பரிய சித்தரெல்லாம் மெச்சிக்கொண்டு
மறவன்றி வெட்டவெளியாகச் சொன்னார்
மகத்தான பிரமருஷியாகையாலே
யுறவாடி நூல் வாங்கி யொளித்தார் சித்தர்
ஓகோகோ . . . . . . தென்று சொல்லிச்
சதுராடியவருடனே தர்க்கம் பேசிச்
சண்டையிட்டு நூல் வெளியாய் வாங்கினேனே. (ங)

பூநீர்சுத்தி.

* * * *

* * * *

(ரு)

வார்த்துமே கலக்கியந்தத்தெளிவை வாங்கி
வாகான புத்தோட்டில் லொருவாரு
வார்த்துமே ரவிதனிலே காய்ந்து உப்பாம்
மறுபடியுஞ் சுத்தசலந் தெளிந்து வாங்கி
வார்த்துமே புத்தோட்டில் ரவியிலுப்பாம்
மறுபடியுஞ் சுத்தசலத்திட்டு முன்போல்
பார்த்துமே தெளிவிறுத்து ரவியிற் காய்ந்து
பக்குவமாயிப்படியே பத்துமுறை செய்யே. (சு)

* * * *

**End :**

அஞ்சு சுண்ணாக்குகை.

வைத்ததொரு சுண்ணமென்ற முறைகட்கெல்லாம்
வளமாகச் சொல்லியதோர்க் குகையாம்பாரு
செய்திட்ட கடுங்காரக் குகைதான்கேளு
செப்பியதோர் அஞ்சு சுன்னங் கலுவத்திட்டு
ஐத்ததொரு சுண்ணும்பு நீராலாட்டி
அப்பனே வில்லைசெய்து புடத்தைப்போடு
உய்த்ததொரு வண்டவெள்ளை வர்க்கம்பாலும்
உரைததிட்ட சுண்ணும்பு நீறுங்கூட்டிக்
கைத்துமே யரைத்ததனைக் குகைதான்பண்ணிக்
கடுங்காரச் சுண்ணமொன்று குகைதானுச்சே. (எ௱ம)

ஆச்சென்ற வாதிகட்கு இதுமுன்வேணும்
அல்லாட்டால் குருமுடிக்கச் சுண்ணமாகா
வாச்சென்ற நவலோக முருக்கவேண்டில்
வச்சிரமாங் குகைதன்னைச் சொல்லக்கேளு
* * * * (எ௱மக)

(கு-பு.)—

இந்நூல் வைத்தியநூலைச் சார்ந்தது. இதுக்குக் ‘ கருக்குரு ’, என்று ஒரு பெயர் உளதாகத் தெரிகிறது. அன்றியும், நூலாரம்பத்தே “ வைத்திய சூத்திரந்தான்பாரே ”, என்றிருப்பதால் அகத்தியர் வைத்திய சூத்திரம் என்றும் ஒரு பெயர் உண்டெனத் தெரிகிறது. ஆயிரம் பாடல்களான் ஆகியது. இப்பிரதியிலே 711 செய்யுட்களேயிருக்கின்றன. இடையில் 21, 111, 112, 146, 147, 152 என்ற எண்ணமைந்த ஏடுகளில்லை. முதலேடு முறிந்துளது.

---

## No. 2449. அகத்தியர் வைத்தியசூத்திரம் நூற்றைம்பது.

### AKATTIYAR VAIDDIYASŪTTIRAM NŪṞṞAIMPADU.

**Pages, 70. Lines, 6 on a page.**

**Begins on fol. 160-a of the Ms. described under No. D. 2448.**

**Complete.**

**Same work as that described under No. R. 275 (b).**

(கு-பு.)—

இந்நூல் மூவருடக் காடலாக்கு 275 (b) நம்பர் பிரதியிலிருக்கும் நூலேயாகும். இப்பிரதியில் முற்றும் இருக்கிறது. இப்பிரதியிலே இந்நூலுக்குப் பெயர் ‘ அகத்தியர் கருமசூத்திரம் நூற்றைம்பது ’, என்றதாகக் குறித்திருக்கிறது. இப்பெயராலும் இது, வழங்கப்பெறும்போலும். ஏடுகள் சிறிது சிதைந்து இருக்கின்றன. இப்பிரதிக்கும் அப்பிரதிக்கும் பாடபேதங்கள் மிகவாகக் காணப்படுகின்றன. இதற்குப் பிறகு பத்து ஏடுகளிலே இடிமருந்து, ராமபாணம், சித்திரவல்லாதி, மேகசஞ்சீவி யெண்ணெய், வனசவில்வாதி, தாளிசக்குளிகை யென்றிம்மருந்துகளுடைய முறைகள் சில வசனத்திலும், சில செய்யுளிலுமாக எழுதப்பெற்றிருக்கின்றன. இறுதியில் இவைகளின் பெயர்களை எழுதியிருக்கிறது.

## No. 2450. கொங்கணர் கடைக்காண்டம் ஐந்நூறு.
## KONKAṆAR KAḌAIKKĀṆḌAM AINNŪṚU.

Substance, palm-leaf. Size, $9\frac{2}{8} \times 1\frac{6}{16}$ inches. Pages, 312. Lines, 8 on a page. Character, Tamil. Condition, injured. Appearance, old.

Complete.

Begins on fol. 1-a. The other works herein are Śalliyanūl 157-a. Pañcākṣara-pattu 190-a, Akattiyar Ūliākyarṛuccūttiram, Vaittiyam 194, Vaittiyanūl Prose, 188 (a) Kailāsamūrttivādanūl 208 (a), Sundarānandar atītasūttiram 310 (a).

Same work as that described under No. R. 275 (a)

(கு-பு.)—

இந்நூல் மூவருடக் காடலாக்கு 275 (a) நம்பர் பிரதியிலே வந்துள்ள நூலேயாகும். இப்பிரதியிலே முற்றும் இருக்கிறது. இப்பிரதியானது ௲௮௱௪௰-ம் வரு (1840-ம் வரு) ஜூன்மீ ௭௳ (ஜூன்மீ 7௳) ஆதிவாரக் கிழமையன்று பூர நட்சத்திரம் (சார்வரிவரு வைகாசிமீ ௨௰௭௳. ஆதிவாரக்கிழமை பூர நட்சத்திரத்திலே) யெழுதி முடிந்தது. ஐதர் சாகிபு சுவடி என்று இறுதியிற் காணப்பெறும் ஓர் வாக்கியத்தால் தெரிகிறது. ஏடுகள் ஒரு சிறிது சிதைந்துள.

---

## No. 2451. சல்லிய நூல் உரையுடன்.
## ŚALLIYANŪL WITH MEANING.

Pages, 66. Lines, 8 on a page.

Begins on fol. 157-a of the MS. described under No. D. 2450.

Complete.

Same work as that described under No. R. 353 (b).

இந்நூல் மூவருடக் காடலாக்கு 353 (b)-நம்பர் பிரதியில் வந்துள்ள நூலேயாம். இப்பிரதியில் இந்நூல் முற்றுமிருக்கிறது. எழுத்துப் பிழைகள் காணப்படுகின்றன.

---

## No. 2452. பஞ்சாட்சரப் பத்து.
## PAÑCĀKṢARAPPATTU.

Pages, 8. Lines, 8 on a page.

Begins on fol. 190 a of the MS. described under No. D. 2450.

Complete.

Same work as that described under No. R. 168 (g).

(கு. - பு.)—

இந்நூல் மூவருடக் காடலாகு 168 (g) நம்பர் பிரதியில் வந்துள்ள நூலேயாகும். இப்பிரதியில் இந்நூல் முற்றும் உள்ளது. இறுதியிலே ஒரு மந்திரமடைத்த சக்கிரமும் "௲௮௱௪௰வரு மார்கழிமீ ௰௮௳ எழுதி முடிந்தது" என்ற விச்சொற்றொடருங் காணப்பெறுகின்றன.

## No. 2453. அகத்தியர் ஊழியகற்றுச் சூத்திரம்.
AKATTIYAR ŪḶIYAKAṞṞUCCŪTTIRAM.

Pages, 8. Lines, 6 on a page.

Begins on fol. 194-a of the MS. described under No. D. 2450.

Complete.

Same work as that described under No. R. 168 (f).

இந்நூல் மூவருட் க் காடலாக்கு 168 (f) நம்பர் பிரதியில் வந்துள்ள நூலேயாகும். இப்பிரதியிலே இந்நூல் முற்றும் இருக்கிறது. இறுதியாம் ஒன்பதாஞ் செய்யுளின ஈற்றடி மாத்திரம் எழுதப்பெறவில்லை.

---

## No. 2454. வைத்தியநூல் வசனம்.
VAIDDIYANŪL PROSE.

Pages, 19. Lines, 6 on a page.

Begins on fol. 198-a of the MS. described under No. D. 2450.

Similar to the work described under D. No. 1969.

**Beginning :**

ஒடி பில்லி சூனியம் எருமலிருக்க.

கருங்குன்றி வெண்குன்றி[வெ](வி)ரை காவாளை இந்த மூன்று விரையும் புலித்தலையிலே மனிதர் தலையோட்டிலே கழுதை தலையோட்டிலே பயிர் பண்ணின வேர் சேர்த்தடைத்துத்தலையிருக்கவும். நாய்ப்பாகல் விரையை கலைக்கொம்பில் பயிர் பண்ணி வேர் சேர்த்தடைத்துக்கொள்ளவும். இடுகாட்டில் முளைத்த நீலி வேர் சிறு கீரை வேர் ஸமூலமுமிருக்கச் சூனியம் மேல்படாது. சூனியக் குணமறியும்படி:—தாளியிலை யரைத்து உடம்பெங்கும் திமிர்ந்திட்டால் உடம்பெல்லாம் உப்பும். அதுவறிந்து மருந்து கொடுக்கவும். அரசுமேல் ஆதொண்டைக்குப் பலி காப்பு ஒரு காசு காணிக்கை வைத்துத் தூபதீப நைவேத்தியஞ் செய்து சத்துள மணிகள் கட்டவும். பில்லி சூனியங் கிட்டாது.

**End :**

தேளுக்கு, எலிகடிக்கு.

ஆவாரை விரை முலைப்பாலில் அரைத்துக் கொட்டின வாயிலே பூசத் தீரும். பச்சை கற்பூரம் முலைப்பாலில் உரைத்துப் பூச மீளும். அரைத்த சுக்கு மிளகு திப்பிலி வில்வப்பட்டை கடுக்காய் தானிக்காய் நெல்லி முள்ளி இவைகள் சமன் கூட்டி மாசிப்பச்சைச்சாறு வார்த்தரைத்து உண்டை பண்ணி நிழலில் உலர்த்தி உமிழ்நீரில் உரைத்துக் கண்ணிலிடக் கொட்டின வாயில் கடுப்புத்தீரும். ஊமத்தவிலைப்பறித்துச் சாறு கொண்டு உள்ளுக்கு நல்லெண்ணெயிற் கூட்டி நக்கத் தீரும்.

விஷத்துக்குக் குறுணி வெள்ளாட்டுக் கோமயத்தில் வெற்றிலே நூறு ஊறவைத்துப் பிசைந்து வடிகட்டித் தைலமாய்க்காய்ச்சி வைத்துக்கொண்டு விஷந்தீண்டினுல் எள்ளுப் பிரமாணம் வெற்றிலேயிற்கொடுக்கத் தீரும். ஒரு தலேவலிக்கு எள்ளு அளவு கண்ணிலிடத்தீரும். விஷம் மீறிச் செத்தபேரை உச்சந்தலே உள்ளங்கால் உள்ளங்கையில் கீறிப்பார்த்து இரத்தம் பொசிவு கண்டவிடத்திலே ஒருபண வெடை தைலம் ஒட்டிவிட்டு ஒரு செவ்வாலங்கெட்டையும் உரைத்துக் கீறின விடத்திலே நடவினுல் எழுந்திருப்பார். அதன் பிறகு ஒருபண வெடை தைலம் உள்ளுக்குக் கொடுக்க விஷம் தீரும்.

(கு-பு.)—இச்சிறிய பகுதி கரு சாஸ்திரத்தைச் சார்ந்ததாய்ப் பில்லி சூன்னியம் முதலியவைகட்கும் பல்வேறு விஷங்களுக்கும் உரித்தான மருந்துகளுடைய முறைகள் பலவற்றையும் எடுத்துணர்த்துகிறது. எழுத்துப் பிழையுடன் உளது.

---

## No. 2455. கைலாசமூர்த்தி வாதநூல் முந்நூறு.
## KAILĀSAMŪRTTI VĀDANŪL MUNNŪṞU.

Pages, 202. Lines, 8 on a page.

Begins on fol. 208-a of the MS. described under No. D. 2450.

Complete.

A work on Alchemy.

**Beginning :**

கைலாசமூர்த்தி வாதநூல்.

நிர்க்குணமாய் நிர்மலமாய் நிரஞ்சனமுமாகி
நேரான பூரணத்தின் மனமெட்டாத
சற்குணமாய்ச் சமரசமாய்த் தானுந் தாண்டிச்
சச்சிதாநந்த வெளிக்கப்பால் நின்ற
தற்குணமாயெனே யாண்ட சின்மயத்தைப் போற்றிச்
சமரசமாய் வேதாந்த வாதஞ் சொல்வேன்
நற்குணமாஞ் சனகாதி ரிஷிகள்பாதம்
நலம்பெற வென் நாவில் வைத்துப் பாடுறேனே (க)

பாடுறேன் பராபரமே யகண்டவித்துப்
பண்பாக வதுக்கடுக்கப் பரையினுடைவெளிதான்
நீடுறேன் அதுக்கடுக்க வகண்ட வெளிதான்
நேராக வதின் கீழே சலமுமாச்சு
ஊடுறேன் அதின் கீழே பூமியாச்சு
ஓகோகோ சீவனெல்லா முதித்த வாறே
* * * * * * *
* * * * * * * (உ)

காணப்பா லகுவாக மூலம் பார்த்துக்
கைமுறையாய் வாசிகொண்டு ஊதியூதி
ஊணப்பா சக்கிரத்தில் நினறு நின்று
உத்தமனே நந்தி கண்டால் வாதங்காணும்
தோணப்பா வெறும் பேச்சால் வார்த்தை சொன்னால்
சுடுகாட்டிற் பிணமானால் சொல்லுக்கொக்கும்
பூணப்பா மூலத்தே யொளிகாணுமட்டும்
பொற்கொடிபோற் சுழிமுனை யுந்துறந்து போமே (௫)

**End :**

பாரப்பா விப்படியே பாஷாணங்கள்
பரிவான வறுபத்துநாலு தானும்
நேரப்பா வினமுறைபோல் மெழுகு மாகும்
நிறை நிறையாய்ப் பொன்னு முதல் வெள்ளியாகும்
ஆரப்பா வெண்ணெப்போல் திறந்து சொல்வார்
அடக்கியல்லோ விக்கருவை வழலை யென்பார்
தூரப்பா விதினாலே வழலையாச்சு
* * * * * * *
எண்ணூர் ? :
மனோன்மணியினுடைய கிருபையுண்டாகவேணும்.

முற்றும்.

**Colophon :**

ஆங்கீரச௵ மே௴ ௰௫௳ தமிழ் ௫௳ வெள்ளிக்கிழமை காலமே (௲) ஆறு மணிக்குத் திருச்சி(ரா)[ஞ]ப்புரங் கோட்டையிலிருக்கும் அப்துல் காதர்க சமேதார்க்குமாரன் அயிதர் சார் புஸ்தகம். கைலாசமூர்த்தி வாத நூல் முன்னூறு எழுதிமுடிந்தது. சென்னையிலிருக்கும் ஆனைக்குச்சேரி தாவீது வாத்தி யெழுதினது. திருச்சிற்றம்பலம் :

செவ்வாக மாலைக்கண் நிவர்த்தியாகும்
பேய்க்குச் செப்புகிறேன் அஞ்சனத்தைக்கேளு
செவ்வாகுஞ் சூதமொன்று கெந்தி மூன்று
தீர்க்க வெள்ளைச் சாரணைவேர் நாலுதூக்கிச்
செவ்வாக நேர்வாளம் நாலு தூக்கு
சேம்பீரச் சாற்றினாற் குழையவாட்டி
செவ்வாகு மான்கொம்பு சிமிழில் வைத்து
தேவையென்றால் பழஞ்சாற்றிற் றீட்டிடாயே

தீட்டினால் சன்னி விஷம் பேயு நீங்கும்
செப்புறேன் உண்மைபோல் உன்மற்றமானால்
காட்டினால் ஒழிந்திடவே மருந்தல்லாமல்
கடுகவே பிடித்தவரை விலங்குப்பூட்டி
ஊட்டியதோருலையிட்டுக் கொழுவைக்காய்ச்சி
யொழுகவிடு அவர்மேலே யண்ட வண்ட
நீட்டினால் வாய்திறந்து பேசுவான்காண்
நீராக நிக்கிரியை நீசெய்[illegible]

(கு. - பு.)—

இந்நூல் இரசவாதத்தைச் சார்ந்ததென்று தெரிகிறது. கைலாசமூர்த்தியால் இயற்றப்பெற்றது எனக் குறிக்கப்பெற்றிருக்கிறது. இங்கு முந்நூற்றிருபது பாடல்களோடு முடிவுற்றிருக்கிறது. இதில் உள்ள பாடல்களில் பல மூவருடக் காட்லாக்கு 254 (l) and 256 ஆகிய நம்பர்களிலே வந்துள்ள "கயிலாயச் சட்டைமுனி வாதநூல் ஆயிரம்," என்றவைகளிலே காணப்படுகின்றன. இது முடிந்தபின்னர் "செவ்வாக மாலேக்கண் நிவர்த்தியாகும்", எனத் தொடங்கி இரண்டு பாடல்கள் எழுதப்பெற்றிருக்கின்றன. அவை இந்த நூலேச் சார்ந்தவையோ அல்லது வேறு நூலேச் சார்ந்தவையோ ஒன்றும் தெளிவாக விளங்கவில்லே.

---

## No. 2456. சுந்தரானந்தர் அதீதசூத்திரம் முப்பத்தாறு.
## SUNDARĀNANDAR ATĪTASŪTTIRAM MUPPATTĀṚU.

Pages, 40. Lines, 5 on a page.

Begins on fol. 310-*a* of the MS. described under No. D-2450.

Complete.

Same work as that described under No. R-168-(a).

(கு. - பு.)—

இந்நூல் மூவருடக் காட்லாக்கு 168 (a) நம்பர் பிரதியிலே வந்துள்ள நூலேயாம். இப்பிரதியிலிருந்து இந்நூலுக்கு முப்பத்தாறு செய்யுளென்றும், "சுந்தரானந்தர் அதீதசூத்திரம்", என்ற மற்றொரு பெயர் உண்டென்றும் தெரிகிறது. அதில் 'சுந்தரானந்தர் விநோத சூத்திரம்', என்றதாகவிருக்கிறது. இதில் இந்நூலின் முப்பத்தாறு செய்யுட்களும் இருக்கின்றன. எழுத்துப் பிழைகளிருக்கின்றன. ஏடுகள் ஒரு சிறிது சிதைந்துள. இதுக்குப் பின்னர் "சாதிகுலஞ் சமயமதமெங்கட்கில்லே", எனவும், "உண்ணும் போதீரெழுத்தாலுயிரடங்கி", எனவுந் தொடங்கப்பெற்ற இரு சித்தநூற்பாடல்கள் எழுதப்பெற்றிருக்கின்றன.

---

## No. 2457. தன்வந்திரி கருக்கிடை நிகண்டு முந்நூறு.
## DHANVANTIRI KARUKKIḌAI NIKHAṆṬHU MUNNŪṚU.

Substance, palm-leaf. Size, 13½ × 1½ inches. Pages, 125. Lines, 6 on a page
Character, Tamil. Condition, injured. Appearance, old.

Complete.

Begins on fol. 1-*a*. The other works herein are Mōhinīmantram. 64-*a* Kuraḷimantram, 65-*a*. Madhuraivīran mantram. 66(*a*), Karuśāstīram 68-*a*.

Same work as that described under No.R. 145- (a).

(கு. - பு.)—

இந்நூல் மூவருடக் காட்லாக்கு 145 (a) நம்பர் பிரதியில் வந்துள்ள நூலேயாகும். இப்பிரதியிலே இந்நூல் முற்றிலுமிருக்கிறது. அதற்கும் இரற்கும் பிரதிபேதங்காணப்படுகின்றது. எழுத்துப் பிழைகள் காணப்படு கின்றன. ஏடுகள ஒரு சிறிது சிதைநதிருக்கின்றன.

---

## No. 2458. மோஹினி மந்திரம்.
## MŌHINI MANTIRAM.

Pages, 2. Lines, 6 on a page.

Begins on fol. 64-*a* of the MS. described under No. D-2457.

Complete.

A work on the spells and mystic diagrams sacred to Goddess Mōhinī

**Beginning :**

மோஹிநி மந்திரம்.

ஓம் ஐயும், கிலியும், ரீயும், ஸ்ரீயும், ஐயுங்கிலியும் ச்ரீயும் சர்வ மோஹினி வாவா சருவஜனங்கள வசிகரி இனனுன் மகள் இன்னுளைக் கொண்டுவா என்முனனே சுவாஹா. உருவு ௱௲ (நூறுயிரம்) பால் பழம் தேங்காய் பச்சரிசி வடைப் பருப்பு சர்க்கரை பானகம் வைத்துப் பூசிக்கவும். அகத்தியர் சாபம் நசி நசி ஆசாரியர் சாபம் நசி நசி சுக்ரசாபம் நசி நசி முப்பத்து முக்கோடி தேவர்கள் பதினெண்பேர் சாப மும் நசி நசி இம்மந்திரம் சித்திக்க சுவாஹா.

**End :**

ஓம் வம் சிம் லம் சிவாய நம : மங் யங் ரங் நங் லங் ரங் வங் சிங் வயிர வாயநம : உருவு ௲அ (ஆயிரத்து நூற்றெட்டு)

(கு. - பு.)—

இந்நூல் மந்திர சாஸ்திரத்தைச் சார்ந்ததாய் 'மோஹிநீ', யென்னும் தேவதைக்குரிய மந்திர யந்திரங்களைக்கொண்டு சித்திபெறுமாற்றை விளக்கு கின்றது. இங்கு அதற்குரிய மூன்று சக்கிரங்கள் எழுதப்பெற்றிருக்கின்றன. எழுத்துப் பிழைகளிருக்கின்றன.

---

## No. 2459. குறளி மந்திரம்.
## KURALIMANTIRAM.

Pages, 2. Lines, 5 on a page.

Begins in fol. 65-*a* of the MS. described under No. D. 2457.

Complete.

Similar to D. No. 2458.

குறளி மந்திரம் முதல் :—

சூரி வீரி சுகமான வீரி அஷ்டபுஜ லக்ஷ்மீ இஷ்டமுட னெந்நாளும் ஆகலாமா யிட்ட சூரி வீரி யென் எதிராளி நெஞ்சைக் கலக்கி மறிக்கி தரிக்கி உருக்கி மண்டையை உரி உரி. மூளையை வாங்கு வாங்கு. கழுத்தை முறி முறி காலையுங் கையையும் மார் மார். ஓம் விரி வாவா அவன் பெசிகம் நீவிந்து அவனையும் உயிரையும் உடலையும் வாங்கு வாங்கு சிசிசி சிசிசி சிசிசி விரி சிசி ஒன்றுபட்டம் கேட்கலாமோ சீக்கிரம் கொல்லு கொல்லு. முறிச்சு தரிச்சு எரிச்சு எரி எரி எரிச்சு * * * *

**End :**

எரி எரி எரி எரி எரி எரி எரி எரி முரி முரி சூரி சூரி உரி உரி உரி வீரசூரி யென்னாணை. என் குருவினாணை. உன்னாணை. உரி உரி உரிச்சு அவன் ஆவியை நீவாங்கி * *

இதற்கு மூல மந்திரம். சூரி வீரி சுக மாவிரி சுவாஹா. சூசூசூசூ உரூஅ. செபிக்கவும். பூசை முந்நாழி முச்சிரங்கை தேங்காய் பழம் கூடவைத்து ௩. சுத்தி புஷ்பம் சாம்பிராணி சூடம் தாம்பூலம் வைத்துச் சோடச உபசாரத்துடனே நைவேத்தியஞ்செய்து உரு. உரு செபிக்கவும். ஓம் சூரி சூரி சூசூ எரி எரிசூ எரி எரி எரி சக்கிரம்.

(கு. - பு.)—

இந்நூல் மந்திர சாஸ்திரத்தைச் சார்ந்ததாய்க் குறளியென்னும் தேவியினைத் தேவதையாகக்கொண்ட மந்திரங்களை நுவல்கின்றது. யந்திரமும் எழுதப்பெற்றுள்ளது. எழுத்துப் பிழையுடன் காணப்படுகிறது.

---

## No. 2460. மதுரைவீரன் மந்திரம்.
## MADURAIVĪRAN MANTIRAM.

**Pages, 3. Lines, 6 on a page.**

**Begins on fol. 66-*a* of the D 2457. MS. described under No.**

**Complete.**

**Similar to D. No. 2458.**

**Beginning :**

மதுரைவீரன் மந்திரம்:—

ஓம் வீரா உலக வீரா பொரி பொரி வீரா மாரு மாரு வீரா தாக்கு தாக்கு வீராக் காரிக் குதிரைமேலேறிக் கறந்த சவுக்குங் கையிலேந்திப் பந்தப்பட்டாலும் வீசிக்கொண்டு பரந்துவாவீரா. பாய்ந்துவாவீரா. ஈரேழு லகமும் அலறி வாவீரா. குறங்குபோல் குதித்து வாவீரா. ஆகாசமும் பூமியு மடங்கி வாவீரா. சிற்றுளியும் புதுமாட்டுத்தோலும் வாச்சுளியும் எருமைமாட்டுத்தோலும் கொண்டு ஓடிவா வீரா. நிலையைத் தாடாவீரா. நிச்சயஞ்சொல்லடா வீரா. சத்தியந் தவருத வீரா உன்னை நான் படிச்சு சேவிக்கும்போது எனக்கு வந்து நீ உறுதியாய் நிற்க. அரன் கைலாச

மூர்த்தி பாதத்தாணை. ஸ்ரீ மகாதேவர் பாதத்தாணை. உன தாய் தகப்பன் பாதத்தாணை. என் குரு பாதத்தாணை. நீ வந்து நிலையைத் தரவேண்டும். சுவாமியின் குரு பாதத்தாணை. சிவாய. மதுரைவீரன் மூல மந்திரம் ஓம், க்லீம், வீராமான கிலீ வீரா மத்தகா மத்தகா உத்தகிலி வீரா பிறந்தமூர்த்தி பக்கத்தில் வருவாய் பகர்ந்து தருவாய் இஷ்டத்தைச் சொல்வாய் ஈசன் மகனே பகர்ந்தபாலாய சிவாய உரு (ாஅ) (௲ாஅ)

**End :**

ஓம் உகந்த வீரா. உக்கிரத்து வீரா. அரும் வீரா. அமர்ந்த வீரா. உச்ச உருமத்திலே பொம்மக்காளுண்மை தேவதையின் முன்னே செசெ. சேத்தே வாடா சதியதே சகல குல வல்லபா. ஐம்கிலீம் சௌம் அடியென்றுரை அடிபிடி யென்றுரைப் பிடி அகரு பகரு ஆதி சிவன்றன் ஆணை. மதுரை மீனாட்சி பாலகா வா. வாராமலிருந்தால் அனவாதாண்டவா வாராகி கோவிலிலே உன் நிணத்தை யெடுத்து அம்மன் தன்னாணை. திருவிளக்கேற்றுவேன். சுவாமி யென் குருவினாணை சுவாஹா ( )

(கு. - பு.)—

இச் சிறு நூல் மந்திர சாஸ்திரத்தைச் சார்ந்ததாய் மதுரையிலே கோயில் கொண்டிருக்கும் மதுரைவீரன் என்னும் தேவதையின் விஷயமான சில மந்திரங்களை யெடுதது உணர்த்துகின்றது. இத்தேவதையே போலும் காசி ராசனுக்கு மகனாய்த் தோற்றித் திருமலை ராயனுக்குப் போர் வீரனாக வமர்ந்திருந்து மதுரைவீரன் என்பதாகப் பேர் பெற்று இருந்து பின்னர்க்காலவசத்தால் மனிதர் வடிவம் நீத்துத் தன் நிசவுருவைக்கொண்டது. இவ்வீரன் விஷயமாக அம்மானையென்ற பிரபந்த விசேஷமும் ஒன்று உண்டு. அதிலே இக் கதையை விரிவாகக்காணலாம்.

---

## No. 2461. கரு சாஸ்திரம்.

## KARUŚĀSTIRAM.

Pages, 34. Lines, 6 and 7 on a page.

Begins on fol. 68-*a* of the MS. described under No. D. 2457.

Complete.

Similar to the work described under No. D. 1869.

**Beginning :**

மருந்து அட்டவணை :—

வெள்ளையெருக்கம் வேர், வெள்ளைக் குன்றிமணி வேர், வெடத்தலை மேல் புல்லு தட்டு புன்றி மஞ்சள் வேர், நாயுருஞ்சி பூண்டு வேர், வட்டகாச்சியிலை வேர், சிதில்புன்றி வேர், காற்செடி பூவு மார்க்கல் பழம் ௩. மனுள் இலை, பொடுகாலை சுண்டைமாம்

வெற்றிகொள்ள வசீகாம், என்னையெதிர்த்து
அய்யனது திக்கை நெஞ்சத்துட்பார்த்து
எங்கை நீறு என்னையெதிர்த்த மந்திரவாதியை
என நெஞ்சத்துள் பார்த்து எங்கை நீறு.
என்னையெதிர்த்த சத்துருவாதியை நெஞ்சத்துள் பார்த்து என்
கைநீறு.

மாரையிமறசத்தி ? பிள்ளையார் காக்க, வயிற்றைச் சிங்கார் காக்க, தொப்புளைக் கந்தசாமி காக்க, இடுப்பை இபாச எலி காக்க, தொடையைத் துருக்கை காக்க, முழங்காலே முருகதி ஐயனார் காக்க * * * * * பல்லைப் பாருவதி காக்க, நாக்கைக் கருவன் காக்க.

இராச வசியத்துக்குச்சந்தனப்பொட்டு :

வெள்ளெருக்கலம் வேர், வெள்ளைச் சாரணை வேர், வெள்ளைக் குன்றி வேர், விடத்தலை மேல் புல்லுருவி, பச்சை மஞ்சள் சாமன்கொண்டு பன்னீர் விட்டரைத்துத் திலதமிட...

புருஷர் வசியம் :—

செந்தாமரைக்கிழங்கு, கவிழ்த்தும்பை வேர், கோரோசனை ஈசம், பச்சை கற்பூரம் சமன் கொண்டு சூரிய கிறணைத்தில் பன்னீர் விட்டரைத்து உண்டைபண்ணித் திலதமிட்டுச் செல்ல இவளைக் கண்ட புருஷருக்கு ஊர்வசியைக் கண்டு மயங்கினதுபோலே மயங்கும்.

**End :**

பேய் ஓடிப்போக வேறு :—

மெய்யடை சொரித்தவளைவாயில் குங்கிலியம் வைத்து . . . . கைபிடித்த பேருக்கு அந்தப் புகையைப் பிடிக்க ஓடிப்போம், வேறு :—

* * * * * * *

இது கரு சாஸ்திரத்தைச் சார்ந்ததாய் இராச வசியம், புருஷ வசியம், விலங்கு தெரிக்க, அக்கினியில் நடக்க, தண்ணீரில் விளக்கெரிக்க முதலான பலவருமையான காரியங்களுக்குரிய கருக்களைப் பிரயோகிக்குமுறைமையினை யெடுத்துணர்த்துகின்றது. சில சக்கிரங்களும் பொறிக்கப்பட்டுள.

---

## No. 2462. நிமித்த சாஸ்திரம்.

### NIMITTAŚĀSTIRAM.

Substance, palm-leaf. Size, 6 × 1¼ inches. Pages, 126. Lines, 5 on a page Character, Tamil. Condition, good. Appearance, old.

Complete.

Similar to the work described under No. D. 2017.

(கு. - பு.)—

இந்நூல் டிஸ்கிருப்டிவ் காடலாக்கு 2017-ம் நம்பர் பிரதியிலே வந்துள்ள நூல்போன்றிருக்கிறது. இப்பிரதியில் இந்நூல் முற்றுமிருக்கிறது. மிகவும் எழுத்துப்பிழையுடன் எழுதப்பெற்றிருக்கிறது. இந்நூலுக்குச் "சந்தனக்குறடு" என்பதாக ஒரு பெயர் குறிக்கப்பெற்றுளது. தொடு குறி சாஸ்திரம் முதலியவைகளைப் போன்றது.

---

## No. 2463. சதமுக ராவணன் கதை.
## ŚATAMUKHARĀVAṆANKATHAI.

Substance, palm-leaf. Size, 16¼ × 1-5/16 inches. Pages, 66. Lines, 6, 7 on a page. Character, Tamil. Condition, much injured. Appearance, old.

Complete.

Same work as that described under No. D. 396.

(கு. - பு.)—

இந்நூல் டிஸ்கிருப்டிவ் காடலாக்கு 396-ம் நம்பரில் வந்துள்ள நூலேயாம். இப்பிரதியிலே இந்நூல் முற்றும் உளது. அப்பிரதிக்கும் இப்பிரதிக்கும் ஒரு சிறிது வசன நடையிலே வித்தியாசம் உளது. ஏடுகள் மிகவுஞ் சிதிலமாயிருக்கின்றன. எழுத்துப் பிழைகள் காணப்படுகின்றன.

---

## No. 2464. ரஹஸ்யத்ரயஸாரார்த்தம் (பரகாலநல்லான் ரஹஸ்யம்).
## RAHASYATRAYASĀRĀRTHAM (PARAKĀLANALLĀN RAHASYAM).

Substance, palm-leaf. Size, 15-2/8 × 1½ inches. Pages, 594. Lines, 7 on a page. Character, Tamil and Grantha. Condition, slightly injured. Appearance, old.

Complete.

Same work as that described under No. D. 901.

(கு. - பு.)—

இந்நூல் மூவருடக் காடலாக்கு 901-வது நம்பரில் வந்துள்ள நூலேயாகும். இப்பிரதியிலே இந்நூல் முற்றும் உளது. இறுதியேட்டில் இப்பிரதி யெழுதிவைத்த நாளையுணர்த்தும் "சுசாலிசஹஸ்ரப விபவவர்ஷம் தக்ஷிணாயனம் ஐப்பசிமீ வெள்ளிக்கிழமை உத்திராஷாடம் அஷ்டமீ சுக்லபக்ஷம் இவ்வளவுங் கூடின சுப தினத்தில் 'பரகாலநல்லான் ரஹஸ்யம்' எழுதி முடிந்தது. காஞ்சன ஸ்ரீ வேங்கடாசார்யதாஸனுகிய அண்ணயாசார்யாது ஸ்வஹஸ்தலிகிதம்" என்ற இத்தொடர் மொழியும் இதே பொருள் கொண்ட ஓர் வடமொழி சுலோகமும் உளது.

## No. 2465. பெருமாள் திருமொழி வியாக்கியானம்.
## PERUMĀḶ TIRUMOḶI VIYĀKHYĀNAM.

Substance, palm-leaf. Size, 15-2/8 × 1-10/16 inches. Pages, 108. Lines, 7 on a page. Character, Telugu. Condition, much injured. Appearance, old.

Complete.

Begins on fol. 1-*a*. The other work herein is Nāycciyārtirumoḻi-vyākhyānam 55-*a*.

A Commentary on Kulaśēkharapperumāḷtirumoḻi which is a part of the *Nālāyiradivyaprabandham*.

By Periyavāccān Piḷḷai.

**Beginning :**

பெருமாள் திருமொழி வியாக்கியானம்.

ஸ்ரீய꞉பதியாய் ஜ்ஞாநாநந்தைகஸ்வரூபனாய் ஸமஸ்தகல்யாண குணாத்மகனாய் உபய விபூதியுக்தனாய் ஸர்வஸ்மாத்பரனான ஸர்வேஶ்வரன் அடியாகப் பெருமாள் பெற்றது ஸக்ருத்பாவந ஜ்ஞாநமாகையாலே கரணத்தாலே காண்கிறோமென்று ஆறியிருக்கலாவது தந்தலையாலே வந்ததாகிலிறே. அவன்றானே காட்டக்காண்கிறவராகையாலே அப்போதே காணவேணுமென்கையாலே விடாய் பிறந்தது. பரமபதத்தில் அநுபவிப்பது குணாநுபவமாகையாலே அந்த ஸௌலப்ய குணங்கள் பரிபூர்ணமான கோயிலிலே அநுபவிக்கப் பிரார்த்திக்கிறார். இங்கநுபவிக்கக் குறையென்? பிரார்த்திக்கிறது என்னென்னில் ஸாதகரும் பிறப்பேயுடைய ராகையாலே மநுஷ்யர் நிந்திப்பார் பலருண்டாகையாலே இங்குவந்து அநுபவிக்கமாட்டாதே "அடியார்கள் குழாங்களையுடன் கூடுவதென்று கொலோ," என்றும், "அந்தமில் பேரின்பத்தடியரோடிருந்தமை," யென்றும் நம்மாழ்வார் பிரார்த்தித்துப் பெற்ற பேற்றை இங்கே யநுபவிக்கப் பிரார்த்திக்கிறார்.

முதற்பாட்டு:—"இருளிரியச்சுடர்," இத்யாதி꞉. [illegible] [illegible]யிலே சொல்லுகிறபடியேயிறே ஶேஷஶேஷாஶநாகாரா யிப்பது. அத்தையிங்கே திருவநந்தாழ்வான்மேலே சாய்ந்து இடக்கிற விடத்திலே அநுபவிக்க மநோரதிக்கிறார். ஸம்ஸாரி முக்தனாய்ச் சென்றால் "பாதேநாத்யாரோஹதி," இத்யாதிப்படியே எழுந்தருளி யிருக்கிற பர்யங்கத்திலே மிதித்தேறினால் "நீ யார்," என்றால் "நான் குமாரன்," என்பாரைப் போலே "அஹம் ப்ரஹ்மாஸ்மி," என்றிறே இவன் சொல்லுவது. இருள் இரியச் சுடர மணிகள் இமைக்கும் நெற்றி—இருள் சிதறிப்போம்படி ஜ்யோதிஸ்ஸையுடைய மணிகள் விழிக்கிற நெற்றியும்.

## No. 2465. பெருமாள் திருமொழி வியாக்கியானம்.
## PERUMĀḶ TIRUMOḶI VIYĀKHYĀNAM.

Substance, palm-leaf. Size, 15-2/8 × 1-10/16 inches. Pages, 108. Lines, 7 on a page. Character, Telugu. Condition, much injured. Appearance, old.

Complete.

Begins on fol. 1-*a*. The other work herein is Nāycciyārtirumoḷi-vyākhyānam 55-*a*.

A Commentary on Kulaśēkharapperumāḷtirumoḷi which is a part of the *Nālāyiradivyaprabandham*.

By Periyavāccān Piḷḷai.

**Beginning :**

பெருமாள் திருமொழி வியாக்கியானம்.

ஸ்ரீயப்பதியாய் ஜ்ஞாநாநந்தைகஸ்வரூபனாய் ஸமஸ்தகல்யாண குணாத்மகனாய் உபய விபூதியுக்தனாய் ஸர்வஸ்மாத்பரனான ஸர்வேச்வரன் அடியாகப் பெருமாள் பெற்றது ஸகலபதார்த்த ஜ்ஞானமாகையாலே கரதலத்தாலே காண்கிறோமென்று ஆறியிருக்கலாவது தந்தலையாலே வந்ததாகிலிறே. அவன்றானே காட்டக்காண்கிறவராகையாலே அப்போதே காணவேண்டுகையாலே விடாய் பிறந்தது. பரமபதத்தில் அநுபவிப்பது குணாநுபவமாகையாலே அந்த ஸ்ரீமாந் குணங்கள் பூர்ணமான கோயிலிலே அநுபவிக்கப் ப்ரார்த்திக்கிறார். இங்கநுபவிக்கக் குறையென்? ப்ரார்த்திக்கிறது என்னென்னில் ஸ்தாவரங்களும் பிறப்பேயுடையராகையாலே மநுஷ்யர் நிந்திப்பார் பலருண்டாகையாலே இங்குவந்து அநுபவிக்கமாட்டாதே "அடியார்கள் குழாங்களையுடன் கூடுவதென்றுகொலோ," என்றும், "அந்தமில் பேரின்பத்தடியரோடிருந்தமை," யென்றும் நம்மாழ்வார் ப்ரார்த்தித்துப் பெற்ற பேற்றை இங்கே யநுபவிக்கப் ப்ரார்த்திக்கிறார்.

முதற்பாட்டு:—"இருளிரியச்சுடர்," இத்யாதி. பர்யங்க வித்யையிலே சொல்லுகிறபடியேயிறே [illegible]மாயிப்பது. அத்தையிங்கே திருவநந்தாழ்வான்மேலே சாய்ந்து கிடக்கிற விடத்திலே அநுபவிக்க மநோரதிக்கிறார். ஸம்ஸாரி முக்தனாய்ச் சென்றால் "[illegible]," இத்யாதிப்படியே எழுந்தருளியிருக்கிற பர்யங்கத்திலே மிதித்தேறினால் "நீ யார்," என்றால் "நான் குமாரன்," என்பாரைப் போலே "அஹம் ப்ரஹ்மாஸ்மி," என்றிறே இவன் சொல்லுவது. இருள் இரியச் சுடர் மணிகள் இமைக்கும் நெற்றி = இருள் சிதறிப்போம்படி ஜ்யோதிஸ்ஸையுடைய மணிகள் விழிக்கிற நெற்றியும்.

இனம் துத்தி அணி பணம் ஆயிரங்கள் ஆர்ந்த=இனமான துத்தி : அதாவது, இரண்டாய்ச் சேர்ந்த திருவடி நிலையென்று சொல்லுகிறவற்றை யுடைத்தான படங்கள் ஆயிரத்தையும் பூர்ணமாகவுடையனாய் ; அரவு அரசன பெருஞ்சோதி=நாகராஜா வெனனும் மஹா தேஜஸ்ஸையுடையனாய் ; அனந்தன் என்னும்=எல்லாவற்றையும் வியாபித்து நிற்கிற ஸர்வேஸ்வரனை ; ? விளாச்குலை கொள்ளுகிற ஸ்வரூபாநு ரூபகுணங்களை யுடையராகையாலே 'அநந்தன்' என்றுசொல்லப்படுகிற வென்றும்,

* * * * * * *

* * * * * * *

என்கண் இணைகள்=பட்டினிவிட்ட வெண்கண்கள் ; என்று கொலோ ? களிக்கும் நாளே = அங்கே கண்டு "அஹமந்நம் அஹமந்நம்" என்று களிக்கும் களிப்பை இங்கே கண்டு களிப்பது என்றோ ? உ || க ||

இனி இரண்டாம் பாட்டு :—

"வாயோரீரஞ்ஞூறு" ஊதி

* * * * * * *

**End :**

**பத்தாம்பாட்டு :— 'அன்று** சராசரம்' :— 'ஸவிஜ்ஞாநாঃ வஸிஜ்ஞாநாঃ,' **என்று** வ்யதிரேகத்தாலே **அவைபட்ட** வ்யஸநப்பாடு **அறிந்தருளுகையாலே** "நொவாஸக்ஷ ஐயொஜூ்யாா ஸஃஸுஃ்க்ஷ ஐவிஜுாஸ்ய்கெ | கிாஃஹெ்ாகி மகாஸாநெ்ாய் வஃணாஊ ஐநஃவ்ாாঃ" || **என்கிறபடியே இளையபெருமாளோபாதி அவையிற்றையும்** வாஊவஊ**த்துக்குப் போகவிட்டு, 'நற்பாலுக் குய்த்தனன்'** என்னக் **கடவதிறே : அடலரவப்** பகை**யேறி**=ஸவஜாதிக்கு ஜஜமஸகரா **வான** பெரிய **திருவடியை** மேற்கொண்டு ஸஃஸாரவமத்**தை வென்று அந்த வீர** ஸ்ரீயோடே கூடி **நின்று** விளங்கு**கிற திருத் தோள்** நாலோடுங்கூட **அங்குள்ளார்** எ**திர்கொள்ளும்படி** யெழுந் **தருளிப் பரமபதத்**திலே போய்ப்புக்கு * * * *

* * * திருநாமப் பாட்டு : 'தில்லைநகர்,' ஊதி :—

ஹாவொாநாஙக்ஷமஹகி . . . . . . . . . **தான் விடமாட் டாதே** யிங்கே **வந்து** நிகஃவாஸம் **பண்ணுகிறவனை ; எல்லையில் சீர்** ஊகஃாதி :— வ**ஹு**ஃமஃணவானான **சக்கிரவர்த்திக்கு** 'விகாரஃ ரொவயாரேஸ' என்**றதாய்ப்** பிள்ளை **பிறந்தது தொடக்கமாகப் பரமபதம் புக்கது முடிவான வுண்டான** ஸ்ரீராமாயண கமெயை

* * * * * * * * * **குடைக்**

**குலசேகரன் சொற்செய்த**=வெண் **கொற்றக் குடையுடையரான** ஸ்ரீ **குலசேகரப்** பெருமா**ன் அருளிச்செய்த** ; நல் இயலின் **தமிழ்**

மாலை பத்தும் வல்லார்—அழகிய இயலையுடைய தமிழ்மாலை பத்தை யும் வல்லார்; நலம் திகழ் நாரணன் அடிக்கீழ் நண்ணுவாரே—பரம பதத்திலே விளங்கா நின்றுள்ள ஸர்வேஶ்வரன் திருவடிகளைக் கிட்டப்பெறுவார்கள்.

பெருமாள் திருமொழி வியாக்கியானம் முற்றும்.

குலசேகராழ்வார் திருவடிகளே சரணம்.

(கு. - பு.)—

இந்நூல் டிஸ்கிருப்டிவ் காடலாக்கு 785-வது நம்பரில் வந்துள்ள 'பெருமாள்' திருமொழி என்ற திவ்விய பிரபந்தத்திற்குப் 'பெரிய வாச்சான்,' பிள்ளை இயற்றியருளிய விரிவுரையாகும். இப்பிரதியில் இது முற்றும் உள்ளது. ஏடுகள் மிகச் சிதைவுற்றிருத்தலோடு தெலுங்கு எழுத்தில் எழுதப்பெற்றுள்ளது.

---

## No. 2466. நாய்ச்சியார் திருமொழி வியாக்கியானம்.
## NĀYCCIYĀR TIRUMOḺI VIYĀKHYĀNAM.

Pages, 234. Lines, 7 on a page.

Begins on fol. 55 of the MS. described under No. D. 24–65.

This is a Commentary by Periyavāccān Piḷḷai on the work described under No. D. 761. Printed.

Complete.

**Beginning :**

நாய்ச்சியார் திருமொழி வியாக்யானம்.

அவதாரிகை :—ப்ராப்யஸ்வீகாரம் பண்ணி ப்ராப்யத்தையும் நிஷ்கர்ஷித்தாராய் நின்றது கீழ் : இந்த ப்ரதிபத்தியிறே இத்தலைக்கு வேண்டுவது. அது இத்தலையிற் கண்ணழிவற்றிருந்தது. அவன் பக்கலிலே அபிநிவேசம் கரைபுரண்டிருந்தது. அநந்தரம் அபிநிவேசானுரூபமாகப் பெற்றுக்கொண்டு நிற்கக் கண்டதில்லை. இத்தலையிலே ஒரு ஹேதுவைக் கொள்ளிலிறே அது பக்வமாய்ப் பேறுகிறேனென் றிருக்கலாவது : அதுக்கு அங்ஙனன்றிக்கே யிருந்தது இனிப் பரிக்ரஹித்த ஸாதனம் பலத்தோடு வ்யவதான மில்லாதபடி ஸித்தமாய் இருந்தது. இங்ஙனே யிருக்கச் செய்தே பலிக்கக் காணாமையாலே யாதொரு யாதொரு நிரூபணம் பண்ண க்ஷமரல்லாதபடி கலங்கி அபிமத விஷயத்தைப் பிரிந்தார் கிரியட்டுங் கூடுகைக்கு மடலெடுக்குமாப்போலே பிரிந்தாரைக் கூட்டிப் போரு கையே ஸ்வபாவமாக வுடையான் என்னுமிதுவே பற்றாசாக காலோபா ஶ்ரயணம் பண்ணிப் பெறுகையிலே உபக்கிரமிக்கிறாள். பெருமாளை

யல்லது அறியாத திருவயோத்யையிலுள்ளார் அவர்க்கு நன்மை யெண்ணி 'ஸகாநெதவாநுஸஜ்ஜி,' என்று தேவதைகள் காலிலே விழுந்தார்களிறே. இவ்வளவு தன்னைப் பரதசையிலும் வேண்டேன் (திருவடி) 'நமோஸ்து வாயவே,' என்றானிறே 'ரஜாராமாத்ககம்ஜி,' என்கிறபடியே [ஸ] (ஸகநிஷ்ரான ஸாத்விகரோடே சேர்ந்து ஸமவாஸராஸ்ரயணம் பண்ணக்கடவதாயிருக்க. ஸாத்விகாஜ்ரேஸரரான 'பெரியாழ்வார்' வயிற்றிலே பிறந்தவள் ரஜோதமாபூர்வரான தேவதைகள் காலிலே விழும்படியாய்த்துக் கலங்கினபடி. இப்படிப்பட்ட கலக்கத்தாலே பிரிந்தாரைக் கூட்டுமென்னு மிதுவே கொண்டு ஸமாஸ்ரயணம் பண்ணுகிறாள். * * * * * * * * *

வடபெருங் கோயிலானுடைய திருக்குழலிலே வெடிக்க வேண்டும் என்று கருமுகையை ஸாபேக்ஷியாகிற்பர். இவருடைய ஸ்ரா ஸத்துரை யிருக்கிறபடி காமன் காலிலே ஒரு மதமத்த மலராகிலும் முருக்க மொட்டாகிலும் வெடிக்க வேண்டுமென்று மதமத்தை முருக்கு இவையிற்றை ஸாபேக்ஷியாநிற்கும். வேடர் உகந்ததே தேடியிட வேண்டுமிறே.

முதற்பாட்டு :— தையொரு திங்களும் :—மார்கழி மாஸம் ஒரு மாஸம் நோன்பு நோற்றார்களாய் நின்றதிறே. இனித் தையொரு மாஸமும் அவன் வரும் தலத்தை யலங்கரித்து. (தையொரு திங்களும்) "செங்கண்மால் எங்கண்மா லென்ற நாளெந் நாளும் நாளாகும்," என்று ஸர்வேஸ்வரன் பக்கலிலே ஆஸ்ரயம் பண்ணினான் என்றறிவது. ஒரு நாளுண்டாகில் காலதத்யமும அடிக்கழுஞ்சு பெற்றுச் செல்லாநிற்குமிறே. இப்படி யொரு நாளை யானுகூல்யம் மிகை யென்றிருக்கும் பகவத் விஷயத்தைப் பற்றி வைத்திறே இவள் காலிலே ஒரு மாஸமாகத் துவளப் பார்க்கிறது. தரை விளக்கி=ஸர்வேஸ்வரனுக்கு ஸஞ்சாரயோக்யமான ஸ்தலங்களிலே புக்குப் பரிசர்யையைப் பண்ணிப் போரும் குடியிலே பிறந்தவளிறே : தரை விளக்கி :—திருக்கண்ண மங்கையாண்டானைப்போலே இது தானே பிரயோசனமாகச் செய்கிறபடி. பகவத் கைங்கர்யம் பண்ணுகைக்கு ஸ்தல சுத்தி பண்ணுகிறபடியிறேயிது ; தண்மண்டலமிட்டு=குளிர்ந்து தர்பநீயமான மண்டலத்தை யிட்டு, தொழுது எழுதும் என்னுமிது மிகையான விஷயத்தைப் பற்றிவைத்து இங்கே மண்டல பூஜை பண்ணுகிறாளிறே யாற்றாமை மிகுதி : மண்டலமிட்டு :—

* * * * * * * * *

**End :**

நிமமத்தில் : 'பருந்தாள்,' இத்யாதி :—பருத்துப் பெரியதாளை யுடைத்தாய், சரீரம் பருத்தவத்துணையும் பாடாற்ற வரிதாயிருக்கு மிறே ; அப்படிப்பட்ட யானையானது தன்னிலமல்லாத வேற்று நிலத்திலே புக்கு முதலைவாயிலே அகப்பட்டு இடர்ப்பட்டு அதினுடைய ஆர்த்தத்வநி செவிப்பட்ட வநந்தரம் ஆயுதாபரணங்களை ஸக்ரமமாகத் தரித்துக் கொண்டு ரக்ஷகத்திலே தன்னையெண்ணின் பின்னையொருவர் இல்லாதபடி யிருக்கிறவனே. "ஸஹஸா ஸஹ:" என்னுமாப்போலே இதனுடைய விடாயடையத் தனக்குப் பூர்வக்ஷணத்தில் உண்டானபடியும், அதனிடரைப் பரிஹரித்தாற்போலே தன்னிடரைப் பரிஹரித்தபடியுஞ் சொல்லுகிறது.

* * * * * * * *

மருந்தாம் என்றும்=இதுதான் 'ஸம்ஸாரபேஷஜம்,' என்று தந்தாமுடைய ஹ்ருதயத்திலே வைத்துக்கொண்டு, 'ஸதா பச்யந்தி ஸூரய:,' என்கிறபடியே யிருக்குமவர்கள் ஸர்வதா ஸர்வதா நிரதிசயபோக்யமா யிருந்துள்ள திருவடிகளை யுடையவன் திருவடிகளிலே : பிரியாது என்றும் இருப்பாரே=சிலரைக் கண்டீரோ என்று கேட்கவேண்டாதே என்று மொக்கத் தங்கள் கண்ணாலே கண்டு நித்யாநுபவம் பண்ணுமதுவே யாத்ரையாகப் பெறுவர்.

நாச்சியார் திருமொழி வியாக்கியானம் முற்றும்.

ஆண்டாள் திருவடிகளே சரணம்.

ஸ்ரீ ஸ்ரீரங்கநாத பரப்ரஹ்மணே நம: |
ஸ்ரீ ஸ்ரீரங்கநாயகீ பரப்ரஹ்மணே நம: |
ஸ்ரீ ஸ்ரீநிவாஸ பரப்ரஹ்மணே நம: |
ஸ்ரீநிவாஸ பரப்ரஹ்மணே நம:.

(கு. - பு.)—

இந்நூல் டிஸ்கிருப்டிவ் காடலாக்கு 761-ம் நம்பரில் வந்துள்ள 'நாய்ச்சியார் திருமொழி' யென்ற திவ்வியப் பிரபந்தத்திற்குப் 'பெரியவாச் சான்பிள்ளை,' யியற்றியதோர் விரிவுரையாகும். மணிப்ரவாள நடையுடைத்து. இஃது அச்சிடப்பெற்றுள்ளது. இப்பிரதியில் இந்நூலின் முதல் திருமொழி (எ)-ம் பாட்டு தொடங்கி மூன்றுந் திருமொழியில் அவதாரிகை வரையிலான பகுதிகள் நீங்கலாக மிகுதியான பகுதிகள் முழுமையு மிருக்கின்றன. தெலுங்கெழுத்தான் எழுதப்பெற்றுள்ளது. ஏடுகள் மிகச் சிதைந்திருக்கின்றன. இடையில் சில வெற்றேடுகள் விடப்பட்டுள.

## No. 2467. திருவாய்மொழி தெலுங்கு பிரதிபதவுரையுடன். TIRUVĀYMOḺI WITH TELUGU MEANING.

Substance, palmleaf. Size, 17¼ × 1-10/16 inches. Pages, 290. Lines, 8 on a page. Character, Telugu. Condition, much injured. Appearance, very old.

Complete.

The *Tiruvāymoḻi* with word-for-word meaning in Telugu.

**Beginning :**

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

திருவாய்மொழி தெலுங்கு பிரதி பதவுரை.

பக்தாம்ருதம் விச்வஜநாநுமோதநம் ஸர்வார்த்ததம்
ஸ்ரீ சடகோப வாங்மயம் |
ஸஹஸ்ர சாகோபநிஷத் ஸமாகமம் நமாம்ய
ஹம் த்ராவிட வேத ஸாகரம். ||

தனியன் :

திரு வழுதிநாடென்றுந் தென்குருகூரென்றும்
மருவிய வண்பொருநலென்றும்—அருமறைகள்
அந்தாதிசெய்தான் அடியிணையே யெப்போதும்
சிந்தியாய் நெஞ்சே தெளிந்து. || க ||

திருவழுதிநாடென்றும் — திருவழுதிநாடனின்னி ; தென் — ரம்யமைன, குருகூர் என்றும்—குருகாபுரியனின்னி ; மருவு—அவகாஹிஞ்சடகு, இனிய—ப்ரியமைன, வண்—உதாரமைன, பொருநல் என்றும்.— திருதாம்ரபர்ணியனின்னி, அரு—அபூர்வமைனெரிகெடந்துகு அசக்யமைன, மறைகள் அந்தாதி செய்தான். . . . . . . . . . அந்தாதிசேஸின ஆழ்வாருலயொக்க, அடி இணையே—ஸ்ரீபாதத்வந்தமுனே, எப்போதும்—எப்புடுனு, சிந்தியாய்—சிந்திஞ்சுமா, நெஞ்சே—மனஸா ! தெளிந்து—தெலிஸி. || க ||

* * * * * * *

முதற்பாட்டு :—" உயர்வறவுயர்நலம் ".

உயர்வற வுயர்நல முடையவன் யவனவன்
மயர்வற மதிநல மருளினன் யவனவன்
அயர்வறு மமரர்கள் அதிபதி யவனவன்
துயரறு சுடரடி தொழுதெழென் மனனே. || க ||

பிரதிபதம் :—உயர்வு—இதராதிசயமு, அற—பொய்யேட்டு, உயர்—அதிசயிஞ்சன, நலம்—ஆநந்தமுனு, உடையவன்—கலிகினவாடு, யவன்—எவடு ?, அவன்—வாணியொக்க, மயர்வு—அஜ்ஞானமு, அற—பொய்யேட்டுகாது, மதி நலம்—மஞ்சிஜ்ஞானமுனு, அருளினன்—கிருபசேசினவாடு, எவன்—எவ்டு ?, அவன்—வாணியொக்க, அயர்வு—விஸ்மிருதி,

அறும்—லேனி, அமரர்கள்—நித்ய ஸூரயலகு, அதிபதி—ஸ்வாமி, யவன்—எவடு?, அவன்—வானியொக்க, துயர் அறு—துக்கநிவர்த்தமைன, சுடர்—தீப்தமைன, அடி—திருவடிகளுனு, தொழுது, ஆஸ்ரயிஞ்சி, எழு—அபிவிருத்தி பொந்துமா என்மனனே —நாமனஸ்ஸா ! || க ||

**End :**

அவாவறச் சூழரியை யயனையரனை யலற்றி
அவாவற்று வீடு பெற்ற குருகூர் சடகோபன் சொன்ன
அவாவிலந்தாதிகளாலி வையாயிரமுமுடிந்த
அவாவிலந்தா திப்பத்தறிந்தார் பிறநநாருயர்ந்தே. || கக ||

பதவுரை :—

அவாவறச்சூழரியை—அபிநிவேசமு. . . . ட்டுகாறு சுட்டுகொன்ன ஹரியை, அயனை—ஹிரண்ய கர்ப்பாந்தர்யாமியைனஸ்வாமினி. அரனை—பசுபதி பதப்ராப்யருத்ராந்தர்யாமியைன ஸ்வாமினி, அலற்றி—மொர ரவேடி : ? அவாவற்று—அபிநிவேசமொடுகி, வீடுபெற்ற—மோக்ஷமு பொந்தின, குருகூர் சடகோபன் சொன்ன, ஆழ்வாருலானதிச்சின, அவா விலந்தாதிகளில் ? ஹக்ஷி விகார ஈவை மவுசுன்ன முக்தபதக்ரஸ்தரு மைன, இவை ஆயிரம் உ முடிந்த, ஈவெயின்னியொக்கஷினி, அவாவிலந் தாதி இப்பத்து அறிந்தார்—வாஹக்ஷா ஈவைமை முக்தபதக்ரஸ்தமைனை ஈபதின்னி, எரிங்கினவாரு, உயர்ந்து பிறந்தார். **ஸீகஹ்ஸுரி ஸமா துலே புட்டிரி.**

**ஆழ்வார் திருவடிகளே சரணம்.**

**ஸ்ரீயஃ பதிஆண்டாள் ஆழ்வார் எம்பெருமானார்**
**மணவாளமாமுனி ஸ்ரீதேவராஜ**
**ராமாநுஜ நரஸிம்ஹ ஸ்ரீநிவாஸ மஹாமஹோபாத்**
**நமோ நமஃ.**

ஸ்ரீலக்ஷ்மீ நரஸிம்ஹாய நமஃ;
ஸ்ரீநரஸிம்ஹாய நமஃ ||

(சு. - பு.)—

இந்நூல், டிஸ்கிருப்டிவ் காடலாக்கு **716**-வது நம்பர் பிரதியில் வந்துள்ள நூலுக்குத் தெலுங்கில் அமைந்த பிரதிபதவுரையாம். இப்பிரதியில் ஆதி தொடங்கி முற்றிலுமிருக்கிறது. ஏடுகள் சிதைந்துள. தெலுங்கெழுத்தில் எழுதப்பெற்றிருக்கிறது. உரை நடை தெலுங்கில் அமைந்து நன்றாயிருக்கிறது. உரையாசிரியர் இன்னாரென்று விளங்கவில்லை. சில ஏடுகள் மிகவும் முறிந்துகிடக்கின்றன. எழுதின முறையும் நன்றாயிருக்கிறது

## No. 2468. ஸ்ரீ வசன பூஷண வியாக்கியானம்.
## ŚRĪVACANABHŪṢAṆAVĪYĀKHYĀNAM.

Substance, palm-leaf. Size, 16¼ × 1½ inches. Pages, 520. Lines, 6 on a page. Character, Telugu. Condition, much injured. Appearance, very old.

Almost complete.

Same work as that described under No. R. 66.

இந்நூல் மூவருடக் காடலாக்கு 66-வது நம்பர் பிரதியில் வந்துள்ள தேயாம். இப்பிரதியில் இந்நூல் இறுதியான பகுதியில் ஒரு சிறிது பாகம் ஒழிந்து மிகுதியான பகுதி முற்றும் உளது. ஏடுகள் மிகவும் புழுக்களான அரிக்கப்பெற்றுப் பல ஏடுகள் அடியோடு முறிந்துங்கிடக் கின்றன. தெலுங்கெழுத்தில் எழுதப்பெற்றுளது.

---

## No. 2469. திருக்குறள் சரவணப்பெருமாளையர் உரையுடன்.
## TIRUKKURAḶ WITH THE COMMENTARY OF ŚARAVAṆAP-PERUMĀḶAIYAR.

Substance, palm-leaf. Size, 18-6/16 × 1½ inches. Pages, 704. Lines, 8 on a page. Character, Tamil. Condition, injured. Appearance, old.

Complete.

This is a Commentary by Tiruttaṇikai Śaravaṇapperumāḷaiyar on *Tiruvaḷḷuvarkuṛaḷ*. Printed.

**Beginning :**

தெய்வப் புலமைத் திருவள்ளுவ நாயனார் அருளிச்செய்த திருக் குறளின் உரை : திருத்தணிகைச் சரவணப் பெருமாள் ஐயரால் சிறுவர் முதலிய யாவரும் எளிதின் உணரும்படி யாப்பப் பரிமேலழகர் உரையைச் சுருக்கி வெளிப்படை யாக்கிப் பதவுரையும் தாத்பரியமுமாகச் செய்யப் பட்டது. இதன்முடிவு திருவள்ளுவமாலைக்கும் உரை செய்து சேர்ந்து இருக் கின்றது.

கலியுகம் [illegible]. சாலிவாகன சகம் [illegible]. இங்கிலீஷ் [illegible]. ஆகிய இதில் நிகழ்கின்ற விக்ருதி ௵ சென் னைப்பட்டணத்தில் அச்சிற் பதிப்பிக்கப்பட்டது.

முச்சகத் திறை முறை முழுதுணர் வினருணர்
சச்சிதா நந்தத் தனி நிலை யதனொடு
தோன்று மயனரி யரனெனத் தொழிலொரு
மூன்று முறை செய்மூன் றுருவாயொளிர்
[illegible] பொடு மிறைஞ்சுதுந்
தேசுயர்ப்புலமையின் சீர் பெறற்பொருட்டே.

உரைச்சிறப்புப்பாயிரம் :—

நிலைகிளர் விழுமிய நிகமாதிகளெலாம்
மலைகிளர் கட..லிய த்ததேயந்தொறும்
வீற்று வீற்றுய்க் கெழூஉ விளங்குபன்மொழியினும்
போற்றுறு தலைமையிற் பொதுவதாயெங்கணும்
கடவுளர்க்குரித்தாகலிற் கீர்வாணமென்றிடு
பெயர்த்தாம் வடமொழியினுளிருத்தலாற்
சிலர்க்கல தோதலுஞ் செழும் பொருளுணர்தலும்.

* * * * * * *

**End :**

திருவள்ளுவமாலை உரையுடன் :—

நரிவேரு உ த்தலையார் :—

இன்பம் பொருளறம் வீடென்று மிந்நான்கும்
முன்பறியச் சொன்ன முதுமொழி நூன்—மன்பதைகட்கு
உள்ளவரி தென்றவை வள்ளுவருலகம்
கொள்ளமொழிந்தார் குறள். || ||

இதன் பொருள் :—இன்பமும் பொருளும் அறமும் வீடுமாகிய இந் . . .

(கு. - பு.)—

இந்நூல் திருவள்ளுவனார் குறளுக்குத் திருத்தணிகை சரவணப் பெருமாளையர் அவர்கள் இயற்றிப்போந்ததோர் அரியவுரையாகும். இஃது இது முற்றுமிருக்கிறது. இறுதியிலே திருவள்ளுவமாலை உரையுடன் இருக்கிறது. அது அரைகுறையாகவுளது. ஏடுகள் சிறிது சிதைந்துள. இது முன்னர் இங்கிலீஷ்ஹுப் சூஅராகடு 1830-ம் வருஷம் சென்னையில் அச்சிடப் பெற்றுளது என்றதாய் ஓர் குறிப்பு முதலேட்டிலே காணப்படுகிறது.

---

## No. 2470. கூர்ம புராணம்.
## KŪRMAPURĀṆAM.

Substance, palm-leaf. Size, 17¼ × 1¾ inches. Pages, 390. Lines, 15 on a page. Character, Tamil. Condition, injured. Appearance, old.

Complete.

Same work as that described under No. D. 548.

(கு. - பு.)—

இந்நூல் டிஸ்கிருப்டிவ் காடலாக்கு 548-வது நம்பர் பிரதியில் வந்துள்ள நூலேயாகும். இப்பிரதியில் இது முற்றும் உளது. அப்பிரதிக்கும் இப்பிரதிக்கும் அநேக விடங்களில் பிரதிபேதங்கள் காணப்படுகின்றன. ஏடுகள் மிகவும் புழுக்களான் அரிக்கப்பெற்றுச் சிதைந்திருக்கின்றன.

## No. 2471. வாயு சங்கிதை.
## VĀYUSAṄGITAI.

Substance, palm-leaf. Size, 14-2/8 × 1¾ inches. Pages, 290. Lines, 8 on a page. Character, Tamil. Condition, much injured. Appearance, old.

Almost complete.

Same work as that described under R. No. 593 (*a*).

(கு. - பு.)—

இந்நூல் மூவருடக் காடலாக்கு 593(a)-வது நம்பர் பிரதியில் வந்துள்ள நூலேயாகும். இப்பிரதியில் இந்நூல் இறுதியில் ஒரு சிறிய பகுதி நீங்கலாக மிகுதியான பகுதி முற்றும் உளது. இடையிலே 46-ம் ஏடு இல்லை. 117-ம் ஏடு ஒன்று எழுதாமலே விடப்பட்டிருக்கிறது. அன்றியும் அங்கங்கே ஊடேயூடே சிலசில பாடல்களில் சிறிய பகுதிகள் எழுதாமலே விடப்பட்டிருக்கின்றன.

---

## No. 2472. சிவஞானபோதம் உரையுடன்.
## ŚIVAÑĀNABŌDHAM WITH MEANING.

Substance, palm-leaf. Size, 7 × 1¼ inches. Pages, 270. Lines, 8 on a page. Character, Tamil. Condition, slightly injured. Appearance old.

Complete.

Begins on fol. 1-*a*. The other work herein is Śivappirakāsaccintanai 136(a).

Similar to the work described under No. D. 1274.

(கு. - பு.)—

இந்நூல் டிஸ்கிருப்டிவ் காடலாக்கு 1274-ம் நம்பர் பிரதியில் வந்துள்ள நூலைப்பெரும்பாலும் ஒத்துளது. இவ்வுரையாசிரியரின் பெயர் இதிலிருந்தும் விளங்கவில்லை. இப்பிரதியிலே இவ்வுரை நூல் முற்றும் உளது.

---

## No. 2473. சிவப்பிரகாசச் சிந்தனையுரை.
## ŚIVAPPIRAKĀSACCINTANAIYURAI.

Pages, 192. Lines, 8 on a page.

Begins on fol. 136(a) of the Ms described under No. D. 2472.

Almost complete.

Same work as that described under No. D. 1312.

With slight difference of reading.

(கு. - பு.)—
இந்நூல் டிஸ்கிருப்டிவ் காடலாக்கு 1312-வது நம்பர் பிரதியில் வந்துள்ள நூலேயாகும். இப்பிரதியில் இந்நூல் இறுதியில் ஐந்து பாடல்கள் நீங்கலாக மிகுதியான பகுதி முழுமையும் அங்கங்கே ஒரு சிறிது வித்தியாசத்துடன் உளது. எழுத்துப்பிழைகள் காணப்படுகின்றன. ஏடுகள் ஒரு சிறிது சிதைந்துள.

---

## No. 2474. சிவ பூஜாவிதி வசனம்.
## ŚIVAPŪJĀVIDHI PROSE.

Substance, palm-leaf. Size, 14 × 1½ ; 11¾ × 1½ ; 12¾ × 1⅞. inches. Pages, 36. Lines, 8 on a page. Character, Tamil. Condition, injured. Appearance, old.

Begins on fol. 1. The other works herein are Gurumoḷivināvalakareal 19. a. Śvapujāvidhi. 31. a.

Complete.

Similar to the work described under No. D. 1340.

**Beginning :**

விடிய அஞ்சு நாழிகைக்கு எழுந்திருந்து சுசியாயிருந்தாலும் அசுசியாயிருந்தாலும் கால் கை சுத்தி பண்ணிக்கொண்டு வடக்கு முகமாயிருந்து விபூதி தரித்துப் பிராணயாமம் கரந்யாஸம் அங்கந்யாஸம் ஜெபங்களும் பண்ணி யதாசக்திசெபித்துச் சமையியானால் உருத்திரதீக்ஷையுத்தியானம் பண்ணவும். நிர்வாணியானால் நிஷ்களமாய்த் தியானம் பண்ணவும். யதா சக்தி தோத்திரம் பண்ணி விபூதித்தரித்து வெளியே புறப்படவும். இந்தப்படி பண்ணமல் வெளியிலே போனால் அன்றைக்கு உபவாசமாயிருந்து பஞ்சகவ்வியங்கொண்டு "அகோரத்தால்" இருநூறு செபிக்கவும்.

தியானவிதி முற்றும்.

---

இனி சௌச விதி :—ஈசான திக்கு விட்டு மற்ற திக்கிலே ஊருக்குக்கு நூறு தண்டு பிரமாணம் அப்புறம் போய் வஸ்திரத்தை உச்சி செவி மறையும்படியாகக் கட்டிக்கொண்டு * * *
விளை நிலம் யாறு குளம், வீதி மடம், கோயில்கள், சலைக்கரை வழி, மர நிழல் பசு மாட்டு மந்தை, அறுகம் பூமி, குழிமேடு * * * இப்படிப்பட்டவிடங்களிலே போகலாகாது. போனால் சர்வ சங்காரமாவும் ? நரகம் வரும். இப்படிப்பட்ட இடமல்லாத விடத்திலே போய் ஒரு துரும்பைப்போட்டு மூன்று தரம் கையைத்தட்டிப் பூமி தேவியை அப்புறம் விலகினவளாகப்பாவித்துக்கொண்டு * * *

**End :**

அஸ்திரத்தால் செபித்து இருதய மந்திரத்தாலே இருதயத்திலே யொடுக்கிக்கொள்ளவும். அர்க்கியங்களையும் அஸ்திரத்தால் தெறித்து இருதயத்திலே யொடுக்கிக்கொள்ளவும். கால் அலம்பிக்கொண்டு விடாகி

தரித்துப் பிராணாயாமம் கரநியாஸம் அங்கநியாஸம் பண்ணி அகோரத்தால் நூற்றெட்டு உரு ஜெபித்துப்பின்னும் பிராணாயாமம் கரநியாஸம் அங்கநியாஸம் பண்ணவும்.

சிவ பூசாவிதி முற்றும்.

---

(கு. - பு.)—

இந்நூல் டிஸ்கிருப்டிவ் காடலாக்கு 1340-வது நம்பர் பிரதியில் வந்துள்ள நூல்போன்று சிவ வழிபாட்டிற்கு உரிய பூஜா முறைமையினை யுணர்த்துகின்றது. இது வசனத்தால் அமைந்துளது. இப்பிரதியில் இந்நூல் முற்றும் உளது. ஏடுகள் ஒரு சிறிது முறிந்துஞ் சிதைந்து முள.

---

## No. 2475. குருமொழி வினாவலகவல்.
## GURUMOLIVINĀVALAKAVAL.

Pages, 24. Lines, 9 on a page.

Begins on fol. 19-*a* of the MS. described under No. D. 2474.

Complete.

A treatise on the good results of worshipping God Śiva.

**Beginning :**

குருமொழி வினாவல் அகவல் :—

நற்குஞ்சரக்கன்று நண்ணிற்கலைஞானங்
கற்குஞ் சரக்கன்று காண்.

அருவாய் நின்றாய் குருவே யென்றதென்
நீக்கமில் குருவே தீக்கை யென்றதன்
அந்தமில் குருவே மந்திர மென்றதென்
மாசில் குருவே யாசமித் தென்பயன்
திட்டமாய்ப் பின்னர்த் தொட்டதென் தொடுமிடம்
சத்தியமான வத்திர சத்தியென்
கூற்றையுதைத்தோன் நீற்றுச் சுத்தியென்

* * * * *

பச்சைமாமயிலிச்சையாற்றவம்புரி
கச்சிப்பதியிலிச்சையானுயர்ந்தோன்
மழவைக்கதிபன் தழுவக்குழைந்தான்
புண்ணிய முதல்வன் எண்ணிய சற்குரு
நாதன் பொன்னடி நீதியால் வணங்கி
யாசறு வனுஷ்டான மாதியாகப்
பாசமதகல வீசியவகவல்
மாசற வினாவல் வகுத்துகொண்ட
தேசுள திகழ் மணவாசகங் கடந்தான்
பூசனைமுடிவாய்ப் புகன்றனன் மகிழ்ந்தே.

உரை :—

அருவாய் நின்றாய் குருவே யென்றதென் என்பது, அருவியாயிருக்குஞ் சிவனே தேவரீர் குருமூர்த்தியாக வெழுந்தருளினது என்னையெனின் சிவன் விஞ்ஞானகலா பிரளயாகலா சகலராகிய மூவகையான்மாக்களையும் அனுக்கிரகஞ் செய்யுமிடத்துச் சாதாரமாயும் நிராதாரமாயும் அனுக்கிரகஞ் செய்வன். நிராதாரமாவது, இவ்வித இவ்விதமா சத்திநிபாதத்தையுடைய விஞ்ஞானகலர் பிரளய கலர் இவர்கட்குச் சிவனுருவின்றி நிராதாரமாய் அனுக்கிரகஞ் செய்வது.

**End :**

மந்திரபாவனையினாலே தற்சொரூபங் கெட்டுச் சத்தி சொரூபமாம். ஆதலால் சுத்தி செய்யவேண்டிற்று. மந்திரங்கள் எப்பொழுதும் சுத்தமாயிருக்க மந்திரசுத்தி செய்வான் என் என்னில் மந்திரங்கள் எல்லாம் அதிகார மலத்துடனே கூடித் திரோதான சத்தியினாலே மறைப்புண்டிருக்கையினாலே பிராசாத மந்திரத்தைச் சமைய முதலிய நால்வரும்.

**(கு. - பு.)—**

இந்நூல் சைவ சித்தாந்தத்தைச் சார்ந்ததாய் உள்ளது. 'மனவாசகங்கடந்தார்' என்னும் சைவ சித்தாந்தியாரால் இயற்றப்பெற்றதென்று அறியக்கிடக்கின்றது. குருவானவர் சீடருக்குச் சிவபூசையியல்புணர்த்தின போது அச்சிவபூசையில் உள்ள ஒவ்வொரு செயலுக்கும் இன்னின்ன பயன் என்பதனையுணர்த்தவேண்டுமென்னைக் குருவானவர் அச்செயல் ஒவ்வொன்றினையும் எடுத்து விளக்கி அவைகட்கு இன்னின்ன பயன் உண்டு என்று விடையிறுப்பதாய் அமைந்துள்ளது. இது அகவற்பாவால் அமைந்துள்ளது. முடிந்தவுடன் இதற்கு விளக்கவுரையொன்று அமைந்துள்ளதாகக் குறிக்கப் பெற்றிருக்கிறது. உரையாசிரியர் இன்னார் என்று விளங்கவில்லை.

---

## No. 2476. சிவ பூசாவிதி.
## ŚIVAPŪJAVIDHI.

**Pages, 18. Lines, 12 on a page.**

**Begins on fol. 31-*a* of the MS. described under No. D. 2474.**

**Contains stanzas 12 to 95 only.**

**Similar to the work described under No. D. 1339.**

**Author's name is unknown.**

**(கு. - பு.)—**

இந்நூல் டிஸ்கிருப்டிவ் காடலாக்கு **1339**-வது நம்பரில் வந்துள்ள நூலையொத்து சிவார்ச்சனையில் உள்ள ஒவ்வொரு அங்கச் செயலினையும் இத்தன்மைத்து என்று செய்யுள் நடையில் அமைந்து உணர்த்துகின்றது. அந்தாதியாகவமைந்துள்ளது. இப்பிரதியிலே இந்நூலின் (௰உ to ௯௫) **12—95** ஆன பாடல்களேயிருக்கின்றன. முன்னேயும் பின்னேயும் பல ஏடுகள் காணப்பெறவில்லை. உள்ள ஏடுகளும் மிகவும் முறிந்தும் சிதலூற்றுங் கிடக்கின்றனவாதலின் பாடல்கள் படித்தற்கரியனவாயிருக்கின்றன நூலாசிரியர் பெயர்காணப்பெறவில்லை.

## No. 2477. சிலப்பதிகார வரும்பத விளக்கவுரை.
## ŚILAPPADIKĀRAVARUMPADAVIḶAKKAVURAI.

Substance, palm-leaf. Size, 25¾ × 1 inches. Pages, 132. Lines, 6 on a page. Character, Tamil. Condition, injured. Appearance, old.

Complete.

Explains the meaning of difficult words in the *Śilappadhikāram.*

**Beginning :**

*சிலப்பதிகார வரும்பதவிளக்கவுரை :—*

*கரும்புமிள நீருங் கட்டிக்கனியும்*
*விரும்பும் விநாயகனை வேண்டி—யரும்பவிழ்தார்ச்*
*சேரமான் சொன்ன சிலப்பதிகாரக்கதையைச்*
*. . . . . . . யாவேதரி.*

*உரை :—குணவாயிற்கோட்டம்—திருக்குணவாயிற்கோயில், சேரல் என்பது—செங்குட்டுவனை ; சேரனுக்கு இளங்கோவாகிய அடிகளை. இளங் கோவடிகள்தாம் துறந்திருந்து இக்காவியஞ் செய்தார். கொழுநிழற்கண் நின்று காட்ட : கண் என்றது. கண் என்கின்ற புலம். காணை ; விட்புலம்— விண் என்கிற விடம் : அது பட்டது. போர்சிறப்பு நீங்காத பெருமை, நாடகமேத்து நாடகக் கணிகை—நாடகத்தையாடிச் சிறப்பிக்குங் கணிகை. ஆடிய கொள்கை(யின்)—இவளாடிய கோட்பாட்டால்.*

**End :**

*நிறைவாவது :—காப்பன காத்துக் கடிவன கடிந்தொழுகல். ஓர்ப் பாவது—ஐயப்பட்ட பொருளை. . . பொருளொளைத் துணிந்தறிதல் கடைப்பிடியாவது—கற்றுங்கேட்டுமுள்ள பொருளை மறவாமை * * * * நாணமாவது—பெண்டிர்க்கியல்பாகிய குணம். மடமாவது—கொளுத்தக் கொண்டு கொண்டதுவிடாமை. அச்சமாவது—கணவர் காணுத பொரு ளைக் கண்டாலஞ்சுவது. பயிர்ப்பாவது—பயிலாத பொ(ா)ருட் கணருவருத்து நிற்கு . . .*

*வருந்தருகாதை முற்றும்.*

---

(கு. - பு.)—

*இது, இளங்கோவடிகளியற்றிய சிலப்பதிகாரம் என்னும் நூலின் அரிய பதங்கட்குப் பொருளிவ்வதெனா விளக்குவது. அச்சிடப்பட்டுள்ள பிரதியினும் சிற்சிலவிடத்துப் பாடபேதமுள்ளது. இந்தப் பிரதியின் ஏடுகள் சிதைந்துள. இப்பிரதியில் இந்நூல் முடிவுபெற்றுள்ளது.*

---

## No. 2478. யயாதிவிலாஸம்.
## YAYĀTIVILĀSAM.

Substance, palm-leaf. Size, 18½ × 1 inches. Pages, 254. Lines, 4 on a page. Character, Tamil. Condition, injured. Appearance, old.

Songs embodying the story of Yayāti of Puranic fame.

**Beginning :**

யயாதி விலாசம்.

விநாயகர் காப்பு வெண்பா.

திங்கண் மரபிற்றோன்றுஞ் சீரார் யயாதியின் மேற்
றுங்க விலாசமியான் சொல்லவே—அங்கத்தை
மஞ்செனத்தரித்த வீசன் மஞ்சையற்குமுன்பயின்ற
மஞ்சனைப் பணிந்து வாழ்த்துவாம். ||

சுப்பிரமணியர் அறுசீர் அடியாசிரியவிருத்தம்.

நயங்கொள் புயங்கக் கேதனன் பான்நன்னிப்
பொறுமைதனிற்சிறந்த
செயங்கொள் பஞ்சபாண்டவர்க்குத்
திருநாடிரந்த பெருமானின்
வயங்கொண் மருகனெனவுதித்து வானோர்
துயரத்தினைத் தவிர்த்துத்
தயங்குசமரூருறை நீபத்தாரோன்
பதுமத்தாள் பணிவாம். || க ||

திருமால் அறுசீர் அடியாசிரிய விருத்தம்.

மால்வாரணத்தினுழலாம் மன்றுமடியார்க்கருள்புரிய
மால்வாரணத்தின் மகவெனவே வடபல்லவத்திற்றுஞ்சிறைவர்
வால்வாரணத்தனருந்தவரு மலரிற்றோன்றுந்திசை முகனும்
வால்வாரணத்தன் காணரிய மாயோன் பதுமத்தாள் பணிவாம்.
|| உ ||

திருமகள் விருத்தம்.

திரைபுனை கடல்கள் சூழ்ந்த திண்புவியினிற்றுதித்த
இருபுனைத்துருவனுக்கன்றினியநற்பதவியீந்து
வருவினையகற்றுமாயன் மன்னியுரத்தில் வாழ் செந்
திருவினை வணங்கியானுஞ் சிந்தையிற்றுதி செய்வேனே.
|| ௩ ||

*   *   *   *   *

சரஸ்வதியறுசீரடியாசிரிய விருத்தம்.

நிலைமையுள புலவருடை யிதயமலர்
மிசையினிலே நின்று நாளும்
நலமுடனே வரமுதவு நாமகளின்
நளினபதம் நாளுமேத்தித்
தலமுழுது மோர்குடைக்கீழ்த் தலைமை
யுடனே செங்கோல் தனி நடாத்தும்
வலமுழுர் யயாதி யெனு மகிபனுடைச்
சரிதமதை வழுத்துவேனே. || ||

*        *        *        *        *

*        *        *        *        *

*        *        *        *        *

*        *        *        *        *

## பாடினேன் விருத்தம்.

சீராருமதிமரபு நகுடனீன்ற
செம்மல் **யயாதி சரிதைத்** திகழும்பாரில்,
பேராரும்படியிசை விலாசமாகப்
பேசினன் றகை**பையநகரி**ல் வாழும்
ஏராருஞ் சீர்கருணர் மரபுசெம்ம
லெழிற்செயமாமுனிகோத்திரனிணையில்லாத,
வாராருமுகில் **வீராசாமி** யீன்ற
**வரதராஜ**னெனனும் கவிவல்லோனே.

## அவையடக்கம்.

மன்கவியுந் தருந்தேவயானைதன்னை
மதிமரபு நகுடனருள் யயாதி வேந்தன்,
வன்கவின் செய்மன்றல் புரிசரிதைதமிக்கோர்
மாநிலத்தில் வழுத்தியநல் லடநாய் தன்னை,
மின் கவிஞரிட பாத்து(க்)கவிறனுலே
மிக(ச்)சிறியேன் விலாசமென வியந்துரைத்த
புன்கவியு மென்கவியாய்க் கருதியன்பு
பொருத்துவார் புகழ்பரவு புலவர் மாதோ.

## மங்களம். இராகம். பந்துவராளி.

### ஆதி தாளம்.

மங்களம் மங்களம் செயஜய மங்களம் மங்களம்.
அங்கண் மாநிலத்தினில் அடியார்க்கருள் விளைக்கும்
அத்திவரதனுக்கும், அரிவை வல்லிகைக்கும்,

மங்களம்.

வடமலைத்திகிரிகண்ண வாளராத மறைக்கும்
மலைமலிநிறைந்த வயமாமலர் திருக்கும்,
இடவிருடியார் சூதி திகுமா றுமுகனுக்கும்
தேவயானைக்குமெழில் சேரும் வள்ளி தனக்கும்

மங்களம்.

நானிலத்திற்புகழும் நாவலருக்கு வாக்கும்
நற்றிறமுமருளி(ச்) சித்தம் மகிழ்ந்துகாக்கும்,
தூநிலவுபாரதி சுருதியன புகழ்வோர்க்கும்
சூலபாணியுமைக்குஞ் சொலத்திருபுரியூர்க்கும்.

மங்களம்.

இந்திரன்போலரசாண்ட இகல் **யயாதி**கோனுக்கும்
**இடபன்மனு** மளித்த விகல் **சன்மிட்டை** மானுக்கும்
தந்தைக்கிளமை தந்த தகை தருமவானுக்கும்
தம்பியெனவே வருதகைமையிருசூனுக்கும்—

மங்களம்.

விநாயகர் வருகிற விருத்தம்.

சீருயரவனியெல்லாஞ் செழித்திடச் செங்கோல் கொண்ட
பேருயர் மன்யயாதி பிறங்குள சரிதை கூற
ஏருயர் சுருதியன்ன விலகிய[ப்] பாரதத்தை
மேருவிலெழுதும் பால விநாயகர் வருகின்றாரே.

விநாயகர் வருகிற தரு—இராகம்—கலியாணி.

தாளம்—ரூபகம்.

பால விநாயகர் வந்தார்—ஆதி
மூல விநாயகர் வந்தார்
ஞாலமெல்லாம் புகழ்—கோலவாகு வேறி
நன்மையுறும் பைய நகர்தனிற் செய்ய—பாலவி.

* * * * *

* * * * *

கட்டியன் சொல்—கட்டியம்.

நாற்றிசைகண் முழிதினும் வாத்திய நிரைமேவு
நரலையெனவே முழங்க
ஞானப்பிரகாச முன் காணவிருடியரெலா
நன்றாக வாசி கூற,
மாற்றலர்களஞ்சிநனி போற்றி செய்தேயிரு
மருங்கினு நெருங்கி(ப்) பணிய
வாகுவிற் சிறந்தகனி பாகுநேர் மதுரமொழி
மங்கையர் நிருத்தஞ்செய்ய
சாற்றருங் கேள்வி மனு நூற்றெரியமைச்சர்கள்
தருக்குடன் கூடிவரவே
சந்திரவட்டக் குடையை யந்தமாய்த் தாங்கியே
தகைமையுள வரசர் சூழ
ஏற்றமுள கவிஞர் துதி யாற்றவே கீர்த்திமலி
யிறை **யயாதியும்** வருகிறார்.
எங்கணு மிருந்து வந்திங்கு வைகினவர்கள்
யாவரு மெச்சரிக்கை.

**End :**

முடிசூட்டல்—விருத்தம்.

இராகம்—தோடி.

உலகிலுறு மெண்ணேழுதேசத்துற்ற
யுத்தம வேந்தர்(கணெ)(நெ)ருங்கி யுகந்து போற்ற,
இலகு புகழ் வியாசர் முதல் தவத்தோரெல்லா
மியலுடனுசிகள் கூற விமையோர் வாழ்த்த,
கலசை மருவிய வத்தினபுரத்திற்
சதிருடனே யெங்கு மலங்காரஞ்செய்து
நலமுடனே நவமணிகளிழைத்த கிரீடம்
நாட்டினூர் பூருவுக்கு(ச்) சூட்டினூரே.

பூரு ராஜன் மகுடாபிஷேக தரு.

இராகம்—சௌராஷ(ட்ர)கம்.

அபிஷேகங் கொண்டானே—சொல்
அருமறை மொழிப்படி, பெரு நவமணிமுடி
அபிஷேகங் கொண்டானே.

* * * * *
* * * * *

அற்புத முடியினை நற்றவ வியாசரும்
பற்றி(க்) கரத்திற் சிரத்திற்றரித்து—மெய்
ஆட்சியிற் கவனிப்பாய் மனமே—வெகு
காட்சியாக வாழ்ந்திடவே, மகுடாபிஷேக

* * * * *
* * * * *

சுடர் முடி தனது மூப்பினைக் கவர்ந்த
சுதனுக்கு விருப்பமாய் நல்கி
சொல்லு மூவாசை யாவையு மொழித்து(த்)
துன்னலர் பணியும் யயாதி
தொடர்வினை யகற்றி நற்கதி யடைய(த்)
துன்றிய வனத்திடைப்புக்கு(த்)
தூயருந் தவருந்நான் சிறந்துளக்குந்
தோமிலாக் காதிமைந்தனைப் போல்
படர் புகழ் சரசமலரயன் கழலை(ப்)
பதித்திதயத்தினிற் கருதி(ப்)
பகருந் தவங்கள் புரிந்திட(ப்) பகவன்
பரிந்து யயாதிமுன் தோன்றி

இடராறு வருங்களீந் தாண்டமுழுது
மியங்க விமானமும நல்க,
இனிமையாய்(ப்) பெற்று(ச்) சத்தியலோக
மெய்தியே வைகினன் மாதோ.

இப்பால் வாழி விருத்தம்

பொன்மருவுங்கந்திருவர் முனிவர் வாழி
போதன் வாமனன் பித்தன் புனிதன் வாழி,
சொன்மருவு மீதலர் பூதலரும் வாழி
தூயிரவிமதியுடு கந்தரமும் வாழி,
மின்மருவும் யயாதியுஞ் சன்மிட்டை வாழி
வேளனைய பூருமுதல் மூவர் வாழி,
மண்மருவு தருமகுணதியரும் வாழி
வாசித்தோ ரெழுதினோர் கேட்போரும் வாழி.

(கு. - பு.)—

இந்நூல், சந்திரவமிசத்தரசராகிய யயாதி மகாவரசனது சரிதத்தை விளக்குவது. இசைப்பாடல்களாலாகியது. இயற்றியவர் பையனூர் வரதராஜபிள்ளை யென்பவர். செய்யுள் நடை தாழ்ந்தது. பிழையும் சில விடத்துள. இந்தப் பிரதி சிதைந்திருக்கின்றது.

---

## No. 2479. ஞ்ஞானசார வியாக்கியானம்.
## JÑĀNASĀRAVIYĀKHYĀNAM.

Substance, palm-leaf. Size, 15½ × 1-6/16 inches. Pages, 132. Lines, 6, 7 on a page. Character, Tamil and grantha. Condition, injured. Appearance, old.

Begins on fol. 1-*a*. The other work herein is Pramēyasāraviyākhyānam 67-*a*.

Complete.

Same work as that described under No. R. 42 (c).

(கு. - பு.)—

இந்நூல் மூவருடக் காடலாக்கு 52 (c) நம்பர் பிரதியில் வந்துள்ள நூலேயாகும். இப்பிரதியில் இந்நூல் முற்றுமிருக்கிறது.

---

## No. 2480. பிரமேய ஸார வியாக்கியானம்.
## PIRAMĒYASĀRAVIYĀKHYĀNAM.

Pages, 34. Lines, 6 on a page.

Begins on fol. 67-*a* of the MS. described under No. D. 2479.

Complete.

Same work as that described undor No. R. 52(*d*).

(கு. - பு.)—

இந் நூல் மூவருடக் காட்லாக்கு 52 (d)-ம் நம்பர் பிரதியில் வந்துள்ளநூலேயாகும். இப்பிரதியிலே இந்நூல் முழுமையும் உளது. இதன் ஏடுகள் பல முறிந்துஞ் சிதலுற்றுமிருக்கின்றன.

---

## No. 2481. அருணாசல புராணம் உரையுடன்.
## ARUṆĀCALAPŪRĀṆAM WITH COMMENTARY.

Substance, palm-leaf. Size, 16¾ × 1¼ inches. Pages, 424. Linos. 8—10 on a

ASṬAŚLŌKĪVYĀKHYĀNAM.

Substance, palm-leaf. Size, 17-2/8 × 1½ inches. Pages, 384. Lines, 9 on a page. Character, Tamil and Grantha. Condition, slightly injured. Appearance, old.

Begins on fol. 20. The other work herein is Aṣṭaślōkīvyakhyānam 1-*a*.

Complete.

Same work as that described under No. D. 57.

(கு. - பு.)—

இந்நூல் மூலவருடக் காடலாகக்கு 57-ம் நம்பர் பிரதியில் வந்துள்ள நூலேயாகும். இப்பிரதியிலே இந்நூல் முற்றும் உளது. ஏடுகள் ஒரு சிறிது சிதைந்திருக்கின்றன. முதலில் 19 ஏடுகளிலே இந்நூலை பிரதிபண்ண வெழுத வாரம்பித்து அரைகுறையாக விடக்கப்பெற்றிருக்கிறது.

---

## No. 2530. அஷ்டச்லோகீ வியாக்கியானம்.

## ASṬAŚLŌKĪVYĀKHYĀNAM.

Pages, 38. Lines, 8 on a page.

Begins on fol. 1-*a* of the MS. described under No. D. 2529.

Incomplete.

Same work as the above.

(கு. - பு.)—

இது முன் பிரதியிலே வந்துள்ளதே. இப்பிரதியிலே அரைகுறையாக வெழுதாமலே விடப்பெற்றிருக்கிறது.

---

## No. 2531. பாரதம் மகாவிந்தம்.

## BHĀRATAM MAHĀVINDAM.

Substance, palm-leaf. Size, 10-6/16 × 1-2/8 inches. Pages, 524. Lines, 5 on a page. Character, Tamil. Condition, injured. Appearance, old.

Complete.

Same work as that described under No. D. 531.

(கு. - பு.)—

இந்நூல் டிஸ்கிருப்டிவ் காடலாக்கு 531-ம் நம்பரில் வந்துள்ள நூலேயாகும். இப்பிரதியில் இந்தப்பகுதி முற்றும் உளது. ஏடுகள் ஒரு சிறிது அங்கங்கே சிதலுற்றுள. எழுத்துப் பிழைகளிருக்கின்றன. இறுதியில் சார்வரிஸ்ரீ சித்திரைமீ ௨௰௬௨ திங்கட்கிழமை ௰௨ பன்னிரண்டு மணிக்குமேல் எழுதி முடிந்தது. முருகன் கையெழுத்து. எனவும், இதில் உள்ள உட்பிரிவுகளுக்குள் ஒவ்வொன்றுக்கும் இத்துணைசெய்யுட்களாம் என்றும் எழுதப்பெற்றுள.

IRAṆIYASAMHĀRANĀṬAKAM.

Substance, paper. Size, 13¼ × 8-6/16 inches. Pages, 52. Lines, 25 on a page. Character, Tamil. Condition, good. Appearance, old.

Begins on fol. 1-*a*. The other work herein is Prahlādanāṭakam 27-*a*.

Complete.

Same work as that described under No. D. 472.

(கு. - பு.)—

*இந்நூல் டிஸ்கிருப்டிவ் காடலாக்கு 472-ம் நம்பர் பிரதியில் வந்துள்ள நூலேயாகும். எழுத்துப் பிழையுடன் உளது. ஷை பிரதி இப்பிரதிக்கு மாத்ருகையாகும்.*

## No. 2533. பிரஹ்லாத நாடகம்.
## PRAHLĀDANĀṬAKAM.

Pages, 83. Lines, 25 on a page.

Begins on fol. 27-*a* of the MS. described under No. D. 2532.

Complete.

Same work as that described under No. D. 497.

(கு. - பு.)—

*இந்நூல் டிஸ்கிருப்டிவ் காடலாக்கு 497-ம் பிரதியில் வந்துள்ள நூலேயாம். இப்பிரதிக்கு ஷை பிரதி மாத்ருகாபிரதியாம். எழுத்துப்பிழையுடன் காணப்படுகின்றது.*

## No. 2534. பூர்வ காண்டம்.
## PŪRVAKĀṆḌAM.

Substance, paper. Size, 13¼ × 8 inches. Pages, 675. Lines, 25 on a page. Character, Tamil. Condition, good. Appearance, new.

Begins on fol. 1-*a*. The other work herein is Māṇikkavācakar carittiram 201-*a*.

Complete.

Same work as that described under No. D. 2142.

(கு. - பு.)—

*இந்நூல் டிஸ்கிருப்டிவ் காடலாக்கு 2142-ம் நம்பர் பிரதியில் வந்துள்ளதைப் பெயர்த்து எழுதி வைக்கப்பெற்றதாகும். இதன் நடுவில் "மாணிக்கவாசகர் சரித்திரம்" என்றதாக ஒரு வசனத்தாலான பகுதியைகுறையாக வெழுதப்பெற்றுள்ளது. அது மெகென்ஸி துரையவர்களுக்காக எழுதப்பெற்றதென்று தொடக்கத்தில் காணப்பெறும் சொற்களால் தெரிகிறது.*

Pages, 112. Lines, 25 on a page.

Begins on fol. 201-*a* of the MS. described under No. 2534.

Incomplete.

An account of the life of the *Śaiva* Saint, Śrī Māṇikkavācakar, in prose.

(கு. - பு.)—

இவ்வசனநூல் சைவப்பெருங்குரவர் நால்வரில் ஒருவரான மாணிக்க வாசகரது சரித்திரத்தினைச் சுருக்கமாக வெடுத்துரைத்துளது. அரைகுறை யாக விடுக்கப்பெற்றுள்ளது. இப்பகுதி கர்னல் மெக்கன்ஸி துரையவர் களுக்காக எழுதப்பெற்றது என்று முதலில் காணப்பெறும் சொற்களால் தெரிகிறது. வசன நடையத்துணை யழகாயில்லை. பிழைகள் உள.

---

## No. 2536. ஸாத்விக ப்ரஹ்ம வித்யாவிலாஸம்.
## SĀTVIKA BRAHMAVIDYĀVILĀSAM.

Substance, paper. Size, 13¼ × 8½ inches. Pages, 207. Lines, 25 on a page. Character, Tamil and Grantha. Condition, good. Appearance, new.

Complete.

Same work as that described under No. R. 271.

(கு. - பு.)—

இந்நூல் மூவருடக் காடலாக்கு 271-ம் நம்பர் பிரதியில் வந்துள்ள நூலேயாகும். ஷை பிரதியில் முற்றுமில்லை. இப்பிரதியில் முற்றுமிருக் கிறது. எழுத்துப் பிழைகளுடன் காணப்படுகிறது. ஆசிரியர் பெயர் இன்னா ரென்று தெரியவில்லை.

---

## No. 2537. அனுஷ்டான ரஹஸ்யம்.
## ANUṢṬHĀNA RAHASYAM.

Substance, paper. Size, 13¼ × 8½ inches. Pages. 453. Lines, 25 on a page. Character, Tamil and Grantha. Condition, good. Appearance, new.

Complete.

Same work as that described under No. R. 371.

(கு. - பு.)—

இந்நூல் மூவருடக் காடலாக்கு 371-ம் நம்பர் பிரதியில் வந்துள்ள நூலேயாகும். இப்பிரதியில் இந்நூல் முற்றுமிருக்கிறது. இதிலிருந் தும் இதன் ஆசிரியர் இன்னாரென்று விளங்கவில்லை. இப்பிரதி மிக வெழுத்துப் பிழைகளுடன் காணப்படுகிறது.

## No. 2538. தத்வதீப ப்ரகாசிகை.
## TATVADĪPA PRAKĀŚIKAI.

Substance, paper. Size, 13½ × 8½ inches. Pages, 464. Lines, 28-33 on a page. Character, Tamil and Grantha. Condition, fair. Appearance, old.

Complete.

Same work as that described under No. 851.

(கு. - பு.)—

இந்நூல் டிஸ்கிருப்டிவ் காடலாக்கு 851-ம் நம்பர் பிரதியில் வந்துள்ள நூலேயாம். இப்பிரதியில் இந்நூல் முற்றும் உள்ளது. அப்பிரதியில் முற்றுமில்லை. இப்பிரதியிலிருந்தும் இவ்வாக்கியானம் இன்னுராால் இயற்றப்பெற்றதென்று விளங்கவில்லை. எழுத்துப் பிழையுளது. ஏடுகள் மிகப் பழமையனவாய் ஒடிந்து போகின்றன.

---

## No. 2539. சக்குபாய் சரித்திரம்.
## ŚAKKUBĀY CARITTIRAM.

Pages, 65. Lines, 25 on a page.

Begins on fol. 1-*a* of the MS. described under No. D. 483.

Complete.

Songs on the life of Śrī Śakkubāy, a saint of Mahārāṣṭra.

**Beginning :**

சக்குபாய் சரித்திரம்.

காப்பு : சடகோபர் விஷயம் : வெண்பா.

பாரோங்கு கீர்த்தி படர்சக்குபாய் சரிதை
சீரோங்கு கீர்த்தனைமாய்ச் செய்யக்—காரோங்கு
நற்குருகூர் மாறனையே நன்னெஞ்சே யெப்பொழுதும்
சொற்றவருமற் சொற் சுகம் ॥ க ॥

பதின்மர் விஷயம் : எண்சீரடி விருத்தம்.

கொடுமையாம் பவக்கானின் வேரைக்கொத்திக்
கோதிலரி ஓமென்னும் பயிர்க்கு நன்னீர்
அடிமையினை யிறைத்தவனைச் செழிக்கச்செய்தே
அவனியிலற்புதங்கள் பலவுண்டாக்கிக்
கடுமையுறும் பவர்களை நல் வழிப்படுத்திக்
கனமான வேதத்தை யவர்க்குரைத்துப்
படிமை படாப் பதின்மர் மலரடியைப் போற்றிப்
பக்தி சக்குபாய் சரிதைப் பகருவேனே ॥ உ ॥

* * * * * * *

ஆசாரியன் விஷயம் : எண்சீரடி விருத்தம்.

முத்தி மறையோர் கடலினொலிபோல வேதம்
முழங்கிய பண்டரி புரத்திலுறையு மெங்கள்
கத்தனும் பாண்டரங்க ஹரியை நாடிக்
காதலாய்ப் பணிந்தோதிக் கதியடைந்த
பத்திமிகு சக்குபாய் சரிதை தன்னைப்
பண்புடனே பாடுதற்குப் பாரின் மிக்கோர்
சுத்த சத்துவ சீநிவாஸாசாரியர்
தூமலர்த்தா டலைமிசையிற் சூடுவாமாய் || |

சரித்திர சங்கிரகம் : எண்சீரடியாசிரியம்.

மணிகொண்ட கடல் சூழு முலகிமொங்கும்
மாராட்ட பக்த விஜயத்திற் சொல்லும்
கணிகொண்ட வரியருளாற்பாடி நல்ல
கதியடைந்தோர் களி லொரு பெண்பாலமர்ந்த
அணிகொண்ட துளவணியுஞ் சக்குபாயி
அன்புடன் பாடிப்பரமபத மடைந்த
துணிகொண்ட சரித மெவர்களுங் கேட்டுய்யச்
சொல்லுவா மிருவினையை வெல்லுவாமே.

அறுசீர்கழி நெடிலாசிரிய விருத்தம்.

அரியநாற் சுருதி வாழி யந்தணர் குழாமும் வாழி
உரிய 'வைணவர்களீட்டமுந்துங்க முடனே வாழி
விரியுநீர் முகிலும் வாழி விபுலம் விண்மணியுமீந்து
தரமுடன் வாழியிந்தச் சக்குபாயும் வாழிமாதோ.

சக்குபாய் சரித்திரம் முற்றும்.

இந்நூல், மகாராட்டிரத்துப் 'பக்த விஜயம்' என்னும் நூலிலே கூறப்பட்டு இருக்கும் "சக்குபாய்" என்ற வம்மையாரின் சரித்திரத்தை விஷயமாய்க்கொண்டுக் கீர்த்தநாப்பிரபந்த ரூபத்திலே யமைந்துள்ளது. இதனை யியற்றிய வாசிரியர் பையநகர் ராமதாஸர் ஆவார். இவர் தம்மை சுத்த ஸத்துவம் ஸ்ரீநிவாஸாசாரியரது சீடர் என உணர்த்தி யிருக்கின்றார். முற்றும் உளது. எழுத்துப் பிழைகளுடன் காணப்படுகிறது.

---

## No 2540. பாரத வசனம் (கர்ண பர்வம்), BHĀRATAVACANAM (KARṆAPARVAM).

Substance, paper. Size, 11 × 9 inches. Pages, 1034. Lines, 20 on a page. Character, Tamil and Grantha. Condition, good. Appearance, new.

Contains the Karṇaparvam only.

Same work as that described under No. D. 439.

(கு. - பு.)—

இந்நூல் டிஸ்கிருப்டிவ் காடலாக்கு 439-ம் நம்பர் பிரதியிலே வந்துள்ள நூலேயாகும். இப்பிரதியிலே கர்ண பர்வம் மாத்திரம் முற்றுமிருக்கிறது. இது மூன்று ஸம்புடங்களாகக் கட்டப்பட்டிருக்கின்றது. எழுத்துப் பிழைகளுடன் உளது.

---

## No. 2541. பரத சித்தாந்தம்.

## BHARATA SIDDHĀNTAM.

Substance, paper. Size, $13\frac{1}{4} \times 8\frac{3}{4}$ inches. Pages, 177. Lines, 20 on a page. Character, Tamil and Grantha. Condition, injured. Appearance, old.

Incomplete.

Wants 1 leaf in the beginning. 20th leaf left blank.

A treatise on the science of dancing and matters connected there—with.

**Beginning:**

. . . . க்ஷி த்ரைாத்ரீஸம்வ பாணத்யுக் கமெ | நமெ [நம] (க) நாத
ஸயாபத்ர ஸமிதி ஸ்ரீ த்ரிகெ ஸம ஸு (ய) ரத்யெ ||

அதெப்படி யென்றால்,

அம்புயவேதன் விதித்திடு மண்டலமான தெல்லாஞ்
செம்பொன் வடிவு சதுரமதாகுஞ் சிறந்திடுமே
லும்பருலகங்கள் பாதாளமெல்லையுயர்ந்தநடு
விம்பருலகமதுவே புவியென் றியம்பினரே. || க ||

அதெப்படியென்றால் ப்ரஹ்மாண்டத்திலே ப்ரஹ்மாவினுடனே உத்பத்தியான ப்ரஹ்மாண்டம் நூறுகோடி யோஜனை விஸ்தீர்ணமா யிருக்கும். இது சதுரஸ்ரமாயும் ஸ்வர்ண வர்ணமுமாயும் இருக்கும்.

அதிலே அன்பது கோடியோஜனை பாதாளமும் அநிஷ்டபாகாஉமும், ஸத்யபாகாஉமும் ஸமிதியாயிருக்கும். அதுக்குமேல் அன்பது கோடியோஜனை [அ] (லை) தீர்லோகம், ஸமலோகம், த்ரலோகம் ஜநலோகம், கமெலலோகம், ஸத்யலோகம் ப்ரஹ்மலோகம், விஷ்ணுலோகம் ருத்ரலோகம் ஸிவலோகம் என்று இந்த ப்ரஹ்மாண்டத்து நடுவேயாகிய பூமி நூறுகோடி யோஜனை விஸ்தீர்ணமாயிருக்கும். இதில் லவண உக்ஷுஸுரா ஸர்பி ததி க்ஷீர ஸுத்தோதக மென்று ஸப்தஸாகரமும் * * * ஸப்த த்வீபமுமாயிருக்கும். இதில் ஜம்பூமாகிய நாவலந்த்வீபம் லக்ஷ யோஜனையாயிருக்கும். இதில் நடுவே மகாமேரு. இந்த மஹாமேருவைச் சூழ்ந்து * * * * இப்படி இந்த பூமி அநேக மஹிமையுடனேயிருக்கும். ஆகையினால் இந்தப் பூமிதேவியை நமஸ்காரஞ் செய்கிறேன். அதெப்படி யென்றால்-

ஸர்வஜ்ஞ வஸந்த ஜெவி வெவ-கூ ஷநணிமெ |
நமோ விஷ்ணவே ஊகஃ பாதஸாம்ஸயெ ||
ஸூத்ர ஸங்க்ரஹ லக்ஷணம்.

அதெப்படி யென்னில் யாவனொரு நர்த்தகனானவன் ப்ரதா மானவன் நிருத்தம் பண்ணத்தக்கதாக ஸபையில் வந்தவுடனே ஸபையை ரக்ஷித்துக்கொண்டிருக்கிற தேவதைகளைப் பூஜை பண்ணி ஸந்தோஷமுண்டாக்கிப் பின்பு ஹஸ்த முத்ரைகளைப் பிடித்துக்காட்டி நிருத்தம் பண்ணவேண்டியிருக்கும். ஆகையினாலே ஸூத்ர ஸங்க்ரஹத்தையச் சொல்லுகிறேன்.

**End :**

வேத ஸாஸ்த்ர புராணாதி ஸாமான்ய லக்ஷண ஸாமான்ய யொக்க ஸர்வஜ்ஞ ப்ரயோகமாவ ஜெ உண்ட. ஸந்தோஷ ப்ரீதிக்கு ஊர்வம் நாதம் ஸூநாதாதிக்கி வீணை ஊர்வ ஸமபிவி அணி ஸமான ஸ்ரீரஸிஃ | ஸர்வஸிஃ ஸமிவாதி கநக ஜெவக ஸங்கநா ஜாநாத ஊதிமாந ஸமிமவெதமி கமி ஸந்தப்ரயோ ஸங்க வரந மாத்ரா ஊர்ஜ ஸஹஊ தெவக நித்ராதமி ஸங்கநாம்ருத நாஸீ ஷஜய கண . . . . . .

(கு. - பு.)—

இந்த நூல் பகுதி பரத சாஸ்திரத்தைச் சார்ந்ததாயுள்ளது. இதன் பெயர் இன்னுஞ் சரியாக விளங்கவில்லை. ஆராயற்பாற்று. நாட்டியத்துக்கு அங்கமான யாவற்றினுடையவும் ஸ்வரூபங்களையும் எடுத்து உணர்த்துகின்றது. இது ஸம்ஸ்கிருத கிரந்தங்களிலும் தமிழ் நூல்களிலுமிருந்தும் ஒருமிடறான விஷயங்கள் பலவற்றையும் எடுத்துக்கொண்டு செவ்வனே விளக்குகின்றது. அங்கங்கே சில சுலோகங்களுக்கும் பாட்டுக்களுக்கும் உள்ள விசேடப்பொருளை மிக விரிவாக எடுத்துணர்த்துகின்றது.

உரை நடையான சில விடங்களிலே உரைத்திறம் செவ்வனேயிருக்கின்றது. இந்நூல் பண்டைய காலத்தே யிருந்தொழிந்த நாடகத் தமிழிலக்கண நூல்களிலிருந்து பல அருமையான பாடல்கள் திரட்டப்பெற்றுள்ளது. அவை எந்த நூலின் பாடல்கள் என உணர அரிதாகவிருக்கிறது. இறுதியிலே இந்த விஷயமே தெலுங்கு உரையுடன் உளது. முற்றுமில்லை. பிழைகள் மிகவுள. எழுதத்தெரியாத ஒருத்தரால் எழுதப்பெற்றிருக்கிறது. ஆயினும் இது உள்ள வரையு மிகவும் உபயோகப்படும்.

---

**No. 2542.** விஷ்ணுஸஹஸ்ரநாம வ்யாக்யா ப்ரஹ்மாநந்த ப்ரகாஶிகா.

## VIṢṆUSAHASRANĀMA VYĀKHYĀ BRAHMĀNANDA-PRAKĀŚIKĀ.

Substance, paper. Size, 13¼ × 8½ inches. Pages, 424. Lines, 20 on a page. Character, Tamil and Grantha. Condition, good. Appearance, old. Complete.

Same work as that described under No. R. 1047.

(கு. - பு.)—
இந்நூல் மூவருடக் காடலாக்கு 1047-ம் நம்பர் பிரதியில் வந்துள்ள நூலேயாம். இப்பிரதியில் முற்றுமிருக்கிறது. எழுத்துப் பிழைகளுடன் காணப்படுகிறது.

---

## No. 2543. பாரத வசனம் சபா பர்வம்.

### BHĀRATAVACANAM SABHĀPARVAM.

Substance, paper. Size, 11 × 8¾ inches. Pages, 752. Lines, 20 on a page. Character, Tamil and Grantha. Condition, good. Appearance, new.

Breaks off in the 70th Adhyāya.

Same work as that described under No. R. 4.

(கு. - பு.)—
இந்நூல் மூவருடக் காடலாக்கு 4-வது நம்பர் பிரதியிலே வந்துள்ள நூலேயாகும். இதில் வந்த பகுதி ஷை பிரதியின் முதற் பகுதியாகும். எழுத்துப் பிழையுடன் காணப்படுகிறது.

---

## No. 2544. ஸ்ரீபுராணம்.

### ŚRĪPURĀṆAM.

Substance, paper. Size, 13½ × 8¾ inches. Pages, 532. Lines, 24 on a page. Character, Tamil and Grantha. Condition, good. Appearance, new.

Same work as that described under No. R. 869. and this is the second volume of the MS. described under No. D. 2545.

(கு. - பு.)—
இந்நூல் மூவருடக் காடலாக்கு 869-ம் நம்பர் பிரதியிலே வந்துள்ள நூன நூலேயாகும். இப்பிரதி இரண்டு பாகங்களாகக் கட்டப்பட்டிருக்கின் றனவாதலின் இஃது இரண்டாம் பாகமாகும். இதற்கு முதற்பாகம் D 2545-வது நம்பர் பிரதியிலே வந்துள்ளது.

---

## No. 2545. ஸ்ரீபுராணம்.

### ŚRĪPURĀṆAM.

Substance, paper. Size, 13½ × 8¾ inches. Pages, 248. Lines, 24 on a page. Character, Tamil and Grantha. Condition, good. Appearance, new.

Same work as the above.

(கு. - பு.)—
இது முன் நம்பர் பிரதியிலே வந்துள்ள நூலின் பகுதிக்கு முதற் பகுதியாகும். இப்பிரதி டிஸ்கிருப்டிவ் காடலாக்கு 459-ம் நம்பர் பிரதியைப் பெயர்த்து எழுதுவித்ததொரு பிரதியாகும்.

## No. 2546. கௌமுதி கதை.

## KAUMUDIKATHAI.

Substance, paper. Size, 13½ × 8½ inches. Paes, 196. Lines, 20 on a page. Character, Tamil and Grantha. Condition, good. Appearance, new.

Complete.

Same work as that described under No. D 393.

(கு. - பு.)—

இந்நூல் டிஸ்கிருப்டிவ் காடலாக்கு 393-ம் நம்பர் பிரதியிலே வந்துள்ள நூலேயாகும். இப்பிரதியிலே இந்நூல் முற்றும் உளது. மிக வெழுத்துப் பிழையுடன் காணப்படுகிறது.

---

## No. 2547. அஷ்டபதார்த்த ஸாரம்.

## ASṬAPADĀRTHASĀRAM.

Substance, paper. Size, 11⅝ × 9 inches. Pages, 312. Lines, 20 on a page. Character, Tamil and Grantha. Condition, slightly injured. Appearance, new.

Complete.

Same work as that described under No. R. 871.

(கு. - பு.)—

இந்நூல் மூவருடக் காடலாக்கு 871-ம் நம்பர் பிரதியில் வந்துள்ள நூலேயாம். இப்பிரதியிலே இந்நூல் முற்றும் உளது. இது வழுத்துப் பிழையுடன் காணப்படுகிறது. ஏடுகள் ஒரு சிறிது சிதலுற்று இருக்கின்றன.

---

## No. 2548. திருவாய்மொழி வியாக்கியானம் ஈடு முப்பத்தாறாயிரப்படி.

## TIRUVĀYMOḺI VIYĀKHYĀNAM ĪḌU MUPPATTĀṚĀYIRAP-PAḌI.

Substance, palm-leaf. Size, 19 × 1½ inches. Pages, 350. Lines, 7 on a page. Character, Telugu. Condition, much injured. Appearance, very old.

Contains pattus 1 and 2 only.

Same work as that described under No. R. 37.

(கு. - பு.)—

இந்நூல் மூவருடக் காடலாக்கு 37-ம் நம்பர் பிரதியிலே வந்துள்ள நூலேயாகும். இப்பிரதியிலே இந்நூலின் ஆதி தொடங்கி இரண்டாம் பத்து வரையில் உளது. ஏடுகள் மிகவுஞ் சிதலுற்றுள.

Substance, palm-leaf. Size, 18 × 1¼ inches. Pages, 16. Lines, 5 on a page Character, Tamil and Grantha. Condition, injured. Appearance, old.

Begins on fol. 1-*a*. The other work herein is Tirumantrartha arumpadaviḷakkam 10-*a*.

Contains Tiruvaymoḻis 1—8 only of the Mudarpattu.

Same work as that described under No. R. 58.

(கு. - பு.)—

இந்நூல் மூவருடக் காடலாக்கு 58-ம் நம்பர் பிரதியில் வந்துள்ள நூலேயாம். இப் பிரதியில் இந்நூல் ஆதி தொடங்கி முதற்பத்து எட்டாந் திருவாய்மொழி முடிவுவரை உளது. ஏடுகள் ஒரு சிறிது சிதைவுற்றிருக் கின்றன.

---

## No. 2550. திருமந்திரார்த்த வரும்பத விளக்கம்.

## TIRUMANTRĀRTHAVARUMPADAVIḶAKKAM.

Pages, 260. Lines, 6, 7 on a page.

Begins on fol. 10 a of the Ms. described under No. D. 2549.

Complete.

Same work as that described under No. R. 56.

(கு. - பு.)—

இந்நூல் மூவருடக் காடலாக்கு 56-ம் நம்பர் பிரதியில் வந்துள்ள நூலேயாகும். இப்பிரதியில் இந்நூல் முற்றும் உளது. ஏடுகள் ஒரு சிறிது சிதைந்திருக்கின்றன.

---

## No. 2551. திருவாய்மொழி வியாக்கியானம் ஈடு முப்பத்தாறாயிரப்படி.

## TIRUVĀYMOḺIVIYĀKHYĀNAM ĪḌU MUPPATTĀṞĀYIRAPPAḌI.

Substance, palm-leaf. Size, 16½ × 1-6/16, 16 × 1½ inches. Pages, 240. Lines, 7 on a page. Character, Telugu. Condition, much injured. Appearance, old.

Contains pattus 1 and 2.

Same work as that described under No. D. 2548.

(கு. - பு.)—

இந்நூல் டி. 2548-ம் நம்பர் பிரதியில் வந்துள்ள நூலேயாம். இதிலும் ஆதி தொடங்கி இரண்டாம்பத்தின் முடிவுவரையிலுமேயுளது. ஏடுகள் மிகவும் சிதலுற்றிருக்கின்றன. அநேக ஏடுகள் முறிந்து இருக் கின்றன.

NO. 2002. திருவாய்மொழி பிரதிபதவுரை.

TIRUVĀYMOḺI PRATIPADAVURAI.

Substance, palm-leaf. Size $16\frac{1}{2} \times$ 1-10/16 inches. Pages, 220. Lines, 7, 8 on a page. Character, Telugu. Condition, much injured. Appearance, very old.

Contains Pattus 7—10 only.

Similar to the work described under No. D. 733.

**Beginning :**

ஏழாம் பத்து :—

உண்ணிலாவிய, உள் - உள்ளே, நிலாவிய - வர்த்தியா நிற்கிற, ஐவரால் - பஞ்சேந்த்ரியங்களால், குமை தீற்றி - பாதித்து, என்னை - ஆர்த்தனாயிருக்கிற வென்னை, உன - உன்னுடைய, பாதபங்கயம் - திருவடித் தாமரையை, நண்ணிலா வகையே - சேராமலிருக்கும்படியே, நலிவான் - பாதிக்கைக்கு, இன்னும் - ஸமாச்ரயணம் பண்ணின பின்பும், எண்ணுகின்றாய் - எண்ணிக்கொண்டிருக்கிறீர், ஸங்கல்பித்துக்கொண்டிருக்கிறீர். எண் இலா - எண்ணிக்கையில்லாத, பெரும்மாயனே - மஹத்தான ப்ரக்ருதியுடைய ஸ்வாமி: உன் உயர விஷயமாகாதாரைப் பாதிக்கைக்கு உபகரணமான ப்ரக்ருதியையுடையவனே என்றபடி. அநுகூலபக்ஷம் - எண் இலா - மனனாதீதமான, பெருமாயனே - ஆச்சர்யமான போந்தான கல்யாண குணங்களையுடைய ஸ்வாமி; உன் கல்யாண குணத்துக்கும் நான் உபத்ரவப்படுகைக்கும் கூடுமோவென்றபடி. இமையோர்கள் ஏத்தும்-நித்யஸூரிகள் ஸ்தோத்ரியா நிற்கிற, உலகம் மூன்று உடை-மூன்று லோகங்களையுடைய, அண்ணலே - ஸ்வாமீ! அமுதே - அமுதம் போலப் போக்யனே - அப்பனே - உபகாரகனே! என்னை ஆள்வானே - நான ஒப்பாமலிருந்தாலும் என்னையாண்டவனே! நலிவான் இன்னும் எண்ணுகின்றாய் உசுத்தீயம் ||

**End :**

அன்றிக்கே அயனை அரனை யலாவற்று அரியை யலற்றி வீடு பெற்ற குரு கூர்ச்சடகோபன். அதாவது, அயனிடத்திலும், அரனிடத்திலும் சேர்தற்குண்டான ப்ரீதம் அறும்படி ஜுமஹாரீரியான அரியைக்கூப்பிட்டு ப்ராப்யஸித்தியாலே அவ்வளவிலேபரம் லதித்து கிரகிரமயாநந்தமோக்ஷத்தை ப்ராவித்த ஆழ்வார். பிறந்தார். இரண்டு யோஜனையிலும் அயன் அரன் என்கிற பதங்களில் ஒன காரம் அவ்யயம். இது கலித்துறை.

ஜீயர் திருவடிகளே சரணம்.

ஸ்ரீநிவாஸ மஹாதேவ ரக்ஷ.

(கு. - பு.)—

இந்நூல் டிஸ்கிருப்டிவ் காடலாக்கு 733-ம் நம்பர் பிரதியில் வந்துள்ள நூல் போன்று பிரதி பதவுரையாய் அமைந்துளது. இது அதைக்காட்டிலும் அங்கங்கே ஒரு சிறிது விசேஷப்பொருட்களை விளக்கிப்போருகிறது. இப்பிரதியில இந்நூல் 7 முதல் 10 ஆகிய நான்கு பத்துக்கள் மாத்ரம் உள. ஆசிரியர் இன்னார் என்று விளங்கவில்லை. பெரும்பாலும் தெனாசார்ய ஸம்பிரதாயத்தைச் சார்ந்ததாயிருக்கலாமோவென்று ஊஹிக்கப் படுகிறது. உரை நடை நன்ருக வுளது. ஏடுகள் முற்றும் சிதலுறறுச் சிதைந்து முறிந்து கிடக்கின்றன.

---

## No. 2553. திருவாய்மொழி வியாக்கியானம் ஈடு முப்பத்தாருயிரம்.

## TIRUVĀYMOḺIVIYAKHYĀNAM ĪḌU MUPPATTĀṞĀYIRAM.

Substance, palm-leaf. Size, 18¼ × 1½ inches. Pages, 212. Lines, 7 on a page. Character, Telugu. Condition, much injured. Appearance, very old.

Incomplete. Contains 7th Pattu only.

Same work as that described under No. R. 37.

**Beginning :**

ஏழாம்பத்து.

நம்மைக் கைவிட நினைத்தான் என்று இருக்கிருர் இவர். நிகர்விஷ்ருதியையும், நிஷேத்ரமை விமாநத்தையும் ஸாக்ஷாத்கரித்து அங்கே போய் அப்படியே அநுபவிக்க வேணுமென்று பற்றையுடைய இவர்க்கு . . . . தீயமாயிருப்பதும் ஓராகார முண்டென்னும் ஜ்ஞாந ஶாகரத்தாலே யமித்திருக்கப் போகாதே * * * * * * * * என்றிறே இவர் இருப்பது இப்படியிருக்கிற தம்மையு * * * * படியையும் ...ஸ்...மாயிருக்கி றபடியையும் ரக்ஷிக்கைக்குண்டான வ்ராஜியிருக்கிறபடியையும் தமக்கு இவையிற்றிலே அந்யமற்றிருக்கிறபடியையும் . . . . . . . . . . ஶ்ரமணங்கள் ...யாதிகள் இவற்றிற் கடியான ...வ்ரக்ராதி ...ஸ்...விகள் இவையெல்லாம் கஷ்டமாயிருக்கிற படியையும் தமக்கு இவையிற்றில் அந்யமற்றிருக்கிறபடி . . . . . . . . . . . . . . . ஶ்ரயங்களும் நடையாடுகிற ஸம்ஸாரத்தில் வைத்த போதே இவையிற்றுக்கு நம்மை இரையாக்கிப் போகட நினைத்தான் அத்தனை. "க்ஷிவாதி" என்கிறபடியிலே புக்கோம் இனித்தான் இவன் வரிகாங்கள கண்டதும் நமக்கு * * * * * * * *

மயர்வற மதிநலமருளப்பெற்ற ஆழ்வாரானவை ... வாவெம்மை
யிராதே துடித்து நோவு படுகைக்காகவென்று அறுதியிட்டு அவன்
திருவடிகளிலே தலையை மடுத்துக்கேட்டார் அடங்கலும் நீராம்படி
கிடந்து கூப்பிடுகிறார். ம . . . . . ஒரு பிராட்டி தசையை
ப்ராப்தராய் ப்ரணயரோஷம் தலையெடுத்துச் சொல்லிற்றெல்லாம்
பிறர் வாயாலே சொன்னாப்போலேயிருக்கையாலே ஆழ்வாரான
தன்மையாலே நின்று இன்றாதாம்படியான தசை விளைந்ததிவர்க்கு.

(கு. - பு.)—

இந்நூல் மூலௌருடக் காடலாக்கு 37-ம் நம்பர் பிரதியில் வந்துள்ள நூலேயாகும். இப்பிரதியில் ஏறக்குறைய முழுதும் உளது. ஏடுகள் எல்லாம் முனைமை பிளைமைகளாகக் கொல்லப்பட்டிருக்கின்றன. பல ஏடு அடியோடு முறிந்து கிடக்கின்றன. உள்ள ஏடுகள் எல்லாம் ஒடிந்து மாய்ச் சிதலுற்றுப் படிகற்கும் அரியவைகளாயிருக்கின்றன. நடுவில் சில ஏடுகள் ஒன்று எழுதப்பெறாமல் விடப்பட்டிருக்கின்றன.

---

## No. 2254. உபதேசரத்தினமாலை தெலுங்கு பிரதி பதவுரையுடன்.

### UPADĒSARATTINAMĀLAI WITH TELUGU MEANING.

Substance, palm-leaf. Size, 17¾ × 1½ inches. Pages, 100. Lines, 7 on a page. Character, Telugu. Condition, much injured. Appearance, old.

Almost complete.

Same work as that described under No. R. 10, with Telugu meaning.

(கு. - பு.)—

இந்நூல் மூலௌருடக் காடலாக்கு10-ம் நம்பர் பிரதியில் வந்துள்ள நூலேயாகும். இப்பிரதியில் இது, தெலுங்கு பாஷையிலான ஒரு பிரதி பதவுரையுடன் உளது. முதலேடு காணப்பெறவில்லை. உள்ள ஏடுகளும் மிகவும் சிதலுற்றும் முறிந்தும் கிடக்கின்றன.

---

## No. 2555. ஸ்ரீ வசந பூஷண நிர்வாஹப்ரகாரம்.

### ŚRĪVACANABHŪSAṆANIRVĀHAPRAKĀRAM.

Substance, palm-leaf. Size, 18½ × 1-10/16 inches. Pages, 4. Lines, 7 on a page. Character, Telugu. Condition, much injured. Appearance, very old.

Complete.

Begins on fol. 1-*a*. The other works herein are Antimōpāyaniṣṭhā 3-*a*. Viṣayāntarakrūram 48-*a*. Adhikāranirūpaṇam 49-*a*. Taniślōkavyākhyānam 51-*a*. Tiruppaḷḷiyeḻucciviyākhyānam 73-*a*.

Explains the various topics in the *Śrī Vacana Bhūṣaṇa* of Śrī Piḷḷai Lōkācārya.

**Beginning :**

கோயிற் கந்தாடை நாயன் நிர்வாஹகம். . . . . . . .
இடுவது என்று தொடங்கி அத்தாலே மூற்பட்டது என்னு மளவாக ப்ரபந்நாநந்யோபாயத்வ ப்ரகரணம். உக்திஹாஸமென்று தொடங்கி உபாயத்வெ ஹவஞ்சொல்லிற்றாயிற்று என்னுமளவாக . . . .
. . . . . . . . . . . . . . ப்ராப்ய ப்ராபகாரத்துக்கும்
என்று தொடங்கி ப்ரபத்தி வைஷம்யம் பண்ணித்து மிவனுக்காக என்னும் அளவாக ப்ராப்ய ப்ராபகாரோபாய ஸாத்யாரண வைஷம்ய ப்ரகரணம். (3) ப்ரபத்திக்கென்று தொடங்கி இளைய பெருமாள்
. . . . . . . . . . . . . . ஷி நியமாபாவ ப்ரகரணம்.
(ச) விஷய நியமமாவது என்று தொடங்கி ஹோமத்ரீாயிருக்கு மென்னும் அளவாக ப்ரபத்தி விஷய நியம ப்ரகரணம்.

**End :**

இரண்டு மறையாதோ என்று தொடங்கி ஆசார்யாபிமாநத்துக்கும் என்னு மளவாக ஆசார்யாபிமாந நிஷ்டா ப்ரகரணம். (47) ஸ்வாபிமாநத்தாலே என்று தொடங்கி ஆசார்யாபிமாநமே உத்தாரகம் என்னு மளவாக ஆசார்யாபிமாந ப்ரகரணம். (48) கைப்பட்ட பொருளை என்று தொடங்கி ஸ்வரூபங் குலையாமைக்காக என்னுமளவாக ஆசார்யாபிமாந கைங்கர்ய கைங்கர்ய ப்ரகரணம். (சக) ப்ராப்ய ஹம்ஸித்தியில் ப்ராவண்யம் என்று தொடங்கி ஸ்வவைலக்ஷணத்தும் என்னுமளவாக நிஷேத ப்ரகரணம். (ருய)

இது கோயில் கந்தாடைநாயன் நிர்வாஹம்.

ஜீயர் திருவடிகளே சரணம்.

ஸ்ரீசைலேசாநுஜாய நம:.

(கு. - பு.)—

இச்சிறு நூல் ஸ்ரீவைஷ்ணவ மதத்திலே தென்கலை சம்பிரதாயத்தில் "பிள்ளை லோகாசாரியர்" என்னும் பெரியார் இயற்றிய "ஸ்ரீவசநபூஷணம்" என்ற கிரந்தத்துக்கு இருக்கும் விஷயங்கள் பலவற்றுள்ளும், இன்ன வாக்கியம் முதலாய் இன்ன வாக்கியம் இறுவாய் இன்னின்ன பிரகரணங்கள் அமைந்திருக்கின்றன என்றதாய இச்செய்தியினையெடுத்து உணர்த்துகின்றது. இங்ஙனமாக நிர்வஹித்த நிர்வாஹம் "கோயில் கந்தாடை நாயன்" என்பவரால் ஆகும் என்பது இறுதியில் காணப்பெறும் ஒரு தொடர்மொழியால் விளங்குகிறது. முதல் ஏடு பாதி முறிந்து விழுந்து காணப்பெறவில்லை. இதன் (2)-ம் ஏட்டின் பின்புறத்தில் உடையவரது ஆக்ருதியொன்று சங்கு சக்கிரங்களுக்கிடையிலே எழுதப் பெற்றுளது.

ANTIMŌPĀYANIṢṬHAI.

Pages, 90. Lines, 6 on a page.

Begins on fol. 3-*a* of the MS. described under No. D. 2555.

Complete.

Same work as that described under No. R. 116.

(கு. - பு.)—

இந்நூல் மூவருடக் காடலாக்கு 116-வது நம்பர் பிரதியில் வந்துள்ள நூலேயாகும். இப்பிரதியில் இந்நூல் முற்றும் உளது. ஏடுகள் எல்லாம் மிகவும் சிதலுற்றும் முறிந்தும் இருக்கின்றன. இந்நூலின் நடுவிலே 21-ம் ஏட்டின் பின்புறத்திலே சங்கு சக்கிரங்களுக்கிடையே உடையவரது ஆகிருதியொன்று எழுதிவைக்கப்பட்டிருக்கிறது.

---

## No. 2557. விஷயாந்தர க்ரூரம்.
## VIṢAYĀNTARAKRŪRAM.

Pages, 2. Lines, 8 on a page.

Begins on fol. 48-*a* of the MS. described under No. D. 2555.

Complete.

Same work as that described under No. D. 998.

(கு. - பு.)—

இந்நூல் டிஸ்கிருப்டிவ் காடலாக்கு 998-ம் நம்பர் பிரதியிலே வந்துள்ள நூலேயாகும். இப்பிரதியிலே இது முற்றும் உளது. ஏடு சிதலுற்றிருக்கிறது.

---

## No. 2558. அதிகாரி நிரூபணம்.
## ADHIKĀRINIRŪPAṆAM.

Pages, 3. Lines, 8 on a page.

Begins on fol. 49-*a* of the MS. described under No. D. 2555.

Complete.

A *Śrī Vaiṣṇava* tract on persons qualified for salvation, and what they should know.

**Beginning :**

𑌅𑌧𑌿𑌕𑌾𑌰𑌿𑌨𑌿𑌰𑍂𑌪𑌣𑌂.

𑌶𑍍𑌰𑍀𑌮𑌤𑍇 𑌰𑌾𑌮𑌾𑌨𑍁𑌜𑌾𑌯 𑌨𑌮𑌃.

[illegible]

வஸாஹமவஸிந கதேதஹ வமெதிதிதி மவஹ ஸைநந்ந வஜ வந்தக்தந்ந வஜவக்தி . . . . . . . . . க்தந்ந திஹாத தந்ந உவாய ஸஹந ஸக்தந்ந வாகஞ்ஜக்தந்ந *

* * ஸகாக்தி தந்ந * * உவாய ஜூஹவ ஜாநத் தந்ந ஷ்டாஸாக் தந்ந கமெந * * *

**End :**

வாஸாகாஷ்டாக் ஷெடிஷந்நா திருவந்தாழ்வாருவலநே "நிவாவ ஸயூாஸந வாஷ காஸஹகொவயாந," சநந்ஹ ஸஂ ஸாஹதஂந கயிகாஙி சட்வவெந ஸவிஷெஷ ஸவெகாவ ஸவிா வஹவயநந்ந யஜொவிக ஷெகஷமவிஷமெயடட வாஸாகாஷ்டாதஹ. (16) உவாயவுூஹ ஹாவஷெடிஷந்நா, ஷடாயிாஜி தாந தஷஹமா சவிாவகாமெஷந ஸ்ரீநாராயணதி வடட உவாயவுூஹவஹ. (17) ஷ்காஷ்டாஷ்டி ஷந்நா, ஷாவஸஂ தவகடிஜஸி ஸெஷதஹமொ திஹாண்டைய்யுண்டு. ஷ்காஷ்டா. (18) ஸ்ரீமெத ஸாதாநஷாய நமஃ.

ஸ்ரீமதஹவெஷ்ட மஹாஹதி திருவடிகளே ஸரணம்.

(கு. - பு.)—

இச்சிறு நூல் ஸ்ரீவைஷ்ணவ மதத்தில் தென்கலை சம்பிரதாயத்தைச் சார்ந்ததாய் உளது. இது மோக்ஷாதிகாரிக்கு அறியவேண்டிய பதினெட்டு அர்த்தங்கள் உண்டென்றும் அவைகளினது ஸ்வரூபத்தினையும் எடுத்து உணர்த்துகின்றது. தெலுங்கு வசன நடையில் அமைந்துளது. முற்றுமுளது. ஆசிரியர் இன்னார் என்று தெரியவில்லை. பிழையுள எடுகள் சிதலுற்றுள.

---

## No. 2559. தனிச்லோக வியாக்கியானம்.

### TANIŚLŌKAVYĀKHYĀNAM.

Pages, 44. Lines, 7 on a page.

Begins on fol. 51-*a* of the MS. described under No. D. 2555.

Incomplete.

Same work as that described under No. R. 821.

(கு. - பு.)—

இந்நூல் மூவருடக் காடலாக்கு 821-ம் நம்பர் பிரதியிலே வந்துள்ள நூலேயாகும். இப்பிரதியிலே இந்நூல் முற்றும் இல்லை. எடுகள் மிகச் சிதல் உற்றிருக்கின்றன. பெரியவாச்சான் பிள்ளை இயற்றியதாகும்.

## No. 2560. திருப்பள்ளியெழுச்சி வியாக்கியானம்.

TIRUPPALLIYELUCCIVIYĀKHYĀNAM.

Pages, 8. Lines, 8 on a page.

Begins on fol. 73-*a* of the MS. described under No. D. 2555.

Complete.

Same work as that described under No. R. 23-*b*.

(கு. - பு.)—

இந்நூல் மூவருடக் காடலாக்கு 23b-ம் நம்பர் பிரதியிலே வந்துள்ள நூலேயாகும். இப்பிரதியில் இந்நூல் முற்றும் உளது. இப்பிரதியில் ஒரு சிறிது மாறுபாடு உளது. ஏடுகள் சிறிது சிதைந்துள்ள. இப்பிரதியிலே "விபவநாம ஸம்வத்ஸரம் புஷ்ய சுத்தஷஷ்டி திருநகரிநாதய்யாவென்கிற சேசின் திருப்பள்ளியெழுச்சி வியாக்கியானம் ஸம்பூர்ணம்" என்று ஒரு தெலுங்கு வாக்கியம் காணப்படுகிறது.

---

## No. 2561. புரகசதுரகரதபதாதி வர்ணனம்.

PURAGAJATURAGARATHAPADĀTIVARṆANAM.

Substance, palm-leaf. Size, 17-10/16 × 1¼ inches. Pages, 48. Lines, 7 on a page. Character, Tamil and Grantha. Condition, much injured. Appearance, very old.

Incomplete.

Contains songs, alliterative descriptions and such other matter generally found in *Harikathā Kālakṣepas*.

**Beginning :**

[illegible]
[illegible] [வ:] [illegible]
[illegible] |
[illegible] :
[illegible]
ஜ . . . [illegible] ||

ஐம்பத்தாறு தேசங்கள் :—

அங்க வங்க கலிங்க காலிங்க மாகத காம்போஜ கர்ணாட [illegible] கொங்கண பூர்வகொங்கண [illegible] . . . . . [illegible] * * * * * * ஸௌவீர ஸௌராஷ்ட்ர விதேஹ விதேஹ இந்த (௫௬)-ம் தேசங்களுக்குப் பெயர்.

*   *   *   *

இந்த லக்ஷ்மணரைப் பார்த்துச் சொல்லிக்கொண்டு வருகிற ஸ்வாமிக்கு இடது கண் துடித்தது. இடது கை துடித்தது. * * * * நெஞ்சு தழுதழுத்துப் போகிறபோது ஸ்வாமி மெள்ள தைர்யம் பண்ணிக்கொண்டு இப்படிக்கொத்த அபசகுனங்களைப் பார்த்து மஹாவ்யஸநத்தை யடைந்து ஸீதைக்கு மஹா விபத்து வந்தது என்று நினைச்சு, ஸீதைக்கு க்ஷேமம் உண்டாக வேண்டுமென்று இஷ்டதேவதா ப்ரார்த்தனை பண்ணினார் ஐயா.

* * * * *

ப்ராகாரவர்ணனம் :—கோட்டைகள் கொத்தளங்கள் கோபுரங்கள் கொத்த வாசல்கள் துர்க்கங்கள் அகழ்கள் அரண்மனைகள் ஆசாரவாசல்கள் [illegible] * * * * * * * [illegible] . . .

கஜவர்ணனம் :— ஐராவத புண்டரீகாதி திக்கஜங்களுடைய வம்சத்திலே பிறந்து வளர்ந்து [illegible]த்திருக்கிற யானைகளைக் குளிப்பாட்டி அழுக்கு வாங்கி அபினியும் பிராந்தியும் சாராயத்தையும் உள்ளுக்கு இறக்கிக் காலிலே * * கழுத்திலே தங்கச் சங்கிலிகள் மஸ்தகத்திலே தங்கக் கோவைகள் தந்தங்களிலே தங்கக்கட்டுகள் யாளிமுகம் ஸிம்ஹமுகம் வராஹமுகம், வஜ்ர வைடூர்யம் வைத்து இருக்கப்பட்ட மணிகளோடே கணகண * * * கணநாதமாய்ப் புறப்பட்டன ஐயா! யானைக் கூட்டங்கள். அச்வவர்ணனம் :— ஸிந்துதேச பாஹ்லீகதேச காம்போஜதேச வநாயுதேசங்களிலே பிறந்து வளர்ந்திருக்கிற திவ்ய ஜாத்யச்வங்களைப் பொறுக்கி யெடுத்து * * * * * [illegible] :— [illegible] * * * * * * * * *

**End :**

ஈட்டி * * * அம்பு தொறட்டம்பு, குறுந்தடி, குந்தாந்தடி * * * இலுப்பத்தடி, இல்லுத்தடி இந்த ஆயுதங்களையெடுத்துக்கொண்டு காலாட்

(கு. - பு.)—

இச்சிறு நூல் ஹரி கதைகள் பண்ணும் பாகவதர்கள் சில விடங்களில் அலங்காரமாகப் புனைந்துரைத்துப் பாடும் அலங்கார வசன நிலைகளை யெடுத்து உணர்த்துகின்றது. இதிலே ராமாயண கதைக்குரிய சில அலங்காரங்களும் உள. முதலில் கோபிகைக்கும் ஸ்ரீ கிருஷ்ண னுக்கும் உக்திப்ரத்யுக்தி ரூபமாய் அமைந்த ஒரு வடமொழி பத்யகம் எழுதப்பெற்றுள்ளது. "புரகஜதுரகரதபதாதிவர்ணனம்" என்றதொரு பெயர் கொடுக்கப்பெற்றிருக்கிறது. அதற்கேற்ப புரவர்ணனை கஜ வர்ணனை, துரக வர்ணனை, ரத வர்ணனை, பதாதி வர்ணனை யென்றதாகத் தலைப்பெயர் கொடுத்து வருணித்துக் கூறப்பெற்றிருக்கிறது. ஏடுகள் பலவும் சிதலுற்று முறிந்திருக்கின்றன. பிழையுளது.

---

## No. 2562. எண்சுவடி.
## EṆSUVAḌI.

Substance, palm-leaf. Size, 17½ × 1-6/16 inches. Pages, 110. Lines, 6 on a page. Character, Tamil. Condition, very much injured. Appearance, very old.

Almost complete.

There are two copies in the Manuscript.

Arithmetical Tables.

(கு. - பு.)—

இது தமிழ்த் தேயத்து மக்கள் ஆரம்பக் கல்வியிலேயே படித்துவரும் எண்களையெடுத்து உணர்த்துவது. எண்சுவடியென்றே வழங்கப்படும். இதில் தமிழ் எண்களது வாய்ப்பாடு முதலியன உள. இவ்வேட்டில் இரண்டு பிரதிகள் எழுதப்பெற்றுள. உள்ள ஏடுகள் முற்றும் சிதலுற் றும் முறிந்தும் படித்தற் கியலாவண்ணமாயிருக்கின்றன. இதில் உள்ள விஷயங்கள் "பெரிய கெட்டியெண்சுவடி," என்ற பெயருடன் இதுபோது அச்சிடப்பெற்று வழங்கப்படுகின்றன.

---

## No. 2563. சாத்திரக்கும்மி.
## ŚĀTTIRAKKUMMI.

Substance, palm-leaf. Size, 17¼ × 1-2/8 inches. Pages, 40. Lines, 5 on a page. Character, Tamil. Condition, much injured. Appearance, very old.

Complete.

*Kummi* songs on Christian doctrines. Other religious doctrines are adversely criticised here.

**Beginning :**

சாஸ்திரக்கும்மி :—

இப்போது நீங்கள் இந்தப் பாட்டை யெழுதிக்கொண்டு அதை இஸ்ர வேல் புத்திரருக்குப் படித்துக்கொடுத்து இந்தப் பாட்டு இஸ்ரவேல் புத்திர ருக்குள்ளே நமக்குச் சாட்சியாயிருக்கும்படிக்கு அத்தையவர்கள் வாயிலே

சாத்திரக்கும்மியாவது :—சகல சமயத்தாரும் சாதிகளும் வழக்கமாய்க் கையாடி வருகிற அஞ்ஞான சடங்குகளையுஞ் சாஸ்திரங்களையுமழுத்தப் பறையென்றெப்பி. . . யுவமைகளினால் ரூபஹாநம் பண்ணிக் கண்டித்து மெய்யான வேத சாஸ்திர விருத்தியைமாத்திரங் காட்டா நிற்கும். இது முதற் கற்பலகையிலே சாஸ்திரமறுத்தல் என்று ஒரு புஸ்தகம் இரண்டு காண்டங்களாய் உண்டுபண்ணப்பட் . . . . . . முற்றிலும் வசனமும் வேத வாக்கியமும் முன்னோர் பாடல்களின் உதாரணமுந்தானே அது மனப்பாடம் ஆகிறது வருத்தமென்பதைப்பற்றி அதற்கிரண்டாம் புத்தகமாக இந்தச் "சாஸ்திரக்கும்மி," பாடப்பட்டது.

* * * * * * *

சீர்மிகு ஞானப்பெண்மேல் தேவனூர் பாட்டுக்கொப்பாய்
போர்மிகுஞ் சமயத்தோர்கள் புரிந்த ரெண்டகத்தைக்காட்டி
ஏர்மிகு சாஸ்திரக் கும்மி யியம்புதற் கிணையில்லாத
பார்மிகு முயிர்களியாவும் படைத்தமெய்ப் பொருள் காப்பாமே.
|| க ||

ஞானப் பெண் சிறப்பு :—

சீர்கொண்ட ஞானத்திறமாகவொரு
சிறந்த சாஸ்திரகும்மி சொல்லப்
பார்கொண்ட வேதத்துக் கெட்டாநின்ற
பராபரப்பொருள் காப்பாமே. || க ||

* * * * * * *

பாதகர் சாஸ்திரத்தைக் கடிந்து
பராபரன் சாஸ்திரத்தின்படியே
வேத சாஸ்திரக் கும்மியைந் திட்டமாய்
விஸ்தரிக்கக்கேள் ஞானப்பெண்ணே. || உ ||

* * * * * * *

வேதத்திலே வந்த ஞானப்பெண்ணே
மெய் ஞானத்திலோங்கிய ஞானப்பெண்ணே
ஆதித்தன் சாபத்தை நீக்கினவன்
மணவாளியானதோர் ஞானப்பெண்ணே. || ௩ ||

**End :**

ஒற்றைப் பார்ப்பான் வந்தாக்கால் அது
உத்தமமான சகுனமல்ல
கற்றவங் கற்றியதானல் அக்காரியங்
கைகூடுமென்றதென் ஞானப்பெண்ணே. || கருச ||

* * * * * * *

* * * * * * *

(கு. - பு.)—

இந்நூல் இறிஸ்தவர் மதத்தைச் சார்ந்தவராய் [illegible] காவி யங்களிலே "கும்மிப்பாட்டு" என வழங்கப்பெறும் ஒரு பிரபந்த வகை யாகும். இதிலே ஷ மதத்திற்குப் புறம்பான சமயங்களுடைய கோட்பா டுகள் பலவற்றையும் எடுத்துக் கண்டிக்கின்றது. [illegible] ஒரு [illegible] நூல் உளது என்றும் இதில் குறிக்கப்பெற்றுள்ளது. [illegible] ளிருக்கின்றன. ஏடுகள் மிகவும் [illegible] [illegible]. இதுக்கு "ஞானக்கும்மி" என்றதாக மற்றொரு பெயரும் உண்டெனத் தெரிகிறது.

---

## No. 2564. பஞ்சமார்க்கோத்பத்தி வரலாறு.

## PAÑCAMĀRGŌTPATTI VARALĀṚU.

Substance, palm-leaf. Size, 16 × 1-2/8 inches. Pages, 20. Lines, 4 on a page. Character, Tamil and Grantha. Condition, much injured. Appearance, very old.

Complete.

A *Jaina* religious treatise.

**Beginning :**

ஸ்வேதாம்பரம். [illegible]. யாபனீயம். நிஷ்பிச்ச த்ராவிடம். காஷ்டாஸங்கம். இவைகள் உற்பத்தியான (வயணம்) (வரலாறு.) :—

ஸௌராஷ்ட்ர தேசத்து பாடலீபுத்ர நகரத்து [illegible] சந்த்ரகுப்த மஹாராஜன் ராஜ்யம் செய்யுங் காலத்தில் ஒருநாள் விடிகிற சாமத்தில் பதினாறு (16) ஸ்வப்நங்கள் கண்டனன். அவையாவன : (1) அஸ்தமயமான ஸூர்யனையும், (2) [illegible]மாகிய கல்பவ்ருக்ஷத்தினையும், (3) தேவ விமானம் வந்து மீண்டு போகவும், (4) பன்னிரண்டு பணமுடைய ஸர்ப்பத்தினையும், (5) சந்த்ரமண்டல பேதத்தினையும், (6) க்ருஷ்ண கஜயுத்தத்தையும், (7) மின்மினி பூச்சி ப்ரகாசத்தையும், (8) சுற்றும் ஜலமிருந்து நடுவில் ஸுஷ்கமாகிய குளத்தையும், (9) புகைச்சலையும், (10) ஸிம்ஹாஸனத் தின்மேல் ஏறி யிருக்கிற குரங்கையும, (11) ஸ்வர்ணபாத்ரத்துப் பாயஸத்தை ஸ்வாநம் பக்ஷிக்கவும், (12) யானையின் மேலேறிய குரங் கினையும், (13) * * * * * * *,
(14) கரையை மீறிய ஸமுத்ரத்தையும், (15) [illegible]வ்ருஷபங் களாற்பூண்ட ரதத்தையும், (16) இளங்கன்றின் மேலேறிய க்ஷத்ரியரையும், ஆக இந்தப் பதினாறு ஸ்வப்நங்களையுங் கண்ட னன். அப்பொழுது, வர்த்தமான ஸ்வாமி முக்தியடைந்த

ஶிஷ்யர் ஜம்பூநாமர் இவர்கள் மூவரும் அறுபத்து இரண்டு வர்ஷம் தர்மோபதேசஞ் செய்து முக்தியடைந்தபின் ஜம்பூநாமர் ஶிஷ்யர் விஷ்ணு. அவர் ஶிஷ்யர், நந்திமித்ரர், அவர் ஶிஷ்யர் அபராஜிதர், அவர் ஶிஷ்யர் கோவர்த்தநர், இவர்கள் எண்பது வருஷம் தர்மோபதேசஞ்செய்து வந்தார்கள். அந்தக் கோவர்த்தநாசார்யருடைய ஶிஷ்யர் பத்ரபாஹ்வாசார்யர் யதிதர்மஞ் செய்யுங் காலத்திலே ஒரு நாள் இந்தப் பாடலீபுத்ர நகரத்து அந்தப் பத்ரபாஹ வாசார்யர் பிக்ஷார்த்தமாக எழுந்தருளினர். அத்தைச் சந்திரகுப்த மஹாராஜன் கேட்டு அவரிடத்துக்குப் போய் நமஸ்காரஞ் செய்து ஸ்வப்ந பலங்களைக் கேட்டனன். அவருஞ் சொல்லுவார்.
(1) ஸூர்யன் அஸ்தமயத்தினைக் கண்டதால் ஸகலவஸ்து ப்ரகாஶகமாகிய பரமாகமம் கெடும். * * * * *
* (5) சந்த்ரமண்டலத்தினைக் காண்டலால் ஜைநதர்மத்தில்
* . . . . . . . . ஸமாகிய ஸம்ப்ரதாயங்கள்

உளதாகும். * * * இப்படி ஸ்வப்நங்களைச் சொல்லக்கேட்டு சந்த்ரகுப்த மஹாராஜன் தன் புத்ரன் ஸிம்ஹஸேநனுக்கு ராஜ்யங் கொடுத்துத் தீக்ஷித்தனன்.

**End :**
என்று ஶாஸ்த்ரஞ் சொல்லுவதால் நீர் ஜைநப்ரதிக்ரமம் செய்ய வேண்டும் என்றனர். அதுக்கு அந்த திகம்பராசார்யர் சொல்லுவார். நீங்கள் நன்றாய்ப் பரிசோதியாமல என்மீது த்வேஷத்தினால் கொல்ல வேண்டுமென்று இந்தக் காரியஞ் செய்தீர்கள். நான் ஜைநஶாஸ்த்ரஜ்ஞக வேண்டுவதில்லை யென்று தமக்கு இஷ்டமாகிய சில ஜனங்களைச்சேர்த்துக்கொண்டு நிஷ்பந்நயாஸத்தை யாஶ்ரயித்து த்ரவ்யக்ஷேத்ர காலபாவங்களை விசாரியாமல் தினம் மாஸம் வருஷம் என்கிற ப்ரமாணத்தையுடைய வ்ரதத்தையுடன்படாதே ஸம்ஜ்ஞாபநாவ்ரதம் நியமமில்லை என்றும் இது முதலான பேதத்தையுடைய ஶாஸ்த்ரத்தைக் கல்பித்து காஷ்டஸங்கமென்னும் ஸங்காஸம் சில ஜநங்களுக்கு உபதேசஞ் செய்தார். அன்று முதல் காஷ்டஸங்கம் ஏற்பட்டது. இப்படி அஞ்சுவிதமாகிய ஜைநாபாஸமாகிய மதம் ஏற்பட்ட வயணம் இது. முற்றும்.

(கு. - பு.)—
இச்சிறு நூல் ஜைன மதத்துள் உட்பிரிவாயிருக்கும் பஞ்ச மார்க்கங்களுடைய வரலாற்றினையெடுத்து உணர்த்துவது. சந்திரகுப்த மஹாராஜன் (16) ஸ்வப்நங்கள் கண்டனன் என்றும் அவைகளில் ஒரு ஸ்வப்ந பலமே

துப்பிழைகள் உள. ஏடுகள் மிகச் சிதைவுற்று இருக்கின்றன. இதில் நுதலப்படும் பஞ்ச மார்க்கங்கள் ஆவன :—ஸ்வேதாம்பர மதம், யாபனீய மதம், நிஷ்பிஞ்ச மதம், த்ராவிட மதம், கூர்ச்ச சங்கம் என்ற இவ்வைந்தாம்.

---

## No. 2565. தேவாரம் திருவிடைச்சுரப்பதிகம்.

## TĒVĀRAM TIRUVIḌAICCURAPPADIKAM.

Substance, palm-leaf. Size, 18¼ × 1 inches. Pages, 3. Lines, 4 on a page. Character, Tamil. Condition, much injued. Appearance, very old.

Complete.

Begins on fol 1-*a*. The other works herein are Paduvūrgrāmakkayfiyath. 4-*a*. Tiruviḍaiccuragrāmakkayfiyath 5-*b*. Nemiligrāmakkaytffiath 7-*a*. Kōttavayaṇam 9-*a*. Tiruppulivanamāhātmiyam 10-*a*. Kaḍambarkoilkayfiyath 17-*a*. Madavaḷakaṅkayflath 23-*a*.

Ten verses from the *Tēvāram* relating to Tiruviḍaiccuram.

**Beginning :**

வரிவள ரவிரொளி யரவரை தாழ
 வார்சடை முடிமிசை வளர்மதிசூடிக்
கரிவளர் தருகழல் கால்வலனேந்திக்
 கனலெரியாடுவர் காடரங்காக
விரிவளர் தருபொழிலிளமயிலால
 வெண்ணிறத்தருவி கடிண்ணெனவீழும்
எரிவளனமணிபுனமணிசார
 லிடைச்சுரமேவிய விவர்வணமென்னே. || க ||

**End :**

மடைச்சுர மறிவனவாளையுங்கயலு
 மருவிய வயறனில் வருபுனற்காழிச்
சடைச்சுரத் துறைவதோர் பிறையுடையண்ணல்
 சரிதைகள் பரவிநின் றுருகு சம்பந்தன்
புடைச்சுரத்தருவரைப் பூக்கமழ் சாரற்
 புணர்மடை நடையவர் புடையிடையார்ந்த
இடைச்சுரமேத்திய விசையொடு பாட
 லிவை சொல்வல்லவர் பிணியிலர்தாமே. (யக)

(கு. - பு.)—

இது திருஞானஸம்பந்தமூர்த்தி நாயனார் இயற்றிய தேவாரத்துள் " திருவிடைச்சுரம் " என்ற தலவிஷயமாக வியற்றப்பெற்ற பதிகமாகும். இப்பிரதியில் இப்பதிகத்தின் பத்துப் பாடல்களும் காணப்படுகின்றன. ஏடுகள்

## No. 2566. பஜனை கீர்த்தனங்கள்.
## BHAJANAI KĪRTTANAṄKAḶ.

Substance, palm-leaf. Size, 9-6/16 × 1¼ inches. Pages, 123. Lines, 6 on a page Character, Tamil and Grantha. Condition, much injured. Appearance, very old.

Devotional songs.

**Beginning :**

ஊஞ்சற்பாட்டு.

இவை நாராயணதாஸரால் இயற்றப்பெற்றவை.

. . . . . . . . . ஆடிரூஞ்சல்
. . . . . . . . ரஸவொருளேயாடிரூஞ்சல்
தத்துவமீ,. . . ணுங்கால்கள் நாட்டித்
தும்மெனும் ஸூத்ரால் விட்டம் போட்டு
ஸவணநநகிரஹால ஸக்தியே நத்தால் கயிறு பலகையாகி
சின்மயானந்த குருவேயாடிரூஞ்சல்.
* * * * வரயோடி ரூஞ்சல்
ஆத்மஸ்வரூ பராகி ஆதார சக்தியாகி, யகண்டாநந்தவெளி காட்டி . . . அருவுமாகி
ஆனந்த சத்குருவே யாடிரூஞ்சல்.
குஹே * * * யாடிரூஞ்சல். (ச)

* * * * * * *

ஶ்ரீநாக்ஷிகாஷிஓால . . . ஸ்ரீநவேயாரய ;—
ராகம் ஸௌராஷ்டிரம்.

அம்மா உம்மை நம்பினேன்
சகதம்பா வும்மை நம்பினேன்
மீனம்பா வும்மை நம்பினேன்
அம்பாவும்மை நம்பியடியேன்
தொழுது வந்தேன்
அம்பா. . . . சகதம்பாமீநாக்ஷியம்மா.
அம்பாவும்மை நம்பினேன். (க)

* * * * * * *

**End :**

கக-[ந-]ஷவாகஷ விஓாலஸ்ரீநவேயாரய.
ஐயா நீர்தந்தவனுபவாநந்தம்
அத்புதம் அத்புதம்தானய்யா. (உ)
ஆருக்குங்கிடைக்குமோ வனுபவானந்தம்
அம்பரமான சிதம்பரநாதனே அய்யாநீர். (உ)
ஆதிபராபர வஸ்துவும் நீயேயண்டசராசரம் நீயே.
ஆத்மாநந்தஸ்வரூபமும் நீயே அய்யாநீர். (உ)

* * * * * * *

ஸஜகனிர்குண வடிவாகவும் நீயே
ஸகேஷத்ராதிபக்தி தந்ததும் நீயே
ஸத்விஷ்ஞர் ஹ்ருதயத்தில் ஸஞ்சாரமாம்
ஸநாதனமாடும் ஸநாதனரூபன் நீயே

அய்யா நீர்தந்த அனுபவானந்தம்
அந்தப்புரத்தந்தாளையா. (௧)

ராகம் பந்துவராளி :—

ஞானநாதவிலாஸ ஸ்ரீநாதரைய.

(கு. - பு.)—

இந்நூல் பலவிதமான பக்தியைத் ததும்பிய கீர்த்தனைகளையும், விநாயகர், அம்பிகை, ஸுப்ரமணிய, தத்தாத்ரேயர் முதலிய தேவர்கள் விஷயமான சில கீர்த்தனைகளையும் சுலோகம் பாட்டுக்களையும் இன்னும் பலவிதக் கீர்த்தனைகளையும் எடுத்து உரைக்கின்றது. இக் கீர்த்தனைகள் "நாரயணதாஸர்" என்னும் ஆசிரியர் பெயரால் அங்கங்கே செய்யப்பட்டிருக்கின்றன. உள்ள ஏடுகள் எல்லாம் மிகவும் முறிந்து கிழிந்து இருக்கின்றன. சில மாறிக் கோக்கப்பட்டிருக்கின்றன. [illegible] காணப்படுகிறது இப்பிரதி. இது உள்ளவண்ணம் பஜனை செய்பவர்க்கும் மற்றேனையவர்கட்கும் மிகவும் உபயோககரமாகலாம்.

---

## No. 2567. சிவபூசைக் கலித்துறை.
## ŚIVAPŪJAIKKALITTUṞAI.

Pages, 40. Lines, 5 on a page.

Complete.

Similar to the work described under No. 2476 *ante*. The author's name is not known.

**End :**

நின்மாலியக் குவைநீத்தனு சுட்டானம் . . . செய்தே
(2) யண்பாயகோரத்தை நூற்றெட்டுரு செபி யர்கமத்தை
மன்னுசிரியனைப் பூசைசெய் கோயில் வலம் வருவாய்
பின்னுகவர்விற்குப் புல்லிடு புசி பெரியோருடனே. (௱௫)

சிவபூசைக் கலித்துறை முற்றும்.

இந்நூல் சைவர்கள் சிவார்ச்சனை செய்யுமாற்றை விளக்குவது. (105) கலித்துறைகளைக் கொண்டுளது. பல ஏடுகள் முறிந்தும் சிதலுற்றும் படித்தற்கு இயலாவண்ணமாயிருக்கின்றன. ஆசிரியர் இன்னாரென்று தெரியவில்லை. இவ்வேட்டுப் பிரதியின் இறுதியில் ஐந்து ஏடுகளிலே இதைத் தொடர்ந்து வடமொழியிலான ஒரு நித்திய கர்மானுஷ்டான விதி சைவர்க்கு உரியதாயுளது. பின்னர் (2) ஏடுகளிலே தமிழ் வசனத்தாலான பூஜா விஷயகமான ஒரு சிறிய பகுதியுளது.

## No. 2568. எண்சுவடி.

### ENSUVADI.

Substance, palm-leaf. Size, 17¾ × 1-3/16 inches. Pages, 34. Lines, 5 on a page. Character, Tamil. Condition, much injured. Appearance, old.

Complete.

Same work as that described under No. 2562. D.

(கு. - பு.)—

*இது டிஸ்கிருப்டிவ் காடலாக்கு 2562-ம் நம்பர் பிரதியிலே வந்துள்ள நூலேயாகும். இப்பிரதியில் இது முற்றுமிருக்கிறது. ஏடுகள் மிகவும் சிதலூற்றிருக்கின்றன. படிதற்கு அரிதாகவுளது. சில ஏடுகள் மிக முறிந்துகிடக்கின்றன.*

---

## No. 2569. எண்சுவடி.

### ENSUVADI.

Pages, 18. Lines, 4 on a page.

Begins on fol. 14-*a* of the MS. described under No. D. 80, Vol. I.

Same work as the above.

(கு. - பு.)—

*இது முன் நம்பர் பிரதியில் வந்துள்ள நூலேயாகும். இப்பிரதியில் இந்நூல் முற்றுமில்லை. ஏடுகள் பல சிதலூற்றுக்கிடக்கின்றன.*

---

## No. 2570. ஆத்திசூடி உரையுடன்.

### ĀTTISŪDI WITH COMMENTARY.

Substance, palm-leaf. Size, 8½ × 1-2/8 inches. Pages, 74. Lines, 7 on a page. Character, Tamil. Condition, much injured. Appearance, old.

Begins on fol. -*a*. The other works herein are Pañcāṅgagaṇana-vakai 1-*a*. Kolai maruttal 60-*a*. Kolai maruttal with Commentary 67-*a*.

Complete.

The didactic poem, entitled *Āttisūḍi*, by Śrī Avvaiyār ; with a gloss. Commentator's name is not known.

**Beginning :**

*ஆத்திச்சூடி உரையுடன்.*

*விநாயகர் திருவுளம். ஔவையுரைத்த நீதிச்சொல் உரையுடன்.*

*ஆத்திசூடி யமர்ந்த தேவனை யேத்தியேத்தித் தொழுவோம் நாமே.* (க)

*என்பது, ஆத்திப் புஷ்பத்தை முடித்து கொண்டு இருக்கிற பரமேசுவருடைய புத்திரரான விக்கின விநாயக தேவரைத்துதித்துத் தோத்திரம் பண்ணி இரு கைகளாலும் கூப்பித்தொழுது நமஸ்கரித் [தேன்] (தோம்) என்றவாறு.* (க)

எண்ணெழுத்திகழேல். (எ)

என்பது, எண்ணாகிய சோதிடமும் எழுத்தாகிய இலக்கணமும், எண்ணாகிய ஞான சாஸ்திரமும் எழுத்தாகிய சோதிடமும், எண்ணாகிய கணக்கும் எழுத்தாகிய படிப்பும் எல்லோரும் இளமையிலே பயின்று அதிலே சொன்னபடி நடந்துகொள்ளவேணும் என்பதாம். இதற்குதாகரணம் :—

"எண்ணென்ப வேனையெழுத்தென்ப இவ்விரண்டுங்
கண்ணென்ப வாழுமுயிர்க்கு." (எ)

* * * * * * *

ஙப்போல் வளை. (௰௩)

என்றது, உலகத்தின்கண் தான் அசுவரியவானாயிருந்தால் தன் சுற்றத்தாராகிய தாய் வர்க்கம், தகப்பன் வர்க்கம், தன் பெண்சாதி வர்க்கம், மற்றும் உண்டான சுற்றத்தாரையெல்லாம் விசாரித்து அதிலே இளைத்தபேருக்கு அன்னவஸ்திரங்களைக் கொடுத்துத்தன்னாலே ஆன தொழிற்றுறைகளிலேவைத்துக் கூட்டிவளைத்துக்கொண்டு போஷித்துக்காக்கவேண்டுமென்பதாம். அதெப்படியென்றால் ஙப்போல் வளையென்ற சொல்லுக்கு விரிவு சொல்லுகிறோம். ங ஙா ஙி ஙீ ஙு ஙூ ஙெ ஙே ஙை ஙொ ஙோ ஙௌ ங் என்று சொல்லப்பட்ட இந்தப் பதின்மூன்று எழுத்துக்களிலேயும்

* * * * * * *

உலகத்திலே ஒருத்தன் நன்றாயிருந்தால் தன் சுற்றத்தாரை யெல்லாம் காக்கவேண்டும் என்பதாம். இதனை "ஙப்போர்வினை" என்பாரும் உளர். ஙப்போர் வினையாவது உயுத்தங்களிலே தலைமையான உயுத்தங்குதிரை

சண்ணையாருண்டாம் குடிகைச் சண்டையோ செய்யவேணுமென்று சொல்லு வாருமுண்டு. அதற்குதாரணம். "சுற்றத்தார் சுற்றப்படவொழுகல் செல்வந்தான் பெற்றத்தாற் பெற்ற பயன்." (௰௫)

* * * * * * *

**End :**

மறைந்த வழிதனிற் றடுக்கவொ. மறைக்காய் தர்மமாம்படியே பேச வேணுமென்பதாம்.

அதற்குதாரணம் :—

"நடுவின்றி நன்பொருள் வெஃகிற் குடிபொன்றிக் குற்றமுமாங்கே தரும். (௱௭)

ஔவையார் அருளிச் செய்த நீதிச்சொல் முற்றும் என்பது, ஔவையார் உலக உபகாரமாக நிகழ்த்த நீதியை அகரவெழுத்துமுதலாக [௬௨] (௱) சொல்லும் முதல் எழுத்துப் பதின்மூன்று, ககர முதலாக னகரமீறாக வெழுத்து பதினொன்று, ககர முதலாகக் கௌகாரமீறாக எழுத்து பதி னொன்று, சகர முதலாகச் சௌகாரமீறாக எழுத்து பதினொன்று, தகர முதலாகத் தௌகார மீறாக எழுத்து பதினொன்று, நகர முதலாக நௌ காரமீறாக எழுத்து பதினொன்று, பகர முதலாகப் பௌகார மீறாக எழுத்து பதினொன்று, மகர முதலாக மௌகார மீறாக எழுத்து பதி னொன்று, வகர முதலாக வௌகார மீறாக எழுத்து பதினொன்று, இப்படி யாக உயிரெழுத்து முதல் உயிரெழுத்தினும் உயிரும் உயிருங்கூடியுச்சரிக் கப்பட்டுநின்ற எழுத்துக்களிலே தனிநின்ற எழுத்துக்களினும் இடைநின்ற எழுத்துக்களினும் ஔவையார் அருளிச்செய்த நீதிச்சொல் நூற்றெட்டு முற்றும்.

திருச்சிற்றம்பலம். ஆத்திசூடி உரை முற்றும்.

**(கு. - பு.)—**

இந்நூல் ஔவையார் அருளிச்செய்த ஆத்திசூடி என்னும் நூலுக்கு ஒரு விரிவுரையாகும். இவ்வுரை அங்கங்கேயுள்ள சில சொற்க ளுக்குச் சில விசேஷவுரைகளையும் பாடாந்தரங்களையும் அவைகட்கு உரை களையும் திருக்குறளிலிருந்து மேற்கோளாகச் சில குறள்களையும் எடுத்துக் காட்டிப்போருகிறது. ஆனால் இப்பிரதி மிகவெழுத்துப்பிழையுடன் காணப் படுகிறது. இதன் இறுதியில் இன்ன நூலென்று தெரிந்துகோடற் கும் மிக வரிதாகவத்துணை முறிந்துபோய்க்கிடக்கும் ஒரு நூலின் ஏடு கள் சில கோக்கப்பட்டுள. அவை மிகச் சிதிலம்.

---

## No. 2571. கொலை மறுத்தல்.

## KOLAI MARUTTAL.

**Pages, 14. Lines, 8 and 9 on a page.**

**Begins on fol. 60-*a* of the MS. described under No. D. 2570.**

**Complete.**

**On "the avoidance of slaughter;" contains also some verses on *Saivism*.**

**Beginning :**

கொலை மறுத்தல்.

இன்பமாய தருதிடை யோங்கவுந்
துன்பமாயது தூரத்துணீங்கவு
முன் பராபரன் மொய்குழலோடணைந்
தன்பினீன்றவோர் ஆனையைப்போற்றுவாம். (க)

திருமலிபூ மகனுதியைவருமா
மொருபரமிச்சிறியனேற்குந்
தருமிருதாடலை மிசைக்கொண்டஞ்சினர்தீர் ?
கறங்கொலைமை தள்ளிச் சார்தற்
கருமறையாகம நெறிச் சொற்பொருளமைத்திக்
கொலை மறுத்தலறஞ் சொன்மாண்பா
னிருமுணர்விலேனுரையு நலந்தருமென்
றுளந்துணிந்தீண்டி யம்பா நின்றேன். (உ)

**End :**

சார்வொழி கொம்மடியாதி தாவரத்தூ
னுறழ்தருநாய்த்தன்மையோனை
நேரலை நீகேண்முடிவிவ்வரும் புரம்பொய்
வீணுளா நீக்கேல் வாணுள்
பார்மிசைநீ புரியலைமெய்த்தவர் குழுவுற்
றறவமவர்சொற்படி செய்நாளுஞ்
சேருமனேசுத்திபர ஞான முற்று
ணடைவை முத்தித்திருநாடன்றே.

(உஉ)

(கு. - பு.)—

இந்நூல் திருத்துறையூர் சாந்தலிங்க சுவாமிகள் என்னும் கவியால் இயற்றப்பெற்றது. கொலைமறுத்தலைப்பிரதான விஷயமாகக் கொண்டு இன்னும் மற்றுமுள்ள சில சைவமதக் கோட்பாடுகளையும் எடுத்து உணர்த்துவது. இருபத்திரண்டு பாடல்களாலாகியது. இது, திருப்போரூர் சிதம்பர சுவாமிகளால் இயற்றப்பெற்றதோர் உரையுடன் அச்சிடப்பெற்றுளது. இப்பிரதியின் ஏடுகள் மிகச்சிதலுற்றுள.

---

## No. 2572. கொலை மறுத்தல் உரையுடன்.

## KOLAI MARUTTAL WITH COMMENTARY.

Pages, 190. Lines, 7 on a page. Condition, very much injured.

Begins on fol. 67-*a* of the MS. described under No. D. 2570.

Complete.

Text, the same as the previous No ; but with a commentary.

**Beginning :**

கொலை மறுத்தல் உரையுடன்.

இன்பமாய தருதிடையோங்கவுந்
துன்பமாயது தூரத்துணீங்கவு
முன் பராபரன் மொய்குழலோடணைந்
தன்பினீன்ற வோரானையைப் போற்றுவாம்

(க)

உரை :—இன்பம் ஆயது இடை ஆருது ஓங்கவும்—என்பது, யாதொரு மநோரதமான நன்மைகள் மேன்மேலும் உண்டாகவும்; துன்பம் ஆயது தூரத்துள் நீங்கவும்—என்பது, தாபத்ரயங்களினுலே வரும் யாதொரு இடையூறும் தூரத்தின் கண்ணே நீங்கவும்; முன்பராபரன் மொய் குழலோடு அணைந்து அன்பின் ஈன்ற ஓர் ஆனையைப் போற்றுவாம்—என்பது, யாவர்க்கும் மேலாந்தகைமையினையுடைய சிவன் செறிந்து நெருங்கிய குழலினையுடைய உமாபரமேசுவரியை ஆதியிற்கூடிப் புணர்ந்து ஆதரவுடன் ஈன்றருளியது ஒரு யானை முகத்தினையுடைய விக்கினேசுவரனை வழிபடா நின்றேன் என்றவாறு : * * * * * * * * * * * * * *

**End :**

இதன் கருத்து : அசர பாதார்த்தத்துள் தீதான பதார்த்தங்களை விடவேண்டும் என்றும் மேலும் யாதொரு காரியமும் நாதாக்களது வாக்கின்படி நடக்கவேண்டுமென்றும், அபபடியே பாரம்பர்யமாய் முத்தி கைவல்லியம் என்றுங் கூறியது. (உஉ)

கொலை மறுத்தல் முற்றும்.

(கு. - பு.)—

இவ்வுரை நூல் முன் நம்பர் பிரதியிலே வந்துள்ள நூலுக்குத் திருப்போரூர் சிதம்பரசுவாமிகளால் விரிவுரையாக வியற்றப்பெற்றதாகும். இப்பிரதியில் இவ்வுரை முற்றுமிருக்கிறது. இது அச்சிடப்பெற்றுளது. இப்பிரதியின் ஏடுகள் மிகச் சிதலுற்று முறிந்திருக்கின்றன. அச்சிட்டப் பிரதிக்கும் இப்பிரதிக்கும் அங்கங்கே சில விடங்களிலே சொற்கள் வேறுபட்டிருக்கின்றன.

---

## No. 2573. பஞ்சாங்க கணன வகை.

## PAÑCĀṄGAGAṆANAVAKAI.

Pages, 118. Lines, 7 on a page.

Begins on fol. 1-*a* of the MS. described under No. D. 2570.

Complete.

Explains the rules relating to the preparation of the Indian Almanacs

**Beginning :**

விக்கினேசுவரர் துணை.

அறுபது வருஷத்தையும் இருபத்திரண்டிலே பெருக்கிப் பிரபவ வருஷம் முதலாய்ச் சென்ற வருஷத்தையுங் கூடக் கூட்டி அந்தக் கணக்கோடே

முந்நூற்று நாற்பத்தொன்பதுங்கூட்டுகிறது. இது சாலிவாகன சகாத்த மாம். இந்தச் சாலிவாகன சகாத்த வருஷத்தோடே மூவாயிரத்து [ஒ(ரு)ற] நூற்று எழுபத்தொன்பதையுங் கூடக் கூட்டினால் கலி வருஷமாம். இந்தக் கலி வருஷத்தை முந்நூற்று அறுபத் தஞ்சிலே பெருக்கி யந்தக் கணக்கோடே கலி வருஷத்தில் நாலில் ஒரு பங்குக் கணக்கையுங்கூடக் கூட்டிவைத்துக்கொண்டு திரும்பியும் கலி வருஷத்தை அஞ்சிலே பெருக்கி அந்தக் கணக்கிலே ஆயிரத்திருநூற்று முப்பத்தேழையும் தள்ளிப் போட்டு * * * * * * *

**End :**

க திருதீயை ௨ போச்சுது. ௨. பஞ்சமியும் போச்சுது.
௩. அஷ்டமி ௨ போச்சுது. ௪. ஏசமியும் போச்சுது.
௫. திரயோதசி ௨ போச்சுது. ௬. பௌர்ணமியும் போச்சுது.
௭. அபரபட்சம் தவிதீயை ௨ போச்சுது. ௮. பஞ்சமியும் போச்சுது.
௯. அஷ்டமி ௨-யும் போச்சுது. ௰. தசமியும் போச்சுது.
௰க. திரயோதசி ௨-யும் போச்சுது. ௰௨. அமாவாசையும் போச்சுது.

(கு. - பு.)—

இந்நூல் சோதிட கணித வகையைச்சார்ந்ததாய்ப் பஞ்சாங்கங்களைக் கணிக்கு மாற்றையும் இன்னும் சோதிஷ விஷயங்கள் பலவற்றையும் எடுத்து உணர்த்துவது. ௫௩-ஆம் ஏட்டில் ". . . . . பெரிய செ. . . ம் அஷ்டாவதானம் அரங்கநாத முதலியார் பாடல் கணித பஞ்சாங்கக் கவி." என்ற தலைப்பெயருடன், அகவல், விருத்தம் முதலிய யாப்பானுகிய (௨௩) இருபத்து மூன்று பாடல்கள் எழுதப்பெற்றிருக்கின்றன. ஏடுகள் எல்லாம் மிகச் சிதலுற்றுமுறிந்து உள. எழுத்துப்பிழைகள் உள.

---

## No. 2574. திருமால் துதி.

## TIRUMĀL TUDI.

Pages, 2. Lines, 12 on a page.

Begins on fol. 96-*a* of the MS. described under No. D. 335, Vol. I.

Complete.

In praise of God Śrī Viṣṇu.

**Beginning :**

அலர்மேல் மங்கைத்தாய் ரட்சிக்கவும்.
இலக்ஷ்மீநாராயணப்பெருமாள் கனகலட்சுமி தாயார் ரட்சிக்கவேணும்.
நூற்றெட்டுத்திருப்பதிகள்.

சோழமண்டலம் நாற்பதோடுடன்
துய்யபாண்டி பதினெட்டுஞ்சொல்லிய
வாழுமாமலையாள மீரேழு டன் மன்னும்
வேங்கடம் வாழ் தென்மண்டலம்

எழு மூனறுடன் இரண்டுடன் கூடிய
இதின் வடக்குப் பதினொன்று பாற்கடல்
ஆழியான் பதிநூற்றெட்டுமோதுவார்
அன்று தீவினையன்றேயகலுமே.

(க)

இராமசந்திரசுவாமியினுடைய கிருபாகடாட்சம் உண்டாகவேணும்.
ஸ்ரீமதே வேதாந்தகுரவே நம :

அத்திநாதன் உலகளந்தவன் கச்சிநிலாத்துண்டர் பச்சைவண்ணர் அஷ்டபுசர் நரசிமமா சொன்னவண்ணஞ்செய்த அண்ணல் பாண்டவர் தூதர்.

* * * * * * *

சித்திதரும் மற்றுள்ள திருப்பதிகங்களுங் கச்சிதிவ்விய பிரகாசமணி யுந்திகழுமறையோரு நாளும் பாகவத சேவையும் திருவாய் மொழிப்பதிக மும் * * * * * * * *

திருத்துழாய் மாலையும் மேலாஞ்செல்வமருள் திருமனுவஷ்டாசரமுமென் சிந்தைதனில் மிக வாழியே.

திருமருவு காவேரியிருபுரமும் மாலையாய பல சோலையும் செம்பொன் விமானமும் சந்திர புஷ்கரணி தீர்த்தமும் புன்னை நிழலும் எழு நவரத் தின மதிளும்

* * * * * * *

கஸ்த்தூரிரங்கய்யனே. (உ)

* * * * * * *

(கு. - பு.)—

இச்சிறிய பகுதி ; நூற்றெட்டுத் திருப்பதிகளின் சிறப்புணர்த்துஞ் செய்யுள் ஒன்றையும் தொண்டைநாட்டுத் திவ்விய தேசத்தெம்பெரு மான்கள் விஷயமான பாடலொன்றையும் ஸ்ரீரங்கத்தில் ஸ்ரீரங்கநாதன் விஷயமான பாடலொன்றையும் கொண்டு உள்ளது. எழுத்துப்பிழை யுடன் உளது.

---

## No. 2575. செண்டலங்காரர் வண்ணம்.

## ŚENḌALAṄKĀRAR VAṆṆAM.

**Pages, 4. Lines, 4 on a page.**

Begins on fol. 18-*a* of the MS. described under No. 283, Vol. I.

Incomplete.

A poem in praise of "Śenḍalaṅkārar" (perhaps a name of God

**Beginning :**

செண்டலங்காரர்வண்ணம்.

வேலைநெடுந்திரையாகிய வாய்விரிந்ததிலே
நிமிராயிரம் படநாக பஞ்சணை மீதுறங்கிய நம் பரந்தாமர்
சீர்பெறு பஞ்சவரேவிய காரியஞ் சொல்லவே துரியோதனன்
படையூடு சென்றிருதாள்வருத்த நடந்திடும் பாதர்
வீறு செயுங்கணகாசுரனுவிகொண்டிடவே கையினுலறைந்திரு
தூணில் வந்தரியே யெனும்படி நின்ற சங்கரர்
இலகிய பொன்னுடை புனைவார். (ரு)

**End :**

பாதஞ் சுளுக்கிடுமே மகள் பாதம் நொந்திடுமே
படுபாவி முந்தியில் மீதில் நின்றத. . . .
நடுங்கி விழுந் திருமேனி பூவையுமிங்கில்லையே
கிளிதானுமிங்கில்லையே சொல்லிவாவெனும் பொழுதேோடிவந்து.

(கு. - பு.)—

இந்நூல், செண்டலங்காரர் எனும் பெயர் பூண்டார் ஒருவர்மீது துதி ரூபமாக இயற்றப்பெற்றதொரு பிரபந்த விசேஷமாகும். இயற்றியவர் முதலிய ஒரு செய்தியும் இதிலிருந்து தெரிந்துகோடற்கரிதாயிருக்கிறது. நூலின் முதலில் ஒரு சிறு பகுதியேயுளது. ஏடுகள் சிதைந்திருக்கின்றன. பிழையுள்ளது. இன்னும் இஃது ஆராய்ந்து உணரற்பாலதாகும். இச்செண்டலங்காரர் என்னும் பெயர் திருமாலின் ஒரு மூர்த்தியாயிருக்கலாமென்று தோன்றுகிறது. பிழையுளது.

---

## No. 2576. அனுமான் பிள்ளைத்தமிழ்.

### ANUMĀN PIḶḶAITTAMIḺ.

Substance, palm-leaf. Size, 16¼ × 1¼ inches. Pages, 32. Lines, 6 on a page Character, Tamil. Condition, much injured. Appearance, very old.

Wants 10 leaves in the beginning.

Incomplete.

A poem, in the *Piḷḷaittamiḻ* style, in praise of Śrī "Mukkaṉ Anumār" (the Messenger of Śrī Rāma), worshipped at Tirunelvēli.

**Beginning :**

* * * * * * *

வேறு :—

தேடிய்வொண்பொருள் நாடியண்டந்தது
போல வணைந்தனையாற்
செங்கதிர் மைந்தனெவன் பெயரேதவை
தெரிவுறவோதெனலும்
பர்டிய்ல் வாலிதன்னுலடியுண்டுதன்
ஞேடிய மங்கையொடும்
பதியும் வளம்பெறு நிதியுமிழந்து
பதைத்தனன் வன்முகமே

**End :**

உபயோபாயங்களுக்கே ப்ரமாணமாவெல்லேக்ஷயுள்ளது. ஸகல ஶாஸ்த்ரங்களுக்கும் தாத்பர்யம் ஸ்ரீஸார ஸாரஸங்க்ரஹத்தையும் ஸூக்ஷ்மார்த்த ஸங்க்ரஹத்தையும் இசைவிக்கைக்காக வாயிற்று இருப்பது.

பெரியவாச்சான் பிள்ளை திருவடிகளே சரணம்.

**(கு - பு.)—**

இது ஸம்ஸார மோக்ஷங்களுக்குரிய ஸாதனபலங்களையெடுத்து உணர்த்துவது. 'பெரியவாச்சான் பிள்ளையால் இயற்றப்பெற்றது. இப்பிரதியில் முற்றும் உளது. தெலுங்கெழுத்தில் எழுதப்பெற்றது

---

## No. 2626. த்ரிமதஸித்தாந்த ஸாரஸங்கிரகம்.

### TRIMATASIDDHĀNTASĀRASAṄGIRAHAM.

**Pages, 17. Lines, 7 on a page.**

Begins on fol. 142-*a* of the manuscript described under No. D. 10265 of the Sanskrit Descriptive Catalogue.

Same work as that described under No. D. 2621 of the Descriptive Catalogue of Tamil Manuscripts.

Complete.

**(கு - பு.)—**

இந்நூல் டிஸ்கிருப்டிவ் காடலாக்கு 2621-ஆம் நம்பர் பிரதியில் வந்துள்ள நூலேயாகும். முற்றுமுளது.

---

## No. 2627. கைசிகமாகாத்மியம்.

### KAIŚIKAMĀHĀTMYAM.

**Pages, 29. Lines, 9 on a page.**

Begins on fol. 152 of the manuscript described under No. D. 10343 of the Sanskrit Descriptive Catalogue.

Same work as that described under No. D. 420.

Complete.

**(கு - பு.)—**

இந்நூல் டிஸ்கிருப்டிவ் காடலாக்கு 420-ஆம் நம்பர் பிரதியில் வந்துள்ள நூலேயாகும். முற்றும் உளது.

## No. 2628. ப்ரதாநஶதகம்.

### PRADHĀNAŚATAKAM.

Substance, palm-leaf. Size, 13½ × 1⅝ inches. Pages, 28. Lines, 6 on a page. Character, Tamil and Grantha. Condition, injured. Appearance, old.

Same work as that described under No. D. 916.

Complete.

(கு - பு.)—

இந்நூல் டிஸ்கிருப்டிவ் காடலாக்கு 916-ஆம் நம்பர் பிரதியில் வந்துள்ள நூலேயாகும். இப்பிரதியில் முற்றும் இருக்கிறது. ஏடுகள் ஒரு சிறிது சிதலுற்றுக்கிடக்கின்றன. "ஶிவஶிரஸி ஶிராஂஸி," "க்ஷமீ கேநாஹ்லாதநீ." என்று தொடங்கும் இரண்டு நீதி விஷயகமான சாடுஶ்லோகங்கள் இதன் இறுதி யேட்டில் எழுதப்பெற்றிருக்கின்றன.

---

## No. 2629. மூலிகையகராதி.

### MŪLIKAIYAKARĀDI.

Substance, palm-leaf. Size, 14½ × 1½ inches. Pages, 216. Lines, 8 on a page. Character, Tamil. Condition, much injured. Appearance, old.

Similar to the work described under No. D. 1868.

Almost complete.

**Beginning :**

மூலிகையகராதி:—

நலமுறு மெய்ஞ் ஞானத் தாரணி நாயகன்
 அடியைப் போற்றி
நிலமிசை வளர்ந்து பூண்டு நிகழ்ந்திடு
 சரக்கின் பேரு
மூலிகையிற் குறித்து வேறாய் உகந்
 **தகராதியாக**
மலைமிசை வாழகத்தியமாமுனி
 பகரலுற்றான். (க)

அகம்=கெந்தகம்.

* * *

அகில்=வெள்வேல்
 சந்தனம், சந்தனக்கட்டை.
அகக்காழ்=உள்வயிரம்
 முண்மரம்,

**End :**

ரோகணி = கடுக்காய்.
ரோசனி = கடுகு.
லகம் = ஊமத்தை.
லசுனம் = வெள்ளுள்ளி.
லம்பம் = வலம்புரிக்கொடி.

*  *  *

விரைவாசம் = சோட்டம், குங்குமம், சந்தனம், சிங்கம்.
விலங்கரசு = சிங்கம்.
விலாளம் = பூனே.

**(கு - பு.)—**

இந்நூல், டிஸ்கிருப்டிவ் கேடலாக்கு 1868-ஆம் நம்பர் பிரதியில் வந்துள்ள நூல்போன்றுளது. இதில் முற்றும் உளதென்றே தோன்றுகிறது. ஏடுகள் மிகச்சிதலுற்று இருக்கின்றன.

---

## No. 2630. வடிவுடையம்மைதுதி.
## VAḌIVUḌAIYAMMAITUDI.

Page, 1. Lines, 5 on a page.

**Begins on fol. 9-*a* of the manuscript described under No. D. 1756.**

**In praise of Goddess Vaḍivuḍaiyammai of Tiruvottiyūr.**

**Beginning :**

வடிவுடையம்மைபேரில் துதி.

சுந்தரவடிவே மூன்மைந்திரவடிவே
பொருள்கடோன்று நால் வேதவடிவே
தூயவடிவே பரஞ்சோதி வடிவே
மனத்துயர்களையறுக்கும் வடிவே
இந்திரவடிவே கலையிசைந்த வடிவே
தியாகரேகாந்தமான வடிவே
இன்பவடிவே தொண்டரன்பு வடிவே
புவியிலெங்கு மாய் நின்ற வடிவே
முந்துவடிவே யோகமோனவடிவே
கதியில் முத்தியாய் நின்ற வடிவே
மோக வடிவே உயிரனேக வடிவே
செய்யும் முண்டகமிலங்கும் வடிவே
புந்திவடிவே பஞ்சபூத வடிவே
மலர்ப்பொய்கைசேரொத்திநகர்வாழ்
போதவடிவே விந்துநாத வடிவே
தவப்புண்ணிய மயமான வடிவே. (க)

**(கு - பு.)—**

இது திருவொத்தியூர் வடிவுடையம்மை விஷயமான துதியாகும். இதில் இவ் ஒரே பாடல் காணப்படுகிறது. ஆசிரியர் இன்னாரென்று விளங்கவில்லை

## No. 2631. சுப்பிரமணியர் விருத்தம்.
## SUBRAHMAṆYAR VIRUTTAM.

Pages, 2. Lines, 5 on a page.

Begins on fol. 13-*a* of the manuscript described under No. D. 1756.

In praise of God Subrahmaṇya of Samarapuri.

**Beginning :**

சுப்பிரமணியர் விருத்தம்.

செய்யவினை யினையுமந்தான தர்மங்களுஞ்
சிந்தமிக மிக்க முதலுஞ்
சேரவெனுனது ஆலயந்தன்னைத
திருச்சுற்று வந்தறிகிலேன்
ஐயவினை யுன்றனி யடிமையடியார்களை
யடிதொழுதும் நானறிகிலேன்.
அடிமைகொண்ட வரவர்கள் கொடுமைகளை
யென்முறை ஆண்டருளுவாய்
வெய்யவினை யுன்றனுடைப் பாத பற்பங்களை
விரும்பினவர் வாம் பெருகுவார்.
ஈராறு கரங்களுமீராறு விழிகளுந்
வெற்றி மயிலுற்றமுகமுந்
தூய்யவினை மெய்யவினை ஐயவினை
மெய்மாய! சூரவினை சூரசங்காரகோபா.
சுரர் பாவுஞ்சமரபுரி குமரகுருமுருக
சுப்பிரமணியக்கடவுளே.

(கு - பு.)—

இது சமரபுரி குமாரக்கடவுள் விஷயமான துதியாகும். இதில் இவ்வொரு பாடலே காணப்படுகிறது.

---

## No. 2632. மாரியம்மன் விருத்தம்.
## MĀRIYAMMAN VIRUTTAM.

Page, 1. Lines, 5 on a page.

Begins on fol. 14-*a* of the manuscript described under No. D. 1756.

In praise of Goddess Māriyamman.

**Beginning :**

மாரியம்மை விருத்தம்.

அண்டாது பிரமராட்சத பில்லி சூன்னியம்
அம்மாவுன்பேர் நினைந்தால்
அட்டதிசையெங்கணும் நிற்கவிடமில்லாமல்
அலறிப் பதறியோடுமே,

தண்டையொடு கிண்கிணிகள்
ஆல்நகர் தன்னிலே செயங்கொண்டு வீற்றிருப்பாய்
தேவிமகாமாரியே அமரியெல்லம்மையே
தினமுமுன தயவுபுரிகுவாய்
தெட்சண கயிலாசகிரி முக்கண் படைத்தவன்
தேவி நீயெல்லம்மையே.

(கு - பு.)—

இது மாரியம்மை விஷயமானதொரு துதியாகும். இதில் இவ்வொரு பாடலே காணப்படுகிறது. ஆசிரியர் பெயர் தெரியவில்லை.

---

## No. 2633. ஆறுமுகக்கடவுள் துதி.
## ĀṞUMUKAKKAḌAVUḶTUDI.

Pages, 3. Lines, 5 on a page.

Begins on fol. 15-*a* of the manuscript described under No. D. 1756.

In praise of the Six-faced God (Subrahmaṇya).

**Beginning :**

சுப்பிரமணியர்பேரில் விருத்தம் :—

செந்திமாமலையினும் சாலைப் பெரியவையும்
திருப்பறங்குன்றத்திலும்
தெய்வீகமான நகர் செங்கோடை (?) (டு) தணிகையிலும்
திருவாவினங்குடியிலும்
வந்து பணியமர்ந்த முப்பத்து முக்கோடி
மகிழ்சாமி மலை தன்னிலும்
மகதேவர்க்குபதேச மறிவித்திடும்
வரும் பழனி நன்னகரியிலும்

*　　*　　*　　*　　*

அந்தகன் பாசக்கயிற்றினில் அலையாமல்
அடியிணைக்கெனையாளுவாய்
அறுமுகக் கடவுளே செங்கழுனி
மாலையணி யமராபதி தலைவனே. (௧)

**End :**

*　　*　　*　　*　　*

அருள் தணிகைமா நகரில் வாழ்
அறுமுகக் கடவுளே செங்கழுனி மாலையணி
அமரர்பதி தலைவனே. (௩)

(கு - பு.)—

இது முருகக் கடவுள் விஷயமானதொரு துதிநூலாகும். மூன்று செய்யுட்களேயுள. ஆசிரியர் பெயர் தெரியவில்லை.

## No. 2634. முருகன் துதி.
### MURUGANTUDI.

Page, 1. Lines, 4 on a page.

Begins on fol. 23-*a* of the manuscript described under No. D. 1756.

In praise of God Muruga (Śrī Subrahmaṇya).

**Beginning :**

சுரர் முனிவர் உலகர் பணிபாதா
சுகசொரூபா சகலவிநோதா
பரவறிவையறியவருள் போதா
பரவதிகசமரபுரி நாதா.

* * * * *

**End :**

விட்டஒருவச்சிரகேயூரா
வித்தகர் துதித்த பேரூரா.

(கு - பு.)—
இதுவும் முருகன் விஷயமானதொரு துதியாகும். முற்றுமில்லை.

---

## No. 2635. சுப்பிரமணியர் திருநீற்றுப் பத்து.
### SUBRAHMAṆYAR TIRUNĪṞṞUPPATTU.

Page, 1. Lines, 4 on a page.

Begins on fol. 24-*a* of the manuscript described under No. D. 1756.

On the sanctity and importance of the holy ashes presented as an offering to God Śrī Subrahmaṇya.

**Beginning :**

சுப்பிரமணியர் திருநீற்றுப்பத்து.

தொண்டுகொண்டடியிட்டவெரு
பாபங்களுக்கூறுகு கொலைஞ்சமைந்தநீறு
தொழு மெண்ணுயிருஞ்சாணாரைக்
கழுவினிற் [கு] (?) (கொ) லைகளை கண்டநீறு
துண்டக் கண்டபடவே சோதி யெனவாரரைத்
துணியவேல் தொட்டநீறு
சொல்லரிய பூதப்பிசாசு பிணிசூனியஞ்
சுடரிட்டெரித்த நீறு.

**End :**

அண்டபகிரண்ட பகிரண்ட பிரதாபமென
ஆதியென வந்த நீறு
அடியவர்க்கருள்புரியுந் தரு கிருபை பழனிமலை
அறுமுகவர் குருவெண்ணீறே. (*)

இது முருகக் கடவுள் துதிரூபமாய் அமைந்து அமர்ந்து திருவெண்ணீற்றின் பிரபாவம் உணர்த்துகின்றது. இதில் இவ்வொரு பாடலே காணப் படுகிறது.

---

## No. 2636. தன்வந்தரி கருக்கிடை இருநூறு.
## DHANVANTARI KARUKKIḌAI IRUNŪṞU.

Substance, palm-leaf. Size, 13¾ × 1¼ inches. Pages, 132. Lines, 7 on a page. Character, Tamil. Condition, good. Appearance, old.

Same work as that described under No. R. 946-*b*.

Complete.

(கு - பு.)—

இது மூவருடக்காடலாக்கு 946-ஆம் நம்பர் பிரதியிலே வந்துள்ளதே. இப்பிரதியில் முற்றும் உளது. ஏடுகள் எல்லாம் மாறிக் கோக்கப்பெற்றிருக்கின்றன.

---

## No. 2637. சத்தியாரூடம் நூறு.
## ŚATTIYĀRŪḌAM NŪṞU.

Substance, palm-leaf. Size, 14¾ × 1¼ inches. Pages, 42. Lines, 6 on a page. Character, Tamil. Condition, much injured. Appearance, old.

Begins on fol. 1-*a*. The other work herein are Kaṟpavidhi, 22-*a*. Siddarārūḍam, 68-*a*.

A treatise of the *Siddha* school of Indian Medicine.

Incomplete.

**Beginning :**

சத்தியாரூடம் நூறு.

நீலகண்ட சூரணம் :—

பாரடா உயிருந்தருஞ் சஞ்சீவியுண்டை
பகருகிறேன் மிளகு துத்தம்துருசு. . . . .
. . . . . . . . போட்டு
நினைவாக எலுமிச்சம்பழத்தின் சாற்றை
வாரடா மூன்றுநாளூறவிட்டு வடித்தெடுத்து. . .
* * * * *
சேரடா அரைத்துண்டை பண்ணிக்கண்ணில்
தெறித்து விடிலே விஷமுந்தீர்ந்துபோமே.

(கட இ.)

**End :**

விதித்திட்டேன சத்தியாரூபமான
விருத்தமது ஒரு நூறும் வேதமாகும்
வருத்தமாய் மனம்பததிப் பாரப்பார் கோடி
மாதநிதியம் பெறறு மண்மேல் மிகவும் வாழ்வார்
தரித்திரங்களனுகாவாந் தர்மம் உண்டாம்.
தாரணியிற் சித்தர் வந்து தருவார்புத்தி
கருத்துடனே யாத்தாளு மய்யாவுந்தான்
காய்ச்சிதருவார்கள் ஒருநூறு முற்றே. (௱௨)

முற்றும்.

எலி கடிக்கு :—நெல்லிப்பட்டை பி(ரமி)பட்டை(?) உலர்த்திப் பொடி செய்து வெருகடி பிரமாணங்கொள்ள எலிகடிவிஷம் எட்டும் தீரும். பத்தியம், இச்சாபத்தியம்.

கோழிமுட்டையைப்பொத்து இரண்டு மூன்று எருக்கலம்பால் விட்டு வேகவைத்து மூன்று நாளுக்குச் சாப்பிடவும்.

சாரணை வேரும் திணையரிசியும் எருக்கலம்பால் விட்டு அரைத்து உரொட்டி சுட்டுத் தின்னவும். எலிவிஷம் சகலமும் தீரும்.

**(கு - பு.)—**

இது வைத்தியத்தை நுவல்வது. நூறு செய்யுட்களால் ஆகியது. இதில் முதலில் (7) ஏடுகளில்லை. ஆகவொலைகளில் உள்ள (27) பாடல்கள் நீங்கலாக மிகுதியான பாடல்களேயிருக்கின்றன. ஏடுகள் முறிந்து சிதைந்துகிடக்கின்றன. ஆசிரியர் பெயர் தெரியவில்லை.

---

## No. 2638. கற்பவிதி.
## KAṞPAVIDHI.

Pages, 91. Lines, 6 on a page.

Begins on fol. 22-*a* of the manuscript described under No. D. 2637.

A treatise on Indian Medicine.

**Beginning :**

முக்கோணச் சுழிமுனை நடுவே
மூலாதாரக்கணபதியை
எக்காலந்தொழுதே பணிவோமென்
றேங்கி யிளையாதிருமனமே. (க)

முக்கோணச் சுழிமுனை மீதில்
மூலாதாரப்பிரணவத்தில்
தக்க இடவலஞ்சுழியொடுங்கும்
அவர் தாளிணை மறவாதிருமனமே. (உ)

* * * * *

* * * * * (உ௰க)

உற்பனஞ் சொல்லுகிறேன்
உற்பனஞ்சொல்லுகிறேன்
மூலத்திலே நின்று ஐம்பூதா.

**End :**

வெண்பா :—

விந்து முறைந்தநுகாலம் போனி லெழுந்தனகாலன
தந்தவிழிக்குரம்போல் காணுதுகாலம்—சந்தமொரு
வீணைபோல் தொனியாணுபோனிபெல்லாம் விருதுமாரும்
நாணையமாய்ச் சொல்லுவேன் நயந்து.

முற்றும்.

(கு - பு.)—

இதன் பெயரும் இதன் ஆசிரியர் பெயரும் சரியாகத் தெரியவில்லை. வைத்தியம், இரஸவாதம், ஞானம் முதலியவற்றை விளக்குவது. 197 பாடல்கள் உள. சிதிலமானது.

## No. 2639. சித்தராரூடம்.

### SITTARĀRŪḌAM.

Pages, 44. Lines, 7 on a page.

Begins on fol. 68-*a* of the manuscript described under No. D. 2637.

Same work as that described under No. R. 174-*b*.

Complete.

(கு - பு.)—

இது ரூவருடக்காடலாக்கு 174 (பி) நம்பர் பிரதியில் வந்துள்ளதே யாகும். முற்றுமுளது. ஏடுகள் சிதிலங்களாயிருக்கின்றன.

## No. 2640. நட்சத்திர மாலை.

### NAKṢATTIRAMĀLAI.

Substance, palm-leaf. Size, 9 × 1 inch. Pages, 156. Lines, 4 on a page. Character, Tamil. Condition, injured. Appearance, old.

Same work as that described under No. D. 2014.

Complete.

(கு - பு.)—

இது டிஸ்கிருப்டிவ் காடலாக்கு 2014-ஆம் நம்பர் பிரதியில் வந்துள்ளதேயாம். முற்றுமிருக்கிறது. ஏடுகள் சிதிலங்களாயிருக்கின்றன.

## 2041. நட்சத்திர மாலை.

## NAKṢATTIRAMĀLAI.

Substance, palm-leaf. Size, 12½ × 1¼ inches. Pages, 162. Lines, 5 on page. Character, Tamil. Condition, injured. Appearance, old.

Same work as the above .

Complete.

(கு - பு.)—

இது முன்பிரதியில் வந்துள்ளதே. இப்பிரதியில் முற்றும் உளது. ஏடுகள் சிதிலங்களாயிருக்கின்றன.

---

## No. 2642. சல்லியநூல் உரையுடன்.

## ŚALLIYA NŪL WITH COMMENTARY.

Substance, palm-leaf. Size, 9 × 1¼ inches. Pages, 144. Lines, 7 on a page. Character, Tamil. Condition, injured. Appearance, old.

Begins on fol. 1-*a*. The other work herein is Sundarānandar Kēsari vittai, 73-*a*.

Same work as that described under No. 353 (b).

Complete.

(கு - பு.)—

இது மேலெடுத்துக்காட்டியது 353 (b) நம்பர் பிரதியிலே வந்துள்ளதேயாகும். முற்றும் உளது. ஏடுகள் சிதிலமாயிருக்கின்றன.

---

## No. 2643. சுந்தரானந்தர் கேசரி வித்தை.

## SUNDARĀNANDAR KĒSARI VITTAI.

Pages, 42. Lines, 7 on a page.

Begins on fol. 73-*a* of the manuscript described under No. 2642.

This is a portion of *Sundarānandarsūttiram Āyiram*. By Sundarānandar. Deals with Magic, Spells, etc.

Complete in 56 Stanzas.

**Beginning :**

சுந்தரானந்தர் ஆயிரத்தில் கேசரி வித்தை ஐம்பத்தாறு :—

கேளப்பா விநோதவித்தை கோடியுண்டு
கேசரிபோல் சுருக்கொன்று மில்லையப்பா
மாளப்பா மாண்டுடனே யெடுத்துவந்து
அன்றேதான் ஆள்புழுங்கா விடத்திற்போட்டு.

சூளப்பா சீவா வைத்து மாலை பூட்டி
சுகமாகக் காந்து ம[கி] (றை)வெயிலிடையமை
வாளப்பா மண்டலத்து நான் மெடுத்தபின்பு
வளமாகச் சமூலமெல்லாம் வைத்துவைக்கே. (க)

**End :**

நெளப்பா காண்டியொன்[றை] (யை)யுறுதலெல்லாக்
கெடியாக கருமிருந்தி செயிருந்தி
நாளப்பா சன்னியது கிரந்தியோடு
நலமான மேகவெட்டை மேகவாயுவை
சூளப்பா வெறித்தவெல் லோமை மாய்க்கும்
வெளியாக மாணிடர்க்காய் வீசுவேனே. (௫௰௫)

* * * * *

* * * * * (௫௰௬)

(கு - பு.)—

இந்நூல "சுந்தரானந்தர் சூத்திரம் ஆயிரத்தில்" "வெண்ணெய்க்கை", என்றதாய் ஒரு சிறு பிரிவானதென்று தெரிகிறது. இதில் பிரதியின் ஐம்பத்தாறு பாடல்களும் உள. பின்னர் ஒரு பத்தி முறையும் மருந்து வகையும் உள. ஏடுகள் சிதிலமாயுள.

## No. 2644. நாலாயிரத்தனியன் வியாக்கியானம். NĀLĀYIRATTANIYAN VYĀKHYĀNAM.

Substance, palm-leaf. Size, 17½ × 1½ inches. Pages, 278. Lines, 6 on a page. Character, Tamil and Grantha. Condition, much injured. Appearance, very old.

Same work as that described under No. D. 1069.

(கு - பு.)—

இது டிஸ்கிருப்டிவ் காடலாக்கு 1069-ஆம் நம்பரில் வந்துள்ள நூலே யாகும். இப்பிரதியிலே இந்நூல் முற்றும் உளது. ஏடுகள் பல முறிந்தும் சிதலுற்றுமிருக்கின்றன.

## No. 2645. திருவிருத்த வியாக்கியானம். TIRUVIRUTTA VYĀKHYĀNAM.

Substance, palm-leaf. Size, 17½ × 1⅜ inches. Pages, 162. Lines, 9 on a page. Character, Telugu. Condition, much injured. Appearance, very old.

Same work as that described under No. R. 217.

Incomplete.

(கு - பு.)—

இந்நூல் மூவருடக்காடலாக்கு 217-ஆம் நம்பர் பிரதியிலே வந்துள்ள நூலேயாகும். இப்பிரதியிலே இது முற்றுப்பெறவில்லை.

## No. 2646. இராமானுஜ நூற்றந்தாதி வியாக்கியானம்.
## IRĀMĀNUJA NŪṞṞANTĀDI VYĀKHYĀNAM.

Substance, palm-leaf. Size, 18 × $1\frac{6}{10}$ inches. Pages, 306. Lines, 8 on a page. Character, Tamil and Grantha. Condition, much injured. Appearance, old.

A commentary on the *Irāmānuja Nūṟṟantādi*, a poem in praise of Śrī Rāmānujācārya.

By ŚrīBhāṣyam Nārāyaṇamuni, disciple of Śrī Ādivaṉ Śaṭhakōpa Svāmi of the Śrī Ahōbila Maṭh.

Complete.

**Beginning :**

[illegible] |
[illegible] || க ||

[illegible] . . . . . . . . . . . . [illegible] * * * [illegible] . . [illegible] * * * [illegible] * * * * [illegible] " [illegible] ", | [illegible] " [illegible] | [illegible] || ", [illegible] * * * * * * *

(கு - பு.)—

இது இராமானுஜ நூற்றந்தாதிக்கு ஆதிவண் சடகோபஸ்வாமியின சிஷ்யரான இரண்டாம்பட்டம் "ஸ்ரீபாஷ்யம்" "ஷஷ்டிப்பிரபந்த நிர்மாதா," என்ற ஸ்ரீமந்நாராயணமஹாமுனிஸ்வாமி இயற்றியதோர் விரிவுரையாகும். இதுவரையும் அச்சிடப்பெறாதது. உபயஸம்பிரதாயத்துக்கும் விரோதமின்றி இயற்றியதென்று தெரிகிறது. கூடு பாடல்களுக்கே அவ் உரையுளது. மிகு திக்குப் பெரியவாச்சான் பிள்ளையது.

---

## No. 2647. திருவாய்மொழி வியாக்கியான ஈட்டுப் பிரமாணத்திரட்டு.

## TIRUVĀYMOḺI VYĀKHYĀNA ĪṬṬUPPIRAMĀṆATTIRAṬṬU.

Substance, palm-leaf. Size, $14\frac{3}{4} \times 1\frac{1}{2}$ inches. Pages, 406. Lines, 9 on a page. Character, Tamil and Grantha. Condition, injured. Appearance, old.

Same work as that described under No. R. 829.

Complete.

(கு - பு.)—

இந்நூல் முதற்புத்தகசாலைக்கு 829-ஆம் நம்பர் பிரதியில் வந்துள்ளதேயாகும். இப்பிரதியில் இந்நூல் முற்றுமுள்ளது. ஏடுகள் சிறிது சிதிலங்களாயுள.

---

## No. 2648. வேதாளக்கதை.

## VĒTĀḶAKKATHAI.

Substance, paper. Size, $13\frac{1}{4} \times 8\frac{1}{2}$ inches. Pages, 296. Lines, 25 on a page. Character, Tamil. Condition, good. Appearance, new.

Same work as that described under No. D. 121.

Contains, Stanzas 1—860 only.

(கு - பு.)—

இது புஸ்தகசாலைக்கு 121-ஆம் நம்பர் பிரதியிலே வந்துள்ள நூலேயாகும். இப்பிரதியில் ஆதி தொடங்கி 27-ஆம் கதை வரையுமே உளது. ஆக (1—860) ஆன பாடல்களேயிருக்கின்றன.

---

## No. 2649. தொன்னூல் விளக்கம் உரையுடன்.

## TONNŪL VIḶAKKAM WITH COMMENTARY.

Substance, paper. Size, $13\frac{1}{4} \times 8\frac{1}{2}$ inches. Pages, 352. Lines, 20 on a page. Character, Tamil. Condition, good. Appearance, new.

Same work as that described under No. D. 58.

Complete.

(கு - பு.)—

இந்நூல் டிஸ்கிருப்டிவ் காடலாகுக்கு 58-ஆம் நம்பர் பிரதியிலே வந்துள்ள நூலேயாகும். இப்பிரதியில் இந்நூல் முற்றும் உளது.

---

## No. 2650. இராமாநுஜ திவ்வியஸூரி சரிதம்.

### IRĀMĀNUJADIVYASŪRI CARITAM.

Substance, palm-leaf. Size $19 \times 1\frac{1}{4}$ inches. Pages, 264. Lines, 7 on a page. Character, Tamil and Grantha. Condition, much injured. Appearance, very old.

Same work as that described under No. R. 15.

Complete.

(கு - பு.)—

இது ரூலைக்குடக் காடலாக்கு 15-ஆம் நம்பர் பிரதியிலே வந்துள்ள நூலாகும். முற்றும் உள்ளதென்றே தோன்றுகிறது. இறுதியில் ஒரு சிறிய பகுதியே இல்லை. ஏடுகள் எல்லாம் மிகச்சிதைந்து முறிந்து கிடக்கின்றன.

---

## No. 2651. இரண்யசம்ஹார நாடகம்.

### IRAṆYASAṀHĀRANĀṬAKAM.

Substance, palm-leaf. Size $15\frac{6}{16} \times 1\frac{1}{4}$ inches. Pages, 226. Lines, 5 on a page. Character, Tamil. Condition, much injured. Appearance, very old.

Same work as that described under D. No. 472.

Complete.

(கு - பு.)—

இது டிஸ்கிருப்டிவ் காடலாக்கு 472-ஆம் நம்பரில் வந்துள்ள நூலேயாகும். இப்பிரதியில் அப்பிரதியில் காணப்பெறாத சில பாடல்களும் இருக்கின்றன. சிதிலமானது.

---

## No. D. 2652. சிறிய திருமுடியடைவு (குருபரம்பரை).

### ŚIṚIYA TIRUMUḌIYAḌAIVU (GURUPARAMPARAI).

Pages, 48. Lines, 6 on a page.

Begins on fol. 11-a. of the Ms. described under No. D. 17231 of the Sanskrit Part.

Complete.

Same work as that described under No. D. 1118. The author's name is not known here also. Wants the third leaf in the *middle*.

(கு. - பு.)—

இந்நூல் டிஸ்கிரிப்டிவ் காடலாக்கு (1118)-ஆம் நம்பரிலே வந்துள்ளதேயாம். முற்றும உளது. ஏடுகள் சிதைவுற்றுள, முறிந்தும் உள. இடையில் 3-ஆம் ஏடு காணப்பெறவில்லை.

———

## No. 2653. திருவருணைக் கலம்பகம்.
## TIRUVARUṆAIKKALAMBAKAM.

Substance, palm-leaf. Size, 17 × 1 inch. Pages, 80. Lines, 4 on a page. Character, Tamil. Condition, much injured. Appearance, very old.

Incomplete.

An eulogy in the *Kalambakam* style, on "Aruṇācalēśvarar", (God Śiva) as worshipped at Tiruvaṇṇāmalai, a place of pilgrimage in the North Arcot district. By Ellappanāvalar. Printed.

**Beginning :**

களாம்பாக்கம் சபாபதி முதலியார் படிக்கின்ற திருவருணைக்கலம்பகம்.
சித்திரபானு௵ ஆடி௴ உ௰அ௳.

திருவருணைக்கலம்பகம்.

அன்னவயல் சூழருணை யண்ணாமலையார் மேன்
மன்னுங் கலம்பகப் பாமாலைக்கு—துன்னியசீர்
மெய்க்கோடு பெருவெழும் வெள்ளோட்டின்மீதெழுதும்
கைக்கோட்டு வாரணமே காப்பு. (க)

கட்டளைக் கலித்துறை.

சைவத்தின் மேற்சமயம் வேறிலையதிற்சார் சிவமாந்
தெய்வத்தின் மேற்றெய்வமில் லெனுநான்மறைச் செம்பொருள் [வாய்
மைவைத்த சீர்த்திருத் தேவாரமுந்திருவாசகமும்
உய்வைத்தரச் செய்த நால்வர் பொற்றாளெம் முயிர்த்துணையே. (உ)

எட்டடித்தரவு.

மணிகொண்ட நெடுங்கடலில் வி[ளி](ழி)வளரு மாதவனும்
அணிகொண்ட புண்டரீக மலர்த சதுமுகனும்
ஞானக் கண்ணறு கொண்டு நாடுமாறுணராதே
ஏனத்தின் வடிவாகி யெகினத்தின் வடிவாகி
அடிதேடி யறிவலெனவவனியெலா முழுதிடந்தும்
முடிதேடி வருவலென மூதண்டமிசைப் பறந்தும்
காணரிய வொருபொருளாய்க் களங்கமற விளங்குபெருஞ்
சோணகிரி யெனநிறைந்த சுடரொளியாய் நின்றருள்வோய்.

End :

தலைவி யவயவவருமை சொல்லல்.

அறுசீர்க்கழி நெடில் ஆசிரிய விருத்தம்.

ஏமநெடுஞ்சிலை வளைத்த பெருமானூர்
அருணகிரி யிறைவர் நாட்டிற்
றுமரை மண்டபத்துறையு மடந்தையிடை
யெழுத வென்றுற் றலைவனூரே
மாமுயற் கொம்பினிலேறி விசும்பலரைப்
பறித்து முனம்வடி விலாதோன்
ஆமை மயிர்க்கயிறுகொடு தொடுத்தணிந்த
புதுமை யினு மருமையாமே. (கூகூ)

* * * *

(கு. - பு.)—

இந்நூல், சைவசித்தாந்தத்தில் மிகப் பிரசித்தி வாய்ந்த "எல்லப்ப நாவலர்", என்னும் பெரும்புலவரால் திருவண்ணாமலையிற் கோயிற் கொண்டருள்புரியும் அருணாசலேசுவரர்மீது "கலம்பகம்", என்ற பிரபந்த வகையிலே துதிரூபமாக இயற்றப் பெற்றதாகும். இது மிகவும் கையினுற் கூட எடுக்கவும் இயலாவண்ணமாய் அத்துணைச் சிதைந்து, முறிந்து உளது. இறுதியில் (100) -ஆம் பாடல் இல்லை.

---

## No. 2654. நீதிஸாரம் உரையுடன்.
## NĪTISĀRAM WITH A COMMENTARY.

Substance, palm-leaf. Size, 17¼ × 1¼ inches. Pages, 98. Lines, 6 on a page. Character, Tamil. Condition, very much injured. Appearance, old.

Incomplete.

By Mūkkappan.

Same work as that described under No. D. 179.

(கு. - பு.)—

இந்நூல் டிஸ்கிருப்டிவ் காடலாக்கு 179-ஆம் நம்பரில் வந்துள்ள நூலேயாகும். இப்பிரதி முற்றும் இருப்பினும் ஏடுகள் சிதைந்து விழுந்திருக்கின்றன. படித்தற்கு அரிதாகவுளது. அச்சிடப்பெற்றுள்ளது.

---

## No. 2655. திருவாய் மொழி.
## TIRUVĀYMOḶI.

Substance, palm-leaf. Size, 17 × 1¼ inches. Pages, 184. Lines. 7 on a page. Character, Tamil. Condition, much injured. Appearance, very old.

Incomplete.

Same work as that described under R. No. 58.

(கு. - பு.)—

இந்நூல் மூவருடக் காடலாக்கு 58-ஆம் நம்பர் பிரதியில் வந்துள்ள நூலேயாம். இப்பிரதியில் முற்றும் இல்லை. ஏடுகள் மிகச் சிதைந்து போயிருக்கின்றன.

---

## No. 2656. திருவாய் மொழி.

### TIRUVĀYMOḺI.

Substance, palm-leaf. Size, 20½ × 1½ inches. Pages, 400. Lines, 7 on a page Character, Tamil. Condition, much injured. Appearance, old.

Complete.

Same work as that described under R. No. 58.

(கு. - பு.)—

இந்நூல் மூவருடக் காடலாக்கு 58-ஆம் நம்பர் பிரதியில் வந்துள்ளதே யாம். இப்பிரதியில் முற்றும் முறைபிறண்டு ஏடுகள் கோர்க்கப்பெற்றுள. ஏடுகள் மிகவுஞ் சிதைவுற்றிருக்கின்றன.

---

## No. 2657. திருவாய் மொழி.

### TIRUVĀYMOḺI.

Substance, palm-leaf. Size, 14¾ × 1½ inches. Pages, 20. Lines, 5 on a page. Character, Telugu. Condition, very much injured. Appearance, old.

Complete.

Same work as that described under R. No. 58.

(கு. - பு.)—

இந்நூல் மூவருடக் காடலாக்கு 58-ஆம் நம்பர் பிரதியில் வந்துள்ளதே யாகும். இப்பிரதியில் முற்றும் இல்லை. ஏடுகள் மிகவுஞ் சிதைவுற்று எளிதிற்படித்தற்கியலாவண்ணமாய் உள.

---

## No. 2658. நாலாயிர திவ்வியப்பிரபந்தப் பாடற்றிரட்டு.

### NĀLĀYIRA DIVVIYAPPIRABANDHAPPĀḌAṞṞIRAṬṬU.

Substance, palm-leaf. Size, 14 × 1 inch. Pages, 26. Lines, 5 on a page. Character, Tamil. Condition, very much injured. Appearance, old.

Complete.

Same work as that described under No. D. 646.

(கு. - பு.)—

இது டிஸ்கிருப்டிவ் காடலாக்கு 646-ஆம் நம்பர் பிரதியில் வந்துள்ளதே யாம். இப்பிரதியில் ஷை நூலின் சில பாடல்கள் மாத்திரம் திரட்டி எழுதப் பெற்றுள. முற்றும் உளது. ஏடுகள் மிகவும் சிதலுற்று இருக்கின்றன. எளிதில் படித்தற்கு அரிதாகும்.

## No. 2659. சோதிடநூற் குறிப்பு.
## JŌTIḌA NŪṞ KUṞIPPU.

Substance, palm-leaf. Size, 6 × 1½ inches. Pages, 33. Lines, 8 on a page. Character, Tamil. Condition, good. Appearance, old.

Begins on fol. 39-b of the Ms. described under No. D. 5518 of the Sanskrit part.

Complete.

Similar to the work described under No. D. 2010.

**Beginning :**

மேல்நோக்கு நாள்.

ஓணம், ஆதிரை, சேமாம், உரோகிணி, பேணியார்
? உத்திரம் மூண்டு சதயம் ஆணியான் அவிட்டம் ?
ஒன்பதும் மேல்நோக்கும்நாள், பரணி, கிருத்திகை.

*　　　*　　　*　　　*

**End :**

. . . . திருட்டுப்போம. அசுபதி, பரணி, கிருத்திகை, புனர்பூசம், பூசம், ஆயிலியம், உத்திரம், அஸ்தம், விசாகம், கேட்டை, உத்திராடம், சதயம், உத்திரட்டாதி இந்தப் பதின்மூன்றும் மாடுவாங்க உத்தமமாம்.

(கு. - பு.)—

இது சோதிடத்தைச் சார்ந்தது. இதில் மேல்நோக்கு நாள், இராசி, யுருவம், பெயர் முதலிய சிலவே குறிக்கப்பெற்றிருக்கின்றன. முற்றும் உளது.

## No. 2660. திருவாய்மொழி (மூலம்).
## TIRUVĀYMOḺI (TEXT).

Substance, palm-leaf. Size, 18½ × 1¾ inches. Pages, 46. Lines, 6 on a page. Character, Tamil. Condition, injured. Appearance, old.

Incomplete.

Same work as that described under No. R. 58.

(கு. - பு.)—

இந்நூல் மூவருடக் காடலாக்கு 58-ஆம் நம்பரிலே வந்துள்ளதேயாகும். இப்பிரதியிலே "கடல்ஞாலஞ் செய்தேனும் யானேயென்றும்," என்று தொடங்கும் 5-ஆம் பத்து, 6-ஆம் திருவாய்மொழியின் (௩) 3-ஆம் பாடல் வரைக்குமே யுளது. ஏடுகள் சிதலுற்றிருக்கின்றன.

## No. 2661. அஷ்டாதச ரஹஸ்யம்.
## AṢṬĀDAŚA RAHASYAM.

Substance, palm-leaf. Size, $18\frac{1}{2} \times 1\frac{3}{4}$ inches. Pages, 122. Lines, 6 on a page. Character, Telugu. Condition, very much injured. Appearance, old.

Contains Tattvatrayam, Rahasyatrayam, Arthapañcakam, Śrī Vacana bhūṣaṇam and Arcirādi only.

Same work as those described under No. R. 49 (*a*) to (*e*) with different headings.

By Piḷḷailōkācāryar.

(கு. - பு.)—

*இந்நூல் ரூமவருடக் காடலாக்கு 49 (a-e)-ஆம் நம்பர் பிரதியில் வந்துள்ளதே. மிகச்சிதிலமானது. இதில் தத்வத்ரயம், இரஹஸ்யத்ரயம், அர்த்த பஞ்சகம், ஸ்ரீவசனபூஷணம், அர்ச்சிராதி என்ற இவைகளே உள. பிள்ளை லோகாசார்யர் இயற்றியவை.*

---

## No. 2662. ரஹஸ்யத்ரய ஸாரம்.
## RAHASYATRAYA SĀRAM.

Substance, palm-leaf. Size, $17\frac{1}{2} \times 1\text{-}6/16$ inches. Pages, 420. Lines, 8 on a page. Character, Tamil and Grantha. Condition, injured. Appearance, very old.

Complete.

Same work as that described under No. D. 971.

By Vēdāntadēśika.

(கு. - பு.)—

*இந்நூல் டிஸ்கிருப்டிவ் காடலாக்கு 971-ஆம் நம்பர் பிரதியில் வந்துள்ளதேயாம். இப்பிரதியில் இந்நூல் முற்றும் உளது. ஏடுகள் சிதலுற்றிருக்கின்றன.*

---

## No. 2663. ரஹஸ்யத்ரய ஸாரம்.
## RAHASYATRAYA SĀRAM.

Substance, palm-leaf. Size, $17\frac{1}{2} \times 1\frac{1}{2}$ inches. Pages, 440. Lines, 6 on a page. Character, Tamil and Grantha. Condition, injured. Appearance, old.

Complete.

Same work as that described under D. No. 971.

(கு. - பு.)—

*இந்நூல் டிஸ்கிருப்டிவ் காடலாக்கு 971-ஆம் பிரதியில் வந்துள்ளதேயாம். இப்பிரதியில் முற்றும் உளது. ஏடுகள் மிகவும் சிதிலமாகவிருக்கின்றன.*

## No. 2664. ரஹஸ்யத்ரய ஸாரம்.
RAHASYATRAYASĀRAM.

Substance, palm-leaf. Size, 15½ × 1½ inches. Pages, 216. Lines, 9—11 on a page. Character, Tamil and Grantha. Condition, injured. Appearance, old.

Contains Adhikāras 1 to 26, complete.

Same work as that described under D. No. 971.

(கு. - பு.)—

இந்நூல் டிஸ்கிருப்டிவ் காடலாக்கு 971-ஆம் நம்பர் பிரதியில் வந்துள்ளதேயாகும். இப்பிரதியில் இது முதற்றொடங்கி 26-ஆம் அதிகாரமான: 'ஸ்த்திரீகரணபாகம்', என்ற பகுதிவரையும் ஸமக்ரமாக உளது. எடுகள் சிதைந்திருக்கின்றன.

---

## No. 2665. ரஹஸ்யத்ரயம்.
RAHASYATRAYAM.

Substance, palm-leaf. Size, 14¾ × 1½ inches. Pages, 52. Lines, 4 on a page. Character, Telugu. Condition, very much injured. Appearance, very old.

Complete.

Same work as that described under Nó. R. 49 (*a*), wherein this work has been mentioned as "Mumukṣuppaḍi"

(கு. - பு.)—

இது மூவருடக் காடலாக்கு 49-a நம்பர் பிரதியிலே வந்துள்ளதேயாகும். முற்றுமுளது. எடுகள் மிகவுஞ் சிதைவுற்றிருக்கின்றன.

---

## No. D. 2666. ரஹஸ்யத்ரய வியாக்கியானம்.
RAHASYATRAYA VIYĀKKIYĀNAM.

Substance, palm-leaf. Size, 17¾ × 1½ inches. Pages, 9. Lines, 7 on a page. Character, Telugu. Condition, injured. Appearance, old.

Begins on fol. 1-*a*. The other works herein are Śrī Vaiṣṇavādilakṣaṇam 6-*a*.

Ponnāycciyār Rahasyam 7-*a*.
Varāha Carama ślōka Rahasyam 11-*a*.
Vākkiya Guruparamparā Viyākkiyānam 15-a.
Tiruppāvai Upanyāsam 26-*a*.
Śvapacaślōkārtha uta Vicāraḥ 34-*a*.
Tennācāryasampradāyārthasaṅgrahaḥ 38*a*.
Śrīnivāsa Varadārya Jātakādi (50).

Incomplete.

Similar to the work described under No. R. 54. **By Periya Jiyar.**

(கு. - பு.)—

இது மூவருடக் காடலாக்கு 954-ஆம் நம்பர் பிரதியில் வந்ததைப் போன்றது. முற்றும் இல்லை.

---

## No. 2667. ஸ்ரீ வெஷ்ணவாதி லக்ஷணம்.

## ŚRĪ VAIṢṆAVĀDILAKṢAṆAM.

**Page, 1. Lines, 6 on a page.**

Begins on fol. 6-a of the Ms. described under No. D. 2666.

Complete.

Similar to the work described under No. R. 105 (*j*). The author's name is not known.

**Beginning :**

ஸ்ரீவைஷ்ணவைகாந்தி பரமைகாந்தி லக்ஷணம்.

ஸ்ரீ வைஷ்ணவன் என்றும் ஏகாந்தியென்றும் பரமைகாந்தியென்றும் த்ரிவிதம். அதில் வைஷ்ணவன் ஆகிறான் தேவதாந்தரநிவ்ருத்தி பூர்வகமாக ஸமாச்ரயணம் பிறந்தவன்.

**End :**

*     *     *     *     *     *

ஸம்பந்தஜ்ஞானமும் ஸம்பந்த ரக்ஷகத்வ ஜ்ஞானமும் ஸம்பந்த போக்யத்வ ஜ்ஞானமும் உள்ள ஶக்தி பரபக்தி ஜநித பரமபக்தி நிஷ்டர்களிறே இவர்கள்.   *   *   *

(கு. - பு.)—

இது வைணவமதத்தில் வழங்கப்பெறும் ஸ்ரீ வைஷ்ணவன், ஏகாந்தி, பரமைகாந்தி என்ற இம்முத்திறத்தினையும் நன்கு உணர்த்துவது.

---

## No. 2668. பொன்னாய்ச்சியார் ரஹஸ்யம் முதலியன.

## PONNĀYCCIYĀR RAHASYAM MUDALIYANA.

**Pages, 9. Lines, 6 on a page.**

Begins on fol. 7-a of the Ms. described under No. D. 2666.

Complete.

A collection of the doctrines of Śrī Vaiṣṇavism, containing four Rahasyas (or esoteric works), namely, Ponnāycciyār Rahasyam, Śavakkaraippiḷḷai Rahasyam, Embār Rahasyam and Tēvāriyāṇḍān Rahasyam.

**Beginning :**

பொன்னாச்சியார் ரஹஸ்யம்.

தொண்டனூர் நம்பி, மருதூர் நம்பி, மழலூர் நம்பி இம்மூன்றுபேரும் எம்பெருமானார் திருவடிகளிலே தண்டன் ஸமர்ப்பித்து இந்த ஆத்மாவுக்கு ஆசாரியர் ஒருவரோ இருவரோ பலரோ எத்தனைபேர் ? என்று கேட்க, எம்பெருமானாரும் முதலிகளைப் பார்த்துப் "பொன்னாச்சியார்", என்பவரைப் போய்க் கேளுங்கோள் என்று அருளிச் செய்தாராம். அவர்களும் பொன்னாச்சியாரது திருமாளிகையிலே எழுந்தருளி அவர் திருவடிகளிலே தண்டன் ஸமர்ப்பித்து அம்மா இந்தாத்மாவுக்கு ஆசாரியர் ஒருவரோ

*     *     *     *

**End :**

தெனுலியாண்டானும் ஸ்வாசாரியரான ஆளவந்தார் திருவடிகளிலே தண்டன் ஸமர்ப்பித்து அடியேனுடைய திருவநந்தபுரம் அமைந்ததோ ? என்னுடைய திருவநந்தபுரம் இதோ எதிரே வருகுது என்று விண்ணப்பஞ்செய்ய, ஸ்ரீ ஆளவந்தாரும் இந்நினைவு பிறக்கிறது ஒருவருக்கும் அருமையாயிருக்கும் என்று உகந்தருளினார் என்று ப்ரஸித்தம் இந்த வித்ருத்தாந்தம் திருவாய்மொழியிலே "நீராய் நிலனாய்த் தீயாய்க் காலாய் நெடுவானாய்," என்கிற பாட்டிலே ஸ்பஷ்டம்.

ஸ்ரீமதெராமாநுஜாயநம:.

(கு. - பு.)—

இதில், பொன்னாச்சியார் ரஹஸ்யம், சவக்கரைப் பிள்ளை ரஹஸ்யம், எம்பார் ரஹஸ்யம், தேவாரியாண்டான் ரஹஸ்யம் என்ற நான்கு ரஹஸ்யங்கள் அடங்கியிருக்கின்றன.

---

## No. 2669. வராஹ சரம ஶ்லோக ரஹஸ்யம்.
## VARĀHACARAMA ŚLŌKA RAHASYAM.

**Pages, 8. Lines, 6 on a page.**

Begins on fol. 11-a of the Ms. described under No. D. 2666.

Complete.

A commentary on Śrī *Varāhacaramaślōka*.

**Beginning :**

வராஹசரமஶ்லோகரஹஸ்யம்.

அஹம் ஸ்மராமி மத்பக்தம் நயாமி பரமாம் கதிம் |

ஸ்திதே மனஸி ஸுஸ்வஸ்தே ஶரீரே ஸதி யோ நர: ||

தாதுஸாம்யே ஸ்திதே ஸ்மர்த்தா . . . . நயாமி பரமாம் கதிம் ||

இத்யாதி நாராயண காருண்யத்தையும், நாராயணாதிகாரத்தையும், நாராயண ப்ரகாரத்தையும், நாராயணீய வ்யக்தி விஶேஷத்தையும், நாராயண ஸ்வரூபத்தையும் அடைவே பிரகாசிப்பிக்கிறது. அதிலே " ஸ்திதே மனஸி ஸுஸ்வஸ்தே ஶரீரே ஸதி யோ நர:,"   *   *

*   *   *   *   *

**End :**

* * * நானே கொண்டுபோகக்கடவேன். லங்கா ஸாகரத்திலே யிருந்த பிராட்டியைப் ஸமுத்ரகத்திலே தானே யெடுத்துக்கொண்டு போனாப்போலே நானும் இவ்வாத்மாவைக் கொண்டுபோவேன் என்னும் படியாம்.

ஶ்ரீ க்ருஷ்ணார்பணமஸ்து.

---

க்லேஶாத்தகா ஶ்லோக வ்யாக்யாநம்.

க்லேஶாத்தகா அபாநாம்ப்ரா[தி](யோ) விஶேஷவகாம் த்ருணாம் |
கக்ர ஸ்புடிஶேஷ ஸ்வஜ்ஞாம் நவ்யக்யாய ஶேஷ்ஶ: ||

அஸ்ய்யர்த்த:, அத்தகா: = அத்தாக்யாநேஷ்யகார:, யோவிஶேஷவகாம் = ஜ்ஞாந விஶேஷவகாம், ஸ்வாத்மஸ்வரூபாய ஸமர்ப்பணாயத் ஜ்ஞாநவகாதிக்யர்த்த: | த்ருணாம். க்லேஶ: ஸ்வஸ்ய: = தீர்ணி நாஶாதி, ஸ்வாத்மவிஷ்ணு உபாய விஷ்ணு ஸமர்ப்பணாயத் விஷ்ணு ஊக்யர்த்த:.

**(கு. - பு.)—**

இது வராஹ சரம ஸ்லோகத்துக்கு விரிவுரையை யெடுத்து உரைாத்துவது. இவ்விரிவுரையை இயற்றியவர் இன்னார் என்று இதிலிருந்து விளங்கவில்லை.

பின்னர்— "கிலெஶாZத்கா," என்று தொடங்கும் ஒரு ஸ்லோகத்துக்குப் பொருள் ஸ்ரீ பாஷ்யகாரர் விஷயமாக நயிப்பித்து விளக்கியிருக்கிறது. இறுதியில் பகவதாராதனத்துக்கு உரிய சில வடமொழி ஸ்லோகங்கள் எழுதப்பட்டிருக்கின்றன.

---

## No. 2670. வாக்கிய குருபரம்பரா வியாக்கியானம். VĀKKIYA GURUPARAMPARĀ VIYĀKKIYĀNAM.

**Pages, 21. Lines, 6 on a page.**

**Begins on fol. 15-a of the Ms. described under No. D. 2666.**

**Complete.**

**Same work as that described under No. R. 116 (*x*).**

**(கு. - பு.)—**

இந்நூல் மூவருடக் காடலாக்கு 116 (*x*) நம்பர் பிரதியில் வந்துள்ளதேயாம். இப்பிரதியில் முற்றும் உளது. அங்கு "வாக்யத்ரய வ்யாக்யானம்", எனக்குறியீடு இட்டிருப்பது தவறு. இங்கிருக்கும் குறியீடே பொருத்தமானது எனத் தோன்றுகிறது.

Pages, 16. Lines, 5 on a page.

Begins on fol. 26-a of the Ms. described under No. D. 2666.

Complete.

An explanatory and short note on the "Tiruppāvai", of Śri Āṇḍāḷ. The author's name is not known.

**Beginning :**

திருப்பாவை உபந்யாஸம்.

திருப்பாவை முப்பது பாட்டுக்கும் முதற்பாட்டு ஸங்கிரஹமாயிருக்கும். ஸங்கிரஹமானபடி என் என்னில்; ஸ்ரீ பாஷ்யம் ஒன்பதினாயிரம் கிரந்தத்துக்கும் முதல் அத்யாயம் ஸங்கிரஹம் ஆமாப்போலேயும், திருவாய்மொழிக்கு முதல் திருவாய்மொழி ஸங்கிரஹமானாப்போலேயும், முதல் திருவாய்மொழிக்கும் முதற்பாட்டு ஸங்கிரஹமானாப்போலேயும், ஜகத்ரக்ஷைத்துக்குப் ப்ரணவம் ஸங்கிரஹம் ஆனாப்போலேயும் இம்முப்பது பாட்டுக்கும் முதற் பாட்டு ஸங்கிரஹமாயிருக்கும்.

**End :**

இருபத்தெட்டாம்பாட்டில் நாட்டாரிசைகைக்காகநோம்பென்று ஒரு வ்யாஜத்தையிட்டுப் புகுந்தோம் இத்தனை. எங்களுக்கு உத்தேச்யம் அதுவன்று. உன் திருவடிகளிலே கைங்கர்யமென்னும் உத்தேச்யமான ப்ராப்ய ஸித்திக்கும் தங்கள் ஆகிஞ்சந்ய ஜ்ஞாநத்தையும் ப்ராப்தியையும் முன்னிட்டு அவனையே உபாயமாகவேண்டும் என்று அபேக்ஷித்து சரணவரணம் பண்ணிக்கொண்டு ப்ராப்ய ப்ரார்த்தநம் பண்ணித்தலைக்கட்டுகிறது. இதுக்குக் கீழ் அடங்கலும் ஓர் அதிகாரிக்கு ஸம்பவிக்கும் ஸ்வபாவங்களைச் சொல்லிற்றாயிற்று. இப்பாட்டில் அதிகாரி ஸ்வரூபமான உபாய ஸ்வீகாரத்தை ஸப்ரகாரகமாகச் சொல்லுகிறது. இருபத்தொன்பதாம் பாட்டில் கீழில் உபாய ஸ்வரூபம்சொல்லி இப்பாட்டில் தங்களுக்கு உத்தேச்யமான(து) கைங்கர்யம் என்று ப்ரபந்நகாஸ்வயஞ் சொல்லி முடிக்கிறார்கள். இத்தால் ஸ்வீகாரோபாயத்துக்குப் பலமான ப்ராப்யாய ஸ்வரூபஞ் சொல்லுகிறது. முப்பதாம் பாட்டில் இப்பிரபந்தங்கற்றார் ஆய்ச்சியராலும் ஈச்வரனாலும் ஸர்வகாலமும் உண்டான விசேஷ கடாக்ஷத்தைப் பெற்று நித்யஸூரிகள் ஆகப்பெறுவர்கள் என்கை.

(கு. - பு.)—

இந்நூல் திருப்பாவைக்குச் சுருக்கமாய் அமைந்துள்ள ஒரு குறிப்பு ஆகும். இதனை ஒருவர் உபந்யஸித்ததாக இங்குக் காணும் குறியீட்டால் காணக்கிடக்கிறது. ஆசிரியரது பெயர் தெரியவில்லை.

## No. 2672. ஶ்வபசஶ்லோகார்த்த வியாக்கியானம்.
## ŚVAPACAŚLŌKĀRTHA VIYĀKKIYĀNAM.

Pages, 5. Lines, 6 on a page.

Begins on fol. 34 of the Ms. described under No. D. 2666.

Complete.

Similar to the work described under No. R. 48 (*b*). The author's name is not known.

**Beginning :**

ஶ்வபசஶ்லோகாத்ம வ்யாக்யாநம்.

ஶ்வபசோபி மஹீபால விஷ்ணுபக்தோ த்விஜாதிக: ।

விஷ்ணுபக்தி விஹீநஸ்து யதிஶ்ச ஶ்வபசாதம: ॥

இது ஸ்ரீ ஸாத்வத ஶ்லோகம்.

இந்த ஶ்லோகத்துக்கு வ்யாக்யாநம் வில செல்லுகிறது, உத்ப்ரேக்ஷ வசநவாக்யங்களுக்கு நிக்ருஷ்ட ஜந்மத்தால் வந்த தோஷம் ஶமிப்பது உத்ப்ரேக்ஷ மேல் வாக்கியங்களுக்குஞ் சேரத் தாத்பர்யம் ஆவது. ஆகையால் உத்க்ருஷ்ட ஜந்மமே ஶ்ரேஷ்டம் என்கிற அவதாரணத்தாலே இருவரும் பக்தராகிலும் அபக்தராகிலும் அஹங்கார ஜநகத்வ ஜநகத்வங்களைப்பற்ற ஶேஷத்வாதிக ஜ்ஞாநவான்களே ஶ்ரேஷ்டர் என்கை யுசிதமிறே. அதாவது இருவரும் பக்தராகிலும் ஸம்ஸாரஸம்பந்தமும் பயஜநகத்வமும் நைச்யமுள்ளவர்களில் அது அதில்லாதவர்கள் ஶ்ரேஷ்டர் என்னக்குறையில்லை.

**End :**

அபக்ருஷ்ட ஸம்ஸாரமக்நத்வ நிக்ருஷ்ட ஸம்ஸாரமக்நத்வங்களாலே நித்யருக்கும் முக்தருக்கும் உள்ள வாசியைப்போலே அபக்ருஷ்ட ஜாத்யாதிமக்நத்வ நிக்ருஷ்ட ஜாத்யாதி மக்நத்வங்களாலே இருவரும் பக்தராகிலும் வையப் பொருவார்களுக்கு வாசியுண்டு. இப்படி இந்த ஶ்லோகத்துக்கு அர்த்தம் விவக்ஷியாதபோது வரும் விரோதத்தை யருளிச்செய்கிறார் இங்ஙன் அன்றாகில் உத்ப்ரேக்ஷயாலே. இங்குச்சொன்ன ஜாத்யாதயஹங்கார நிஷித்தத்வம் "வித்யாமதோ தநமத: த்ருதீயோபிஜநமத:", என்கிற விடத்திலே யுண்டான மற்றை இரண்டஹங்கார நிஷித்தத்துக்கும் உபலக்ஷணம்.

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:.

**(கு. - பு.)—**

இந்நூல் மூவருடைக் காடலாக்கு 48 (*b*) நம்பர் பிரதியில் வந்துள்ள நூலைப்போன்று உளதாய் ஒரு சிறிது வேறுபாட்டுடனே "ஶ்வபசோபி," என்கிற ஶ்லோகத்துக்கு உள்ள அர்த்தவிசேஷங்களையெடுத்து உணர்த்துகின்றது. இதன் ஆசிரியர் பெயர் தெரியவில்லை.

## No. 2673. தென்னாசார்ய வடவாசார்ய சித்தாந்தங்கள்.
## TENNĀCĀRYA VAḌAVĀCĀRYA SIDDHĀNTAṄGAḶ.

Pages, 8. Lines, 7 on a page.

Begins on fol. 38-a of the Ms. described under No. D. 2666.

Complete.

A short note on the doctrinal differences between the two sects, viz., *Teṅkalai* and *Vaḍakalai* in Śrī Vaiṣṇavism. The author's name is not known.

**Beginning :**

ஶ்ரீரஸ்து. அவிக்னமஸ்து.

தென்னாசார்ய சித்தாந்தங்கள்.

[illegible] |
[illegible] ||
[illegible] |
[illegible] |
[illegible] |
[illegible] ||

* * * * * *

**End :**

[illegible] |
[illegible] ||

(கு. - பு.)—

இது, தென்னாசார்ய வடவாசார்ய சம்பிரதாயங்களில் உள்ள சில விசேஷாம்சங்களையும் இன்னும் மற்றும் உள்ள சில பொதுவான விஷயங்களையும் கூறுகிறது. இறுதியில், 9 ஏடுகளில் தொடர்பில்லாது சில விஷயங்களும் இரண்டு ஜாதகங்களும் எழுதப்பட்டுள.

---

## No. 2674. ஸத்கர்ம சந்திரிகா.
## SATKARMA CANDRIKĀ.

Substance, palm-leaf. Size, 9¾ × 1-6/16 inches. Pages, 88. Lines, 7 on a page. Character, Tamil and Grantha. Condition, injured. Appearance, old.

Begins on fol. 1-*a*. The other work herein is Sadanuṣṭhāna Cintāmaṇiḥ 45.

Complete.

A treatise in the *Maṇipravāla* style on how a *Śrī Vaiṣṇava prapanna* is to conduct all his religious rites. It seems to be a rendering of the Ms. described under No. D. 5397 of the Sanskrit Part, Vol. II.

By Rāmānujamuni.

[illegible] என்றும் ஸ்ரீ பாகவதத்திற் சொல்லியிருக்கிறபடியே.

**End :**

அப்படிப்பட்ட மகானுபாவன் (சொல்லியிருக்கவும்) [பகுநாளாய்] சில [illegible], ''நெடுநாளாய் [illegible] ஆதரிக்கப்பட்ட [illegible] மிதுவே'', யென்று [illegible] நிக்கிறார்கள். அத்தால் அவர்களுக்கு [illegible] அன்றி வேறு ப்ரயோஜனம் ஒன்றுங்கிடையாது.

[illegible]

(கு. - பு.)—

இது, எல்லா வர்ணாச்ரமங்களிலும் உள்ளவர்களுக்கும், மற்று, அவர்கள் உள்ளும் பிரயந்நரானவர்களுக்கும், உள்ள சில ஏற்றத்தாழ்மைகளையும், மிச்ரயாஜிகள் சுத்தயாஜிகள் என்றவர்கள் பகவானை வழிபடுமாற்றில் உள்ள வேறுபாடுகளையும், அவர்கள் ஸத்கர்மங்களை அனுஷ்டிக்குமாற்றையும் ஸ்ரீ மந்நிகமாந்த தேசிகனுடைய கிரந்தங்களில் உள்ள பிரமாண வாக்கியங்களைக் கொண்டே எடுத்துணர்த்தி இங்குச் சொன்னவையெல்லாம், ஸ்ரீ பாஷ்யகாரர்க்குத் திருவுள்ளமேயாம் என்பதனையும் நன்கு விளக்கிப்போருகிறது. ''இராமாநுசமுனி'' என்ற பெரியவரால் இயற்றப்பெற்றதாக முதலிலும் இறுதியிலும் விளக்கப்பட்டுளது. இங்குச்சொன்ன, 'ராமாநுசமுனி', உபநிஷத் பாஷ்ய கர்த்தாவான ரங்கராமாநுஜ முனியோ என ஐயம் நிகழுகின்றது.

**No. 2675.** ஸதநுஷ்டாநசிந்தாமணி:.

SADANUṢṬHĀNA CINTĀMAṆIḤ.

Pages, 8. Lines, 7 on a page.

Begins on fol. 45-*a* of the manuscript described under No. 2674. Incomplete.

Similar to the above. By Rāmānujamuni.

**Beginning :**

ஸதநுஷ்டாந சிந்தாமணி:.

ப்ரபந்நாநுஷ்டாந சிந்தாமணி:.

ஸர்வஜ்ஞாசார்யக்ருத்யாதிகம் ஸாரம் ஸம்பூர்ணப்ரக்ருத்ய விசேஷக: |
ஸங்க்ரஹேண ப்ரபந்நாநா மநுஷ்டாநம் விரச்யதே ||
திதைகாதி ஸ்ரமாநாஞ்ச நித்யநைமித்திகேஷு ச |
ஸம்ப்ரதாயாத் மதாந்தரேஷ்வாசீது விசிந்த்யாஹம் விக்ரஹாது ||
மநுமதேண ஸக்ஷிகாது க்ருஷ்ணாஸங்கல்ப்யகந்யாது |
பஹுமதம் ஸம்பூர்ணாய ஸாத்விகக்ராம ப்ரபந்நகஸ் ||

* * * * * *

**End :**

ஸ்ரீயாதவப்ரகாஸீய யதிராட் ஸம்பூர்ணயே |
க்ரந்தே ஷ்வேதேஷு ஸம்சாரம் ஸம்ஸயஸ்யஜ்யகாம்பாயா: ||
...ககதயோர் ப்ரதிஜ்ஞாநே ப்ரோக்த க்ரந்தாஜ்ஞர்நே ஸ்ருத: |
ஸத்கர் சதுர்காயாஸ்ய ஸர்வம் நிஷ்டி ப்ரஸ்யகாம் ||

(இதுவே தமிழில் இயற்றியது.)

ஸர்வஜ்ஞாசார்யர் விஹிதமான ப்ரபந்நாநுஷ்டேய திதைகாதி ஸ்ரமாநாக நித்யநைமித்திகங்களில் காந்யஸாவிஹ ஜீவஸிம்ஹ ஸூத்ரத்தில் மதாந்த தேவதாந்தரங்களை ஹமவஸ்துவீரங்களாக ப்ராதித்து அவைகளுடன் மநுமதத்தைச் சேர்த்து ஹமவஸ்ராந ப்ரபந்நகமாக அநுஷ்டேய மதங்களை ஹமவதா ராயநமாக ஸங்கல்பித்து *

* * * *

**End :**

பனிரண்டாம் நாள் நாராயண பலியும் பண்ணவேண்டியது. வேதிகா ப்ரஜாராயநாதிகள் யதிராட் ஸம்பூர்ணத்தில் சொல்லாத்தாலும் காம்யமாகையாலும் அவை வேண்டியதில்லை. இவைகளில் ஸவேதஸ வகுத்தில் ஸ்ரீமத்ரஹஸ்ய ஸாரத்திலும் * * *

(கு. - பு.)—

இதுவும், முன் பிரதியில் உள்ள நூல்போலப் பிரபந்நர்களுக்காம் அநுஷ்டான விதிகள் பலவற்றையும் உணர்த்துவது. முதலில் வடமொழியில் அமைந்தும், பின்னர், தமிழில் மொழி பெயர்ப்பாகவும் அமைந்துளது.

## No. 2676. ஸ்ரீரங்காசார்யர் தனியன்கிரமம்.
## ŚRĪ RAṄGĀCĀRYAR TANIYAN KIRAMAM.

Substance, palm-leaf. Size, 12½ × 1½ inches. Pages, 22. Lines, 7 on a page. Character, Tamil and Grantha. Condition, much injured. Appearance, very old.

Complete.

Stanzas in praise of a certain line of *Śrī Vaiṣṇava Gurus.*

**Beginning :**

திருமந்திரார்த்த தனியன் கிரமம்.

[illegible] * * * [illegible] ||
[illegible]

[illegible] |
[illegible]
[illegible] || க||

**End :**

[illegible] |
[illegible] ||

* * * * * *

(கு. - பு.)—

இது, 'ஸ்ரீரங்காசார்யர்', என்ற தென்னாசார்ய ஸம்பிரதாயத்தவரான ஒருவரது, தனியன்களினுடைய கிரமங்களை யுணர்த்துவது. இதில் இரஹஸ்யத்ரயத்தனியன கிரமங்களையும், பகவத்விஷயத் தனியன்களின் கிரமங்களையும், ஸ்ரீமத் ராமாயணத் தனியன் கிரமங்களையும் உரைத்துள்ளது.

---

## No. 2677. பாகவதம் தசமஸ்கந்தம் தமிழுரையுடன்.
## BHĀGAVATAM DAŚAMASKANDHAM WITH TAMIL COMMENTARY.

Substance, plam-leaf. Size, 18½ × 1½ inches. Pages, 48. Lines, 10 on a page. Character, Tamil and Grantha. Condition, injured. Appearance, old.

Incomplete.

Begins with the first adhyāya of the Daśamaskandha and breaks off in Adhyāya 13 of the same.

Similar to the work described under No. R. 1190.

The commentary is called "Maṇipravāladīpikā" but the commentator's name is not known.

ஞானஸாரம் ஸத்திரத்தின் உபோத்காதத்தில் நின்றும் ஸர்வஜ்ஞ சக்தியினுடைய பூர்வாவதாரங்களைக் கேட்டு ஸ்ரீ ஸுப்ரஹ்மண்யாவதார விஷயமாய் அறிய ஆசைகொண்டு ஸர்வஜ்ஞனைக் கேட்க * * * *
அநந்தரம் ஸர்வஜ்ஞர் ஸ்கந்த ப்ராதுர்பாவ வ்ருத்தாந்தம் பண்ணுகிறார்.

ராஜா—

கதிதோ வம்சவிஸ்தாரோ பவதா ஸர்வதேவயோ: |
ராஜ்ஞோ ராஜஸ்ய வம்சஸ்ய ஸமுத்பவம் ஸுதோத்கடம் || க||

இதி ஸம்பிதஸ்ய ! பவதா = தேவரீராலே, ஸர்வதேவயோ: = ஸர்வதேவர்களுடைய, வம்சவிஸ்தார: = வம்சவிஸ்தாரமும், கதித: = சொல்லப்பட்டது.

**Colophon :**

இதி ஸ்ரீஸ்காந்தே மஹாபுராணே சங்கரஸம்ஹிதாயாம் சிவரஹஸ்யகண்டே ஸம்பவகாண்டே ப்ரதமோऽத்யாய: |

**End :**

வத்ஸா: ஸ்வமாதரம் த்ருஷ்ட்வா தாம் வீக்ஷ்ய ஸ்தன்யலாலஸா: |
ஸ்தன்யத்யாகேச்சயா ஸர்வே விசசார மனோ பரம் ||

ஸனத்குமாரன் ஸர்வஜ்ஞன் ஸ்வஜனத்தினுடைய வைராக்யத்தைப் பார்த்து ஊட்டுதல் மறுத்த கன்றுகள் விஷயத்திலும் பசுக்களுடைய வைராக்யத்தையும் பார்த்து, அமோகலக்ஷ்மி = பேதத்தையறியாதவராய்க்கொண்டு, அசிந்தயத் = ஆலோசித்தார்.

(கு. - பு.)—

இது ரங்காசாரியர் ஆய்வுக்கு 1190-ஆம் நம்பர் பிரதியில் வந்துள்ள நூல்போன்றது. இப்பிரதியில் பத்தாவது ஸ்கந்தத்தில் 13 அத்யாயங்கள் வரையிலும் மூலமும் உரையும் உளது. உரை யாருடையது என்று தெரியவில்லை.

---

## No. 2678. சரநூல் உரையுடன்.
## ŚARA NŪL WITH A COMMENTARY.

Substance, palm-leaf. Size, 11½ × 1 inch. Pages, 94. Lines, 5 on a page. Character, Tamil and Grantha. Condition, much injured. Appearance, old.

Incomplete.

Same work as that described under No. R. 512.

(கு. - பு.)—

இது ரங்காசாரியர் ஆய்வுக்கு 512-ஆம் நம்பர் பிரதியில் வந்துள்ளதேயாம். இப்பிரதியில் ஆதி தொடங்கி 49-ஆம் பாடல் வரைக்குமே உளது. ஏடுகள் மிகச் சிதிலமாயிருக்கின்றன.

## ENSUVADI VĀYPPĀDU.

Substance, palm-leaf. Size, 11 × 1¼ inches. Pages, 42. Lines, 6 on a page. Character, Tamil and Grantha. Condition, much injured. Appearance, old.

Incomplete.

" Arithmetical Tables " in the old South Indian style.

**Beginning :**

எண்சுவடி வாய்ப்பாடு.

பலம் அறியும்படி :—

சேர் = பலம் ௮.

வீசை = பலம் ௪௰.

தூககு = பலம் ரு௰.

தடையம் = பலம் ௮௰.

இடை = பலம் ௱.

துலாம் = பலம் உ௱.

மணங்கு = பலம் ௲௨௰.

படி = பலம் ௱.

பத்திடை = பலம் ௲.

சேர் அறியும்படி :—

வீசை = சேர் ரு.

தடையம் = சேர் ௰.

இடை = சேர் ௰௨௫.

மணங்கு = சேர் ௪௰.

**End :**

கலியுகத்துக்கு ௬௰ ௪ இலட்சத்௩௰௨௩ . ஆக யுகம் ௪-க்கு ? சதுர்யுகம் ௪-க்கு ? சதுர்யுகம் க-க்கு ௪௩ இலட்சத்து உ௰௨௩ . இப்படி ௲ சதுர்யுகங்கொண்டது பிரம்மாவுக்கு ஒரு நாள் என்றபடி இந்தப் பிரம்மா ௱ பிரம்மா அழிந்தால் உரோம மகாருஷிக்கு ஓர் உரோமம் உதிரும். அப்படிக்கொத்த உரோம மகாருஷி அழிந்தால் அஷ்டகோண மகாருஷிக்கு ஒரு கோணல் திரும். அப்படிக்கொத்த அஷ்டகோண மகாருஷி நூறு அஷ்டகோண மகாருஷி அழிந்தால் பாரமிருஷி . . .

(கு. - பு.)—

இந்நூல் எண்சுவடி வகையைச் சார்ந்தது. இதில் பலம், சேர், மணங்கு, வருடம், மாதம், திதி முதலானவையும் மற்றும் சில விஷயங்களும் கூறப்பட்டிருக்கின்றன. ஏடுகள் மிகவுஞ் சிதல் உற்று இருக்கின்றன.

---

## No. 2680. மீனாட்சி கலியாண நாடகம்.
## MĪNĀKṢI KALIYĀṆA NĀṬAKAM.

Substance, palm-leaf. Size, 12½ × 1½ inches. Pages, 110. Lines, 5 on a page. Character, Malayālam. Condition, good. Appearance, new.

**Incomplete.**

(God Śiva) enshrined at Madura. The author's name is not known. It is called "Kathakaḷi" in Malayāḷam.

**Beginning :**

மீனுட்சியம்மை நாடகம்.

கொல்லம் 1053 ஆவதுஞூ யநஉரவம் ருஉ.

மீனுட்சி நாடகம் சுவடி யெழுதினது :—

நாட்டை இராகம். வர்ணவிருத்தம்.

சந்திரன்கர கங்கை சடைமுடிதனிலே தாங்கி ?
இந்திரன் விமானந்தன்னில் இதமுடனிருக்குமீசன்
சுந்திரேசர்க்கு மெங்கள் சோதி மீனும்பிகைக்கும்
முந்திய முதலேயான மகன் [யானை முகன்] ? மலரடிகள் போற்றி. (க)

சீரான தென்மதுரைச் சொக்கநாதர் செல்வமீனுட்சியம்மன் பேரால்,
வா(பா)ராளும் மனுநீதிதவரு மன்னன் பாண்டியனுறெடுத்த பாவையான
நேரான கல்வி நிறையுள்ள மாது நேருள்ள தடா தகையம்மன் கதையைப்பாட;
நாராயணன் திருமருகன் விக்கின
விநாயகன் காப்பா மென்று நவிலுவோமே.

**End :**

வசனம் :—

அகோ வாரும் பிராம்மணு ! நீர் சுந்தரேசு வரலீலையென்று பேசப் பட்ட நியாயம்போலே கலியாணத்திரக்கிலே ? இந்தச் செய்தி என்கிட்டே சொல்ல வந்தீரே ? இந்த வல்லபம் எங்கே தான் கற்றீரோ ? ஸ்வாமி யுடன் கூடி வந்திருக்கப்பெற்ற பேர்கள் முப்பத்தி முக்கோடி தேவர் களும் நந்தி முதலாகிய வெகு கோடி பூதகணங்களும் இருக்கிருர்கள். நீர் அன்னசாலையில் அதிகாரத்தைப் பார்த்துக்கொள்ளும் ஐயா !

விருத்தம் :—

ஸஹாநா ராகம்.

(கு. - பு.)—

இது, மதுரையிற் கோயிற்கொண்டிருக்கும் மீனுட்சியம்மைக்கும் சுந்தரேசுவரசுவாமிக்கும் நடந்த கலியாணத்தை விஷயமாகக் கொண்ட ஓர் நாடகத்தமிழாகும். இதில் நூலாசிரியர் பெயர் குறிக்கப்பெற வில்லை. இப்பிரதியானது கொல்லம் ஆண்டு 1053 ஆவதுஞூ (மார்கழி) தனுர்மீ 5உ எழுதப்பெற்றது என்று குறிக்கப்பட்டிருக்கிறது. ஆகவே இது இன்றைக்கு சுமார் அறுபத்திரண்டு வருடங்கட்கு முன்னே எழுதப் பெற்றதாகும். இதன் சீர்மையை யாம் ஆராயுமிடத்து இது, கேரள தேசத்திலும் மிகவும் பிரசித்தி பெற்றதாய் நடிக்கப்பெற்றும், கற்கப் பட்டும், மிகவும் போற்றப்பட்டும் வந்திருக்கிறது என்பது தெற்றென விளங்கு கிறது. இதனை மலையாளிகள் "கதைகளி" என்றும் வழங்குவார்கள் போலும். மிக அழகாய் இருக்கிறது. ஆனல், இப்பிரதி மிகப் பிழைபட எழுதப்பெற்றிருக்கிறது. முற்றும் இல்லை.

## No. 2681. திருவாய்மொழி வியாக்கியானம் (பன்னீராயிரப்படி).
## TIRUVĀYMOḺI VIYĀKKIYĀNAM (Pannīrāyirappaḍi).

Substance, palm-leaf. Size, 18 × 1½ inches. Pages, 34. Lines, 6-8 on a page. Character, Tamil and Grantha. Condition, much injured. Appearance, old.

Begins on fol. 1-*a*. The other work herein is Taniślōka Viyākkiyānam 18 *a*.

Incomplete.

Breaks off in 5th Tiruvāymoḻi of 1st Pattu.

Same work as that described under No. D. 743. By Aḻakiyamaṇavāḷa-jīyar.

(கு. - பு.)—

இது, டிஸ்கிருப்டிவ் காடலாக்கு 743-ஆம் நம்பர் பிரதியில் வந்துள்ளதே. இப்பிரதியில் ஆதி தொடங்கி முதற் பத்து 5 -ஆம் திருவாய்மொழியின் இறுதி வரையிலுமே இருக்கிறது. ஏடுகள் சிதலுற்றிருக்கின்றன.

---

## No. 2682. தனிஸ்லோக வியாக்கியானம்.
## TANIŚLŌKA VIYĀKKIYĀNAM.

Pages, 152. Lines, 6 on a page.

Begins on fol. 18-*a* of the manuscript described under No. D. 2681.

Complete.

Same work as that described under No. R. 819 (*b*). By Periyavāccāṉ Piḷḷai.

(கு. - பு.)—

இது, மூவருடக் காடலாக்கு 819 (b) நம்பர் பிரதியில் வந்துள்ளதேயாம். இப்பிரதியில் ஆதி தொடங்கி இறுதி வரையிலும் உளது. ஏடுகள் மிகவும் சிதலுற்றிருக்கின்றன. சில முறிந்துள.

---

## No. 2683. ஆழ்வார் ஆசார்யர்கள் திருநக்ஷத்திர மாலை.
## ĀḺVĀR ĀCĀRYARKAḶ TIRUNAKṢATTIRA MĀLAI.

Substance, palm-leaf. Size, 14¼ × 1¼ inches. Pages, 88. Lines, 5 on a page. Character, Telugu. Condition, much injured. Appearance, old.

Incomplete.

Wants the leaves 2, 5 to 7, 29 and 47 in the middle.

Same work as that described under No. R. 397. The composer's name is not known.

(கு. ‧ பு)—

இந்நூல் மூவருடைக் காடலாக்கு 397-ஆம் நம்பர் பிரதியில் வந்துள்ளதே. இப்பிரதியில் முதற்றொடங்கி திருவரங்கத்தமுதனாது வாழித்திருநாமம் வரையிலான பகுதி மாத்திரம் இருக்கிறது. ஏடுகள் சிதலுற்றுக்கிடக்கின்றன.

---

## No. 2684. திருமந்திரார்த்த விஷயம்.
## TIRUMANTIRĀRTHA VIṢAYAM.

Substance, palm-leaf. Sizes, 7¾ × 2 and 9½ × 2¼ inches. Pages, 14. Lines, 12 on a page. Character, Telugu. Condition, injured. Appearance, old.

Begins on fol. 1-*a*. The other works herein are :—Śrī vaiṣṇava-puṇyāhavācanam 8 *a*, Śrīvaiṣṇava lakṣaṇam 10 *b*, Rāmānuja kīrtanālu (Telugu) 11 *a*, Śrīvacanabhūṣaṇaviyākkiyānam 18 *a*.

Complete.

Explains the three Secret Formulas of Śrī Vaiṣṇavas.

**Beginning :**

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:.

திருமந்த்ரார்த்த விஷயக்ரமம்.

[illegible]

[illegible] |

[illegible]

[illegible] || ||௧||

[illegible] |

[illegible] || ||௨||

[illegible]மான திருமந்திரம் ஆனது "ஓம் நமோ நாராயணாய," என்று. இது எட்டு திருவக்ஷரமாய் ஓம், நம:, நாராயணாய என்று மூன்று பதமாயிருக்கும். மூன்று பதமும் மூன்று அர்த்தங்களைச் சொல்லும். அதாவது சேஷத்வமும், பாரதந்த்ர்யமும், கைங்கர்யமும்; ஸ்வாம்யமும், உபாயமும், புருஷார்த்தமும்.

**End :**

திருமந்திரத்தில் * * * * * * நாராயண பதத்தில் விக்ரஹயோகம் பண்ணும் போது நம்மாழ்வாரை அவனுக்குத் திருமேனியாகச் சொல்லுகையாலும் த்வயத்தில் "சரணௌ சரணம் ப்ரபத்யே," என்று நம்மாழ்வாரைத் திருவடிகளாகச் சொல்லுகையாலும், சரமஶ்லோகத்தில் * * * * ஜ்ஞானதேசிகராய், ஜ்ஞானதேசிகர் என்று திருநாமத்தை உடையவராய்த் திருப்புளியாழ்வார் கீழேயெழுந்தருளியிருக்கிற பராங்குசரான நம்மாழ்வார்க்கு சேஷம் என்கிறது. திருமந்திரம், ஆழ்வார் திருவடிகளிலே பண்ணுங்கைங்கர்யமே புருஷார்த்தம் என்கிறது. த்வயம்,

ஆழ்வார் திருவடிகளான எம்பெருமானாரே உபாயம் என்கிறது. * * * * * * * * கண்ணிநுண் சிறுத்தாம்பிலும், நூற்றந்தாதி, ஸ்ரீவசந பூஷணம், அந்திமோபாயநிஷ்டை, திருமங்கையாழ்வார் மடிபிடி என்ற இவைகளிலேயும் ஸவிஸ்தரமாகக் கண்டுகொள்ளுவது.

ஸ்ரீமதே க்ருஷ்ணஸமாக்யாய நம: |

ஸ்ரீமதே ராமாநுஜாய நம: |

(கு. - பு.)—

இந்நூல், திருமந்திரம், த்வயம், சரமஶ்லோகம் என்கிற இந்த ரஹஸ்யத்ரயங்களுக்கும் ஆன உட்பொருள்களையும், அதிலும் உட்பொருள் ஸ்ரீ நம்மாழ்வார் என்றும், அவர் திருவடியானது எம்பெருமானார் என்றும், அதுவும் உபலக்ஷணமாய் ஸ்வாசார்ய பர்யந்தமாம் என்றும் ஆகிய இவ்வுள்ளுறைப் பொருள்கள் யாவற்றையும் தெற்றென விளக்குகின்றது. நூலாசிரியர் ஆத்தான் ஜீயரின் பிரிய ஶிஷ்யரான கிருஷ்ணமாசாரியர் என்பவர் ஆவர் என்று முதலிற்காணப்பெறும் இரண்டு வடமொழி ஶ்லோகங்களால் தெரிகிறது.

---

## No. 2685. ஸ்ரீவைஷ்ணவ புண்யாஹவாசநம் முதலியன.
## ŚRĪ VAIṢṆAVAPUṆYĀHA VĀCANAM, MUDALIYANA.

Pages, 5. Lines, 10 on a page.

Begins on fol. 8-*a* of the manuscript described under No. D. 2684.

Complete.

On some rituals of *Śrī Vaiṣṇavas*.

**Beginning :**

ஸ்ரீகோவிந்த கோவிந்த இதஸ்ஸ்ரீ ஸ்ரீமத ஸ்ரீ ஸமஸ்தலோக ஸ்வாமி பரமாத்மஸ்ய விஷ்ணோராஜ்ஞயா * * * அஸ்யாமவாஸ்யாயாம் ஸம்பூர்ணாம் பரிணய பூர்வோத்தர தேஹஸம்பந்தம் மாதாமஹோபாஸ்யாயம் உபாஸ்யோபாஸ்யாயம் ஸமஸ்தாபராத ஸாஸ்ஸ்யாயம் ஸ்தோத்ரஸாஸ்ஸ்யாயம் புண்யாஹவாசநம் கரிஷ்யே இதி ஸங்கல்ப்ய.

**End :**

நாரஸிம்ஹாய நம: | அச்யுதாய நம: | ஜநார்த்தநாய நம: | உபேந்த்ராய நம: | ஓம் ஸ்ரீ க்ருஷ்ணாய நம: |

(கு. - பு.)—

இந்நூல், ஸ்ரீ வைஷ்ணவர்கள் அனுஷ்டிக்கும் புண்யாஹ வாசனத்துக்கு உரிய ஸங்கல்ப முறையினையும், "ஸதநுக்ரஹபத்ததி", என்றதின் முறையினையும், அர்ச்சனைக்குரிய நாமக்கோவைகளையும் எடுத்து உணர்த்துகிறது. முற்றும் உளது.

## No. 2686. ஸ்ரீவைஷ்ணவ லக்ஷணம்.
## ŚRĪ VAIṢṆAVALAKṢAṆAM.

Page, 1. Lines, 10 on a page.

Begins on fol. 10-*b* of the manuscript described under No. D. 2684.

Complete.

This is said to have been taught to Paravastu Paṭṭar Pirān Jīyar by his guru Periya Jīyar or Maṇavāḷamāmuni.

**Beginning :**

*பெரிய ஜீயர் பட்டர்பிரான் ஜீயருக்குச் சாதித்த ஸ்ரீ வைஷ்ணவ லக்ஷணம் :—*

*பஞ்ச ஸம்ஸ்கார ஸம்ஸ்க்ருதன் ஆகவேண்டும்.*

*பஞ்சமோபாய நிஷ்டனாகவேண்டும்.*

*பஞ்சவிம்சதி தத்வஜ்ஞன் ஆகவேண்டும்.*

*பஞ்ச யஜ்ஞதீக்ஷிதனாக வேண்டும்.*

*நூற்றந்தாதி யென்கிற ப்ரபந்த காயத்ரீ ஜபிக்கவேண்டும்.*

**End :**

*"உன்னடியார்க்கடிமை", என்கிற ததீயாராதந பஞ்சயாகங்கள் என்றும் பண்ணவேண்டும். இப்படியிருக்கிறவர்கள் ஸ்ரீ வைஷ்ணவர்கள். பூர்வாசார்யர்கள் இவையறியாதார்க்கு ஐந்தாமங்கள் போகவில்லை யென்று சொல்லுவர். இப்படிப் பெரியஜீயர், பட்டர்பிரான் ஜீயருக்கு அருளிச் செய்த அர்த்தம்.*

* * * *

(கு. - பு.)—

*இது, பரவஸ்து பட்டர்பிரான் ஜீயர் என்னும் 'மணவாளமாமுனி'களின் சிஷ்யரானவர்க்கு அவரது ஆசார்யரால் உபதேசிக்கப் பெற்றதென முதலில் காணப்பெறும் நிலையங்கும் தெரிவிக்கின்றது. முற்றும் உளது.*

---

## No. 2687. ராமாநுஜ கேயவசன கீர்த்தனலு.
## RĀMĀNUJA GĒYAVACANA KĪRTTANALU.

Pages, 13. Lines, 12 on a page.

Begins on fol. 11-*a* of the manuscript described under No. D. 2684.

Incomplete.

Telugu songs in praise of Bhagavadrāmānuja. The author's name is not given.

**Beginning :**

*ஸ்ரீ வைகுண்டநாதா ! ஹ்ருத்யஸ்வரூபா ஸச்சிதாநந்தம் புலசாத நநந் துண்டவநியுனு | * * * ஸேஷதஸமாராயிதாய . ராஜா நமோ நமோ யதிராஜ ஸேவா ! ||*

**End :**

* * * ஹஷிஞ்சி உதகிகி நுபல்க வர்யவகல்கூடகி ஜெயாடீகி வரதராஜவுகூ வர்யவெத்தெவலிடட, அனெவரமக ஸ்ரீகார ரனுவொவாய்யுகி வியாபிஞ்சி நீவகதிகபதுராகூடகிமா வஙிசி யதுதாலெஹாராபஹயயாதெகத்ராதநபஸூா மனைநவாகல வா வெப பாடவட தவெதகூ வர்யவணநாவாயாடாஙிா ஸ்பாடுநபிவெடாடிகி தெவிவிவாவி கிபிமகா ஸெஷநமாாயிநாய ! பாந்ராபி |.

(கு. - பு.)—

இந்நூல், தெலுங்கு பாஷையிலே ஸ்ரீ பாஷ்யகாரர் விஷயமான துதிரூபமான கேயவசனரூபபிரபந்த விசேஷமாகும். ஒவ்வொரு ராகத்திலே, அமைக்கப்பட்டுள்ள பதின்மூன்று கீர்த்தனங்கள் உள. இதன் நூலாசிரியர் இன்னார் என்று தெரியவில்லை. எழுத்துப் பிழை சொற்பிழைகள் மிகவுள. இதற்கு முன் ஓர் ஏட்டிலே உடையவர் பட்டர் விஷயமாகச் சில வசனங்களும், திருக்கோவலூர் நாயனாசார்யர் விஷயமான வடமொழி ஸ்லோகங்களும், கோற்கொண்டபட்டரது பஞ்சரத்னமும் உள.

---

## No. 2688. ஸ்ரீவசனபூஷண வியாக்கியானம்.
## ŚRĪ VACANA BHŪṢAṆA VIYĀKKIYĀNAM.

Pages, 46. Lines, 12 on a page.

Begins on fol. 18-*a* of the manuscript described under No. D. 2684.

Incomplete.

Same work as that described under No. R. 66.

(கு. - பு.)—

இது, மூவருடக் காடலாக்கு 66-ஆம் நம்பர் பிரதியிலே வந்துள்ளதே யாம். இப்பிரதியில் முதலிலிருந்து "ஸர்வஸ்ய சாஹம் ஹ்ருதி ஸந்நிவிஷ்ட:", "ஈஸ்வரஸ்ஸர்வ:", என்ற மேற்கோள் ஸ்லோகங்கள் வரையிலும் ஆன பகுதிமாத்திரமே உளது. ஏடுகள் சிதலுற்றுள. எழுத்துப் பிழைகள் உள.

---

## No. 2689. தொட்டையாசார்யர் சரித்திரம்.
## DOḌḌAIYĀCĀRYAR CARITTIRAM.

Substance, palm-leaf. Size, 15½ × 1-10/16 inches. Pages, 40. Lines, 10 on a page. Character, Tamil and Grantha. Condition, injured. Appearance, old.

Begins on fol. 1-*a*. The other work herein is Doḍḍaiyācāryar Śrīmukham.

Complete.

A Biography of Śrī Doḍḍaiyācārya of Vādhūlagōtram.

**Beginning :**

தொட்டையாசார்யர் சரித்திரம்.

ஶ்ரிய꞉ பதியாய் அவாப்த ஸமஸ்தகாமனாய் உபய விபூதி நாயகனான ஶ்ரீமந்நாராயணன் " பரித்ராணாய ஸாதூநாம் விநாஶாய ச து³ஷ்க்ருதாம் । த⁴ர்மஸம்ஸ்தா²பநார்தா²ய ஸம்ப⁴வாமி யுகே³ யுகே³ ॥", என்று ஸாது பரித்ராணார்த்தமாகவும் விரோதிநிரஸநார்த்தமாகவும் த⁴ர்மஸம்ஸ்தா²பநார்த்தமாகவும் யுகந்தோறும் அவதரிப்போம் என்று தான் அருளிச்செய்தபடியே க்ருதயுகத்திலே * * * * கலியுகத்திலே " கலௌ கில ஸம்ப⁴விஷ்யந்தி," என்கிறபடியே திராவிட தேசத்திலே பிராட்டி * * த³க்ஷிணாவதாரமான ஶங்கரான இவர்களுக்கு உஜ்ஜீவநார்த்தமாக " அஹம் ஶிஷ்யோ ச தா³ஸோ(அ)ஹம் ப⁴க்தோ(அ)ஹம் ச த்வயி ப்ரபோ⁴ । த்வத்க்ருதே ஸர்வஹிதகரம் உபாயம் வத³ மே ப்ரபோ⁴ ॥", என்று சொல்லுகிறபடியே உபாயமான உபாயத்தை யருளிச் செய்யவேணும் என்று விண்ணப்பஞ்செய்ய, அவனும், " ஓமித்யேகாக்ஷரம் ப்³ரஹ்ம," என்று மந்த்ரரத்னத்தைப் பிராட்டிக்குப் பிரஸாதித்தருள, அவளும் ஸேனை முதலியாருக்குப் ப்ரஸாதித்தருள, அவரும் ப்ரபந்நஜநகூடஸ்தரான நம்மாழ்வாருக்குப் ப்ரஸாதித்தருள, அவர் தொடங்கி ஆசார்ய பரம்பரையாலே உபதேச பரம்பரை ப்ரவர்த்திப்பித்த விடத்திலும் கலிமிஞ்சி * * * * * * * முதலியாண்டான் திருவம்சத்திலே அவதரித்து ஶ்ரீ தேவராஜா சார்யர் ஶ்ரீ ப²லஸாகராசார்யர் என்றும் இருவர் ப்ரஸித்தராயிருக்கச் செய்தே * * * * ஶ்ரீமந் நாராயணன் தானே சிறியப் பன் குமாரரான ஶ்ரீ ஶைலாசார்யர் ஆக * * * * * * ஸாத⁴ரணஸம்வத்ஸரத்திலே, கார்த்திகமாஸத்திலே, ஶுக்லபக்ஷத்திலே த்ரயோத³ஶியிலே, குருவாஸரத்திலே, உத்தராஷாடா நக்ஷத்ரத்திலே ஶ்ரீநகரத்திலே அவதரித்தருளினார்.

**End :**

ஶ்ரீ ஸூக்தி ஸ்ரீஸைலகளுடைய கநகவைபவத்ரயாலங்காரத்தை ஸௌவைபோலே இருக்கிற * * * * * *

**(கு. - .பு)—**

இந்நூல், முதலியாண்டான் என்றவரது வமிசத்திலே அவதரித்த வாதூல தொட்டையாசார்யாது சரித்திரத்தை விளக்குவது. முடிவு பெறவில்லை. பின்னர், ஷியார் ரங்காசார்யருக்குப் பாஞ்சராத்ர விஷயமாக எழுதிய ஒரு ஶ்ரீமுகம் காணப்படுகிறது.

## No. 2690. தொட்டையாசார்யர் ஸ்ரீமுகம்.
## DOḌḌAIYĀCĀRYAR ŚRĪMUKHAM.

Pages, 34. Lines, 10 on a page.

Begins on fol. 41-*a* of the manuscript described under No. D. 2689.

A letter to a person named Śrī Raṅgācāryar from Vādhūla Śrī Doḍḍaiyācāryar of Tiru Nārāyaṇapuram.

**Beginning :**

ஸ்ரீஶைலநாத ராமாநுஜாய நம:.

ஸ்ரீஶ்ரேஷ்டகோமேமக்ருதாதி * * * ஸ்ரீரங்காசார்யருக்குத் திரு நாராயணபுரம் கோயிற்கந்தாடை தொட்டையாசார்யர் ராமாநுஜ தாஸஸ்ய. பிங்கள நாம ஸம்வத்ஸரம் ஆடிமீ 21உ வரைக்கும் எல்லாரும் க்ஷேமம். அங்கே.

**End :**

. . . த்திரியை ஸ்ரீராம அத்தான்குட்டி அப்பளாசார்யருக்குக் கொடுக்கவேண்டும்.

பைங்களஸு ஆவணிமீ 6உ.

(கு - பு.)—

இது திருநாராயணபுரத்தில் இருந்த கோயிற் கந்தாடை தொட்டை யாசார்யர் என்பவர், ஸ்ரீரங்காசார்யர் என்பார் ஒருவருக்கு எழுதின திருமுகமாகும். முற்றும் உளது. பாஞ்சராத்ரஸம்ஹிதையில் உள்ள ஒரு விஷயத்தைத் தெளிவித்ததாகும்.

---

## No. 2691. நித்தியாநு ஸந்தானமும் ஸ்தோத்ரங்களும்.
## NITTIYĀNUSANDHĀNA AND STŌTRAJĀLA.

Substance, śrītāla. Size, 9½ × 2 inches. Pages, 344. Lines, 9—12 on a page. Character, Telugu. Condition, injured. Appearance, old.

Complete.

Same work as that described under No. R. 61 (*a*).

(கு - பு.)—

இது மூவருடக் காடலாக்கு 61 (a) நம்பர் பிரதியில் வந்துள்ளதேயாம். பின்னர் பஞ்சாயுத ஸ்தோத்ரம், காந்தஸ்தே ஸ்தோத்ரம், ஸ்ரீநந்தே ஸ்தோத்ரம், ஸ்ரீரங்கநாத ஸ்தோத்ரம், ஸுப்ரபாதம், வெங்கடேச ஸுப்ர பாதம், திருமந்திர விஷயங்கள், ராமாநுஜஸ்துதி மௌனம், (தெலுங்கில்) ராமாநுச நிகமனப்படி, சிறிய திருமுடியடைவு முதலிய சில கிரந்தங்களும், நூற்றெட்டுத்திருப்பதியடைவும் எழுதப்பெற்றிருக்கின்றன. இவையெல்லாம் நித்தியம் ஸ்ரீ வைஷ்ணவர்கள் பலராலும் அநுஸந்திக்கப்பட்டு வருதலால் இப்பெயர் பெற்றதென்பர். ஏடுகள் எல்லாம் மிக மாலின்யம் உற்றிருக்கின் றனவாதலால் எளிதில் படித்தற்கு அரியதாயிருக்கிறது.

## No. 2692 திருவாய்மொழி.

## TIRUVĀYMOḶI.

Substance, palm-leaf. Size, 19 × 1½ inches. Pages, 200. Lines, 6 on a page. Character, Telugu. Condition, injured. Appearance, old.

Begins on fol. 1(*a*). The other works herein are Cinniyammāḷ Rahasyam. 101-*a*, Yatirājaviṁśati Viyākkiyānam. 102-*a*.

Complete.

Same work as that described under R. No. 58. Vol. I.

(கு - பு.) --

*இந்நூல் மூலருடைக் காடலாக்கு 58 ஆம் நம்பர் பிரதியிலே வந்துள்ளதேயாம். இப்பிரதியில் முற்றும் உளது. ஏடுகள் சிறிது சிதைந்திருக்கின்றன.*

---

## No. 2693. சின்னியம்மாள் ரஹஸ்யம்.

## CINNIYAMMĀḶ RAHASYAM.

Pages, 2. Lines, 6 on a page.

Begins on fol. 101-*a* of the manuscript described under No. D. 2692.

Complete.

Same work as that described under R. No. 1076 (*b*).

**Beginning :**

*சின்னியம்மாள் ரஹஸ்யம்.*

*சேற்றுத்தாமரைக் கரையிலே ஜீயர் நீராடி நிற்கச் சின்னியம்மாள் தண்டன் ஸமர்ப்பிக்க, பெண்ணே! உங்கள் தேசமேது என்ன, திக்கு யாவை என்ன, நாடு எதென்ன, திருவழுதி நாடு என்ன, ஊர் எதென்ன, திருக்குருகூர் என்ன,*

**End :**

*ஸ்ரீ ராமாநுஜதாஸ் எதென்ன, ஸ்ரீசைலபூர்ண ராமாநுஜ தாஸியே யென்றாள். ஜீயர் அவளுடைய அத்யவஸாயத்துக்கு மிகவுமுகந்து பாகவதஉம் ஸ்ரீ வைஷ்ணவத்வத்தருளினார்.*

(கு - பு.) —

*இந்நூல் மூலருடைக்காடலாக்கு 1076 (b) நம்பர் பிரதியிலே வந்துள்ளதே. இப்பிரதியில் முற்றும் உளது.*

---

## No. 2694. யதிராஜவிம்சதி வியாக்கியானம்.

## YATIRĀJAVIṀŚATI VIYĀKKIYĀNAM.

**Pages, 56. Lines, 8 on a page.**

Begins on fol. 102-*a* of the manuscript described under No. D. 2692.

Incomplete.

Same work as that described under No. R. 903.

(கு - பு.)—

இந்நூல், மூவருடக் காடலாக்கு 903 ஆம் நம்பர் பிரதியிலே வந்துள்ளதேயாகும். இப்பிரதியில் முற்றும் இல்லை. எடுகள் அழுக்கடைந்து படித்தற்கு மிகவும் அரிதாயிருக்கின்றன. இதிலிருந்தும் இவ்வுரையாசிரியன் பெயர் விளங்கவில்லை.

---

## No. 2695. கொங்கண நாயனார் இரண்டாங்காண்டம். KOṄKAṆA NĀYANĀR IRAṆḌĀṄKĀṆḌAM.

Substance, palm-leaf. Size, 15 × 1½ inches. Pages, 216. Lines, 8 on a page. Character, Tamil. Condition, good. Appearance, old.

Incomplete.

A work on Alchemy and Medicine " by Koṅkaṇanāyanār."

**Beginning :**

கொங்கண நாயனார் இரண்டாங்காண்டம்.

நடுக்காண்டம் பாடுகிறேன் பூரணமே காப்பு
நலமான சுண்ணும்புக் காடு காடு
அடுக்கென்ற வங்கமொன்று நாகமொன்று
அப்பனேயீயமொன்று வுருகும் போது
தடுக்கென்ற சூதமொன்று அதிலே விட்டு
தாளகமாஞ்சுன்ன மொன்று வதிலேதூவி
முடுக்கென்ற வுப்பாலே பூரச்சுன்னம்
மூடி யொருவிடையிட்டு வறுத்திடாயே. (க)

* * * *

**End :**

வார்க்கிறபடியே தென்னில் வரிசையாயிரட்டிச் சேரு
காக்கிறபடியே தென்னில் கதளிச்சமன் சூதம் வாரு
ஆக்கிற தொந்தம்பாத்து அடைவாக விரவிலேற்றுப்
போக்கிற போக்கேதென்னில் புரிசடைச்சிவன் காண்பாரே. (கககூ)
காண்பாயோ சூதங்கட்டுங் கைகண்டவாறு போலே
பூண்பாயோ பாஷாணங்கள் போக்கெல்லாங்கட்டிப்போடும்
நீண்பாயோ தொந்தமேனு நிலைநிலை வேதையாகும்
ஆண்பாயோ விந்தச்சூதம் அணைக்கச் சாரணைக்கு நன்றே (கககச)

நன்றான பெண்ண * * * * * * * * *
* * * *
* * * *
* * * *

(கு. - பு.) —

இந்நூல், கொங்கண நாயனார் இயற்றிய நடுக்காண்டம் என்ற நூலாகும். இதில் ஆதி தொடங்கி 994 ஆம் பாடல் வரைக்குமே உளது. ஆகவே முற்றுப் பெறவில்லை. இது, இரஸவாதம், வைத்தியம் என்ற இவ்விரு விஷயங்களைப் பிரதானமாகக்கொண்டது. எனத் தெற்றென விளங்குகிறது.

---

## No. 2696. நாடிநூல் (சோதிடம்.)
## NĀḌINŪL (JŌTIḌAM).

Substance, palm-leaf. Size, 15 × 1-⅜ inches. Pages, 28. Lines, 6 on a page. Character, Tamil. Condition, good. Appearance, old.

Incomplete.

A work on Astrology. The author's name is not mentioned. The name of the great Siddha, Śrī Bhusanḍar is found in the middle portion of the 1st pādam of Kanyālagnam.

**Beginning :**

மேஷ லக்கினம்.

மேஷமென்ற லக்கினந்தான் உதயமாகில்
விளம்புகிறேன் தென் வடக்கு வீதியாகும்
ஆறுமுகன்னா குளங்கிணறு அருகே நிற்கும்
அம்மனையில் இருபுறமு மிடித்துக்காட்டும்
நேயமுடன் ஆலயமும் தெற்கேயாகும்
நேர் வடக்கு ஆலயமுமிடித்துக்காட்டும்
பாசமுள்ள வீதியிலோர்(க்)கணேசன் கோயில்
பாடிநேரும் ஆழியொன்று பரிந்து சொல்லே. (க)

கன்னி முதற்பாதம்.

கன்னியெனுமிலக்கினந்தான் உதயமானால்
கனமான கீழ் மேற்கு வீதியாகும்
உன்னிதமாய்த் தென்வாசல் மேற்கே தோப்பு
உயருமதில் ஆலயமும் நீரோட்டம் வாவி
பண்ணியவன் கீழ்ப்புறத்தில் குளநீரோட்டம்
பாவனையாய்த் தெங்கமுகு தோப்பு தோன்றும்
மன்னவராம் புசண்டருமேயுரைத்த நூலை
மனந்தனிலே மயக்கமிலா வகுத்துச் சொல்லே. (உ)

மீனம்.

மன்னலக்கினமேயாகில் பெற்றது கிருகநு விந்து
தானது வாக்கு வாய்ப்பில் நடப்பது நிறைந்தேயுமாம்
வானது வடக்குக் கோணில் வாழுமுன்னா செருப்பு முன்னம்
காணகும் குழுந் திருக் கந்கம் வீதி தெருமுழுதுமாமே. (க)

(கு. - பு.)—

இந் நூல், சோதிட சாஸ்திரத்தில் நாடி யென்னும் நூல் வகையைச் சார்ந்தது. இதில், மீனம் முதலிய இலக்கினத்தில் உள்ள நவாம்ச பாதங்களிலும் ஜெனித்தவர்களுக்குப் பலஞ் சொல்லுவதாய் அவர் அவரவரிலே வீடு வாசல் இருக்குமிடம் இன்னின்ன வகையிலேயிருக்குமென்ற பலங்களை மாத்திரமே யெடுத்து விளக்குகின்றது. நூலாசிரியர்தம் பெயர் தெரியவில்லை. ஆயினும் இந்நூலின் கன்னியா லக்கினம் முதல் பாதப் பலனிலே "புசண்ட முனிவருரைத்த நூலிலே", என்று புசண்டர் நாடியை யெடுத்து உரைத்திருப்பர். ஆகவே இது அந்நூலுக்குச் சார்புநூலாக விருக்கலாம் எனத் தோற்றுகிறது. முற்றுப்பெறவில்லை.

---

## No. 2697. பலதிறப்பாடற்றிரட்டு.
## PALATIṞAPPĀḌAṞṞIRAṬṬU.

Substance, palm-leaf. Size, 10¾ × 1-2/8 inches. Pages, 40. Lines, 5—7 on a page. Character, Tamil. Condition, injured. Appearance, old.

Similar to the work described under D. No. 368.

**Beginning :**

பலதிறப்பாடற்றிரட்டு.

சுவாமி வாரார் கோதண்டராமசுவாமி வாரார்
சுவாமி வாரும் ஸ்ரீ ராமநவமி . . . . . . .
" . . . . . . . செம்பொன் தேதியில்
பீமன் வடி வியன் மேவுங் கோதண்டராமசுவாமி.

**End :**

* * * *

பெருமையும் பெருகி யிவராற் பெருமையும் பெறுகின்றேனே.

(கு. - பு.)—

இது, பலராலும் பாடப்பெற்ற பல வகையான பக்திரஸம் ததும்பும் இசைப் பாடல்களைக் கொண்டுள்ளது. ஏடுகள் சிதலுற்றன. நடை சிறந்ததல்ல.

## No. 2698. திருப்பாவை வியாக்கியானம்.

## TIRUPPĀVAI VIYĀKKIYĀNAM.

Substance, palm-leaf. Size, $18\frac{3}{4} \times 1\text{-}6/16$ inches. Pages, 160. Lines, 7 on a page. Character, Tamil and Grantha. Condition, injured. Appearance, old.

Begins on fol. 1-*a*. The other works herein are Periyatirumoḻi Viyākkiyānam 81-*a*, Tiruppaḷḷiyeḻucci Viyākkiyānam 85-*a*, Periyāḻvār tirumoḻi Akkaraippāṭṭuviyākkiyānam 97-*a*, Tiruppāvaipiratipadavurai 101-*a*, Aṣṭādaśarahasyam 114-*a*.

Complete.

Same work as that described under No. R. 38. By Periyavāccānpiḷḷai.

(கு. - பு.)—

இந்நூல் முறைகுடக் காடலாக்கு 38 ஆம் நம்பர் பிரதியில் வந்துள்ளதேயாம். இப்பிரதியில் முற்றும் உளது. இதன் பின்னர் "திருப்பாவை விசேஷ வியாக்யானச் சுருக்கு", ஒன்று முளது.

---

## No. 2699. பெரிய திருமொழி—நாட்டிளாய்ப்பாட்டின் விரிவுரை.

## PERIYATIRUMOḺI—NĀṬṬIṈĀYPPĀṬṬIN VIRIVURAI.

Pages, 8. Lines, 7 on a page.

Begins on fol. 81-*a* of the MS. described under No. D. 2698.

Complete.

A commentary on the stanza beginning with the word "Nāṭṭināy," in the *Periyatirumoḻi* of Tirumaṅgaiyāḻvār (a portion of the Nālāyira Divyaprabandham).

**Beginning :**

"நாட்டிளாய்", என்கிற பெரிய திருமொழிப்பாட்டுக்கு உரை.

இவ்வதிகாரிக்கு விசேஷணமாய் யாவதாத்மபாவி அநுஸந்திக்கக் கடவனவாயிருப்பன இரண்டு அம்சம் உண்டு. அவையாவன. செய்தவம்சத்தில் உபகார ஸ்ம்ருதியும், செய்யவேண்டும் அம்சத்தில் அபேக்ஷையும். அதில் இத்திருமொழியால் நாயனார் சௌரிப்பெருமாள் தமக்குப் பண்ணின உபகாரங்களை யநுஸந்தித்து உபகார ஸ்ம்ருதி பண்ணுகிறாராய் இதில் இப்பாட்டில், வேதாந்தத்தில் "பதிம் விச்வஸ்ய", "யஸ்யாத்மா" யென்றும், "கோஹ்யேவாந்யாத்", "ஏஷஹ்யேவாநந்தயாதி," என்றுஞ் சொல்லப்பட்டு ஸகலவேத ஸங்க்ரஹமான திருமந்திரத்தில் பதத்ரயத்தாலும் உக்தமாய் அவைதான் * * *

**End :**

" கண்டாள் கொலோ.", " வென்றும், திருத்தாயார் இவளுடைய ஸஹாவஸ்துக்கு விஷயமாகக் " கண்ணபுரத்துறையம்மானே " என்றதும், கண்ணபுரத்துறையம்மானே, வைகுந்தத்தை விட்டும் க்ஷீராப்தியை விட்டும் திருவயோத்யையும் விட்டும் ஸ்ரீமதுரையும்விட்டும் திருக்கண்ணபுரத்தேறவந்து நித்யவாஸம் பண்ணியன்றோ திருமந்திரார்(த்த)த்தைப் பிறப்பித்தது. நான் உபஸத்தனுக்கு எனக்குப் பரிஹரிக்கக்கடவ அகங்களை யன்றோ தேவர் உபஸத்தராய் உபகரித்தது . . . என்று . . . . . விஜ்ஞராகிறார்.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.

(கு. - பு.)—

இது, பெரிய திருமொழியிற் பாசுரமான " நாட்டினாய் ", என்ற பாசுரத்துக்குத் திருமந்திர பரமாக அமைந்த அர்த்த விசேடங்களை யெடுத்துரைக்கும் விரிவுரையாம்.

---

## No. 2700. திருப்பள்ளி யெழுச்சி வியாக்கியானம்.

## TIRUPPAḶḶIYEḶUCCI VIYĀKKIYĀNAM.

**Pages, 24. Lines, 7 on a page.**

Begins on fol. 85-*a* of the MS. described under No. D. 2698.

Complete.

Same work as that described under No. R. 23 (*b*). By Periyavāccān-piḷḷai. Printed.

(கு - பு.)—

கு.பு.—இந்நூல் மூவருடக் காடலாக்கு 23 (*b*) நம்பர் பிரதியிலே வந்துள்ளதேயாம். இப்பிரதியில் இது முற்றும் உளது. ஏடுகள் ஒரு சிறிது புழுக்களால் தின்னப்பெற்றிருக்கின்றன.

---

## No. 2701. பெரியாழ்வார் திருமொழி—அக்கரைப்பாட்டு வியாக்கியானம்.

## PERIYĀḺVĀR TIRUMOḺI – AKKARAIPPĀṬṬU VIYĀKKIYĀNAM.

**Pages, 7. Lines, 7 on a page.**

Begins on fol. 97-*a* of the MS. described under No. D. 2698.

Complete.

A commentary on the Stanza beginning with the word " Akkarai," in the *Periyāḻvār Tirumoḻi*. The commentator's name is not known.

**Beginning :**

பெரியாழ்வார் திவ்ய ஸூக்தி அக்கரை யென்னும் பாசுர வியாக்யானம்.

அநந்த பர்யங்கனுமாய் அநந்தஸாயனனுமாயிருக்கும் ஶ்ரீவைகுண்ட வானவன் ஸர்வேஶ்வரனுடைய விக்ரஹத்தை இங்கே அநுபவிக்க வேணும் என்று ஆசைப்பட்டுப் பெறுமையாலே ஸம்ஸாரிகளிற் காட்டில் வைராக்யத்தைப் பிறப்பித்ததும் தேவரீரது கிருபையேயாயிற்று. மேலும் ஸாயநமும் அந்தக் கிருபையேயாயிற்று எனக்குச் செய்ய நினைத்திருந்தது. இல்லையாகில், "ஶரணம் பவ," என்ற உக்தியாலே யாகிலும் தரிப்பித்தருள வேணும் என்கிறார். இப்பாட்டில் "அக்கரை", என்று சொல்லுகிறது, ஜகந்நாதஸ்வாமியுடைய யாத்ரைக்கும், கீழ்ச்சொன்ன முமுக்ஷுவி னுடைய யாத்ரைக்கும் உண்டான தூரஞ்சொல்லுகிறது.

**End :**

உசைய வர்ணித்திக்கும் நாதனுமானவன் வஸிக்கும் தேசம் "கண்டம் என்னும் கடிநகரே," என்கையாலே பரிஶுத்த வஸ்துமாயிருக்கும் என்றபடி. * * * * * *

ஜீயர் திருவடிகளே சரணம்.

பிள்ளை லோகாசார்யர் திருவடிகளே சரணம்.

ஸ்ரீஜயவருஷம் வைகாசிமீ 31௳.

எழுதினது அய்யா ஸ்வஹஸ்த லிகிதம்.

(கு - பு.)—

இது, பெரியாழ்வார் திருமொழியிற் பாசுரமான "அக்கரை", யென்று தொடங்கும் "கண்டம் என்னும் கடிநகர்", விஷயமான பாடல் ஒன்றிற்குக்கு அமைந்த விரிவுரையாகும்.

---

## No. 2702. திருப்பாவை பிரதி பதவுரை.
## TIRUPPĀVAI PIRATI PADAVURAI.

Pages, 26. Lines, 7 on a page.

Begins on fol. 101-*a* of the MS. described under No. D. 2698.

Complete.

Same work as that described under No. D. 704.

(கு - பு.)—

இந்நூல் டிஸ்கிருப்டிவ் காடலாக்கு 704 ஆம் நம்பர் பிரதியில் வந்துள்ளதேயாகும். முற்றும் உளது. ஏடுகள் புழுவரிக்கப் பெற்றுள. அச்சிடப்பெற்றிருக்கிறது.

## No. 2703. அஷ்டாதச ரஹஸ்யம்.
## AṢṬĀDAŚA RAHASYAM.

Pages, 64. Lines, 7 on a page.

Begins on fol. 114-*a* of the MS. described under No. D. 2698.

Incomplete.

Same work as that described under R. No. 799 (*a*) by Piḷḷailōkācārya.

(கு - பு.)—

இது மூவருடக் காடலாக்கு 799 (*a*) ஆம் நம்பர் பிரதியில் வந்துள்ளதேயாம். இப்பிரதியில் இரஹஸ்யத்ரயம், (மும்மக்ஷுப்படி) யாந்ருச்சிகப்படி, நவரத்தினமாலை, ப்ரபந்த பரித்ராணம், ப்ரமேய சேகரம், என்ற இரஹஸ்யங்களும், இரஹஸ்யத்ரயவியாக்யானக் குறிப்புகளுமே இருக்கின்றன. ஏடுகள் சிதல் உற்றிருக்கின்றன.

---

## No. 2704. சோதிட நூல்.
## JŌTIḌA NŪL.

Substance, palm-leaf. Size, 16 × 1-6/16 inches. Pages, 48. Lines, 8 on a page. Character, Tamil. Condition, much injured. Appearance, old.

Incomplete.

A work on Astrology. The author's name is not mentioned.

**Beginning :**

. . . . . . . . . . . சந்திரனும்
வச்சிரமாந்துலாமதனிற் பங்குபாதன்
வந்திருந்தால் உச்சமெனை வழுத்தலாமே. (௨)

**End :**

மெல்லிய விடத்துஞ்சால . . . . . .யனை
மிகு செல்வம் பாதிஞள் விளங்கும்
நல்லவினம் பிறர் சொற்கேட்பன்
நற்குணவானயனை சிங்காரசீமானும்
சொல்லுரையிற் சாதுரியன் அந்தணரைத்
. தொழும் புத்தியுள்ள புத்தியனன்
இல்லையென்றுரையான் வழக்கிடங்
கொடாத வயவினு னிரே வதியானே. (௨0௭)

நட்சத்திரபலன் முற்றும்.

ஶ்ரீ ராமஜெய நிமஜோஷ ஜெயா ஜெபிகாய நமஃ.

(கு - பு.)—

இது சோதிடச் சாத்திரத்தைச் சார்ந்ததாகும். இதன் உண்மையான பெயரும், நூலாசிரியரது பெயரும் இதிலிருந்து விளங்கவில்லை. இதில், இலக்கின பலன்களும், காரக பலன்களும், நட்சத்திர பலன்களும் முறையாகக் கூறப்பட்டிருக்கின்றன. ஏடுகள் முறையாகத் தொடர்ந்து இல்லை. சிதலுற்றுமிருக்கின்றன.

## No. 2705. சோதிட நூல் (இரேகை சாஸ்திரம்).
## JŌTIḌA NŪL (IRĒKAIŚĀSTIRAM).

Substance, palm-leaf. Size, 10 × 1 inch. Pages, 96. Lines, 6 on a page. Character, Tamil. Condition, injured. Appearance, old.

Incomplete.

A work on Astrology. The author's name is not known.

**Beginning :**

இரேகைக்குப்பலன்.

திருவுமையின் அருளாலே ரேகை . . . . . . .
செப்புகிறேன் வைசியர்கை மாலின் கோட்டி

* * * *
* * * *

**End :**

* * * *
* * * *

(மஉ)

(கு - பு.)—

இந்நூல் சாமுத்ரிகத்தில் சார்ந்த இரேகை சாஸ்திரத்தைச் சார்ந்த தாய்ப் பலன் உணர்ந்துவதெனத் தோன்றுகிறது. காண்டம் என்ற பிரிவுகளைக்கொண்டுளது. ஏடுகள் தொடர்ந்து இல்லை. மிகச்சிதிலமாகவுள.

---

## No. 2706. பாகவத சாரம்.
## BHĀGAVATA SĀRAM.

Substance, palm-leaf. Size, 8¾ × 1¼ inches. Pages, 48. Lines, 7 on a page. Character, Tamil. Condition, much injured. Appearance, old.

Breaks off in Stanza 124.

An epitome, in verse, of the "Śrī Bhāgavata." The author's name is not given.

**Beginning :**

பாகவதசாரம்.

பாகவதசாரமென்றும் பாவாறுடைய கதையைப்
பக்தியுடன் நாறுரைக்கப் பணிந்தேன் பகவானே
நித்தியமாய் வந்தெனக்கு நிலைநிறுத்தவேணும்
பத்தியிரு பாதங்களைப் பணிந்தேன் பகவானே.

**End :**

அது பெண்ணாகப்பிறந்தாலும் போட்டுவையேன் கம்ஸன் என்னைக் கொல்லவந்த பெண் இங்கிருக்கலாமோ !

(கு - பு.)—

இந்நூல் ஸ்ரீபாகவதத்துக்குச் சாரமாய் அமைந்ததென முதலிற் காணப்பெறும் "பாகவதசாரம் என்னும்", என்று தொடங்கும் முதற் பாடலே அறிவிக்கின்றது. சுமார் 130 பாடல்களைக்கொண்டுளதென்று தெரிகிறது. இது, இன்னாரால் இயற்றப்பெற்றதென்பது அறியக்கூடவில்லை. மிகச்சிதிலமாயுளது.

## No. 2707. வைத்திய கிரந்தம் தமிழ் உரையுடன்.
## VAIDDIYA GIRANDHAM, WITH TAMIL MEANING.

Substance, palm-leaf. Size, 12 × $1\frac{1}{2}$ inches. Pages, 72. Lines, 9 on a page. Character, Grantha and Tamil. Condition, much injured. Appearance, old.

Incomplete.

A work on medicine in Sanskrit with Tamil meaning. The author's name is not known and the exact name of the work also is not given.

**Beginning :**

வைத்திய கிரந்த(மு)ம் உரையும்.

ஸ்ரீநாயா . . . . . ஸ்ரீ ஜ்வராஷ்டாந்யே ஸமானயே |
ஹேஷஜாநி ப்ரவக்ஷ்யாமி ஸம்ஸ்ருஷ்டாஸ்ரகேலாஸலக: || க||
நியமே ஸவ்வரோகாணாம் ஷிதெஜேவம ரோகஜிணாம் |
மாமரெ ஸவ்வரோகாணாம் உக்தணார்த்யுகஷேய நமி || உ||

ஜ்வரத்துக்கு :—

முஸ்தாபர்படயஷ்டியா ஷயநிகாஸருநிமை விஶ்வாமிருதா (?) *
* * * * *
வக்ஸகஷிகா ஸவ்வாஷ்டிஷாஜி ஜ்வராநு ||

தமிழ் உரை :—

முஸ்தா = கோரைக்கிழங்கு; பர்படா = பர்ப்பாடகம்; யஷ்டியா = ? சிறுகாஞ்சோரி ; யநிகா = கொத்தமல்லி ; மருநிமை = நிலவேம்பு ; விஶ்வா = சுக்கு ; அமிருதா = சீந்தில், * * * * *

**End :**

. . . வாமாக்ஷீ = நிலை(ல)ப்பனைக் கிழங்கு ; கூகக்ஷீ = நெற்றுங் கொட்டை; முயருநிகா = நாயுருவி ; காவேரஸ பத்ரா = பருத் திப்பூ வரீ = தண்ணீர் விட்டான் கிழங்கு ; முஞ்ஜாகி = பெருங் குரும்பை ; விஶ்வமுஷலாவரீ = . . தும்மட்டிவேரின் ரசம். * * * நிலவாமணக்கு.

**(கு - பு.)—**

இந்நூல் வைத்தியத்தைச் சார்ந்தது. இதில் வடமொழி ஶ்லோகங்களும், அவைகட்குத்தமிழில் பதப்பொருளும் ஆக அமைந்த வியாக்கியான(மு)ம் உள. நூல் பெயர் இன்னதென்று விளங்கவில்லை. ஆசிரியர் பெயரும் தெரியவில்லை. ஏடுகள் மிகவுஞ் சிதலுற்று இருக்கின்றன.

## No. 2708. தர்ம ஸாரார்த்த தீபிகை.
## DHARMA SĀRĀRTHA DĪPIKAI.

Substance, paper. Size, 13 × 8¾ inches. Pages, 351. Lines, 25 on a page. Character, Tamil and Grantha. Condition, good. Appearance, old.

Seems to be complete.

A work on the *Dharmaśāstra* in the *Maṇi Pravāla style*. By Ayyā Vēdānta Rāmānujatātadāsa of Peruṅkaṭṭūr, "who was the grandson of Srīmad Vēṅkaṭa Varada Dēśika Tātācārya alias Vel̤l̤aiayyaṅgār."

**Beginning :**

தர்மஸாரார்த்த தீபிகா :—

பரிபாஷா ப்ரகரணம் :—

ஸ்ரீநாதயாமுநயதீஶ்வர யாமுநேய ஸ்ரீஶைல பூர்ண
ஶடகோப கவிப்ரதீபாந் | ப்ரப்ராகவேங்கடமகேந்த்ர தாததேஶிக
ஸ்துத்ய கவிதார்க்கிக ஸிம்ஹ பராந் ப்ரபத்யே || ||௧||

ஸ்ரீஸாஹித்யகார பதிஶேகர லக்ஷ்மணார்யாந் ஸ்ரீவைஷ்ணவாசார மஹார்ஹ
கமலாம்பநிதி ப்ரபத்யே | தாதார்ய ஸிம்ஹ பரலக்ஷண யாமுநார்யாந்
ஸ்ரீவேங்கடேஶ வரதார்ய தாத ஸம்ஜ்ஞாந் | ௨||

*     *     *     *     *     *

ஸாரீக்ருத்ய நிகமேந ஸம்ப்ராப்தார்யாணாம் ப்ரஸாதகம் |
தர்மே ஸுக்ஷ்ம விசேஷ நதேநாதாநேஷு வித்யதே ப்ரயதா ||

ஸ்ரீநாத முநிகள் தொடங்கி வேங்கடேஶ தாததேஶிக பர்யந்தம் உள்ள ஆசார்யர்களால் பரமாத்ம ப்ரஸந்ந ஸாதநமாக பரிக்ஷிக்கப்பட்ட ஶாஸ்த்ரஸம்ப்ரதாயமான ஸ்ம்ருதி ஸம்ப்ரதாய ஸித்த தர்மங்களை ஸ்ரீமந்நாதமுநி ப்ரபந்த ஸாரார்த்த ஸங்க்ரஹ ஸந்தேஶ ராஜ ஸத்ஸம்ப்ரதாய வ்யாக்யாநம் முதலான நம் ஆசார்யர்களுடைய திவ்ய ஸூக்தி விஶேஷங்களால் ஶாஸ்த்ரகாரணம் நிரம்பவும் மேலிட்டபடியாலும் ஶாஸ்த்ரகாரணம் போல் தர்மகாரணத்துக்கும் உபதேஶ பாரம்பர்யம் இல்லாமல் போனபடியாலும் *     *     *     *     *     *
*     *     *     *     *     *     *

தர்மஶாஸ்த்ர க்ரந்தங்களை வ்யர்த்தமாக்கி விட்டபடியால் தர்மஶாஸ்த்ர க்ரந்தம் அன்றிக்கே ஶாஸ்த்ரப்ரவ்ருத்தி இல்லாததால் ஷ ஸம்ப்ரதாய ஸாரத்ரிக தேஶிகன்றன் திருவம்ஶ முக்தாமணியாய் வெள்ளையயங்கார் என்று ஜகத்ப்ரஸித்தராய் எழுந்தருளியிருந்த ஸ்ரீமத்வேங்கடவரத தாததேஶிகனுடைய பௌத்ரரான பெருங்கட்டூர் அய்யா வேதாந்த ராமாநுஜ தாத தாஸனால் உபதேஶ பாரம்பர்யத்தால் ப்ராப்தமான தர்ம

காண்வநக்ஷத்ர ப்ரக்ரியையை ஸௌகர்யார்த்தமாக ஸ்ம்ருதி [illegible] ஸ்ம்ருதி [illegible] ஸ்ம்ருதி அத்ரி ஸ்ம்ருதி [illegible]
[illegible] ஸிம்ஹ [illegible]யம் முதலான நிபந்த க்ரந்தங்களையும் *
* * * * * [illegible] ஸாரத்தையில் ஸங்க்ரஹித்து
"[illegible]", யென்று பேரிட்டு ஒரு அபூர்வமான கிரந்தம் அச்சிடப்பட்டிருப்பதால் ஷெ க்ரந்தத்தில் * * * *

**End :**

[illegible]னுக்கு முப்பத்தாறு அடி [ஸ](ஸௌ)திகைக்கு இருபத்தேழடி, [illegible]க்குப் பதினெட்டு அடி. பதிதனுக்கு ஒன்பது விலகவேண்டும். ஸஜ்ஜ ஸூதத்திலும், [illegible]ஸூதத்திலும், [illegible]ஸூதத்திலும், [illegible] ஸ்தானங்களிலும்? யதாஸம்பவம் [illegible]ர்களுக்கு விலகினால் போரும்.

(கு - பு.)—

இது, தர்ம சாஸ்திரத்தைச் சார்ந்தது. தர்ம ஸாரார்த்தங்களைப் பல நூல்களிலும் இருந்து எடுத்துத் தொடுத்து ஸங்கிரஹித்துக் கூறுவது. தாதாசார்யர் மரபிலே உதித்த வேங்கடவரத தேசிகன் என்றும் அவரது ப்ரபௌத்திரரான பெருங்கட்டூர் அய்யா "வேதாந்த ராமானுஜ தாத தாஸன்", என்னும் அவரால் இயற்றப்பெற்றதாகும். அச்சிட்டநாக முகவுரையில் கூறப்பெற்றிருக்கிறது. ஆனால் பிரதி கிடைப்பது அரிதாகும். இப்பிரதியில் முற்றும் உள்ளதென்றே தோற்றுகிறது.

---

## No. 2709. சாரங்கதரன் கதை.
## SĀRAṄGADHARAN KATHAI.

Substance, palm-leaf. Size, 13 × 1 inch. Pages, 164. Lines, 6 on a page. Character, Tamil. Condition, injured. Appearance, old.

Complete.

A poem on the story of Śāraṅgadhara, "son of a king named Rāja Narēndra, who resided at Rājamahēndrapura." The author's name seems to be Cinnayya a disciple of Śōlaiyappakkavirājar.

**Beginning :**

அகவல்.

சீர் கொண்ட பிரஞ்சு தேசத்தில் விளங்கும்
பேர்கொண்ட மன்னன் பிரபலகம்பீரன்
சத்திய வேதஞ் சருவேசர் பாதம்
நித்தியமும் புகழ்வோன் நிகரிலா வீரன்.
கொங்கு வங்காளங் கோசல மீழம்,
சிங்களந்துருக்கந் தெலுங்கங் கலிங்கம்
சீனமிலாடந்தென் மலையாளம்
சோனக மாரியந்துளுவ மராட்டம்

கன்னட மாளுவங்கங்கங்கடாரம்
மன்னுகர் நாடுமற்றும் உண்டான
தேசமன்னவர்கள் திரையிட்டு வணங்க
வாச நீள் வெற்றிமாலை சேர்புயத்தோன்
மன்னர் மன்னவர்கள் வந்தடி பரவப்
பொன்னுலகாளும் புரந்தரனென்ன
மணிமுடிபுனைந்தோன் வணங்காமுடியோன்
அணிபெறு மனுநிகர் அரசியல் புரிவோன்
புராதனப் புதுவையைப் புதுவையாய் வகுக்கத்
தராதல முழுதுந்தன தெனப்புரக்க
* * * *

அண்டர் கொண்டாடும் ஆண் பிள்ளை சிங்கம்
செண்டு ராலரசெனச் செழும் பெயர் கொண்டோன்
* * * *

கள்ளக் கொடிய காவலர் நடுங்க
வெள்ளைக் கொடியை விளங்கவும் நாட்டி
* * * *

கங்காகுலத்தோன் கர்ணவுதாரன்
கொங்கார் குவளைக்கு விமலர் புயத்தான்
மரந்தை வாழ் குமர மகிபாலன் பெற்ற
வரந்தனிற் பிறந்த மகாராசயோகன்
சிவனிருபாதந் தேசிகர் பாதம்
பவவினை யகலப்பணிந்தகமகிழ்வோன்
* * * *

. . . . . . . . . கவின்பெறு சிவிகை
அன்புடனளித்திந்த வதிசயப்புதுவையை
முன்புபோற் செய்யென மொழிந்திட மகிழ்ந்து
* * * *

முன்னிலுமிதுவே மும்மடங்கென்ன
எந்நிலத்தோரு மிசைந்து கொண்டாட
மன்னுதென்புதுவை மகாநாட்டவர்கள்
தம்முள மகிழத்தராதிபர் புகக்
கும்பினி வர்த்தகங்குறைவறநடக்க
நம்பினபேர்கள் நற்குலஞ் செழிக்க
புதுவை யெப்போதும் புதுவையேயாக
மதியின் வல்லமையால் வளம்பெற முடித்து
மிகுஞ்செண்டுராலரசு விவேகமந்திரியெனப்
புகழ்ந்திடும் விசயகந்தபூபதியும்
வரநதிகுலத்தான் மரந்தை நன்னகரான்
* * *

குருகுலந்தன்னிறகுலவு நரேந்திரன்
தருசுதன் சாரங்கதரன கதைதன்னை
வாசகப்பா வென வகுக்கவே யெண்ணி
நேசமே மிகுந்து நெஞ்சக மகிழ்ந்து
வாகு சேருலகில் வளம்பெறு பொய்கைப்
பாகையிலுறைவோன் பகீரதி குலத்தோன்
புவிராசர் மகிழ்ந்து புகழ்சோலையப்பக்
கவிராசன்றன்னைக் களிப்புடன் அழைத்து
தக்க சாரங்கதரன் கதை தன்னை
மிக்க வாசகப்பாவென விளம்பென்னத்
தன்றுணையாகித் தன்பதம் பரவுஞ்
சின்னையன்றன்னைச் செழிப்புடனிந்த
வாசகப்பாவை வகுத்திடென்றுரைக்க
* * *
தேசு நீள்புலவோர் திருவருளதனால்
வாசகப்பாவென வகுத்தனனிதனை.
* * * *

**End :**

சூழுநற்கதையைச் * * * * *
சொல்லச்சொன்னவர் சொன்னார் வாழி
தாழ்விலாதிதையெந்நாளுந் தருக்குடன் படிப்போர் வாழி
கேள்வியாலிதனைக் கேட்போர் கிளையுடன் வாழி வாழி.
சிவமயம்.
தத்துவலிங்கம் துணை.

(கு - பு.)—

இந்நூல், இராசமகேந்திரபுரத்தில் அரசாண்டிருந்த "நரேந்திரன்," என்பவரது புதல்வர் 'சாரங்கதரன்', என்பவரது கதையை உணர்த்துவது. முற்றும் உளது. சிதைந்துளது. சோலையப்பக் கவிராயரின் சீடர் சின்னையன் என்னும் புலவரான் இயற்றப்பெற்றது.

---

## No. 2710. ஸப்த ருஷி நாடி.
## SAPTARṢI NĀḌI.

Substance, palm-leaf. Size, 16 × 1¼ inches. Pages, 116. Lines, 7—11 on a page. Character, Tamil. Condition, injured. Appearance, old.

Incomplete.

Same work as that described under No. R. 305.

(கு - பு.)—

இது, மூவருடக் காடலாக்கு 305 ஆம் நம்பர் பிரதியில் வந்துள்ளதின் பகுதியே யாம். இதில் தொடர்பில்லாமல் சில இலக்கின சாதகப் பலன்களே உள. எழுத்துக்கள் எளிதிற்படித்தற்கியலாவண்ணமாய் அத்துணை சிறியவைகளாய் இருக்கின்றன.

## No. 2711. ஹஸ்திகிரி மாஹாத்மியம்.
### HASTIGIRI MĀHĀTMIYAM.

Substance, palm-leaf. Size, 12 × 1½ inches. Pages, 20. Lines, 10 on a page. Character, Tamil and Grantha. Condition, injured. Appearance, old.

Complete.

By Vēdāntadēśika.

Same work as that described under No. D. 1034 (herein, text only).

This work is also called " Satyavratakṣētramāhātmyam.''

(கு - பு.)—

இந்நூல், டிஸ்கிருப்டிவ் காடலாக்கு 1034 ஆம் நம்பர் பிரதியில் வந்துள்ளதே. இப்பிரதியில் முற்றும் உளது. ஏடுகள் சிதலுற்றிருக்கின்றன. அச்சிடப்பெற்றிருக்கிறது. இங்கு மூலம் மாத்திரம் உளது. இந்நூல் " ஸத்தியவ்ரதக்ஷேத்திரமாகாத்மிய '' மென்றும் கூறப்படுகிறது.

---

## No. 2712. பாரதவசனம்—விராட பர்வம்.
### BHĀRATAVACANAM—VIRĀṬAPARVAM.

Substance, palm-leaf. Size, 15¼ × 1¼ inches. Pages, 360. Lines, 6 on a page. Character, Tamil and Grantha. Condition, injured. Appearance, old.

Incomplete.

Same work as that described under No. R. 601. By Śrīnivāsācārya of Kariccangāl.

(கு - பு.)—

இந்நூல் ரூவைருடக் காடலாக்கு 601 ஆம் நம்பர் பிரதியில் வந்துள்ளதேயாகும். இப்பிரதியில் இந்நூல் முற்றும் இல்லை. ஏடுகள் சிதலுற்றிருக்கின்றன. அச்சிடப்பெறவில்லை. கரிச்சங்கால் ஸ்ரீனிவாஸாசாரியர் இயற்றியதாகும்.

---

## No. 2713. சோதிட நூல் உரையுடன்.
### JŌTIḌANŪL WITH COMMENTARY.

Substance, palm-leaf. Size, 15¾ × 1 inch. Pages, 20. Lines, 6 on a page. Character, Tamil. Condition, much injured. Appearance, old.

Incomplete.

A work on Astrology. The author's name is not known.

**Beginning :**

சோதிட நூல் உரையுடன்.

* * * * * *

என்பது, சந்திரன் சுபர்களது மத்தியத்தில் இருக்க, இலக்கினாதிபதி . . . . . . . . . . . . மேஷத்திலேயிருக்க, இலக்கினத்தைச் சுபர் பார்க்க,

* * * *

மிடமாகிலும் இலக்கினமாகிலும் இலக்கினாதிபதியுடனேயாகிலும் கூடியிருக்கச் சுபர் பார்க்க, அவனுக்குப் பித்தரோகம் உண்டாம்.

* * * *

**End :**

பராளுக்குப்பிறந்தவனே அறிய.

பனிமொழியியம்பக் கேளும் பாரினிற் சாத்திரத்தைச்
செனித்த லக்கினத்தைச் சோமன் சிறந்த லக்கினத்தைப் பொன்
[ஞங்
கு[ணி](னி)த்திடப் பாராராகில் பனித்த லக்கினதிபன்றன்
பராங்கிச(ஷ)மடைய மெய்யே கொம்பனிமாதே கேளும் ?

எ.து.—

இலக்கினத்தில் சந்திரனுமாய்க்குரு சந்திரனைப்பாராமல் போனால் இலக்கினதிபதி பராங்கிஷம் அடைய அன்னியனுக்குப் பிறந்தவன்.

* * * *

என்பது :—

சந்திரனும் சூரியனும் கூடிப் பிறர் வீட்டிலேயிருந்து இலக்கினத்தைப் பாபர் பாராமல்போனால் அன்னியாளுக்குப் பிறந்தவன். சென்ம லக்கினத்தை யாகட்டும் சந்திர இலக்கினத்தையாகட்டும் குரு பாராமல் சந்திரன் பாவியுடன் கூடினால் அன்னியனுக்குப் பிறந்தவன்.

(கு - பு.)—

இந்நூல் சோதிடத்தைச் சார்ந்தது. இதில் செய்யுளும் உரையும் ஆக உளது. இயற்றியவர் இன்னார் என்றும் நூலினது பெயர் இன்னதென்றும் விளங்கவில்லை. ஏடுகள் மிகச்சிதைவுற்றிருக்கின்றன.

---

## No. 2714. தன்வந்தரி கலை ஞானம் ஐந்நூறு.
## DHANVANTARI KALAIJÑĀNAM AINNŪṚU.

Substance, palm-leaf. Size, 9 × 1-6/16 inches. Pages, 332. Lines, 6—8 on a page. Character, Tamil. Condition, injured. Appearance, old.

Begins on fol. 1-*a*. The other work herein is Mantirakalpam 167-*a*. Complete.

Same work as that described under No. R. 191-*a*. By Dhanvantari.

**End :**

சார்வரிஞூ தைமீ ௰௩ௗ திருச்சிராப்பள்ளியிலிருக்கும் ஐதர் சாகிப், சாஸ்திரம் கலைஞானம் ஐந்நூறு (ரூா) எழுதினது. ஆ. ஞா. ஆயிரகாம் கையெழுத்து.

(கு - பு.)—

இந்நூல் மூவருடக் காடலாக்கு 191 (a) நம்பர் பிரதியில் வந்துள்ளதேயாகும். இப்பிரதியில் இந்நூல் முற்றும் இருக்கிறது. ஏடுகள் ஒரு சிறிது சிதலுற்றிருக்கின்றன. எழுத்துப்பிழையுடன் காணப்படுகிறது. அதற்கும் இதற்கும் பாடபேதங்கள் உள.

௲அௗசௐகஞூ ஜனவரிமீ உ௰க (21ௗ) வெள்ளிக்கிழமை காலம் பெற தன்வந்தரி பகவான்

## No. 2715. மந்திர கல்பம்.
## MANTIRAKALPAM.

Pages, 106. Lines, 7 on a page.

Begins on fol. 167-*a* of the MS. described under No. D. 2714.

Complete.

A Collection of Mantras connected with the various Gods and Goddesses such as Bhairava, Kāḷi, Hanumān, Śāttān, Lakṣmi, Śiva, and others, with their Cakras (mystic diagrams for worship and contemplation).

**Beginning :**

மந்திரகல்பம்.

ஓம் வீரபத்திரா உன்னுடைய பிள்ளை சபாபதியை யாராகிலும் ஏறிட்டுப் பாராமல், வாயெடுத்துப் பேசாமல், கட்டு. ஓம், வீரபத்திரா நெற்றிக்கண் வீரபத்திரா கண்ணங்காளி யென் குருவே துணை.

**End :**

அரிதாரம், ஊசிக்காந்தம், எள்ளு, எட்டிவிரை, செங்கொட்டை, சித்திரமூல வேர்ப்பட்டை வேர்பலம் . . . . . . . . . . . . . . . . . . . . . சுண்டைக்காய்ப் பிரமாணம், சாப்பிடவும். இதற்குத் தீரும் வியாதி— யோனிப்புத்து, இலிங்கப்பூ, அண்டத்தைப்பற்றிய புண்ணு, . . . . . . . குட்டவியாதி, பீச நீர்க்கோவை இவை தீரும். இதற்குப்பத்தியம் இச்சாபத்தியம். நெய், மோர், பசுவின்பால், வெள்ளாட்டுக்கறி இவை மிகுத்துச் சேர்க்கவும்.

(கு - பு.)—

இந்நூல் மந்திர சாஸ்திரத்தைச் சார்ந்ததாய் அநேக வகையான சிவன், அனுமான், இலக்குமீ, பைரவர் முதலானவர்களுடைய மந்திரங்களையும் அவைகட்கு உரிய யந்திரங்களையும் எடுத்து உணர்த்துகின்றது. இரண்டு ஏடுகளில் வைத்திய முறைகள் எழுதப்பெற்றிருக்கின்றன. ஏடுகள் அங்கங்கே ஒரு சிறிது புழுக்களால் தின்னப்பெற்றிருக்கின்றன. எழுத்துப்பிழைகள் அதிகமாகவிருக்கின்றன. இதில் இந்நூல் முற்றுப் பெற்றதென்றே தோற்றுகின்றது.

---

## No. 2716. கொக்கோகம் உரையுடன்.
## KOKKŌKAM WITH A COMMENTARY.

Substance, palm-leaf. Size, 9½ × 1½ inches. Pages, 76. Lines, 9 on a page. Character, Tamil. Condition, much injured. Appearance, very old.

Incomplete.

wants the leaves 1. 3—5. 23—27. 32. 44.

Same work as that described under No. R. 188. By Varatunga Pāṇḍiya who was the brother of Ativīra Rāma Pāṇḍiya.

(கு - பு.)—

இது, மூவருடக் காடலாகக்கு 188-ஆம் நம்பர் பிரதியில் வந்துள்ள நூலேயாம். இப்பிரதியில் ஆதி தொடங்கி ஐந்தாம் அத்தியாயம் வரையிலான பகுதி மாத்திரம் உளது. உள்ள ஏடுகளும் மிகவும் புழுக் களால் அரிக்கப்பெற்றிருக்கின்றன. எழுத்துப் பிழையுடன் உளது. இதில், 1, 3–5, 23–27, 32, 44 என்ற ஏடுகள் காணப்பெறவில்லை.

---

## No. 2717. அஷ்டாதச ரஹஸ்யம்.
## AṢṬĀDAŚA RAHASYAM.

Substance, palm-leaf. Size, 19 × 1½ inches. Pages, 78. Lines, 7 on a page. Character, Telugu, Tamil and Grantha. Condition, injured. Appearance, old.

Begins on fol. 1. The other works herein are Ācāryahṛdayam 40-*a*, Nigamanappaḍi 54-*a*, Upadēśarattinamālai 55-*b*, Tiruppaḷḷiyeḻucci 62-*a*, Arthapañcakam 64-*a*, Tiruvāymoḻinūṟṟantādi 72-*a*.

Incomplete.

Contains Tattvatrayam, Rahasyatrayam, Śrīvacanabhūṣaṇam, Arthapañcakam and Arccirādi only.

Same work as that described under No. R. 799 (*a*). By Piḷḷailōkācārya.

(கு - பு.)—

இது, மூவருடக் காடலாக்கு 799 (*a*) நம்பர் பிரதியில் வந் துள்ளதே யாம். இப்பிரதியில் தத்வத்ரயம், இரஹஸ்யத்ரயம், ஸ்ரீவசன பூஷணம், அர்த்தபஞ்சகம், அர்ச்சிராதி என்ற இரஹஸ்யங்களே இருக்கின் றன. இது தெலுங்கு எழுத்தில் எழுதப் பெற்றுள்ளது. நன்றாக உளது.

---

## No. 2718. ஆசார்ய ஹ்ருதயம்.
## ĀCĀRYAHṚDAYAM.

Pages, 28. Lines, 7 on a page.

Begins on fol. 40-*a* of the MS. described under No. D. 2717.

Incomplete.

Same work as that described under No. D. 815. By Aḻakiyamaṇavāḷapperumāḷ Nāyaṉār.

(கு - பு.)—

இந்நூல் டிஸ்கிருப்டிவ் காடலாக்கு 815 ஆம் நம்பர் பிரதியில் வந்துள்ளதேயாம். இப்பிரதியில் முற்றும் உளது. ஏடுகள் மிகவும் புழுக்க ளால் அரிக்கப் பெற்றிருக்கின்றன. அச்சிடப்பெற்றிருக்கிறது.

## No. 2719. நிகமனப்படி.
NIGAMANAPPADI.

Pages, 4. Lines, 9 on a page.

Begins on fol. 54-*a* of the MS. described under No. D. 2717.

Complete.

Same work as that described under No. R. 173 (*d*) of the Sanskrit part. By Periyavāccānpiḷḷai.

(கு - பு.)—

இந்நூல் மூவருடக் காடலாக்கு 173 (*d*) (of the Skt. pt. )நம்பர் பிரதியில் வந்துள்ளதேயாகும். இப்பிரதியில் இந்நூல் முற்றும் உளது. இது அச்சிடப்பெற்றிருக்கிறது. ஏடுகள் புழுக்களால் அரிக்கப்பெற்றுள.

---

## No. 2720. உபதேச ரத்தினமாலை.
UPADĒŚA RATTINAMĀLAI.

Pages, 14. Lines, 6 on a page.

Begins on fol. 55-*b* of the MS. described under No. D. 2717.

Complete.

Same work as that described under No. R. 10 (*a*). By Maṇavāḷamāmuni.

(கு - பு.)—

இந்நூல் மூவருடக் காடலாக்கு 10 (*a*) நம்பர் பிரதியில் வந்துள்ளதேயாகும். இப்பிரதியில் இந்நூல் முற்றும் உளது. ஏடுகள் மிகவுஞ் சிதலுற்று இருக்கின்றன. அச்சிடப்பெற்றுள்ளது.

---

## No. 2721. திருப்பள்ளியெழுச்சி.
TIRUPPAḶḶIYEḺUCCI.

Pages, 4. Lines, 7 on a page.

Begins on fol. 62-*a* of the MS. described under No. D. 2717.

Complete.

Same work as that described under No. R. 29 (*e*). By Toṇḍaraḍippoḍiyāḻvār.

(கு - பு.)—

இந்நூல் மூவருடக் காடலாக்கு 29 (*e*) நம்பர் பிரதியில் வந்துள்ளதேயாகும். இப்பிரதியில் இந்நூலின் பத்துப்பாட்டும் உள.

---

## No. 2722. அர்த்தபஞ்சகம்.
ARTHAPAÑCAKAM.

Pages, 14. Lines, 6 on a page.

Begins on fol. 64-*a* of the MS. described under No. D. 2717.

Complete.

Same work as that described under No. R. 49 (*d*). By Piḷḷailōkācārya.

(கு - பு.)—

இந்நூல் மூவருடக் காடலாக்கு 49 (*d*) நம்பர் பிரதியிலே வந்துள்ள நூலே யாகும். இப்பிரதியில் இந்நூல் முற்றுமிருக்கின்றது. ஏடுகள் புழு வரிக்கப் பெற்றிருக்கின்றன.

## No. 2723. திருவாய்மொழி நூற்றந்தாதி.
## TIRUVĀYMOḶI NŪṞṞANTĀDI.

Pages, 22. Lines, 6 on a page.

Begins on fol. 72-*a* of the manuscript described under D. No. 2717.

Complete.

Same work as that described under No. R. 10 (*b*). By Maṇavāḷamāmuni.

(கு - பு.)—

இந்நூல் மூவருடக் காடலாக்கு 10 (*b*) நம்பர் பிரதியில் வந்துள்ள நூலேயாகும். இப்பிரதியில் இந்நூல் முற்றும் இருக்கிறது. இதன் பின்னர் 2 ஏடுகளிலே மணவாள மாமுனிகளின் விஷயமான வாழ்த்துப் பாட்டு எழுதப்பெற்றுளது. ஏடுகள் மிகச் சிதிலமாயிருக்கின்றன.

## No. 2724. அஷ்டாதச ரஹஸ்யம்.
## AṢṬĀDAŚARAHASYAM.

Substance, palm-leaf. Size, 15 × $1\frac{1}{2}$ inches. Pages, 46. Lines, 9 on a page. Character, Telugu. Condition, much injured. Appearance, very old.

Begins on fol. 1-*a*.

The other work herein is :—Ācāryahṛdayam 24-*a*.

Incomplete.

Same work as that described under No. R. 799 (*a*).

(கு - பு.)—

இந்நூல் மூவருடக் காடலாக்கு 799 (*a*) நம்பர் பிரதியில் வந்துள்ளதேயாகும். இப்பிரதியில் முற்றும் இல்லை.

## No. 2725. ஆசார்ய ஹ்ருதயம்.
## ĀCĀRYA HṚDAYAM.

Pages, 54. Lines, 9 on a page.

Begins on fol. 24 (*a*) of the MS. described under No. D. 2724.

Complete.

Same work as that described under No. D. 815.

(கு - பு.)—

இந்நூல் டிஸ்கிருப்டிவ் காடலாக்கு 815 ஆம் நம்பர் பிரதியில் வந்துள்ளதேயாகும். இப்பிரதியில் இந்நூல் முற்றும் உளது. ஏடுகள் எல்லாம் சிதைவுற்றிருக்கின்றன.